த. பா. நி. (க. வெ.) வரிசை எண்—343

# ஆங்கில நாட்டின் அரசியல் அமைப்பு

(பட்டப்படிப்பிற்குரியது)

ஆசிரியர்

என். ஜெ. இராஜகோபால், எம்.ஏ.,

துணைப் பேராசிரியர்,

வரலாற்றுத்துறை,

அரசினர் கலைக் கல்லூரி, கோவை.






தமிழ்நாட்டுப் பாடநூல் நிறுவனம்

First Edition—August, 1972

T.N.T.B.S. (C.P.) No. 343



# BRITISH CONSTITUTION

N. J. RAJAGOPAL

PRICE RS. 5-20

'Published by the Tamil Nadu Text Book Society under the Centrally Sponsored Scheme of Production of books and literature in regional languages at the University level, of the Government of India in the Ministry of Education and Social Welfare (Department of Culture), New Delhi.'

*Printed by* :

**M/s Ravichandra Press,**

K. V. B. Garden,
145, Ramakrishna Mutt Road,
Madras-28.

# அணிந்துரை

## திரு. இரா. நெடுஞ்செழியன்

(தமிழகக் கல்வி—உள்ளாட்சித் துறை அமைச்சர்)

தமிழைக் கல்லூரிக் கல்வி மொழியாக ஆக்கிப் பன்னிரண்டாண்டுகள் ஆகிவிட்டன. குறிப்பிட்ட சில கல்லூரிகளில் பி.ஏ. வகுப்பு மாணவர்கள் தங்கள் பாடங்கள் அனைத்தையும் தமிழிலேயே கற்று வந்தனர். 1968ஆம் ஆண்டின் தொடக்கத்தில் புகுமுக வகுப்பிலும் (P.U.C.) 1969ஆம் ஆண்டிலிருந்து பட்டப் படிப்பு வகுப்புகளிலும் அறிவியல் பாடங்களையும் தமிழிலேயே கற்பிக்க ஏற்பாடு செய்துள்ளோம். தமிழிலேயே கற்பிப்போம் என முன்வந்துள்ள கல்லூரி ஆசிரியர்களின் ஊக்கம், பிற பல துறைகளிலும் தொண்டு செய்வோர் இதற்கெனத் தந்த உழைப்பு, தங்கள் சிறப்புத் துறைகளில் நூல்கள் எழுதித் தர முன்வந்த நூலாசிரியர்கள் தொண்டுணர்ச்சி இவற்றின் காரணமாக இத் திட்டம் நம்மிடையே மகிழ்ச்சியும் மனநிறைவும் தரத்தக்க வகையில் நடைபெற்று வருகிறது. இவ்வகையில், கல்லூரிப் பேராசிரியர்கள் கலை, அறிவியல் பாடங்களை மாணவர்க்குத் தமிழிலேயே பயிற்றுவிப்பதற்குத் தேவையான பயிற்சியைப் பெறுவதற்கு மதுரைப் பல்கலைக்கழகம் ஆண்டுதோறும் எடுத்துவரும் பெருமுயற்சியைக் குறிப்பிட்டுச் சொல்லவேண்டும்.

பல துறைகளில் பணிபுரியும் பேராசிரியர்கள் எத்தனையோ நெருக்கடிகளுக்கிடையே குறுகிய காலத்தில் அரிய முறையில் நூல்கள் எழுதித் தந்துள்ளனர்.

வரலாறு, அரசியல், உளவியல், பொருளாதாரம், தத்துவம், புவியியல், புவியமைப்பியல், மனையியல், கணிதம், பௌதிகம், வேதியியல், உயிரியல், வானியல், புள்ளியியல், விலங்கியல், தாவரவியல், பொறியியல் ஆகிய எல்லாத் துறைகளிலும் தனி நூல்கள், மொழிபெயர்ப்பு நூல்கள் என்ற இரு வகையிலும் தமிழ்நாட்டுப் பாடநூல் நிறுவனம் வெளியிட்டு வருகிறது.

இவற்றுள் ஒன்றான 'ஆங்கில நாட்டின் அரசியல் அமைப்பு' என்ற இந் நூல் தமிழ்நாட்டுப் பாட நூல் நிறுவனத்தின் 343ஆவது வெளியீடாகும். இதுவரை 378 நூல்கள் வெளிவந்துள்ளன. இந் நூல் மைய அரசு கல்வி, சமூக நல அமைச்சகத்தின் மாநில மொழியில் பல்கலைக்கழக நூல்கள் வெளியிடும் திட்டத்தின்கீழ் வெளியிடப் படுகிறது.

உழைப்பின் வாரா உறுதிகள் இல்லை; ஆதலின், உழைத்து வெற்றி காண்போம். தமிழைப் பயிலும் மாணவர்கள் உலக மாணவர்களிடையே சிறந்த இடம் பெறவேண்டும். அதுவே தமிழன்னையின் குறிக்கோளுமாகும். தமிழ்நாட்டுப் பல்கலைக்கழகங்களின் பல்வகை உதவிகளுக்கும் ஒத்துழைப்புக்கும் நம் மனம் கலந்த நன்றி உரியதாகுக.

இரா. நெடுஞ்செழியன்

# பொருளடக்கம்

# 1. ஆங்கில நாட்டு அரசியலமைப்பின் சில சிறப்பியல்புகள்

ஆங்கிலேய நாடு என்பது ஐக்கிய அரசு (United Kingdom) என்று பொதுவாக அழைக்கப்படுகிறது. பதினாறாவது நூற்றாண்டில் வேல்ஸ் (Wales) என்ற பகுதி இங்கிலாந்துடன் இணைந்தது. 1707-ல் இயற்றப்பெற்ற ஐக்கியச் சட்டத்தின்படி ஸ்காட்லாந்தும் (Scotland) இங்கிலாந்துடன் இணைந்தது. ஆங்கிலேயப்பாராளுமன்றத்தின் ஆதிக்கத்தினுள் அயர்லாந்து 1801-ல் கொண்டுவரப்பெற்றது. 1922-ல் அயர்லாந்தின் தெற்குப் பகுதியிலுள்ள 26 கவுன்டிகள் ஐக்கிய அரசிடமிருந்து விலகின. வட அயர்லாந்திலுள்ள மற்ற ஆறு கவுன்டிகளுக்குத் (Counties) தனிப் பாராளுமன்றம் அமைக்கப்பெற்றது. அங்குத்தனி அரசாங்கமே நடைபெற்றது. 1972ஆம் ஆண்டில் அங்கு நடைபெற்ற கலகங்களின் காரணமாக, ஆங்கில அரசாங்கம் அதைத் தனது நேரடி ஆதிக்கத்தின்கீழ்க் கொண்டுவந்துவிட்டது. ஐக்கிய அரசிலுள்ள இந்தப் பல்வேறு பகுதிகளிலும் பலதரப்பட்ட பண்புகள் சிறப்பியல்புகளாக அமைந்திருந்தபோதிலும் ஆங்கில மொழி காரணமாக இப் பகுதிகளிலுள்ள மக்களிடையே அசைக்கமுடியாத ஒருமைப்பாடு வளர்ந்துள்ளதையும், அதனால் அரசாங்கமும் ஒருமுக ஆட்சி அரசாங்கமாகவும் (Unitary) வளர்ச்சி அடைந்துள்ளதையும் காண்கிறோம். அரசனுடைய ஆட்சியை அவர்கள் தொன்றுதொட்டு ஏற்றுக்கொண்டிருப்பதால், ஒருமுக ஆட்சியைத் தவிர வேறு ஆட்சிமுறையை அவர்கள் சிந்தித்துப் பார்க்கவில்லை. இப்பொழுது ஒருமுக ஆட்சி முறைக்கு மிகச் சிறந்த மேற்கோளாக விளங்குவது 'ஐக்கிய அரசின்' அரசியல் அமைப்பாகும். ஒருமுக ஆட்சி முறையும் பெயரளவில் கோனாட்சி முறையும் இருந்தபோதிலும் ஓர் அரசியலமைப்பின் வரையறைக்கு உட்பட்டே முடியாட்சி முறையானது அங்கு இயங்கி வருவதைக் காண்கின்றோம். முடியாட்சி அங்கு இயங்கி வருகிறது என்று கூறுவதைக் காட்டிலும் பாராளுமன்ற ஆட்சி முறையே (Parliamentary

System of Government) அங்கு இயங்கி வருகிறது எனக் கூறுவதே பொருந்தும். அரசரோ, அல்லது அரசியோ பாராளுமன்றத்திற்குக் கட்டுப்பட்டிருக்கும் வெறும் கைப்பாவையே என்று கூறவேண்டும். ஆங்கிலேய நாட்டின் நிர்வாகமும், ஆங்கிலேய மக்களால் தேர்ந்தெடுக்கப்பெற்ற பிரதிநிதிகள், அல்லது பாராளுமன்ற உறுப்பினர்களுக்குப் பொறுப்பாகவே கட்டுப்பட்டுச் செயலாற்ற வேண்டிய முறை அங்கு அமைக்கப்பட்டுள்ளது.

ஆங்கிலேய நாட்டின் பாராளுமன்ற ஆட்சிமுறையை நிர்ணயம் செய்யும் அரசியல் அமைப்பு அங்குத் தனித்தன்மை பெற்றிருப்பதையும் காண்கின்றோம். மற்ற நாடுகளில் பொதுவாகக் காணப்படும் எழுதப்பெற்ற அரசியல் அமைப்பு என்பதைப்போன்ற ஓர் அரசியல் அமைப்பை ஆங்கிலேய நாட்டில் காண முடியாது. ஒரு நாட்டிற்கு அரசியல் அமைப்பை உருவாக்கப் பல வழிமுறைகள் பின்பற்றப்படுகின்றன. அரசியல் நிர்ணய சபையானது கூடி, பலவற்றை விவாதித்து, மக்களின் தேவைகளைக் கவனித்து அரசியல் அமைப்பை உருவாக்குவதைத்தான் பொதுவாக நாம் பார்க்கிறோம். ஆனால் ஆங்கிலேய அரசியல் அமைப்பு அவ்விதமாக ஒரு குறிப்பிட்ட இடத்தில், ஒரு குறிப்பிட்ட காலத்தில், ஒரு குறிப்பிட்ட சில மக்கள் பிரதிநிதிகளாலோ, அல்லது அரசியல் மேதைகளாலோ உருவாக்கப்பட்டதன்று. 12ஆம் நூற்றாண்டிலிருந்து இன்றுவரையிலும் ஆங்கிலேய நாட்டின் அரசியல் அமைப்பு தொடர்ந்து மக்களின் தேவைகளுக்கேற்ப எழுதப்பட்டு வருவதால், ஆங்கிலேய நாட்டிற்கென்று ஓர் எழுதப்பெற்ற குறிப்பான அரசியல் அமைப்பு இல்லையென்று சிலர் கூறுவர். தாமஸ் பெய்ன் (Thomas Paine), அலக்செஸ் தே தாக்குவில் (Alexis De Tocqueville) ஆகிய சிறப்புமிக்க அரசியல் பேரறிஞர்களின் கருத்து இதுவேயாகும். அவர்களின் கூற்றை முற்றிலும் புறக்கணிக்க முடியாது. இருந்தபோதிலும், அவ்வப்பொழுது மக்களின் தேவைகளுக்கேற்ப பல பாராளுமன்றச் சட்டங்கள் இயற்றப்பட்டுள்ளன. அவையெல்லாம் ஒருங்கே சேர்ந்து அரசியல் அமைப்பு என்ற உருவத்தைப் பெறுகின்றன. அதனால் ஆங்கிலேய அரசியல் அமைப்பு முற்றிலும் எழுதப்பெறாதது அன்று. எனினும் பெரும்பாலும் எழுதப் பெற்றவைதாம் என்று கூறுவர். ஆங்கிலேய அரசியல் அமைப்பிற்குக் காரணமாக இருந்த பல்வேறு பாராளுமன்றச் சட்டங்களைப்பற்றி இப்பொழுது பார்ப்போம்.

மக்களின் உரிமைகளைப் பாதுகாப்பதற்காக முதலில் பாராளுமன்றத்தில் இயற்றப்பெற்ற சட்டம், 1215-ல் இயற்றப் பெற்ற 'பேருரிமைப் பட்டயம்' (The Great Charter or The Magna Carta) என்பதாகும். இப் பட்டயம் முதலில் நிலமானியப் பிரபுக்களின்

உரிமைகளையும், மத குருமார்களின் உரிமைகளையும் பாதுகாக்க இயற்றப்பெற்ற ஒரு பட்டயமாகத்தான் தோன்றியது. ஆனால் நாளடைவில் இப்பட்டயம் மன்னரின் எதேச்சாதிகார உரிமைகளைக் கட்டுப்படுத்தும் பெரியதொரு கருவியாக முக்கியத்துவம் பெற்றது. ஏனெனில் அரசரது தேவைகளை நிறைவேற்ற அமைக்கப்பெற்ற பிரபுக்கள் சபை நாளடைவில் தேசிய குழுவாகப் பாவிக்கப்பெற்று வரி விதிப்பு, அரசரின் எதேச்சாதிகாரங்களைக் கட்டுப்படுத்தும் உரிமை இவற்றைப்பெற்றது. பிரபுக்கள் அரசருக்குமேல் இருந்துகொண்டு அதிகாரம் செய்வதைக் கட்டாயத்தால் பட்டயத்தில் கையெழுத்திட்ட ஜான் அரசர் சிறிதும் விரும்பவில்லை. அப்பொழுது ஜான் அரசர் கையெழுத்திட்ட பட்டயம் நாளடைவில் ஆங்கிலேய அரசர்களின் எதேச்சாதிகாரத்திற்கு முற்றுப்புள்ளி வைக்கும் பட்டயமாக இருக்கும் என்று அவர் சிந்தித்துப் பார்த்திருக்க மாட்டார். உண்மையில் ஆங்கிலேய அரசியல் அமைப்பின் தொடக்கப் பேருரிமைப் பட்டயத்திலிருந்து ஊற்றெடுக்கின்றது எனலாம்.

இதற்கடுத்தபடியாக, 1628-ல் இயற்றப்பெற்ற உரிமைகள் விண்ணப்பம் (Petition of Right, 1628) ஆங்கிலேய அரசியல் அமைப்பு வரலாற்றில் முக்கியத்துவம் பெறுகின்றது. முதலாம் சார்லஸ் என்ற ஸ்டூவர்ட் அரசர் காலத்தில் இயற்றப்பெற்ற இந்த உரிமைகள் விண்ணப்பம், பாராளுமன்றத்தின் உரிமைகளைப் பாதுகாக்கவும், அரசரின் சிறப்பதிகாரங்களை வரையறுக்கவும், இயற்றப்பெற்ற சட்டமாகும். ஸ்டூவர்ட் அரசர்களது காலத்தில், குறிப்பாக முதலாம் ஜேம்ஸ் அவருடைய மகன் முதலாம் சார்லஸ் ஆகிய அரசர்கள் சிறிது அளவிற்கு மீறியே அரசரின் தெய்வீகத்தன்மையைப் பெரிதுபடுத்தியும், அவர்களது சிறப்புரிமைகளைப் பயன்படுத்தியும், ஆட்சிசெய்ய முற்பட்டனர். முதலாம் சார்லஸ் பாராளுமன்றத்தின் அனுமதியின்றி வரிகளை விதிக்க முற்பட்டார். பாராளுமன்ற உறுப்பினர்களின் உரிமைகளை அலட்சியப்படுத்தி, அவர்களைக் கைது செய்ய முற்பட்டார். விசாரணையின்றிப் பலரை சிறைக்கனுப்பினர். கண்டித்த பாராளுமன்றத்தை மூடிவிட்டு, தம் விருப்பப்படி ஆட்சிசெய்ய முற்பட்டார். அந்தச் சூழ்நிலையில்தான் பாராளுமன்ற உறுப்பினர்கள் தங்களது உரிமைகளைப் பாதுகாக்க 'உரிமைகள் விண்ணப்பத்தை' அரசரிடம் சமர்ப்பித்து, அவருடைய கையொப்பத்தையும் பெற்றனர். அதனால்தான் 'உரிமைகள் விண்ணப்பம்' பாராளுமன்றத்தின் உரிமைகளைப் பாதுகாக்கின்ற முக்கியமான சட்டமாகப் பாவிக்கப்படுகின்றது. முதலாம் சார்லஸ் பின்னர் இச் சட்டத்தைப் புறக்கணித்துவிட்டு, பாராளுமன்றத்தையும் கலைத்துவிட்டு (1629--1640) தம் விருப்பப்படி எதேச்சாதிகார ஆட்சி புரிந்ததால் பாராளுமன்ற உறுப்பினர் அரசரை எதிர்த்துப் போர்க்கோலம்

பூண்டனர். பின்னர் நிகழ்ந்த உள்நாட்டுப் போரில் பாராளுமன்றம் முழு வெற்றி பெற்றது.

1679-ல் இயற்றப்பெற்ற ஹேபியஸ் கார்ப்பஸ் சட்டம் (Habeas Corpus Act, 1679) அல்லது ஆளுரிமைக் காப்புச் சட்டம் மக்களின் உரிமைகளைப் பாதுகாக்கின்ற இன்னொரு முக்கியச் சட்டமாக விளங்குகின்றது. கைது செய்யப்பட்டவர்கள் மீது உடனடியாக அவர்கள் என்ன குற்றம் செய்தனர் என்று குற்றத்தைச் சுமத்தி, நீதி மன்றத்தில் விசாரித்த பின்னர் தான் சிறைக்கனுப்பப்படுதல் வேண்டும் என்ற முறையை இச் சட்டம் கொண்டு வந்தது. இச் சட்டம் அதனால் மக்களின் தனிப்பட்ட உரிமைகளைப் பாதுகாக்கின்றது.

1689-ல் இயற்றப்பெற்ற உரிமைகள் மசோதா (The Bill of Rights) ஆங்கிலேய அரசியல் அமைப்பை நன்கு வேரூன்றச் செய்கின்றது. ஆங்கிலேய அரசியல் அமைப்பு வரலாற்றில் இந்த உரிமைகள் மசோதா ஒரு பெரிய திருப்பத்தை ஏற்படுத்துகின்றது. புகழ்பெற்ற புரட்சி (The Glorious Revolution) அல்லது இரத்தம் சிந்தாப் புரட்சி (The Bloodless Revolution) என்ற பெயரில் இங்கிலாந்தில் 1688-ல் ஒரு புரட்சி ஏற்பட்டது. இப் புரட்சி ஏற்படுவதற்குக் காரணமாக இருந்தவர் இரண்டாம் ஜேம்ஸ் என்ற ஸ்டூவர்ட் அரசரேயாவர். உள்நாட்டுப் போர் இங்கிலாந்தில் ஏற்பட்டதற்குப் பின்னர் ஆலிவர் கிராம்வெல் என்பவருடைய பாதுகாவலர் ஆட்சி (Protectorate) சிறிது காலம் இங்கிலாந்தில் நடைபெற்றது. மக்கள் அவருடைய ஆட்சியில் சலிப்புற்றனர். ஆங்கிலேயர் போற்றி வந்த ஆங்கிலிக்கன் திருச்சபைக்கும், அவர்களுடைய உரிமைகளுக்கும் இடையூறு ஏற்பட்டுவிட்டதால், மீண்டும் ஆங்கிலேய மக்கள் அரசருடைய ஆட்சியே எவ்வளவோ நன்றாக இருந்தது என்று முடிவுசெய்து 1660-ல் முன்னிலை மீட்சி (Restoration) என்ற பெயரில் இரண்டாம் சார்லஸை இங்கிலாந்தின் அரசராக்கினர். அவர்கள் மன்னரது ஆட்சியை மட்டும் மீட்கவில்லை; அதனுடன் ஆங்கிலிக்கன் திருச்சபையையும் பாராளுமன்றத்தையும் மீட்சி செய்ததாகக் கருதினர். ஆனால் இரண்டாம் சார்லசுக்குப் பின்னர் இங்கிலாந்தின் அரசரான, சார்லஸின் தம்பியான இரண்டாம் ஜேம்ஸ் முன்னிலை மீட்சி எதற்காகச் செய்யப்பட்டதோ அதை மறந்துவிட்டு, தம்முடைய எதேச்சாதிகார ஆட்சியை நடத்த முற்பட்டார். ஆங்கிலேய மக்களின் அபிமானக் கொள்கைகளான ஆங்கிலிக்கன் திருச்சபைக் கோட்பாடுகளை ஒழித்துவிட்டு, ரோமன் கத்தோலிக்கச் சமயத்தைக் கொண்டுவரவும் பாராளுமன்றத்தைக் கலைத்துவிட்டு ஆட்சி செய்யவும் முற்பட்டார். அதனுடன் ஆங்கிலேய அரசர்கள் இழந்துவிட்ட சிறப்பதிகாரங்களையும் பயன்படுத்த முயன்றார். பாராளுமன்றச் சட்டங்களிலிருந்து, தனிப்பட்டவர்களுக்கு விலக்களிக்கும் அதிகாரங்களையும் (Dispensing

Powers) பாராளுமன்றத்தில் இயற்றப்பெற்ற பல சட்டங்களை ரத்து செய்யும் அதிகாரங்களையும் (Suspending Powers) அவர் நடைமுறையில் செலுத்த விரும்பினார். மற்றும் கத்தோலிக்கர்களுக்கு வழிபாட்டுரிமை வழங்கிய அவரது பொறுந்நவறிக்கையைத் (Declaration of Indulgence) திருச்சபைகளில் வாசிக்கும்படி அவர் கட்டாயப்படுத்தியதால், பல ஆங்கிலேய பிரபுக்களும், மத குருமார்களும், பாராளுமன்ற உறுப்பினர்களும் சேர்ந்து, அவரது ஆட்சிக்கு முற்றுப்புள்ளி வைக்க முற்பட்டனர். அதனால் அவர்கள் ஜேம்ஸின் மகளான மேரி அரசியையும், அவளது கணவரும் ஹாலந்து நாட்டு அரசருமான வில்லியத்தையும் இங்கிலாந்து நாட்டின் அரசப் பொறுப்பை ஏற்றுக்கொள்ளும்படி அழைப்பு விடுத்தனர். முறையாக விடுக்கப்பெற்ற இந்த அழைப்பை வில்லியம் ஏற்றுக்கொண்டு, ஒரு சிறிய படையுடன் இங்கிலாந்திற்குப் புறப்பட்டார். இதைக் கண்ட இரண்டாம் ஜேம்ஸ் தம் தந்தை முதலாம் சார்லஸ் இவ்விதம் மக்களையும், பாராளுமன்றத்தையும் பகைத்துக் கொண்டதால் தூக்குமேடைக் கனுப்பப்பட்டார் என்பதை நினைவு படுத்திக்கொண்டு ஃபிரான்சிற்கு ஓட்டம் பிடித்தார். இந்த நிகழ்ச்சியைத்தான் ஆங்கிலேயர் **புகழ்பெற்ற புரட்சி** என்று கூறுவர். மக்களுடைய சம்மதத்தின் பேரில் வில்லியம் இங்கிலாந்தின் அரசராவதால், அப்பொழுதுள்ள சூழ்நிலையில் கூட்டப்பெற்ற பிரத்தியேக பாராளுமன்றம் விதித்த பல நிபந்தனைகளையும் வில்லியம் ஏற்றுக்கொண்டு, பாராளுமன்றத்திற்குக் கட்டுப்பட்டு ஆட்சி செய்வதாக ஒப்புக்கொண்டார். அப்பொழுது பாராளுமன்றம் வில்லியத்திற்கு விதித்த நிபந்தனைகள் சட்டமாகவே பாராளுமன்றத்தில் நிறைவேற்றப்பெற்றன. அச்சட்டத்தைத்தான் உரிமைகள் மசோதா என்று கூறுவர். இம் மசோதா நீண்டகாலமாகவே, ஸ்டூவர்ட் அரசர்கள் பிரச்சாரம் செய்து வந்த அரசர்களின் தெய்வீகத்தன்மைக்கும், அவர்களது தெய்வீக உரிமைகளுக்கும் முற்றுப்புள்ளி வைத்து, அரசர்களை நிர்ணயம் செய்யும் பொறுப்பு பாராளுமன்றத்திற்கே உரியது என்ற உண்மையை நிலைநாட்டினர். அதனால் ஆங்கிலேய அரசர்கள் எதிர்காலத்தில் பாராளுமன்றத்தைக் கூட்டக் கடமைப்பட்டவர்களாயினர். அதன் சட்டதிட்டங்களுக்குட்பட்டு நடக்க சம்மதிப்பவராகவும், இங்கிலாந்தில் ஆங்கிலிக்கன் திருச்சபையைப் போற்றிப் பாதுகாக்கும் பிராடஸ்டன்டு அரசர்களாகத்தான் இருக்க வேண்டும் என்ற அரசுரிமையை நிர்ணயம் செய்யவும், இச்சட்டம் இயற்றப்பெற்றது. இச் சட்டம் இயற்றப்பட்டதால், எதிர்காலத்தில் இங்கிலாந்தின் அரசர்கள் எதேச்சாதிகாரம் செலுத்த முடியாதவர்களாகினர் என்பது குறிப்பிடத்தக்கதாகும். அதனுடன் உரிமைகள் மசோதா மேலும் பல நல்ல சட்டங்கள் பாராளுமன்றத்தில் இயற்றப்படுவதற்கு அடிப்படையாக இருந்தது என்று மெக்காலே போன்ற ஆசிரியர்கள் கருதினர்,

உரிமைகள் மசோதாவைத் தொடர்ந்து வாரிசுரிமை நிர்ணயச் சட்டம் 1701–ல் இயற்றப்பெற்றது. இச் சட்டத்தின் மூலமாக அரசர்களின் 'தெய்வீக உரிமை' அகற்றப்பெற்று, அரசர்களின் வாரிசுரிமையானது பாராளுமன்றத்தால் நிர்ணயம் செய்யப்பட வேண்டிய அவசியம் ஏற்பட்டது. 1707–ல் நிறைவேற்றப்பட்ட ஸ்காட்லாந்து ஐக்கியச் சட்டம் (The Act of Union) ஸ்காட்லாந்து பகுதியை இங்கிலாந்துடன் சட்டபூர்வமாக இணைத்தது. அதைப்போன்று 1800–ல் இயற்றப்பெற்ற அயர்லாந்து ஐக்கியச் சட்டம் (The Act of Union with Ireland) அயர்லாந்து பகுதியை இங்கிலாந்துடன் இணைத்தது.

தொழிற்புரட்சி இங்கிலாந்தில் ஏற்பட்டதற்குப் பின்னர் இங்கிலாந்தின் வட பகுதிகளில் புதிய புதிய தொழிற் நகரங்கள் உருவாக்கப் பெற்றன. தொழிலாளர்களும், தொழில் அதிபர்களும், வியாபாரிகளும் அங்குச் சென்று குடியேறினர். 1832–க்கு முன்னர் பெரும்பான்மையான வட இங்கிலாந்துப் பகுதிகள், பாராளுமன்றத் தொகுதிகளாகச் சேர்த்துக்கொள்ளப்படவில்லை. 1832–க்குப் பின்னர் இப் புதிய தொழில் நகரங்களைப் பாராளுமன்றத் தொகுதிகளாக இணைக்கவும், மற்றும் பல தொழிலாளர்களுக்கு வாக்குரிமை அளிப்பதை விரிவாக்க வேண்டி 1832, 1867, 1884, 1885 ஆகிய ஆண்டுகளில் பாராளுமன்றச் சீர்திருத்தச் சட்டங்கள் நிறைவேற்றப்பெற்றன (Parliamentary Reform Acts). மேற்கூறிய சீர்திருத்தச் சட்டங்களால் பாராளுமன்றத்தில் மக்கள் பிரதிநிதித்துவம் ஓரளவிற்குப் பரவலாக்கப்பெற்றது. மக்கள் சபையும் பெருமளவிற்கு, மக்களின் பிரதிநிதித்துவம் பெற்ற சபையாக விளங்கியது. முதல் உலகப் போருக்குப் பிறகு, சொத்துரிமை அடிப்படையில் வாக்குரிமை அளிக்கப்படுவது ரத்து செய்யப் பெற்று, வயது வந்தோர்களுக்கு வாக்குரிமை அளிக்கும் நோக்கத்தில், 1918, 1928 ஆகிய ஆண்டுகளில் மக்கள் பிரதிநிதித்துவச் சட்டங்கள் (Representation of The People Acts of 1918, 1928) இயற்றப் பெற்றன. இச் சட்டங்கள் மேலும் மக்கள் பிரதிநிதித்துவத்தை விரிவாக்கின.

1888, 1894, 1929 ஆகிய ஆண்டுகளில் ஆங்கிலேய உள்ளாட்சி முறையை (Local Self Government) சீர்திருத்தம் செய்யும் நோக்கத்துடன் உள்ளாட்சிச் சீர்திருத்தச் சட்டங்கள் இயற்றப்பெற்றன.

நீதித் துறையில் காணப்பெற்ற குறைபாடுகளை அகற்றும் விதத்தில், நீதித் துறைச் சீர்திருத்தச் சட்டங்கள் (The Judicature Acts of 1873, 1875, 1876, 1894) ஆகிய ஆண்டுகளில் நிறைவேற்றப் பெற்றன. நீதித் துறை செம்மையாகச் செயலாற்றப்பெற இச் சட்டங்கள் பெரிதும் உதவின.

மக்கள் விரும்பும் பல சீர்திருத்தச் சட்டங்களை இயற்றும்பொழுது பிரபுக்கள் சபை முட்டுக்கட்டையாக இருந்ததால், பிரபுக்கள் சபையின் வலிமையைக் குறைக்கவும், அதன் அதிகாரங்களைக் குறைக்கவும் 1911-ல் பாராளுமன்றச் சட்டம் (The Parliament Act, 1911) இயற்றப்பெற்றது. இச் சட்டம் இயற்றப்பட்டதற்குப் பின்னர், மக்கள் சபையின் அதிகாரம் வலிமையடைந்தது.

மேற்கூறிய பல பாராளுமன்றச் சட்டங்களும், மற்றும் இங்கே குறிப்பிடாத பல சிறிய சிறிய சட்டங்களும், ஆங்கிலேய மக்களுக்கு அரசியல் அமைப்பை அளிக்கின்றன. எந்த ஒரு குறிப்பிட்ட சட்டமும் ஆங்கிலேய அரசியலமைப்பாகாது. மக்களின் தேவைகளுக்கேற்ப அவ்வப்பொழுது இயற்றப் பெற்ற எண்ணற்ற சட்டங்கள் ஒருங்கே சேர்ந்துதான் ஆங்கிலேய அரசியலமைப்பை உருவாக்கியுள்ளன. தனிப் பட்ட ஓர் அரசியல் அமைப்பு ஆங்கிலேய நாட்டிற்கு இல்லையென்ப தால், அங்கு அரசியல் அமைப்பென்பதே இல்லையென்றும், அது எழுதப் படாது வெறும் மரபுகளால் மட்டும் பின்பற்றப்பட்டு வருகின்றது என் றும், பெரும்பாலும் ஆங்கிலேய நாட்டைச் சாராத பல அறிஞர்கள் கருதுகின்றனர். இருந்தபோதிலும், ஆங்கிலேய மக்களைப் பொறுத்த வரையிலும், அவர்களது உரிமைகளைக் காக்க ஓர் அரசியல் அமைப்பு செயலாற்றப்பட்டுத்தான் வருகின்றது. ஆங்கிலேய மக்களுக்குச் சீர் திருத்தங்கள் வேண்டுமென்றால், அல்லது அரசாங்கத்தில் மாற்றங்கள் வேண்டுமென்றால், அவர்கள் புரட்சியில் ஈடுபடுவதில்லையென்றும், அவர்கள் பாராளுமன்றத்தின் மூலமாகவே அவற்றைச் சாதித்துக் கொள்ள முடியும் என்றும் கருதுகின்றனர். தவிர, ஆங்கிலேய மக்கள் பெரும்பாலும் வழக்காறுகளிலும், மரபுகளிலும் அதிக ஈடுபாடுடைய வர்கள். அவற்றை அவர்கள் அலட்சியப்படுத்துவதில்லை. பழைய மரபுகளிலிருந்து புதிய வளர்ச்சியை அவர்கள் தேடிக்கொள்ளும் பழக் கத்தைப் பின்பற்றுகின்றனர்.

**மரபுகளை அடிப்படையாகக் கொண்டுள்ளது:** வழக்காறு கள், மரபுகள், பழக்கவழக்கங்கள் நடைமுறைகள் ஆகியவற்றையெல் லாம் சட்டங்கள் மூலமாகக்கொண்டு வரமுடியாது. நமக்குத் தேவை யான எல்லாவற்றிற்கும் சட்டங்களை இயற்றவும் முடியாது. சட்டங் களைத்தவிர, பழக்கவழக்கங்களையும் மரபுகளையும்கூடச் சட்டத்தைப் போன்று மக்கள் பாவித்து மதிப்பளிக்கின்றனர். பழக்கவழக்கங்களும், மரபுகளும் சட்டங்களின் இடத்தைப்பெறும்பொழுது, அல்லது சட் டங்களின் தகுதியைப் பெறும்பொழுது, சில சமயங்களில் அதாவது அந்த மரபுகள் புறக்கணிக்கப்படும் பொழுது அவற்றுக்கான பரி காரத்தை நாம் நீதிமன்றங்களில் பெற முடியாது. மரபுகளைப் பின்பற்

றுதல் என்பது, மக்களின் வளர்ச்சி சில சமயங்களில் சட்டங்களால் மட்டுமல்லாது, சூழ்நிலைக்கும் தேவைக்கும் ஏற்பப்பின்பற்றப்படுவதால், அவற்றைப் பின்பற்றுதல் அவசியமாகப்படுகின்றது. மரபுகள் வெறும் நடைமுறை விதிகளே தவிர சட்டங்கள் அல்ல. ஆங்கிலேய அரசியல் அமைப்பில் எழுதப்பெற்ற சட்டங்களுக்கும், அரசியல் அமைப்பை நடைமுறையில் பின்பற்றுவதற்கும் நிறைய வேறுபாடுகள் உள்ளன. அவ்வித வேறுபாடுகள் ஆங்கிலேய அரசியல் அமைப்பில் நிறைய இருப்பதால்தான், வெறும் ஏட்டளவில் படித்துவிட்டு அதைப் புரிந்துகொள்வது கடினமாகின்றது. எழுதப்பெற்ற சட்டதிட்டங்களிலிருந்து விலகும்பொழுது, ஆனால் அவ்விதம் விலகுவது மரபுகளுக்கேற்ப இருப்பின் சட்டங்களுக்குத் தரப்படவேண்டிய மதிப்பைத் தரவேண்டும் என்பது நடைமுறையில் ஒப்புக்கொள்ளப்பட வேண்டிய முறையாகும். அரசியல் அமைப்பு வெறும் எழுத்து வடிவில் உள்ள சட்டங்களால் மட்டுமல்லாது, நடைமுறையில் செயலாற்றப்பட மரபுகள் உதவுகின்றன. அவ்வித மரபுகள் அரசியல் அமைப்பிற்குப் புதிய வலிமையைத் தருகின்றன என்று எட்மண்ட் பர்க் கூறுகிறார். மேலும் அவர் மரபுகளைப்பற்றிக் கூறும்பொழுது, அவ்வப்பொழுது காணப்படும் சூழ்நிலைக்கேற்ப, அரசியல் அமைப்பு நடைமுறையில் செயலாற்றப்பட ஏற்றவாறு மரபுகள் உதவுகின்றன என்று கூறுகிறார். சட்டமியற்றும் பொழுதும், நிர்வாகம் செய்யும் பொழுதும், இவ்வித மரபுகள் பரவலாக இருப்பதைக் காண்கின்றோம். அவையெல்லாம் அரசியல் நெறிகளாகத்தான் பாவிக்கப்பட வேண்டும். ஒரு பக்கம் அரசியல் அமைப்பு எவ்விதம் பல சட்டங்களால் விரிவடைகின்றதோ, அதைப் போன்று மறுபக்கம் எழுதப்படாத மரபுகளும் அரசியல் அமைப்பு விரிவடைதலுக்குக் காரணமாக அமைகின்றன. அவையெல்லாம் வழக்கறிஞர்களுக்கும், அரசியல்வாதிகளுக்கும், சாதாரண மக்களுக்கும்கூடப் புலப்படும். ஆனால் அவற்றை எந்தச் சட்டப் புத்தகத்திலும் காணமுடியாது. ஏனெனில், அவை உண்மையில் சட்டங்கள் அல்ல.

ஏற்கெனவே பின்பற்றப்பட்டு வரும் மரபினால்தான் பாராளுமன்றம் ஆண்டு ஒன்றுக்கு ஒரு முறையாவது கட்டாயமாகக் கூட்டப்பட வேண்டும் என்பது இன்றும் பழக்கத்தில் இருக்கிறது. கேபினட் அவை கூட்டங்களில் அரசர் பங்கெடுத்துக் கொள்வதில்லை, அமைச்சர்களின் ஆலோசனைகளை அரசர் ஏற்றுக்கொள்ளுதல்; பாராளுமன்றத்தில் நிறைவேற்றப்படும் சட்டங்களுக்கு அரசர் மறுக்காமல் கையொப்பமிடுதல்; மக்கள் சபையின் சபாநாயகர் அரசியலில் பங்கெடுத்துக்கொள்ளாமை; பிரபுக்கள் சபை உயர் நீதிமன்றமாகச் செயலாற்றும் பொழுது, நீதி விசாரணை செய்ய ஒதுக்கப்பெற்ற பிரபுக்கள்ஆன சட்டப்பிரபுக்கள்

(Law Lords) மட்டுமே பங்கெடுத்துக் கொள்ளுதல்; அரசரின் எல்லாச் சிறப்பதிகாரங்களையும் அமைச்சர்களே அனுபவித்தல், செயலாற்றல்; அமைச்சர்கள் மக்கள் சபைக்குக் கட்டுப்பட்டு நடத்தல்; மக்கள் சபையின் நம்பிக்கையை இழந்த பின்னர், அமைச்சரவை பதவிகளிலிருந்து விலகல் ஆகிய மிக முக்கியமான மரபுகள் எவ்விதம் அரசியல் அமைப்பில் உள்ள சட்ட விதிகளைப் போன்று பின்பற்றப்படுகின்றன என்பதைப் பார்க்கும்பொழுது, உண்மையில் எழுதப்பெற்ற அரசியல் அமைப்பிற்கு உள்ள முக்கியத்துவத்தைக் காட்டிலும், இந்த மரபுகள் அதிக முக்கியத்துவம் உடையனவாகக் காணப்படுகின்றன. ஒரு நாட்டின் அரசாங்கத்தை அமைக்கத் தேர்ந்தெடுக்கும் தேர்வாளர்கள் அல்லது வாக்காளர்கள் எவ்வளவு முக்கியமானவர்கள் என்று தெரிந்திருப்பினும், அந்த முக்கியத்துவம் வெறும் மரபினால் ஏற்பட்டதே தவிர உண்மையில் சட்டபூர்வமான இறைமை பாராளுமன்றத்தில் தான் உள்ளது என்பது அரசியல்அமைப்பாகும். மக்களிடத்திலே உள்ள இறைமை வெறும் 'அரசியல் இறைமை' என்பதால், அவர்களுடைய முக்கியத்துவம் குறைத்து மதிப்பிடப்படுவதில்லை.

இந்த மரபுகளெல்லாம் எப்படி இவ்வளவு முக்கியத்துவம் பெறுகின்றன? உண்மையில் இந்த மரபுகளையெல்லாம் அரசாங்கம் பின்பற்றாவிடில், அரசாங்கம் ஒழுங்காகச் செயலாற்றுவதே மிகக் கடினமாகிவிடும். பேராசிரியர் டைஸி (Professor Dicey), 'இந்த மரபுகளெல்லாம் அரசியல் அமைப்போடு பிணைந்துள்ளன; இந்த மரபுகளைப் புறக்கணிப்பது அரசியல் அமைப்பையே புறக்கணிப்பதாகும்' என்று கூறுகிறார். இதற்கு இவர் மேற்கோளாகக்கூறும்பொழுது, பாராளுமன்றம் ஆண்டுக்கு ஒரு முறையாவது கூட்டப்பட வேண்டும் என்ற மரபு புறக்கணிக்கப்பட்டால், இதைத் தொடர்ந்து, ஆண்டுதோறும் புதுப்பிக்கப்படும் இராணுவச் சட்டம் (Army Act) காலாவதியாகிவிடும்; அதனால் அரசாங்கத்திற்கு இராணுவத்தின் மீதுள்ள கட்டுப்பாடு தளர்ந்து குழப்பம் ஏற்பட்டுவிடும் என்கிறார். தவிர, மற்றொரு மேற்கோளை அவர் கூறும் பொழுது, சில சமயங்களில் சில வரிகளை வசூலிப்பதும் கடினமாகிவிடும் என்றும் சில சமயங்களில் பாராளுமன்றத்தின் அனுமதி இல்லாததால், பொதுப்பணிகளுக்கோ, இராணுவத்திற்கோ, கடற்படைக்கோ சிறு தொகையையும் செலவழிக்க முடியாமல் போய்விடும் என்கிறார். அதனால் ஆண்டுக்கு ஒரு முறை பாராளுமன்றம் கூட்டப்படுவது அவசியமாகின்றது. இல்லாவிடில் அரசாங்கம் செயலாற்றுவதே கடினமாகிவிடும்.

டைஸி கூறுவது உண்மையே என்றாலும் அரசாங்கம் பாராளுமன்றத்தை ஆண்டுக்கு ஒரு முறையாவது கூட்டாமலேயே, நிரந்தர

மாக இராணுவச்சட்டத்தை இயற்றிக்கொள்ளுதல், அல்லது வரி விதிப்புகளை சில ஆண்டுகளுக்குச் சேர்த்தே விதித்தல் ஆகியவற்றை யெல்லாம் சர்வ அதிகாரம் பெற்றுள்ள பாராளுமன்றம் மூன்கூட்டியே செய்துகொள்ளமுடியும். ஆனால் அவ்விதம் பாராளுமன்றத்தை ஆண் டிற்கு ஒரு முறையாவது கூட்டாமல் அரசாங்கத்தை நடத்தினால் மக் களின் எதிர்ப்பு எவ்விதம் உருவாகிவிடும் என்பதை உணர்ந்திருப்பதா லேயே அவ்விதம் செய்யாமல் இருக்கிறார்கள். பல அரசாங்கங்கள் பதவிக்கு வந்தும், இன்றும் பழைய மரபுகளுக்கு பிரிட்டனில் மதிப் பளிப்பதைப் பார்க்கும்பொழுது, இந்த மரபுகள் இன்னும் நீடிக்கும் என்ற நம்பிக்கை ஆங்கிலேயர்களிடையே ஏற்பட்டுள்ளது.

ஆங்கிலேயே அரசியல் அமைப்பு மிகவும் நெகிழ்ச்சியுடையது. மற்ற நாடுகளில் உள்ள அரசியல் அமைப்புகளில் காணப்படும் நெகி ழாத்தன்மை ஆங்கிலேயே அரசியல் அமைப்பில் இல்லை. அரசியல் அமைப்புகளில் திருத்தங்கள் செய்யப்படவேண்டுமென்றால், மற்ற நாடு களில் தனிப்பட்ட முறைகளைப் பின்பற்ற வேண்டும். ஆங்கிலேய அரசியல் அமைப்பில், சாதாரண முறையில் பாராளுமன்றச் சட்டங்கள் மூலமாக எந்த மாற்றங்களையும் செய்ய முடியும். அதனால் ஆங்கிலேய அரசியல் அமைப்பில் தொடர்ச்சியான மாறுதல்கள் ஏற்பட்டுவருவதைக் காண்கிறோம். ஆனால், அந்த மாறுதல்கள் திடீரென்று ஏற்படுவதா கவோ தீவிர மாற்றங்களைக் கொண்டதாகவோ இருப்பது இல்லை. கடந்த கால ஆங்கிலேயே அரசியல் அமைப்பு வரலாற்றைப் பார்த்தால், ஆங்கிலேய அரசியல் நிறுவனங்கள் படிப்படியாக வளர்ச்சி அடைந்து வந்திருப்பதைக் காணலாம். அவை தீவிர மாறுதல்களுக்கோ புரட்சிகர மான மாறுதல்களுக்கோ உள்ளாவதில்லை. அந்த மாறுதல்களில் வர லாற்றுத் தொடர்ச்சி இருப்பதைக் காண்கிறோம். 17ஆவது நூற் றூண்டில் உள்நாட்டுப்போரும், மற்றும் அப்பொழுது ஏற்பட்ட பல புரட்சிச் சின்னங்களும் முழுவதுமாக ஆங்கிலேய அரசியல் அமைப்பை மாற்றிவிடவில்லை. கடந்த இருநூறு ஆண்டுகளாக மக்கள் விரும்பிய சில அரசியல் அமைப்புக் கருத்துகளுக்குத்தான் முக்கியத்துவம் அளித்து, அவற்றையே நிலைபெறச் செய்தனர்.

படிப்படியாக ஏற்பட்டுவரும் மாற்றங்களுக்கும், இப்பொழுது நடைமுறையில் ஆங்கிலேய அரசியல் அமைப்பைப் பின்பற்றுவதிலும் நிறைய முரண்பாடுகள் இருப்பதைக் காண்கிறோம். உதாரணமாக, எட்டு நூற்றூண்டுகளுக்கு முன்னர் மக்கள் வழங்கி வந்த அரசியல் வழக்காறுகள் இன்றும் நீடித்து வருகின்றன. அப்பொழுது ஆங்கி லேய அரசர்களின் எதேச்சாதிகாரம் வேரூன்றியிருந்த காலம். அப் பொழுது நாட்டின் சட்டத்தை 'அரசரின் சட்டம்' (King's Law)

என்று அழைத்தனர். அதைப்போன்றுதான் 'அரசரின் நீதி' என்றும், அந்த நீதி 'அரசரின் நீதிபதிகளால்' பரிபாலனம் செய்யப்பட்டு வந்தது என்றும் கூறுவர். அமைச்சர்களும், மற்ற எல்லா அதிகாரிகளும் 'அரசரின் ஊழியர்கள்' என்று அழைக்கப்பட்டனர். பாராளுமன்றம் கூட்டப்பட வேண்டுமென்றால் அதற்கு அரசரின் 'ஆணை' வேண்டும்.

பாராளுமன்றச் சட்டம் முழுமை பெறவேண்டுமென்றால் அதற்கு அரசரின் சம்மதம் வேண்டும். எந்த உயர்பதவி அதிகாரியை நியமனம் செய்ய வேண்டுமென்றாலும் அந்த நியமனம் 'அரசரின் பெயரால்'தான் செய்யபட வேண்டும். மக்களும்கூட 'அரசரின் விசுவாசமுள்ள குடிமக்கள்' (His Majesty's Loyal Subjects) என்று அழைக்கப்பட்டனர். ஆனால் இப்பொழுதுள்ள நடைமுறை முற்றிலும் வேறுபாட்டிருந்த போதிலும், இன்றும் பழைய மரபுகள் ஆங்கிலேய நாட்டில் பழக்கத்தில் இருப்பதைக் காண்கிறோம். நடைமுறை முற்றிலும் வேறுபாட்டிருந்த போதிலும், ஆங்கிலேய மக்கள் வரலாற்று அடிப்படையில் ஏற்பட்ட தொடர்ச்சியையும், அதன் வளர்ச்சியையும் முற்றிலும் மறந்துவிடவில்லை. இப்பொழுதெல்லாம். அரசர் செயலாற்றுவது என்பது அமைச்சர்கள் மூலமாகத்தான். அமைச்சர்களின் முடிவே, அரசரின் முடிவுமாகும். அதனால் ஆங்கிலேய அரசியல் அமைப்பை படிக்கும்பொழுது, அவர்களுடைய சில மரபுகளுக்கும், நடைமுறைகளுக்கும் உள்ள சில முரண்பாடுகளையும் சரியாகப் புரிந்து கொள்ள வேண்டும்.

ஆங்கிலேய அரசியல் அமைப்பு காலத்திற்கு ஏற்பவும், மக்களின் தேவைகளுக்கு ஏற்பவும் மாறிக் கொண்டே வந்துள்ளது. அவ்வித மாறுதல்கள் ஏற்படுவதற்கு ஆங்கிலேயர்கள் மூன்று முறைகளை ஏற்றுக் கொண்டுள்ளனர். (1) நீதித்துறையின் கண்ணோட்டம் (Judicial Interpretation), (2) மரபுகள், வழக்காறுகள் ஆகியவற்றின் வளர்ச்சி அல்லது மறைவு, (3) பாராளுமன்றச் சட்டமியற்றுதல் (Parliamentary Legislation).

பாராளுமன்றத்தில் இயற்றப்பெற்ற சட்டங்களை நீதிபதிகள் ஏற்றுக்கொள்கின்றனர். அச் சட்டங்கள் செல்லுமா, செல்லாதா என்பதைப்பற்றி நீதிபதிகள் கவலைப்படுவதில்லை. பாராளுமன்றத்தில் இயற்றப்படும் சட்டங்களையொட்டித்தான் நீதிபதிகள் நீதி வழங்க வேண்டுமே தவிர, அவர்கள் அச் சட்டங்களுக்கு அப்பால் செல்வதில்லை. ஆனால் சில சமயங்களில் பொது நீதிக்குப் (Common Law) பாராளுமன்றச் சட்டங்கள் சரிவரப்பொருளை அளிக்கின்றனவா என்று

தீர்மானிக்கும் பொழுது, நீதிபதிகள் அவர்களுடைய கருத்துகளைச் சொல்லக்கூடும். ஆனால், பொதுப்படையாக அவர்களுடைய கருத்துகள் சட்டங்களுக்குள்ளடங்கியதாகவே இருக்கும். ஆங்கிலேய அரசியல் அமைப்பின் வளர்ச்சிக்கு நீதிபதிகளின் முடிவுகள் அதிக மாற்றங்களை ஏற்படுத்தவில்லை. ஆனால் வரலாற்றுத் தொடர்ச்சியாக ஏற்பட்டுள்ள பல வழக்காறுகளும், மரபுகளும் ஆங்கிலேய அரசியல் அமைப்பின் தன்மையை மிக அதிக அளவில் மாற்றி அமைத்துள்ளன. அந்த மரபுகள் இன்னும் அரசியல் அமைப்பில் பல மாற்றங்களை ஏற்படுத்தக்கூடும்.

ஆனால், நீதிபதிகளின் தீர்ப்புகளைக்காட்டிலும், மரபுகளைக்காட்டிலும், ஆங்கிலேய அரசியல் அமைப்பின் வளர்ச்சிக்கு மிகவும் உறுதுணையாக உள்ளவை, அவ்வப்பொழுது பாராளுமன்றத்தில் இயற்றப்படும் சட்டங்களேயாகும். ஆங்கிலேய அரசியல் அமைப்பில் ஏற்படும் திருத்தங்கள், பாராளுமன்றச் சட்டங்கள் மூலமாகத்தான் செய்யப்படுகின்றன. ஏனைய நாடுகளில் அரசியல் அமைப்பில் திருத்தங்கள் ஏற்பட வேண்டுமாயின், சாதாரணச் சட்டமியற்றும் சட்டசபைக்கப்பால், மற்ற முறைகளைப் பின்பற்றித்தான் திருத்தங்களைச் செய்வது வழக்கம். ஆனால், அந்த முறை ஆங்கிலேய நாட்டில் பின்பற்றப்படுவதில்லை. சாதாரணச் சட்டங்களை இயற்றுவதும் பாராளுமன்றமே; அரசியல் அமைப்பில் திருத்தங்களைச் செய்வதும் பாராளுமன்றமேயாகும். ஏனெனில், ஆங்கிலேயப் பாராளுமன்றத்திற்கு எல்லையற்ற 'சட்ட இறைமை' (Legal Sovereignty) ஒப்படைக்கப்பட்டுள்ளது. அதனால் ஆங்கிலேய பாராளுமன்றம் எந்தச் சட்டத்தையும் இயற்றலாம்; எந்த அரசியல் அமைப்புத் திருத்தத்தையும் கொண்டுவரலாம். 'நமது பாராளுமன்றம் காட்டுப்பறவைகளுக்கும் மீன்களுக்கும் பாதுகாப்பு அளிக்கும் சட்டங்களையும் இயற்றலாம்; அதே முறையைப் பின்பற்றி திருச்சபைக்கும் அரசாங்கத்திற்குமுள்ள தொடர்புகளைத் துண்டிக்கவும் சட்டங்களை இயற்றலாம்; அல்லது இருபது லட்சம் மக்களுக்கு அரசியல் அதிகாரங்களையும் வழங்கலாம்; அல்லது புதிய பாராளுமன்றத் தொகுதிகளை நிர்ணயம் செய்யும் சட்டங்களையும் இயற்றலாம் என்று டபிள்யூ. ஆர். ஆன்சன் (W. R. Anson) என்பவர் குறிப்பிடுகிறார். இன்னும் கூறப்போனால், பாராளுமன்றம் அரசரைப் பதவியிலிருந்து இறக்கலாம்; முடியாட்சியை முற்றிலும் ஒழித்துவிடலாம்; பிரபுக்கள் சபையில் உள்ள பிரபுக்களின் நியமனங்களை ரத்து செய்யலாம்; அல்லது பிரபுக்கள் சபையை ஒழித்துவிடலாம். பாராளுமன்றம் எதை வேண்டுமென்றாலும் செய்யலாம். இப்பொழுதுள்ள ஆங்கிலேய அரசாங்கத்தையே அடையாளம் காணுதவாறு மாற்றி அமைத்துவிடலாம். ஒருசில சீர்திருத்தங்களைப் பாராளுமன்றம் மக்களின் தேவைகளையும், முன்னேற்

றத்தையும் காநதி சட்டங்கள் மூலமாக மாற்றி அமைக்கின்றது என்ற காரணத்தால் பிரபுகளுக்கும், வழக்காறுகளுக்கும் முரண்பட்ட விதத்தில் பாராளுமன்ற உறுப்பினர்கள் அடையாளம் காண முடியாத அளவில் ஆங்கிலேய அரசாங்கத்தை முற்றிலும் மாற்றிவிட இன்னும் முன்வரவில்லை. ஆங்கிலேய சமுதாய மரபுகளுக்கு அவர்கள் மதிப்பளித்து, இன்னும் பழைமையின் அடிப்படையிலேயே முன்னேற்றம் கண்டு வருகிறார்கள். ஆங்கிலேய அரசியல் அமைப்பு நெகிழ்ச்சியுடையது என்ற ஒரு காரணத்தால் மட்டும் தீவிர மாற்றங்களை ஏற்றுக்கொள்ளத் தயாராக் உள்ளது என்று கருதக் கூடாது.

இருப்பினும் சில சமயங்களில் அரசியல் சூழ்நிலைக்கேற்பச் சில தீவிர மாற்றங்களை ஏற்படுத்தும் சட்டங்களும் பாராளுமன்றத்தில் இயற்றப்பட்டுள்ளன. 1911, 1949 ஆகிய ஆண்டுகளில் இயற்றப் பெற்ற பாராளுமன்றச் சட்டங்கள் (The Parliament Acts of 1911, 1949) பிரபுக்கள் சபையின் சில முக்கியமான உரிமைகளைப் பறித்து விட்டன. மக்கள் சபையுடன் சமத்துவமாகக் கருதப்பட்டு வந்த நிலையை பிரபுக்கள் சபை மேற்கூறிய சட்டங்கள் மூலமாக இழந்து விட்டது. 1918–ல் பாராளுமன்றத்தில் இயற்றப்பெற்ற சட்டம், பெண்களுக்கு வாக்குரிமை அளித்தது ஒரு புரட்சிகரமான மாற்றமாகக் கருதப்படுகிறது. சில சமயங்களில் வழக்காறுகளே சட்டங்களை இயற்ற வேண்டிய அவசியத்தை ஏற்படுத்துகின்றன. உதாரணமாக ஆங்கிலேயப் பேரரசில், கேனடாவுக்கு வழங்கப்பெற்ற ஆட்சியுரிமை மற்ற ஆங்கிலேய காலனிகளுக்கு வழங்கப்பட்ட உரிமையைக்காட்டிலும் வேறுபட்டதாக இருந்தது. வெறும் பழக்கத்தால் மட்டுமே தான் இவ்வித முறை பின்பற்றப்பட்டு வந்தது. ஆனால் இதைப் பின் தொடர்ந்து, குழப்பங்கள் ஏற்பட்டதால் 1931–ல் வெஸ்ட் மினிஸ்டர் சட்டம் (Statute of Westminister) இந்தக் குழப்பங்களைத் தீர்க்கும் வகையில் இயற்றப்பட்டது. 1937ஆவது ஆண்டு வரையிலும், 'கேபினட் முறை அரசாங்கம் வெறும் அரசியல் வழக்காறாகவே பின்பற்றப்பட்டு வந்தது. 1937–க்குப் பின்னர்தான் 'கேபினட்' அரசாங்க முறை சட்ட அடிப்படையில் அங்கீகாரம் பெற்றது. அதைப் போன்று தான், அமைச்சர்களின் சம்பள விகிதங்கள் சட்ட அடிப்படையில் நிர்ணயம் செய்யப்பெற்றன. அரசனுடைய அமைச்சர்கள்பற்றிய சட்டம் (The Ministers of The Crown Act) மேற்கூறிய மாறுதல்களைச் செய்தது. வெறும் மரபுகள் தெளிவில்லாமல் இருப்பதால், சில மரபுகளுக்குத் திட்டவட்டமான சட்ட அங்கீகாரம் கொடுக்க வேண்டிய அவசியம் ஏற்பட்டது.

## ஒருமுக ஆட்சி
## (Unitary Government)

ஆங்கிலேய நாட்டின் அரசாங்கம் ஒருமுக ஆட்சியை அடிப்படையாகக் கொண்டுள்ளது. ஏனெனில் எல்லா அரசாங்க அதிகாரங்களும் ஒரு தனி அரசாங்கத்தில் குவிந்துள்ளன. பிரிட்டனிலுள்ள மற்ற எல்லா உள்ளாட்சிப் பகுதிகளும், (கவுன்டிகள், பரோக்கள்) லண்டனிலுள்ள அரசாங்க அதிகார வரம்பிற்குள் வருகின்றன. இந்த மத்திய அரசாங்கத்திடமிருந்துதான், உள்ளாட்சிப் பகுதிகள் அதிகாரங்களைப் பெறுகின்றன. மத்திய அரசாங்கம் நினைத்தால், கவுன்டிகள், பரோக்கள் ஆகிய உள்ளாட்சிப் பகுதிகளின் எல்லைகளை மாற்றியமைக்கலாம். அவற்றின் ஆட்சிமுறைகள் மாற்றியமைக்கப்படலாம். இல்லாவிடில், அவற்றை முற்றிலும் இல்லாமலும் செய்யலாம். ஒருமுக ஆட்சி என்பது, மற்றப் பகுதிகள் எல்லாம் ஒரு குறிப்பிட்ட மத்திய அரசாங்கத்திற்குக் கட்டுப்பட்டவை என்பதாகும். இந்த ஒருமுக ஆட்சி, அமெரிக்க ஐக்கிய நாடுகளிலோ, சுவிட்சர்லாந்திலோ உள்ள கூட்டாட்சியைப் போன்றதன்று.

## அதிகாரங்களின் குவியல்
## (Union of Powers)

மான்டஸ்க் (Montesquicu) என்ற ஃபிரஞ்சு அரசியல் அறிஞர் 'அதிகாரப் பிரிவினை' என்ற கருத்தை, ஆங்கிலேய அரசியல் அமைப்பில் காண முடிகின்றது என்று தவறுதலாக மதிப்பிட்டு, அதைப் போன்ற அதிகாரப் பிரிவினை ஃபிரஞ்சு நாட்டிற்கும் அறிமுகம் செய்தால் நல்லது என்று கருதினார். ஆனால் உண்மையில், மான்டஸ்க் 'ஸ்பிரிட் ஆப் லாஸ்' (Spirit of Laws) என்ற நூலை எழுதிய காலத்திலும் சரி, இப்பொழுதும் சரி, ஆங்கிலேய அரசியல் அமைப்பில் அதிகாரப் பிரிவினை (Separation of Powers) என்ற முறை இடம் பெறவில்லை. ஆங்கிலேய அரசியல் அமைப்பின்படி, நிர்வாகம், சட்டமியற்றுதல், நீதி பரிபாலனம் ஆகிய அரசாங்க அதிகாரங்கள் ஒன்றாக இணைந்துள்ளதைக் காண்கிறோம். பாராளுமன்றத்தில் சட்டமியற்றப் படும்போது நிர்வாகிகளான அமைச்சர்கள் அச் சட்டங்களை இயற்றும் பொறுப்பைப் பெறுகின்றனர். பாராளுமன்ற உறுப்பினர்களின் பெரும்பான்மையானவர்களின் ஒத்துழைப்பும் அவர்களுக்குத் தேவைப் படுகின்றது. சட்டத்தை உருவாக்கி, அதனை இயற்றுகின்ற பணியும், அதனைச் செயலாற்றுகின்ற பணியும் அமைச்சர்களைச் சார்ந்ததால், நிர்வாகமும், சட்டங்களை இயற்றுகின்ற பாராளுமன்றமும் தனித் தனியே இயங்குகின்றன என்று கூறுவதற்கில்லை. அதைப் போன்று

நிர்வாகிகளான அமைச்சர்கள் பாராளுமன்றத்திற்குத் தனிப்பட்டவிதத்திலும், கூட்டாகவும் பொறுப்புடையவர்களாவர். ஓரளவிற்கு மட்டுமே, நீதித்துறை தனியாகச் செயல்படுகின்றது. 1707-ல் இயற்றப்பெற்ற வாரிசுரிமை நிர்ணயச் சட்டம் (The Act of Settlement) நீதிபதிகளின் சம்பள விகிதங்களையும், அவர்களின் பதவிக் காலத்தையும், அவர்களின் உரிமைகளையும் நிர்ணயம் செய்தது. நீதிபதிகள் ஒழுங்கான முறையில் பணியாற்றி வருகையில் அவர்களைப் பதவிகளிலிருந்து விலக்குவது கடினமாக்கப்பட்டது. அவ்விதம் நீதிபதிகளைப் பதவியிலிருந்து விலக்க வேண்டுமெனில் அரசர், அவர்கள்மீது குற்றச்சாட்டுகளைக் கொண்டுவந்து, பாராளுமன்றத்தின் இரண்டு சபைகளின் அங்கீகாரத்தைப் பெற்றுத்தான் விலக்க முடியும். இது மிகவும் கடினமான காரியமாகும். ஆங்கிலேய நாட்டில் சுதந்திரமான நீதித்துறை இயங்குவதற்கு நல்ல சூழ்நிலை அமைக்கப்பட்டுள்ளது. நீதித்துறை இந்த அதிகாரத்தைப் பெற்றிருப்பதைத் தவிர, மற்றத் துறைகளில் அதிகாரப் பிரிவினை இல்லை. அதற்குப் பதிலாக அதிகாரக் குவியல்தான் அதிகமாகக் காணப்படுகிறது.

## பாராளுமன்றத்தின் இறைமை

## (Supremacy of Parliament)

ஆங்கிலேய அரசியல் அமைப்பில் முழு அதிகாரம், சட்ட இறைமை பெற்றுள்ள அரசியல் நிறுவனம் பாராளுமன்றமாகும். இரண்டு முக்கியமான கருத்துகளை அடிப்படையாகக் கொண்டு, பாராளுமன்ற ஆதிக்கம் மதிப்பிடப்படுகின்றது. முதலில், சட்ட ரீதியாகப் பாராளுமன்றத்திற்கு எந்தச் சட்டத்தையும் இயற்றவும், எந்தச் சட்டத்தையும் திருத்தவும், அல்லது எந்தச் சட்டத்தையும் ரத்து செய்யவும், நீதிபதிகளின் தீர்ப்புக்களைப் புறக்கணிக்கவும், அல்லது வேரூன்றிய எந்த அரசியல் மரபையும் அரசியல் அமைப்பிற்குப் புறம்பானது என்று கூறவும் அதிகாரம் பெற்றுள்ளது. இரண்டாவதாக, பாராளுமன்றம் இயற்றிய எந்தச் சட்டத்தையும் செல்லத் தக்கதல்ல என்று கூறும் அதிகாரம் வேறு எந்த அரசியல் நிறுவனத்திற்கும் ஆங்கிலேய நாட்டில் இல்லை. அதனால்தான் வழக்கமாக ஆங்கிலேயப்பாராளுமன்றத்தின் அதிகாரத்தைப்பற்றி கூறும்பொழுது 'ஆணைப் பெண்ணாகவும், பெண்ணை ஆணாகவும் மாற்றுகின்ற அதிகாரத்தைத் தவிர, பாராளுமன்றத்திற்கு மற்றெல்லா அதிகாரமும் உள்ளது' என்று கூறுவர். பாராளுமன்றம் தானே விதித்துக் கொள்கின்ற கட்டுப்பாடுகளைத் தவிர, அதனுடைய அதிகார வரம்புகளுக்கு எல்லை இல்லை. இருப்பினும், பாராளுமன்றம் வழக்கமாக, பொதுமக்கள் கருத்து, சர்வதேசச் சட்டம், சர்வதேச உடன்படிக்கைகள், அதனுடைய வரம்பிற்குட்பட்ட நிதி

நிலைமை ஆகியவற்றைப் புறக்கணித்துச் செயலாற்றுவதில்லை. பாராளு மன்றச் சட்டத்தை ஆங்கிலேய மக்கள் எப்பொழுதாவது அரசியல் அமைப்பிற்குப் புறம்பானது என்று கூறினால், இதற்கு முன்னால் வழக் காற்றிலுள்ள ஓர் அடிப்படை உரிமைக்கு மாறுபட்ட வகையில் சட்டம் அமைக்கப்பட்டிருப்பதைத் தான் கருத்தில் கொண்டு கூறுவரேதவிர, பாராளுமன்றத்தில் சட்டமாக இயற்றப்பட்ட பின்னர் அது செல்லத் தக்கதன்று என்று கூறுவதற்கு வேறு எந்த நிறுவனத்திற்கும் நீதிபதி களுக்கும் அதிகாரம் இல்லை.

## மக்கள் உரிமைகள்
## (Civil Liberties)

பாராளுமன்றம் மக்களுடைய உரிமைகளில் பாதுகாக்கும் நிறுவன மாக வளர்ச்சியடைந்துள்ளது. ஆனால் பாராளுமன்றத்திற்கு எல்லை யற்ற அதிகாரம் வழங்கப்பட்டிருப்பதால், மக்களுடைய உரிமைகள் உண்மையில் பாதுகாக்கப்படுமா என்ற கேள்வி எழுகிறது. ஏனெனில், மக்களுடைய உரிமைகளைப் பறித்துக்கொள்ளவோ, குறைக்கவோ, அவற்றில் தலையிடவோ பாராளுமன்றம் சட்டமியற்றினால் என்ன செய்வது என்ற வினாவிற்குப் பதில் அளிக்க வேண்டுமென் றால், சாதாரண காலங்களில் மக்களுடைய உரிமைகளில் தலையிடும் வழக்கத்தைப் பாராளுமன்றம் வளர்த்துக் கொள்ளவில்லை. வழக்கமாக மக்களின் அபிப்பிராயத்திற்கு மதிப்பளிக்கும் வழக்கத்தைத்தான் அது மேற்கொள்கின்றது. ஆனால் சில நெருக்கடியான சந்தர்ப்பங்களில் பாராளுமன்றம் மக்களின் உரிமைகளில் தலையிடவேண்டிய அவசியம் ஏற்படுகின்றது. உதாரணமாக, 1914-1918-ல் நிகழ்ந்த முதல் உலகப் போர் சமயத்தில் பாராளுமன்றம், மக்களின் அங்கீகரிக்கப்பெற்ற சில உரிமைகளைக் குறைக்கும் அளவில் 1915-ல் நாட்டின் பாதுகாப்புச் சட்டம் (Defence of the Realm Act) ஒன்றை இயற்றியது. இதைப் போன்ற அவசரகாலச் சட்டம் (Emergency Powers Act) ஒன்றை 1939-ல், அதாவது இரண்டாவது உலகப் போர் தொடங்கிய பொழுது பாராளுமன்றம் இயற்றியது. மேற்கூறிய பாதுகாப்புச் சட்டங்களால், ஓரளவிற்கு மக்களின் சில உரிமைகள் பாதிக்கப்பெற்றன. ஆனால் போர் முடிந்த பின்னர், நெருக்கடி காலம் முடிந்த பின்னர் சாதாரணமாகப் பின்பற்றப்பட்டு வந்த மக்கள் உரிமைகள் மீட்கப் பட்டன. அமெரிக்க ஐக்கிய நாடுகள், ஃபிரான்ஸ் ஆகிய நாடுகளில் காணப்படும் அரசியல் அமைப்பு சட்டங்களில், மக்களுடைய உரிமை கள் பாதுகாக்கப்படும் என்று உறுதி அளிக்கப்படுகின்றது. அவ்வித மான உறுதியை பிரிட்டனில் நிறைவேற்றப்பட்ட பல சட்டங்கள் ஆங்கிலேய மக்களுக்கு அளிக்கின்றன. 1679-ல் இயற்றப்பெற்ற

ஆளுரிமைக் காப்புச்சட்டத்திலும் (Habeas Corpus Act, 1679) மற்றும் 1689-ல் இயற்றப்பெற்ற மக்கள் உரிமைகள் மசோதாவிலும் (The Bill of Rights) மக்களின் அடிப்படை உரிமைகள் பாதுகாக்கப் படும் உறுதி அளிக்கப்பெற்றிருக்கிறது. தவிர, மற்ற முக்கியமான உரிமைகள், பேச்சு சுதந்திரம், வழிபாட்டுச் சுதந்திரம், சங்கம் அமைத்தல் போன்ற உரிமைகள் பொதுச் சட்டத்தின் மூலமாகவே பாதுகாக்கப்படுகின்றன. அதனால் பொதுச் சட்டத்தின் மூலமாக மக்களின் உரிமைகள் பாதுகாக்கப்படுகின்றன. ஒரு குறிப்பிட்ட உரிமையைப் பாதுகாக்கத் தனிப்பட்ட சட்டம் தேவையில்லை. ஒரு குறிப்பிட்ட உரிமை பொதுச் சட்டத்தால் ரத்து செய்யப்படாதவரையில், அல்லது அந்த உரிமை மற்றவர்களின் உரிமைகளில் தலையிடாத வரையிலும், பாதுகாக்கப்படுகின்றது என்பது பொருளாகும். உதாரணமாகப் பேச்சு சுதந்திரம் அளவிற்கு மீறி பயன்படுத்தப்படும் போதும், நாட்டிற்குத் துரோகம் இழைக்கின்றபோதும் அல்லது தெய்வ நிந்தனை செய்கின்றபோதும் அல்லது மற்றவர்களின் உரிமைகளைப் பாதிக்கின்ற அளவில் இருக்கும்போதும் அதற்கேற்ற கட்டுப்பாடும் தேவைப்படுகின்றது. இந்தச் சூழ்நிலையில் தனிப்பட்ட மனிதனின் பேச்சு சுதந்திரம் பாதுகாக்கப்படமாட்டாது. ஆங்கிலேய அரசில் சட்டக்கருத்துகள் சட்டத்தின் இறைமை என்ற கொள்கையினடிப் படையில் (Rule of Law) வளர்ச்சியடைந்துள்ளதைக் காண்கிறோம். இந்தச் சட்ட ஆதிக்கம் மக்களின் உரிமைகளைப் பெரும்பாலும் பாதுகாக்கின்றன. அமெரிக்க ஐக்கிய நாடுகளிலும், ஃபிரான்சிலும் உள்ள மக்கள், அவர்களுடைய அரசியல் அமைப்புகளின்படி, அதிக அளவிற்கு உரிமைகளைப் பெறுகின்றனர். அந்த அளவிற்கு ஆங்கிலேய மக்களுக்கு உரிமைகளை அனுபவிக்கும் வாய்ப்புகள் இல்லை என்ற மேலெழுந்தவாரியான எண்ணம் தவறானது, ஆங்கிலேய மக்களுடைய உரிமைகள் நன்றாகப் பாதுகாக்கப்பட்டுள்ளன. அவர்களுடைய வழக்காறுகளும், மரபுகளும், மற்றும் மக்கள் கருத்து, பத்திரிகைகள், வாக்களிக்கும் மக்களின் பொறுப்புணர்ச்சி ஆகிய பல சாதனங்கள் மூலமாகப் பாராளுமன்றமும், மற்றும் அரசாங்க நிறுவனங்களும் பெரிதும் கட்டுப் படுத்தப்பட்டுள்ளன. மக்களுடைய உரிமைகளைப் பறித்துக்கொள்ளாதவாறு வாக்களிக்கும் பொதுமக்கள் அங்கே விழிப்பாகவே உள்ளனர்.

# 2. அரசு - மன்னர்

## (THE CROWN — THE MONARCH)

உலகிலுள்ள பெரும்பான்மையான நாடுகளில், குறிப்பாக ஐரோப்பிய நாடுகளில் அரசியல் புரட்சிகள் ஏற்பட்டு, முடியாட்சிக்கு முற்றுப் புள்ளி வைக்கப்பட்டுள்ள காலத்திலும், அரசியல் வளர்ச்சி ஏற்பட்டுள்ள 'ஐக்கிய அரசில்' **(United Kingdom)** மட்டும் ஏன் இன்னும்முடியாட்சி பாதுகாக்கப்பட்டு வருகின்றது என்ற வினாவிற்கு முதலில் பதில் அளித்தல் வேண்டும். அரசியல் வளர்ச்சி ஏற்பட்டுள்ள ஆங்கிலேய நாட்டில் இன்னும் முடியாட்சி நீடித்திருப்பதற்குக் காரணம், அந்த முடியாட்சியால் மக்களின் உரிமைகள் சிறிதும் பாதிக்கப்படுவதில்லை; அல்லது அரசாங்கம் முடியாட்சியால் கட்டுப்படுத்தப்படுவதில்லை; அல்லது சட்டமியற்றும் பாராளுமன்றம் முடியாட்சிக்குக் கீழ்படிந்து சட்டங்களை இயற்ற வேண்டிய அவசியமும் இல்லை என்பதை அவர்கள் நன்ருக உணர்ந்துள்ளனர். அதனுல்தான் கடந்த காலத்தில், ஆங்கிலேய நாட்டில் முடியாட்சியை அகற்றிவிட்டு, குடியாட்சியை ஏற்படுத்த வேண்டும்' என்ற கூக்குரல் படிப்படியாக ஓய்ந்து, அவர்கள் இந்த வரையறுக்கப்பெற்ற முடியாட்சி முறையை விரும்பி ஏற்றுக் கொண்டுள்ளனர். படிப்படியாக வளர்ச்சியடைந்துள்ள மரபுகள் நவீன காலத்திற்கேற்ப பின்பற்றப்பட முடியவில்லை என்ற போதிலும் அவர்களுடைய மரபுகளுக்கும் நடை முறைகளுக்கும் நிறைய வேறுபாடுகள் இருப்பதைக் காண்கிருேம்.

17 ஆவது நூற்ருண்டு வரையிலும் ஆங்கிலேய அரசர்கள் எதேச் சதிகாரத்தைப் பின்பற்றுபவர்களாக இருந்தனர். முதலாம் ஜேம்ஸ் மன்னர் தெய்வீக உரிமையைப் பாராட்டி வந்தார். முதலாம் சார்லஸ் பாராளுமன்றத்துடன் ஒரு போராட்டத்தை நிகழ்த்தி, தெய்வீக உரிமையை நிலைநிறுத்த முயன்ருர். ஆனுல் அந்தப் போராட்டத்தில் அவர் தோல்வியுற்று 1649–ல் தூக்குமேடை ஏறினுர்.

இதைப் போன்ற மற்ருெரு நிகழ்ச்சி ஃபிரான்சிலும் நிகழ்ந்தது. ஃபிரான்சில் ஏற்பட்ட அரசியல் புரட்சி காரணமாக, பதினுரும் லூயி 1793–ல் கில்லோட்டினுக்கு இரையானர். முடியாட்சியை ஃபிரான்சில் மட்டுமல்லாது, ஐரோப்பாவிலுள்ள மற்ற நாடுகளிலும் ஒழித்துவிட வேண்டுமென்பது ஃபிரெஞ்சுப் புரட்சிக்காரர்களின் இலட்சியமாக விளங்கியது. முடியாட்சியை அகற்றிவிட்டு, அவர்கள் குடியாட்சி முறையை ஏற்படுத்த வேண்டுமென்று போரிட்டனர். இந்த இயக்கத்தின் காரணமாக, ஐரோப்பாவில் உள்ள பல நாடுகளிலும் முடியாட்சி ஆட்டம் கண்டது. மக்கள் மன்னர்களை, கடவுளின் பிரதிநிதிகளாக நினைக்கவில்லை; மக்களின் விரோதிகளாகவே கருதத் தொடங்கினர். இந்தப் புரட்சி இயக்கம் ஃபிரான்சில் 1830, 1848 ஆகிய ஆண்டுகளில் தொடர்ந்து நிகழ்ந்தது; முதலில் பத்தாம் சார்லஸ் (Charles X) பின்னர் லூயி ஃபிலிப் (Louis Philippe) ஆகிய மன்னர்கள் முடி துறக்க நேரிட்டது. மூன்ரும் நெப்போலியன் (Napoleon III) மீண்டும் ஃபிரான்சில் முடியாட்சியைக் கொண்டுவந்தார். ஆனல், 1870–ல் செடான் (Sedan) போர்க்களத்தில் அவர் பிரஷ்யர்களால் தோற்கடிக்கப்பட்டதால், அவர் பேரரசர் பதவியைத் துறக்க நேரிட்டது. தவிர ஃபிரான்சில் முடியாட்சிக்கும் நிரந்தரமான முற்றுப்புள்ளி வைக்கப்பட்டது. அப்பொழுதிருந்து ஃபிரான்சில் குடியாட்சி நிலவி வருகிறது. ஸ்பெயின் நாட்டில் இஸபெல்லா அரசியார் 1868–ல் பதவியை விட்டு விலக நேரிட்டது. மீண்டும் முடியாட்சி அங்கே நிறுவப்பெற்ற போதிலும், 1931–ல் பதிமூன்ரும் அல்ப்பன்சோ (Alfonso XIII) பட்டத்தைத் துறந்த உடன் அங்கு முடியாட்சி முடிவடைந்தது. 1917 ரஷ்யப்புரட்சியின் பொழுது ரஷ்ய அரசர் இரண்டாம் நிக்கலஸ் கொல்லப்பட்டார். ரஷ்யாவில் 1918 க்குப் பின்னர் சோஷியலிச குடியரசு நிறுவப்பெற்றது. முதல் உலகப் போருக்குப் பின்னர் ஜர்மன் இரண்டாம் கெய்சர் வில்லியமின் ஆட்சி முடிவுற்று, அங்கே குடியரசு அரசாங்கம் நிறுவப்பெற்றது.

ஆஸ்டிரியாவிலும் குடியரசு தோன்றியது. 1946 வரையிலும் இத்தாலியில் தத்தளித்துக் கொண்டிருந்த அரசரின் ஆட்சிக்கு முற்றுப்புள்ளிவைக்கப்பட்டது. ஃபேசிஸ்டு ஆட்சி இருந்த பொழுதே இத்தாலியில் மன்னரது ஆட்சி வெறும் பெயரளவிற்குத்தானிருந்தது. பிரிட்டனைத் தவிர, மற்ற எல்லா பெரிய ஐரோப்பிய நாடுகளிலும் முடியாட்சியை அறவே கைவிட்டு விட்டனர்.

பிரிட்டனில் இன்னும் முடியாட்சி நீடித்திருப்பதைப் பலர் கண்டிக்காமல் இல்லை. இப்பொழுதுள்ள அரசியல் முன்னேற்றத்திற்கு முடியாட்சி முறை ஏற்றதன்று என்று கூறுகின்றனர், மற்ற நாடுகளில்

முடியாட்சியை அகற்றிக் குடியரசு அரசாங்கத்தை ஏற்படுத்தியதால் முன்னேற்றம் கண்டுள்ளனர் என்பதை மறுக்க முடியாது. ஆனால், அதே சமயத்தில் பிரிட்டனிலுள்ள முடியாட்சி முறையை அங்குள்ள மக்கள் ஏற்றுக் கொண்டுள்ளனர் என்பதையும் சிந்தித்துப் பார்த்தால், முடியாட்சி முறை பிரிட்டனில் நீடித்திருப்பதால் எவ்வித அபாயமும் ஆங்கிலேய மக்களுக்கு ஏற்பட்டதாகத் தெரியவில்லை. மற்ற நாடுகளில் குடியாட்சி முறையில் எவ்வளவு உரிமைகளை மக்கள் பெற்றுள்ளனரோ அதைப்போன்ற உரிமைகளையும், அல்லது இன்னும் அதிக அளவில் உரிமைகளையும் ஆங்கிலேய மக்கள் பெற்றிருப்பதைக் காண்கிறோம். அதனால் ஆங்கிலேய நாட்டில் முடியாட்சி நீடித்திருப்பதற்கான சூழ்நிலையைப் பார்க்க வேண்டும்.

மற்ற ஐரோப்பிய நாடுகளில் முடியாட்சி அகற்றப்படுவதற்குப் பல காரணங்கள் இருந்தன. பூர்போன் அரசர்களின் ஆட்சியை ஃபிரஞ்சு மக்கள் வெறுத்ததன் விளைவாகத்தான் அங்குப் புரட்சி ஏற்பட்டது. உலகப்போர் ஏற்பட்டதன் விளைவாக ஜெர்மனியிலும் ஆஸ்டிரியாவிலும் பேரரசர்களின் ஆட்சி முற்றுப்பெற்றது. ரஷ்யாவிலுள்ள ஜார் மன்னர்களின் ஆட்சி மக்கள் நலன்களைக் கருதாது நடைபெற்று வந்ததால் புரட்சி ஏற்பட்டு, முடியாட்சி முடிவுற்றது. ஆனால் ஆங்கிலேய மன்னர்களின் ஆட்சி 17 ஆவது நூற்றாண்டிற்குப் பிறகு வரையறுக்கப்பெற்ற முடியாட்சியாகவே இருந்தது. மக்களின் சீர்திருத்த விருப்பங்களுக்கும், அவர்கள் அதிக அளவில் அரசாங்கத்தில் பங்கு பெறுவதற்கும், மக்கள் பிரதிநிதித்துவம் சரியாகப் பாராளுமன்றத்தில் ஏற்படவும், பிரிட்டனில் ஆட்சி செய்த மன்னர்கள் முட்டுக்கட்டையாக இல்லை. அவர்களுடைய எதேச்சாதிகாரம் படிப்படியாகக் குறைந்து வந்தது. மற்ற முடியாட்சிகள் அழிக்கப்படுவதற்கு மன்னர்களே காரணமாக இருந்தனர். ஆனால், அவ்வித நிலை பிரிட்டனில் ஏற்படவில்லை. மற்ற ஐரோப்பிய நாடுகளில் முடியாட்சி ஒழிக்கப்பட்டுவிட்டதால், பிரிட்டனிலும் முடியாட்சி ஒழிக்கப்பட வேண்டுமென்ற விவாதம் சரியானதன்று.

முதலில் ஆங்கிலேய நாட்டில் மரபுகளாகப் பின்பற்றப்படும் முக்கியத்துவத்தை அரசு (Crown) மன்னர் (King) என்ற இரண்டு சொற்களில் காணப்படும் வேறுபாட்டிலிருந்து காணலாம். தமிழில் 'அரசு' என்ற சொல் சில சமயங்களில் அரசாங்கம் என்ற பொருளையும் கொடுப்பதால், ஆங்கிலேயமொழியில் பின்பற்றப்படும் சொல்லான கிரவுன் என்ற சொல்லையே பயன்படுத்துவதால், கிரவுனுக்கும் மன்னருக்கும் உள்ள வேறுபாடு ஓரளவிற்குப் புரியும். ஆங்கிலேய அரசியல் அமைப்பில் தனிப்பட்ட 'அரசர்' என்ற சொல் இப்பொழுது

பொருளிழந்துவிட்டது. அரசரின் சின்னமான 'கிரவுன்' என்பது மட்டும் ஒரு நிறுவனமாகப் பொருள் கொள்ளப்படுகின்றது. அந்த கிரவுன் என்ற நிறுவனத்தின் அடிப்படையில், ஆங்கிலேய அரசியல் அமைப்பு செயலாற்றப்பட்டு வருகின்றது.

பல அரசர்கள் வரலாம், சாகலாம்; ஆனால், 'அரசு' அல்லது "கிரவுன்' நீடித்துள்ள சின்னமாகும், ஹென்றி, எட்வார்ட், ஜார்ஜ் ஆகிய மன்னர்கள் சாகலாம்; ஆனால் அரசு என்ற சின்னம் இன்னும் நீடித்தே வருகின்றது என்று பிளாக்ஸ்டோன் கூறுகிறார். தனிப்பட்ட விதத்தில் 'அரசர்' என்ற சொல் வேறு பொருளைத் தருகிறது; ஆனால், எல்லா மரபுகளையும், அதிகாரங்களையும் உள்ளடக்கி வைத்திருக்கும் "அரசர்' என்ற நிறுவனம் வேறு பொருளைத் தருகின்றது. ஒரு காலத்தில் ஆங்கிலேய அரசர்கள் எதேச்சாதிகாரங்களையும் பெற்றிருந்தனர். ஆனால் அரசர்கள் இப்பொழுதும் மகுடம் தரித்து, அரச அந்தஸ்தை அனுபவித்துக் கொண்டிருந்தாலும், அவர்களுடைய அதிகாரங்களெல்லாம் இப்பொழுது பல நிறுவனங்களுக்கு மாற்றப்பட்டுள்ளன. 18 ஆவது நூற்றாண்டில் மக்கள் தலைவர்கள் இப்படித்தான் அப்பொழுதுள்ள அரசர்களிடம் கூறினர்.

அரசர், அரசாங்கத்துடன் உள்ள தொடர்பை முற்றிலும் இழந்துவிடவில்லை. ஓரளவிற்கு அரசர் பொது விவகாரங்களில் தொடர்பு கொண்டுள்ளார். ஆனால் அவருடைய முக்கியமான அதிகாரங்கள் அமைச்சர்களிடத்திலும், பாராளுமன்றத்திடமும் மாற்றப்பட்டுவிட்டன. ஏனெனில் எந்த நியமனமும் எந்த அரசாங்க காரியமும் அரசரின் பெயரால் தான் செய்யப்பட்டு வருகிறது. சட்டத்தின் அடிப்படையில், இன்றும் எல்லா அதிகாரங்களும் அரசரிடத்திலிருந்துதான் வருகின்றன. ஆனால் அந்த அதிகாரங்களைத் தருவது 'அரசர்' என்ற தனிப்பட்ட மனிதன் அல்ல; ஆனால் 'அரசர்' என்ற நிறுவனமாகும். இப்படிச் செய்வது வெறும் கற்பனையாக இருந்த போதிலும், இப்படித்தான் ஆங்கிலேய மக்கள் அவர்களின் அரசியல் அமைப்பைப் புரிந்து கொண்டு வருகின்றனர். இந்த அரசர் என்ற நிறுவனத்தைத் தான் அவர்கள் 'கிரவுன்' (Crown) என்று அழைக்கின்றனர். ஆங்கிலேய பொதுமக்கள் இதையே 'அரசாங்கம்' என்றும் கூறுகின்றனர். 'ஆங்கிலேய அரசாங்கத்திற்கு மிகவும் முக்கியமான அடிப்படையாக இருப்பதும் ஆங்கிலேய அரசியல் அமைப்பின் மிகச் சிறப்பான அம்சமாகவும் விளங்குவது இந்த 'கிரவுன்' என்பதாகும் என்று ஸிட்னிலோ (Sidney Low) என்பவர் கூறுகிறார். அதனால் 'கிரவுன்' என்பதையே நாட்டின் முக்கியமான 'நிர்வாக அதிகாரம்' பெற்றது என்ற அடிப்படையில் 'கிரவுனி'ன் பணிகளைப் பார்ப்போம்.

## 1. அதிகாரங்களின் மூலம்

### (Sources of Powers)

சிறப்பு அதிகாரங்கள், சட்டங்கள் ஆகியவற்றின் மூலமாக 'கிரவுன்' அதிகாரங்களை இப்பொழுது பெறுகிறது. பாராளுமன்றச் சட்டங்கள் மூலமாக நிர்வாகத்திற்கு அடிக்கடி அதிகப்பொறுப்புகளும் கடமைகளும் தரப்படுகின்றன. அந்தச் சட்டங்களும் 'கிரவுன்'க்கு அதிக அதிகாரங்களை அவ்வப்பொழுது அளிக்கின்றன. பாராளுமன்றத்தால் அங்கீகரிக்கப்பெற்ற அரசரிடம் உள்ள சில எஞ்சிய அதிகாரங்களை, சிறப்பு அதிகாரங்கள் என்று கூறலாம் என (Dicey) சிறப்பதிகாரங்களுக்கு விளக்கம் தரும் பொழுது கூறுகிறார். பாராளுமன்ற ஆதிக்கம் ஏற்படுவதற்கு முன்னர் அரசரிடமே எல்லா சிறப்பு அதிகாரங்களும் இருந்தன. ஆனால் பாராளுமன்றம் ஆதிக்கம் பெற்ற பின்னர், அரசருடைய அதிகாரங்களை அது பறித்துக்கொண்டது. ஒரு சில சிறப்பு அதிகாரங்களையும் பாராளுமன்றம் அரசரிடம் அளித்துள்ளது. சில சிறப்பதிகாரங்கள் வழக்காற்றில் பின்பற்றப்படுவதில்லை; அதனால் அவை மறைந்து விட்டன. சட்டங்களல்லாத இன்னும் சில எஞ்சியுள்ள அரசரின் அதிகாரங்களை சிறப்பதிகாரங்கள் என்று கூறலாம். அவை இன்னும் அதிக அளவில் உள்ளன. அவையெல்லாம் பெரும்பாலும் வழக்காற்றிலும், நீதிபதிகளின் தீர்ப்புகளிலும், மரபுகளிலுமிருந்தும் சிறப்பதிகாரங்களாகத் தொடர்ந்து வருகின்றன. இவற்றையெல்லாம் பாராளுமன்ற ஆதிக்கம் பெற்றபின்னரும், பின்பற்றி வருகின்றனர். அவற்றை மாற்றக்கூடிய அதிகாரம் பாராளுமன்றத்திற்கு இருப்பினும், பாராளுமன்றம் அவ்விதம் செய்யவில்லை. உதாரணங்களாக, பாராளுமன்றத்தைக் கூட்டவும், ஒத்திப் போடவும் அல்லது கலைக்கவும்; பிரபுக்களை நியமனம் செய்யவும், அமைச்சர்களையும் நீதிபதிகளையும் நியமனம் செய்யவும், போர் பிரகடனம் செய்யவும், சமாதானம் செய்யவும், கப்பற்படையைப் பாதுகாக்கவும் (இராணுவம் கடற்படை, பாராளுமன்ற ஆண்டுச்சட்டங்களால் ஒழுங்கு படுத்தப்பட்டுள்ளன) குற்றவாளிகளை மன்னிக்கவும், அரச சாசனங்களின் மூலமாக நகராட்சிகளை நியமிக்கவும், நெருக்கடி காலத்தில் புதிய கப்பல்களைக் கட்டுவிக்கவும், அரசர் பயன்படுத்தும் சிறப்பதிகாரங்களை கூறலாம். இப்பொழுது பின்பற்றப்படும் சில 'கிரவுன்' அதிகாரங்கள் சிறப்பதிகாரங்களாகவும் இல்லை; அல்லது சட்டங்களாகவும் இல்லை. முதலில் அவ் வதிகாரங்கள், சிறப்பதிகாரங்களிலிருந்துதான் வந்தனவென்றாலும், அவை பின்னர், சட்டத்தின் மூலமாக விளக்கப்பெற்றோ அல்லது குறைக்கப்பெற்றோ உள்ளன. அவை சிறப்பதிகாரங்களோ, அல்லது சட்டங்கள் மூலமாகப்பெற்ற அதிகாரங்களோ என்பதைப்

பொருட்படுத்த வேண்டியதில்லை. ஏனெனில் எல்லாமே பாராளுமன்ற ஆதிக்கத்தின் கீழ் வருகின்றன. எல்லா சிறப்பதிகாரங்களும் பாராளு மன்றத்தின் பொறுப்பில் தான் பயன்படுத்தப்படுகின்றன.

## .. கிரவுனின் அதிகாரங்களில் மாற்றங்கள்

கிரவுனின் அதிகாரங்கள் சில சமயங்களில் குறைக்கப்படுகின்றன; சில சமயங்களில் அதிகமாக்கப்படுகின்றன. கிரவுனின் அதிகாரங்கள் மூன்று வகைகளில் குறைக்கப்பட்டுள்ளன. முதலாவதாக, நாட்டிற்கும் அரசருக்குமிடையே சில சமயங்களில் ஏற்படும் ஒப்பந்தங்கள் அல்லது பட்டயங்கள் கிரவுனின் அதிகாரங்களைக் குறைக்கின்றன. மேற்கோளாக பேருரிமைப் பட்டயத்தைக் (The Great Charter) கூறலாம். இரண்டாவதாக, இவ்விதமான நடவடிக்கைகளில் கிரவுன் ஈடுபடக்கூடாது என்று சுட்டிக்காட்டும் சில சட்டங்களையும் இயற்றியுள்ளனர். மேற்கோளாக, உரிமைகள் மசோதாவின் மூலமாக (The Bill of Rights) கிரவுன் சட்டங்களை ரத்து செய்யவோ, அல்லது சட்டங்களிலிருந்து விலக்கதிகாரத்தைப் பயன்படுத்தவோ கூடாது என்று நிர்ணயம் செய்துள்ளனர். மூன்ருவதாக, சில சிறப்பதிகாரங்கள் வழக்கிழந்து விடுகின்றன. உதாரணமாக, டியூடர்களின் ஆட்சிக்குப் பின்னர், அரசர்கள் விருப்பப்படி பரோக்களை ஏற்படுத்தி மக்கள்சபையின் உறுப்பினர் எண்ணிக்கையை அதிகரிக்கும் பழக்கத்தை விட்டுவிட்டனர்.

ஆனால் கிரவுனின் அதிகாரங்கள் படிப்படியாக மரபுகளின் மூலமாகவும் சட்டங்களின் மூலமாகவும் அதிகரித்துள்ளன. பிற்காலத்தில் பெரும்பாலும் சட்டங்கள் மூலமாகவே இவ்வதிகாரங்கள் விரிவடைந்துள்ளன. ஏனெனில் அடிக்கடி புதிய நிறுவனங்கள், புதிய முன்னேற்றங்கள் ஏற்படுவதால் அவற்றையெல்லாம் சரியாகக் கவனிக்கவும், புதிய வரிகள் விதிக்கப்பெற்ருல் அவற்றை சரியாகக் கண்காணிக்கவும் சட்டங்கள் இயற்றப்படுவதால், அச் சட்டங்கள் காரணமாக, 'கிரவுன்' அதிகாரங்களும் அதிகமாகின்றன.

சர் வில்லியம் ஆன்சன் (Sir William Anson) என்பவர் எழுதிய பிரசித்திபெற்ற 'அரசியல் அமைப்பின் சட்டமும் மரபும்', (The law and custom of the Constitution) என்ற நூலில், அவர் பாராளுமன்றத்தைப் பற்றி நானூற்று இருபத்தைந்து பக்கங்கள் எழுதியுள்ளார். ஆனால் 'கிரவுன்' என்ற நிறுவனத்தைப் பற்றி எழுத எழுநூற்று ஐம்பது பக்கங்களாவது தேவைப்படும் என்று ஓர் ஆசிரியர் அபிப்பிராயப் படுகிருர். அரசாங்கத்தின் ஒவ்வொரு நிறுவனத்திலும் கிரவுனின் தொடர்பும் முக்கியத்துவமும் இருப்பதைக் காண்கிறோம்.

## கிரவுனின் நிர்வாகப் பணிகள்
## (The Executive Role of the Crown)

'ஐக்கிய அரசு' (The United Kingdom) அரசாங்கத்தில் 'கிரவுன்' தான் நிர்வாக அதிகாரம் படைத்ததாகும். எல்லா தேசிய சட்டங்களைச் செயலாற்றவும் நிர்வாக அதிகாரிகளையும், அர்சாங்க அதிகாரங்களையும் நியமனம் செய்யவும், நீதிபதிகளையும், முப்படைகளின் அதிகாரிகளையும் நியமனம் செய்யவும், ஆட்சியை ஒழுங்காகச் செலுத்தவும் கிரவுனுக்கு அதிகாரம் உள்ளது. அதைப் போன்று நீதிபதிகளைத் தவிர மற்ற எல்லா அதிகாரிகளையும் பதவியிலிருந்து விலக்கவும் 'கிரவுனுக்கு' அதிகாரம் உள்ளது. நாட்டின் வெளி விவகாரக்கொள்கைகளை நிர்ணயம் செய்யவும், காலனிகள், காமன்வெல்த் நாடுகளின் உறவுகளைக் கவனித்துக் கொள்ளும் பொறுப்பு கிரவுனுடையதாகும். முப்படைகளின் தலைமை அதிகாரம் கிரவுனிடம் உள்ளது. சிவில் வழக்குகளில்தண்டனைப் பெற்றவர்கள் துரோக குற்ற விசாரணையில் தண்டனைப் பெற்றவர்கள் ஆகியோரைத் தவிர மற்ற வழக்குகளில் தண்டனை பெற்றவர்களுக்கு இறுதி மன்னிப்பு வழங்கவும், கருணை காட்டவும் கிரவுனுக்கு அதிகாரம் உள்ளது; இவ்வதிகாரங்கள் கிரவுனினால் எவ்விதம் செயலாற்றப்படுகின்றது என்பதைப் பற்றி பார்ப்போம்.

### 1. ஆட்சியை செலுத்துதல்

அமெரிக்க ஐக்கிய நாட்டிலுள்ள தலைமை நிர்வாக அதிகாரியான ஜனாதிபதி எவ்விதம் நிர்வாக அதிகாரங்களை ஆட்சித்துறையில் செலுத்துகிறாரோ அதைப்போன்று ஐக்கிய அரசிலும் கிரவுன் செலுத்துகிறது. தேசியச் சட்டங்களைக் கண்காணித்தலும், அவற்றைச் செயலாற்றுதலும், தேசிய வருமானங்களை வசூல் செய்தலும், நாட்டு நிதியிலிருந்து வேண்டிய செலவினங்களைச் செய்தலும் ஆகிய அரசாங்கத்தின் பலதரப்பட்ட காரியங்களைச் செய்யும் பொறுப்பு கிரவுனைச் சார்ந்ததாகும். அமெரிக்க ஐக்கிய நாட்டிலும், மற்றும் இதைப்போன்ற சில நாடுகளிலும் ஆட்சிப் பொறுப்பைக் கண்காணிக்கும் பணிகள் பொதுவாக சட்டசபையைச் சார்ந்ததாக உள்ளன. அதனால் நிர்வாகத்தின் பணிகளும், அதிகாரங்களும் பெரும் அளவில் கட்டுப்படுத்தப்படுகின்றன. ஆனால் 'ஐக்கிய அரசியல்' கேபினட் அவையும், தனிப்பட்ட அமைச்சர்களும் நிர்வாகப் பொறுப்பையும், ஆட்சிப் பொறுப்பையும் ஏற்றுக் கொண்டுள்ளனர். கிரவுனின் அதிகாரிகள் உள்ளாட்சித்துறையிலும் நிறைய அதிகாரங்களைப்பெற்றுள்ளனர். கூட்டாட்சி உள்ள நாடுகளில் இந்த முறையைக் காணுதல் அரிது. கவுண்டிகள், பரோக்கள் மற்றும் பல கிராமப் பகுதிகளிலுள்ள ஆட்சியில் கிரவுன் அதிகாரி

கள் பல வகைகளிலும் அதிகாரம் செலுத்தவும், உள்ளாட்சியைக் கட்டுப்படுத்தவும் அதிகாரம் பெற்றுள்ளனர். தேசிய ஆட்சியும், உள்ளாட்சித் துறையும் நெருங்கிய தொடர்பை வளர்த்துக் கொண்டுள்ளதை சமீபகாலத்தில் 'ஐக்கிய அரசில்' காணலாம்.

## 2. வெளிநாடுகளின் உறவுகளை கண்காணித்தல்

வெளிநாடுகளின் உறவுகளைப் பாதுகாக்கும் பொறுப்பு கிரவுனைச் சார்ந்ததாகும். 'கிரவுன்' பெயரில்தான் எல்லா தூதர்களும், அமைச்சர்களும் அயல்நாட்டு அதிகாரிகளும் நியமனம்செய்யப்படுகின்றனர். அதைப் போன்று, அயல்நாடுகளின் தூதுவர்களையும் அதிகாரிகளையும் 'கிரவுன்' பெயரால் தான் ஏற்றுக் கொள்கின்றனர். சர்வதேச மாநாடுகளிலும் கூட்டங்களிலும், ஐக்கிய நாடுகள் சபையிலும், மற்றும் அதன் கிளை நிறுவனங்களிலும், பணியாற்றுகின்ற ஆங்கிலேய நாட்டின் பிரதிநிதிகள் 'கிரவுன்' பெயரால்தான் நியமனம் செய்யப்படுகின்றனர். அதன் அதிகாரத்தை அத்தாட்சியாக வைத்துக்கொண்டுதான் பல சர்வதேச மாநாடுகளிலும் ஆங்கிலேய பிரதிநிதிகள் பங்கெடுத்துக் கொள்கின்றனர். வெளிநாடுகளிடம் நடத்தப்படும் பேச்சுவார்த்தைகளும் கிரவுனின் பெயரால்தான் நடத்தப்படுகின்றன. போர் பிரகடனம் செய்வதும் சமாதானம் செய்வதும் கிரவுனின் பொறுப்பேயாகும். கிரவுன் போர் பிரகடனம் செய்கிறது என்றாலே, பாராளுமன்றத்தின் சம்மதமும் கூடவே இருக்கும் என்பதுதான் பொருள். பாராளுமன்றத்தின் சம்மதத்தைப் பெறாது, போர் பிரகடனம் செய்வது என்பது நடைமுறைக்கு ஒவ்வாத காரியமாகும். அரசாங்கத்தின் போர் பிரகடனக் கொள்கையை, பாராளுமன்றத்தின் இரு சபைகளோ அல்லது ஏதாவது ஒரு சபையோ மறுக்கலாம். ஆனால் பாராளுமன்றம் நேரடியாகப் போர் பிரகடனம் செய்யவோ, அல்லது போரை நிறுத்தவோ முடியாது. 4–8–1914 அன்று பிரிட்டன் ஜர்மனிக்கு எதிராகப் போர் பிரகடனம் செய்து ஃபிரான்சுடனும் பெல்ஜியத்துடனும் கூட்டணி சேர்ந்த பொழுது அந்த முடிவை 'கிரவுன்' பெயரால் ஆங்கிலேய அமைச்சர்கள்தான் செய்தனர். அப்பொழுது பாராளுமன்றக்கூட்டம் நிகழ்ந்து கொண்டிருந்தது. மக்கள் சபையில் அயல்நாட்டு அமைச்சர், அரசாங்கத்தின் போர் பிரகடன முடிவைப்பற்றி சொற்பொழிவாற்றி மக்கள் சபையின் சம்மதத்தைப்பெற்றார். இருபத்தைந்து ஆண்டுகள் கழித்து அரசனைக் கலந்தாலோசனை செய்த பின்னர், 'கிரவுன்' பெயரால் அமைச்சர்கள் இரண்டாவது உலகப்போரில் பங்கெடுத்துக்கொள்ளும் நிலையை அறிவித்தனர். அமைச்சர்களின் போர் பிரகடன முடிவு எப்பொழுதும் 'அரசரின் அறிவிப்பாகவே' செய்யப்படுகிறது.

சமாதான உடன்படிக்கைகளைச் செய்யும் அதிகாரங்களும் கிர வுனைச் சார்ந்ததேயாகும். வெளிநாடுகளுடன் சமாதான பேச்சுவார்த் தைகளைச் செய்யவும், சமாதான உடன்படிக்கைகளில் கையொப்பமிட வும், சர்வதேச உடன்படிக்கைகள் அங்கிகாரம் செய்யவும் கிரவுனுக்கு அதிகாரம் உள்ளது. சில சமயங்களில் செய்யப்படும் சமாதான உடன் படிக்கைகளுக்குப் பாராளுமன்றத்தின் அங்கிகாரமும் தேவைப்படுகி றது. நாட்டின் பொதுச் சட்டத்தில் மாறுதல்கள் ஏற்படுத்தும்போதும் அல்லது நாட்டின் சில பகுதிகளை விட்டுக்கொடுக்கும்பொழுதும், அல் லது பொதுநிதியிலிருந்து பணம் அளிக்க வேண்டிய நிலை ஏற்படும் பொழுதும் சமாதான உடன்படிக்கைகளுக்கு பாராளுமன்றத்தின் சம் மதம் தேவைப்படுகின்றது. அறநெறி சம்பந்தமாகச் செய்யப்படும் சில உடன்படிக்கைகள் (உதாரணமாக 1925-ல் செய்யப்பெற்ற லொகர்னே உடன்படிக்கை (Locarno Treaty) பாராளுமன்றத்தின் சம்மதத்தைப்பெறவேண்டும். ஆனால் பல உடன்படிக்கைகளை அங்கீ காரம் செய்யும் பொறுப்பு கிரவுனிடமே உள்ளது.

## (3) காலனி விவகாரங்களைக் கவனித்தல்

காலனி ஆட்சியை நடத்தும் பொறுப்பு கிரவுனைச்சார்ந்ததாகும். இது கிரவுனின் மிகவும் முக்கியமான பணியாகும். ஆங்கிலேய பேரரசின் கீழுள்ள சில காலனிகள் சுயாட்சி பெற்றவையாகும். அவை களின்மீது ஆதிக்கம் செய்யும் உரிமை கிரவுனுக்கோ, அல்லது பாராளுமன்றத்திற்கோ மிகவும் குறைவாகவோ இருக்கும். ஆனால் 'கிரவுன் காலனிகள்' என்றே சில காலனிகள் உள்ளன. அந்த காலனி களை ஆட்சி செய்யும் பொறுப்பு, கிரவுனின் அதிகாரம்பெற்ற நிர்வாக அதிகாரிகளேயாவர். அவர்கள் கிரவுனுக்குப் பொறுப்புடையவர் களாவர்.

### கிரவுனின் சட்டப் பணிகள்

'பாராளுமன்றத்திலுள்ள அரசரின்' பெயரால்தான் (King in Parliament) சட்டங்கள் பாராளுமன்றத்தில் இயற்றப்படுகின்றன. ஆனால் நாளடைவில் அரசரின் அதிகாரங்கள் 'கிரவுன்' என்ற நிறு வனத்திற்கு மாற்றப்பட்டுவிட்டன. சட்டமியற்றுதலில் 'கிரவுனின்' அதிகாரங்கள் மிகவும் முக்கியமானதாகும். ஏனெனில் 'கிரவுன்' பெயரால்தான் பாராளுமன்றம் கூட்டப்படுகின்றது; ஒத்திப்போடப் படுகின்றது; கலைக்கப்படுகின்றது. புதிய தேர்தல்களுக்கு உத்திரவிடு வதும் கிரவுனேயாகும். உண்மையில், கிரவுனின் விருப்பத்திற் கிணங்கத்தான். சட்டமியற்றும் பணி பாராளுமன்றத்தில் நிகழ்கின்றது.

பாராளுமன்றத்தின் எல்லா செய்கைகளையும் கிரவுனுடைய அமைச்சர்கள்தான் செய்கிறார்கள், பாராளுமன்றத்தின் துவக்கக் கூட்டத்தில், சட்டமியற்றும் திட்டங்களைப்பற்றிய நிகழ்ச்சிநிரல், 'அரசரின் சொற்பழிவாகவே' நிகழ்கிறது. ஆனால் அரசரின் இந்த சொற்பொழிவை அமைச்சர்கள்தான் தயாரிக்கின்றனர். அமைச்சர்கள் தக்க தருணங்களில் மசோதாக்களைத் தயாரிக்கின்றனர். அவற்றை எப்படி எப்பொழுது, பாராளுமன்றத்தில் கொண்டுவருவது என்பதையும், அவற்றை நிறைவேற்றுவது எப்படி என்பதையும் அமைச்சர்கள் பொறுப்பாகக் கவனிக்கின்றனர். வெஸ்ட் மினிஸ்டர் மாளிகையில் நடக்கும் நல்லதிற்கும், கெட்டதிற்கும் அமைச்சர்களே பொறுப்பாவார்கள். அதாவது, எதுவும் அமைச்சர்களின் பொறுப்பில்தான் பாராளுமன்றத்தில் நிகழ்கின்றது என்பது முறையாகும். இந்த அமைச்சர்களும் பாராளுமன்ற உறுப்பினர்களேயாவர். ஆனால் கட்சித் தலைவர்கள் என்பதைத்தவிர, இந்த அமைச்சர்களுக்கு இவ்வளவு அதிகாரங்கள் எப்படி கொடுக்கப்பட்டன என்ற வினாவிற்கு சுருக்கமான பதில், அவர்கள் 'கிரவுனின் அமைச்சர்கள்' என்ற காரணத்தாலேயாகும். பாராளுமன்றத்தில் நிறைவேற்றப்படும் எந்த மசோதாவும், சட்டமாக வேண்டுமென்றால், 'அரசரின் சம்மதத்தைப்பெறும் கையொப்பத்தைப்' பெறவேண்டும், அப்படியில்லையெனில் எந்த மசோதாவும் சட்டமாக்கப்படாது. ஆனால் இருநூறு ஆண்டுகாலமாக அரசர்கள் பாராளுமன்றத்தில் நிறைவேற்றப்பட்ட மசோதாக்களுக்கு இதுவரையிலும் சம்மதிக்கவும், கையொப்பமிடவும் மறுத்ததில்லை. அரசரின் கையொப்பத்தைப் பெற முடியாது, எந்த மசோதாவும் நிறுத்தி வைக்கப்பட்டதுமில்லை. பாராளுமன்றத்தில் சட்டங்களை இயற்றுவதைத் தவிர, மற்றும் சட்டங்களைப் போன்று பாவிக்கப்படும் பல ஆணைகளை அமைச்சர்களே பிறப்பிக்கின்ற அவசியமும் ஏற்படுகின்றது அவற்றை, 'அமைச்சரவையில், பிறப்பிக்கப்படும் ஆணைகள்' என்பர் (Orders in Council); அந்த ஆணைகள் சட்டங்களைப்போன்று பாவிக்கப்படுகின்றன, ஆனால் பாராளுமன்றம் அளித்த அதிகாரத்தை வைத்துக்கொண்டுதான் அந்த ஆணைகளும் பிறப்பிக்கப்படுகின்றன. அரசாங்க அலுவல்கள் மிகவும் அதிகரித்துள்ள இந்த சூழ்நிலையில் 'கீழ்படிந்த சட்டமியற்றுதல்' (Subordinate Legislation) என்ற முறை அதிகமாகப் பின்பற்றப்பட்டு வருகின்றது.

### நீதித்துறையில் கிரவுனின் பணிகள்

ஒரு சமயத்தில் சட்டம், 'அரசனின் சட்டமாகவே (King's Law) பாவிக்கப்பட்டது, அச் சட்டம் அரசனின் நீதிமன்றங்களில்

(King's Courts) வழங்கப்பெற்றது. அரசரின் நீதிமன்றங்களில் வழங்கப்பெற்ற முடிவுகளையும் சில சமயங்களில் அரசர் மாற்றியமைப்பதும் பழக்கமாக இருந்தது. ஆனால் இப்பொழுதுள்ள நிலைமை முற்றிலும் வேறானது. பாராளுமன்றத்தின் அனுமதியின் பேரில்தான் நீதிமன்றங்கள் நிறுவப்பெற்றுள்ளன. அந்த நீதிமன்றங்கள் செயலாற்றவேண்டிய ஒழுங்கு முறைகளையும் நிர்ணயம் செய்துள்ளது. நீதிபதிகளின் பதவிக்காலம், அவர்களுடைய சம்பள விகிதங்கள், அவர்கள் பின்பற்றவேண்டிய விதிமுறைகள் ஆகியவற்றையெல்லாம் பாராளுமன்றமே திட்டவட்டமாக முடிவு செய்துள்ளது. நீதிபதிகள் நீதி வழங்குகின்றபொழுது அவர்களுக்கு எவ்வித இடையூறும் ஏற்படாதவாறு பாராளுமன்றம் பாதுகாப்பு அளித்துள்ளது. அத்துடன் நீதிபதிகளைப் பதவியிலிருந்து விலக்குவதும் அவ்வளவு எளிதாக நிகழும் காரியம் அல்ல. நீதிபதிகளைப் பதவியிலிருந்து விலக்கவேண்டுமென்றால், பாராளுமன்றத்தின் இரண்டு சபைகளிலும், நீதிபதிகளை விலக்கவேண்டுமென்ற தீர்மானங்களை நிறைவேற்றவேண்டும், பாராளுமன்றத்திற்குத்தான் எல்லா அதிகாரங்களும் இருந்தபோதிலும், இன்னும் பெயரளவில் அரசியாரின் பேரில்தான் நீதிபதிகளை நியமனம் செய்வதும், அரசியாரின் பேரில்தான் நீதி வழங்குதலும், தண்டனை விதித்தலும் நிகழ்கிறது. இந்த நீதிமன்றங்களைக் கண்காணிக்கும் பொறுப்பு, அரசியாரின் ஊழியரும் அதிகாரியுமான சான்சலர் பிரபுவைச் (Lord Chancellor) சார்ந்ததாகும். ஆங்கிலேயக் காலனிகளின் நீதிமன்றங்களிலிருந்து வரும் மேல்முறையீடுகளெல்லாம், பிரைவி கவுன்சிலின் (Privy Council) நீதிக் குழுவினரின் ஆலோசனையின்படி அரசியாரே முடிவு செய்கிறார்.

**கிரவுனும் திருச்சபைகளும்**

இங்கிலாந்திலுள்ள ஆங்கிலிக்கன் திருச்சபையும், ஸ்காட்லாந்திலுள்ள பிரஸ்பிடீரியன் திருச்சபையும் (Presbyterian Church) அரசாங்கத்துடன் அதிகத் தொடர்புள்ளவையாகும். இவை அரசாங்கத்தின் கட்டுப்பாட்டுக்குள் இயங்கிவருகின்றன. பாராளுமன்றம் இந்தத் திருச்சபைகளின் நிர்வாகங்களைக் கட்டுப்படுத்தும் அதிகாரத்தைப்பெற்றுள்ளது. ஸ்காட்லாந்திலுள்ள அங்கீகரிக்கப்பட்ட பிரஸ்பிடீரிய திருச்சபை 1920 – முதல் வேல்ஸிற்குக் கிடையாது. தவிர ஆங்கிலிக்கன் திருச்சபை, பிரஸ்பிடீரியத் திருச்சபை ஆகிய இரண்டு அரசாங்கத்தால் அங்கீகரிக்கப்பெற்றத் திருச்சபைகளைத்தவிர, வேறு எந்தத் திருச்சபைகளையும் பாராளுமன்றம் கட்டுப்படுத்துவதில்லை. ஆங்கிலிக்கன் திருச்சபையைப் பொறுத்தவரையிலும், ஆர்ச்பிஷப், பிஷப் ஆகிய மத குருமார்களின் நியமனம் அரசியாரின்

பெயரில்தான் செய்யப்படுகின்றன. அதாவது பிரதம அமைச்சரின் ஆலோசனைக்குப்பின்னர், மத குருமார்களின் நியமனங்களை அரசியார் செய்கிறார். கேன்டர்பரி, யார்க் ஆகிய நகரங்களில் நிகழும் மத குருமார்களின் சட்டசபைக் கூட்டங்களுக்கு அரசியாரின் அனுமதி பெறவேண்டும். அந்தக் கூட்டங்களில் நிறைவேற்றப்படும் திருச்சபை சட்டங்களுக்கு அரசியாரின் அங்கீகாரம் வேண்டும். திருச்சபையில் பின்பற்றப்படும் பல காரியங்களுக்கும், கிரவுனின் அனுமதி பெற வேண்டும்.

**பிரிட்டனில் ஏன் முடியாட்சி நீடிக்கிறது?**

பெயரளவில்தான் அரசியல் நிர்வாக அதிகாரங்களையும், மாற்ற அதிகாரங்களையும் பெற்றுள்ளார், ஆனால் உண்மையில் எல்லா அதிகாரங்களையும் அமைச்சரவைதான் பெற்றுள்ளது. இந்த நிலையில் ஏன் முடியாட்சி அகற்றப்பட்டு, அங்கு குடியாட்சி நிறுவப்படக் கூடாது என்ற வினா எழுவது இயற்கையேயாகும். எப்பொழுது அரசியாருக்கு உண்மையான அதிகாரங்கள் இல்லை என்று வழக்காறு ஏற்பட்டுவிட்டதோடு, அப்பொழுதே அங்கு 'குடியாட்சி' தான் நிகழ்கின்றது என்று பொருள்படுகின்றது. அதனால் முடியாட்சி இருந்தாலும், பிரிட்டனில் நிகழ்வது குடியாட்சி முறையேயாகும். அரசினர் இந்த குடியாட்சி முறைக்கு இடையூறாக இல்லை.

பொதுவாக ஆங்கிலேய மக்கள் பழமையை விரும்புவர்களாவர். பழைமை மரபுகளையும், நிறுவனங்களையும் அவர்கள் மறக்கத் தயாராக இல்லை. முடியாட்சி அவர்களுடைய வளர்ச்சியோடு பிணைந்துள்ள ஒரு முக்கியமான நிறுவனமாக அவர்களுக்குத் தோன்றுகிறது. அரசியாரின் ஆட்சியால், இப்பொழுது அவர்களுடைய உரிமைகளுக்கு எவ்வித இடர்பாடும் ஏற்படவில்லை. நாட்டின் அதிகாரியாகவும், தலைவியாகவும் அரசியார் இருப்பதால் நாட்டிற்கும் அரசாங்கத்திற்கும் அதிக மதிப்பு ஏற்படுகிறது என்று ஆங்கிலேயே மக்கள் கருதுகின்றனர். நாட்டின் தலைவியாக அரசியாரே இருப்பதால், அந்த நாட்டிலுள்ள பல்வேறு அரசியல் கட்சிகளில் தொடர்பு கொள்ளாத நடுநிலைமையைப் பின்பற்றும் தலைவி இருப்பது மக்களின் அமோகமான பாராட்டுதலைப் பெறுவதாகும். பல நாடுகளில் ஜனாதிபதிகளாகத் தேர்ந்தெடுப்பவர்கள் அரசியல் தொடர்புடையவர்களாகவே இருப்பதைக் காண்கிறோம். அதனால் அவர்களிடம் நடுநிலைமை குறைவாகவேவுள்ளது, தவிர ஆங்கிலேய காமன்வெல்த் நாடுகளின் உறவு சுமுகமாக இருப்பதற்கும், அந்த நாடுகளிடையே 'ஐக்கிய மனப்பான்மை'' ஏற்படுவதற்கும் அரசியார் காரணமாக உள்ளார். காமன்வெல்த் நாடுகளின் உறவிற்கும்,

ஐக்கியத்திற்கும் முடியாட்சி ஒரு சின்னமாக விளங்குகிறது. அண்மையில் அரசர்களுக்கும் ஆங்கிலேய மக்களுக்கும் நெருங்கிய தொடர்பு ஏற்பட்டுள்ளதைக் காண்கிறோம். அதனால் முடியாட்சியை பிரிட்டனில் ஒழித்துவிடுவதால் மட்டும் பெரிய பயன் ஏற்படப்போவதில்லை. 17, 18 ஆவது நூற்றாண்டுகளில் முடியாட்சியால் ஏற்பட்ட இடையூறுகள் மீண்டும் பிரிட்டனில் ஏற்படும் என்று ஆங்கிலேய மக்கள் முடியாட்சியைக் கண்டு அஞ்சவில்லை, 'சுயநலங்கள், அரசியல் கட்சிகளின் மோதல்கள் ஆகியவற்றிற்கு அப்பால் முடியாட்சி ஒரு உன்னத பீடத்தில் அமர்ந்துள்ளது' அதற்கு அதிகாரத்தைத் திரட்டவோ அல்லது நிர்வகிக்க வேண்டுமென்ற ஆசையோ கிடையாது. அது அரசியலில் நடுநிலைமை வகிக்கின்றது. அரசாங்கத்திற்கு அது ஓர் அலங்காரமாக விளங்குகின்றது. மக்களுடைய அபிப்பிராயத்திற்கு அதனால் இடையூறு ஒன்றும் ஏற்படுவதில்லை. மக்களுடைய குறைபாடுகள் எவ்வளவோ உள்ளன; ஆனால் அதற்கு முடியாட்சிதான் பொறுப்பு என்று அவர்கள் நம்பத்தயாராக இல்லை' என்ற மன்ரோ (Munro) என்ற ஆசிரியர் குறிப்பிடுகிறார்.*

அரசினருக்கு சில சிறப்பான அதிகாரங்கள் உள்ளன. அவர்தான் வெளிநாட்டு தூதுவர்களை வரவேற்று அங்கிகாரம் அளிக்கிறார். ஆனால் இந்தச் சடங்கு வழக்கமாக ஓர் அமைச்சரின் முன்னிலையில் நிகழ்கிறது. அவர் புதிய பிரபுக்களை நியமனம் செய்கிறார்; கௌரவப் பட்டங்களை வழங்குகிறார். ஆனால் 'ராயல் விக்டோரியன் ஆர்டர்' (Royal Victorian Order); 'ஆர்டர் ஆப் தி கார்ட்டர்' (Order of the Garter) ஆகிய கௌரவப் பட்டங்களை மட்டும் அரசியாரே, அவர் விருப்பப்படி வழங்கலாம். அரசியார் அரியணையில் வீற்றிருந்தவாறே, பாராளுமன்றத்தின் தொடக்க விழா சொற்பொழிவை வாசிக்கப்படும் சில சமயங்களில் அரசியாருக்குப் பதிலாக சான்சலர் பிரபு அப்பணியைச் செய்யலாம். மக்கள் அவையில் சபாநாயகர் தேர்ந்தெடுக்கப்பட்ட பின்னர், அரசியாரின் சம்மதத்தை, அவர் நேராகவோ, அல்லது அவரது பிரதிநிதி மூலமாகவோ அறிவிக்கலாம். அரசியல் அமைப்பு பற்றிய நெருக்கடி ஏற்பட்டதென்றால், அவருடைய அமைச்சர்களின் ஆலோசனையின்படி, மற்ற தலைவர்களின் கருத்துகளைத் தெரிந்து கொள்ள ஒரு மாநாட்டைக் கூட்டலாம். ஆனால் இரண்டு முக்கியமான பணிகளை அரசியாரே செய்தாக வேண்டும். ஒன்று, புதிய அமைச்சரவையை உருவாக்கும் பணியைச் செய்ய ஓர் அரசியல் தலைவரை நியமனம் செய்தல்; இரண்டு, பாராளுமன்றத்தைக் கலைத்து புதிய தேர்தல்களுக்கு ஆணையிடுதல் ஆகிய இரண்டு முக்கியமான கடமைகளை

*W. B. Munro – The Governments of Europe (IV Edition)

அரசியாரே நேரிடையாகச் செய்ய வேண்டும். வழக்கமாக பிரதம அமைச்சரை நியமனம் செய்யும் பொறுப்பு அரசியாரைச் சார்ந்ததல்ல. அரசியார் இவ் விவகாரங்களில் தலையிடுவதில்லை. ஆனால் சில நெருக்கடியான சந்தர்ப்பங்களில் தலையிட வேண்டிய அவசியம் ஏற்படுகின்றது. விக்டோரியா அரசியார், ஒரு சமயத்தில் கிளாட்ஸ்டன் என்பார் (Gladstone) பிரதம அமைச்சராக வருவதை விரும்பவில்லை. ஆனால் அவருடைய அபிப்பிராயத்திற்கு மற்ற லிபரல் கட்சியினர் இணங்கவில்லை. கிளாட்ஸ்டன் பிரதம அமைச்சராகவில்லையென்றால், லிபரல் கட்சியினர் அதிகாரத்தை ஏற்றுக் கொள்ளத் தயாராக இல்லை என்று கூறிவிட்டனர். சர் ஜான் வீலர்-பென்னட் (Sir John Wheeler-Bennet) என்பவர் ஆறும் ஜார்ஜ் என்ற ஆங்கிலேய அரசரைப் பற்றி எழுதிய வாழ்க்கை வரலாற்று நூலில் ஆறும் ஜார்ஜ் எவ்விதம் பிரதம அமைச்சர் நியமனங்களில் தலையிட்டார் என்று கூறுகிறார். 1940-ல் நெவில் சேம்பர் லேன் (Neville Chamber Lain) பிரதம அமைச்சர் பதவியை விட்டு விலக நேரிட்ட பொழுது, ஹாலிபாக்ஸ் பிரபு (Lord Halifax) பிரதம அமைச்சராகப் பதவியேற்பதை ஆறும் ஜார்ஜ் விரும்பினார். ஆனால் சேம்பர்லேன் அரசரிடத்தில், சர்ச்சில் (Churchill) பிரதம அமைச்சர் பதவிக்குத் தகுந்தவர் என்று பரிந்துரை செய்தார். அரசனும் மிகுந்த தயக்கத்துடன் சர்ச்சில் பிரதம அமைச்சராவதற்கு ஒப்புக்கொண்டார்.* இதைப் போன்று அரசனுடைய அபிப்பிராயத்தை வேறு ஒரு நிகழ்ச்சியிலும் ஆறும் ஜார்ஜ் வற்புறுத்தினார். வெளிநாட்டு காரியதரிசியாக 1945-ல் சர் ஹியுக் டால்டன் (Sir Huge Dalton) என்பவரை நியமனம் செய்வதற்குப் பெவின் (Bevin) என்பவரை நியமனம் செய்ய வேண்டுமென்று அரசர் விரும்பினார். அவருடைய விருப்பத்தை, அப்பொழுது பிரதம அமைச்சராக இருந்த அட்லி பிரபு (Lord Atlee) ஏற்றுக் கொள்ளவில்லை. அதைப்போன்று மாரிஸன் பிரபு (Lord Morrison) இரண்டு முறைகள், குற்றவாளிகளுக்கு கருணையளித்தல் என்ற விவகாரத்தில், அரசருடைய கருத்துகளை ஏற்றுக்கொள்ள மறுத்து விட்டதாக அவர் எழுதிய நூலில் கூறுகிறார்.** குற்றவாளிகளுக்கு கருணை அளித்தல் என்பது அரசருக்குரிய சிறப்பதிகாரமாக இருந்த போதிலும், பிரதம அமைச்சராக இருந்த மாரிசன் பிரபு, அரசரின் கருத்துகளுக்கு மாறுபட்ட கருத்துகளைக் கொண்டிருந்தார். இறுதியில் அவருடைய கருத்துகளைத்தான் 'அரசர் ஏற்க நேரிட்டது. எந்த விவகாரத்திலும் அரசர் தலையிடலாம்; அவருடைய கருத்துகளையும் கூறலாம். ஆனால் அரசரின் எல்லா கருத்துகளையும் பிரதம அமைச்சர் ஏற்றுக்கொள்ள

*Sir John Wheeler Bennet-King George VI.
**Lord Morrison-Government and Parliament.

வேண்டிய அவசியமும் இல்லை. ஆனால் அரசியல் கட்சிகளுக்கு அப்பால் இருந்து நடுநிலைமை கண்ணோட்டத்திலிருந்து எதையும் கவனித்து வருவதாலும், அரசருக்கு அரசாங்க விவகாரங்களில் நீண்ட அநுபவம் இருப்பதாலும், அமைச்சர்களுக்கு சில சந்தர்ப்பங்களில் ஆலோசனை கூறுவது, அரசனின் கடமைகளுக்கு அப்பாற்பட்டதல்ல. நடைமுறையில் அரசர் ஒரு விமர்சகராகவும், ஆலோசனையாளனாகவும், நண்பராகவும் பணியாற்றக்கூடும். பேஜ்ஹாட் (Bagehot) எழுதிய 'ஆங்கிலேய அரசியல் அமைப்பு' நூலில் அரசரின் மூன்று முக்கியமான உரிமைகளைக் குறிப்பிடுகிறார்.* ஆலோசனை அளிக்கும் உரிமை, உற்சாக மூட்டும் உரிமை, எச்சரிக்கும் உரிமை என்று அரசரின் உரிமைகளைக் கூறுகிறார். இருநூறு ஆண்டுகாலமாகவே ஆங்கிலேய அரசர்கள் அமைச்சரவை கூட்டங்களில் கலந்து கொள்ளும் பழக்கத்தை விட்டுவிட்டனர். ஆனால் அமைச்சரவையில் நிகழும் விவரங்களைப் பற்றிய குறிப்புகள் அரசர்களுக்கு அவ்வப்பொழுது அளிக்கப்பட்டு வந்துள்ளன. பிரதம அமைச்சரும் அடிக்கடி அரசரைச் சந்தித்து எல்லா விவரங்களையும் அவருடன் கலந்தாலோசிப்பது வழக்கமாக உள்ளது. அரசருக்கு ஆலோசனை அளிக்கும் உரிமை உள்ளது என்ற போதிலும், இறுதியான முடிவுகளை பிரதம அமைச்சர்தான் எடுக்க வேண்டும். அதனால் மட்டும் பிரதம அமைச்சர்கள் அரசர்களைக்கலந்து, ஆலோசனை செய்யும் பழக்கத்தை விட்டுவிடவில்லை, பொது விவகாரங்களில் அரசர்களுடைய அபிப்பிராயங்களுக்கு மதிப்பளிப்பதில்லை என்ற அபிப்ராயத்தை எட்டாம் எட்வர்ட் கூறுகிறார்.** ஆனால் அதே சமயத்தில் அரசர்களின் அபிப்ராயங்களுக்கு அமைச்சர்கள் மதிப்பளிக்கும் பழக்கத்தையும் முற்றிலும் புறக்கணித்து விடவில்லை. ஆங்கிலேய மக்கள் அரசரை தேசபக்தியின் சின்னமாகவும், ஒற்றுமையின் சின்னமாகவும் கருதி வருகின்றனர். அரசருடைய ஆட்சியில் மக்களுக்கு பாதுகாப்பு இருக்கின்றது என்பதை அவர்கள் நம்புகின்றனர். 'அரசர் பக்கிங்காம் அரண்மனையில் இருந்தால் மக்கள் நிம்மதியாகத் தூங்கலாம்' என்ற நம்பிக்கை ஆங்கிலேய மக்களிடம் உள்ளது.

பிரிட்டனில் முடியாட்சி அறவே அகற்றப்பட வேண்டும் என்று கம்யூனிஸ்டுகள் கூறுவதைத் தவிர, மற்ற எல்லா கட்சியினரும் கன்சர்வேடிவ்கள், லேபர் கட்சியினர், லிபரல் கட்சியினர், முடியாட்சி நீடித்திருப்பதைப் பற்றி கவலைப்படுவதில்லை. அரசர் தேசியத்தின் சின்னமாகவும், மக்களின் பிரதிநிதியாகவும் விளங்குகிறார் இப்பொழுதுள்ள 'முடி சூடிய குடியாட்சியாக, (Crowned Republic) நீடித்திருக்கும்

*Bagehot–English Constitution.
**Edward VIII–A King's Story.

வரையிலும் பொதுமக்களிடையே முடியாட்சியை ஒழித்துவிட வேண்டுமென்ற எண்ணம் எழாது. முடியாட்சியை ஒழித்து விட்டால், இப்பொழுதுள்ள கேபினட் அரசாங்க முறையின்படி, கேபினட்டிற்கும் ஒரு நாட்டின் தலைவருக்கும் உள்ள தொடர்பை ஏற்படுத்தும் வகையில், அரசருக்குப் பதிலாக ஒரு ஜனாதிபதியை தேர்ந்தெடுக்க வேண்டும். அதனால் கேபினட்டுக்கும் ஜனாதிபதிக்கும் புதிய உறவுகளையும் தொடர்புகளையும் ஏற்படுத்த வேண்டும். ஆனால் இவ்வித மாற்றங்களைப் பொதுவாக ஆங்கிலேய மக்கள் விரும்புவதில்லை. மற்ற பல நாடுகளில் வெளி வரும் ஏடுகளில் ஆங்கிலேய அரச குடும்பத்தினரைத் தாக்கி எழுதி வருவதைக் காண்கின்றோம். அதாவது அரச குடும்பத்தினர் அதிக அளவில் குதிரைப் பந்தயங்களில் ஈடுபாடுடையவர்களாகவும், கலையுணர்வு இல்லாமல் இருப்பதாகவும் எழுதுகின்றனர். ஆனால் ஆங்கிலேய மக்களிடையே அவ்வித அபிப்பிராயம் இல்லை என்பதையும் காண்கின்றோம்.

# 3. நிர்வாக அரசாங்கம்

## பிரிவி கவுன்சில்

## அமைச்சவை

## கேபினட் அல்லது அமைச்சர் குழு

பிரிவி கவுன்சில், அமைச்சவை, கேபினட் எனும் அமைச்சர் குழு ஆகிய நிறுவனங்கள் மூலம், பிரிட்டனின் நிர்வாக அரசாங்கமானது நடைபெற்று வருகின்றது.

### பிரிவி கவுன்சில் (The Privy Council)

இப்பொழுதுள்ள ஆங்கிலேய அரசாங்க அமைப்பில் பிரிவி கவுன்சில் என்ற நிறுவனத்திற்கு முக்கியத்துவம் கொடுக்கப்படுவதில்லை. ஆங்கிலேய அரசியல் அமைப்பு வரலாற்றில் ஒரு சமயம் இஃது முக்கியத்துவம் பெற்ற நிறுவனமாக இருந்தது. இப்பொழுது வளர்ச்சியடைந்துள்ள அமைச்சவை, கேபினட் ஆட்சிமுறை ஆகியவற்றின் முக்கியத்துவத்தைத் தெரிந்து கொள்ள முதலில் பிரிவி கவுன்சில் நிறுவனத்தைப் பற்றித் தெரிந்து கொள்ளவேண்டும்.

பிரிவி கவுன்சில் நிறுவனத்தில் 330 உறுப்பினர் உள்ளனர். காண்டர்பரி, யார்க் ஆகிய திருச்சபைகளைச் சார்ந்த ஆர்ச்பிஷப்புகள், தனிப்பட்ட சலுகைகளின் காரணமாக இந்த நிறுவனத்தில் இடம் பெறுகின்றனர். இவர்களைத் தவிர, மற்றும் பல பிரமுகர்கள், லண்டன் பிஷப், மேல் முறையீடு வழக்குகளை விசாரிக்கும் பிரபுக்கள், மற்றும் பல உயர்தர நீதிபதிகள், வெளிநாடுகளில் பணியாற்றும் தூதுவர்கள், மக்கள் சபையின் சபாநாயகர் ஆகியோர் இந்த நிறுவனத்தில் உறுப்பினர்களாக உள்ளனர். ஆங்கிலேய பேரரசில் உள்ள பல பிரதிநிதிகள், குறிப்பாக பிரதம அமைச்சர்களும், மற்றும் இலக்கியம்,

விஞ்ஞானம், கலை, மற்றும் பல துறைகளில் சிறப்பாக உள்ள நிபுணர்கள் ஆகியோரும், உறுப்பினர்களாக உள்ளனர். மன்னரால் விருதுகள் வழங்கப்பெற்றவர்களும் உறுப்பினர்களாக உள்ளனர். இந்த நிறுவனத்தில் உள்ளவர்கள் வழக்கமாக, அமைச்சவை சட்ட பூர்வமாக செயலாற்றுவதற்கு முன்னர் அதில் உறுப்பினர்களாக இருப்பதற்கு தகுதியுடையவர்களாகத் தேர்ந்தெடுக்கப்பெற்று, பிரிவி கவுன்சிலர் என்ற முறையில் இரகசிய, உறுதிமொழி எடுத்துக் கொள்வர். பிரிவி கவுன்சிலில் உறுப்பினராகத் தேர்ந்தெடுக்கப்பட்டவர் வழக்கமாக அவர் ஆயுட்காலம் முழுவதும் உறுப்பினராக இருக்கலாம். மன்னர் அல்லது கவுன்சில் ஆணைகளின்படி, ஒரு பிரிவி கவுன்சிலரைப் பதவியிலிருந்து விலக்கலாம். இப்பொழுதுள்ள பிரிவி கவுன்சிலில், பழைய அமைச்சர்களும், புதிய அமைச்சர்களும் தான் பெரும்பான்மை உறுப்பினர்களாக உள்ளனர்.

கேபினட் ஆட்சிமுறை வளர்ச்சியடைந்ததற்குப் பின்னர், பிரிவி கவுன்சில் ஒரு சாதாரணமான நிறுவனமாகிவிட்டது. மன்னர்களின் முடிசூட்டு விழாவின் போதும், அல்லது மிக முக்கியமான விழாக்களின் போதும் தான் எல்லா பிரிவி கவுன்சிலர்களுக்கும் அழைப்பு அனுப்பப் படுகிறது. இல்லாவிடில், எல்லாரையும் வழக்கமாக அழைக்கும் பழக்கம் இப்பொழுது நடைமுறையில் இல்லை. இருந்தபோதிலும் பிரிவி கவுன்சில் கூட்டங்கள் அடிக்கடி கூட்டப்படுகின்றன. இந்தக் கூட்டங்களுக்கு மூன்று அங்கத்தினர்கள் இருந்தாலே கோரம் (Gworum) போதுமானதாகும். வழக்கமாக நான்கு அல்லது ஐந்து உறுப்பினர்கள் இந்தக் கூட்டங்களில் கலந்து கொள்கிறார்கள். இந்த பிரிவி கவுன்சிலுக்கு ஒரு தலைவர் (Lord President) உண்டு. கூட்டங்களின் நிகழ்ச்சிகளைக் குறித்துக் கொள்ள ஓர் உறுப்பினர் (Clerk of the Council) செயலாளராகப் பணியாற்றுவதுண்டு. இவர்களைத் தவிர, இரண்டு அல்லது மூன்று அமைச்சர்கள் சில விவகாரங்களை விவாதிப் பதற்கு கூடுவதுண்டு. அவர்கள் பக்கிங்காம் அரண்மனையில், அரசருடன் சேர்ந்து கூடுவது வழக்கமாகும். அப்பொழுது அந்த கவுன்சில், அரசரது குரு (King -in- Council) என்று அழைக்கப்படும். ஆனால் அவசரமான காலங்களில், அரசர் இல்லாமலேயே அக் குழு கூடுவதும் உண்டு.

அரசாங்க அலுவல்கள் அதிகமாகி வருவதால் சில முக்கியமான ஆணைகள், பிரிவி கவுன்சிலால் பிரகடனம் செய்யப்பட்டு வருகின்றன. அவைகளை கவுன்சிலின் ஆணைகள் (Orders -in- Council) என்று கூறுவது வழக்கம். போர்ப் பிரகடனங்கள், பாராளுமன்றத்தைக் கூட்டுதல், ஒத்திப்போடுதல், கலைத்தல் ஆகியவற்றைப் பற்றிய

ஆணைகள் கிரவுன் காலனிகளைப் பற்றிய ஆணைகள், நிரந்தர சிவில் சர்வீஸ் அதிகாரிகளைப் பற்றிய ஆணைகள், போர் காலத்தில் ஏற்படும் நடுநிலைமை வர்த்தகம், போர் முற்றுகை ஆகியவை பற்றிய ஆணைகள் இந்த கவுன்சில் நிறுவனத்தின் மூலமாகப் பிறப்பிக்கப்படுகின்றன. பாராளுமன்றச் சட்டங்களை ஆதாரமாகக் கொண்டு, பொது சுகாதாரம், கல்வி, ஆகிய துறைகளின் பொதுப்படையான ஆணைகளையும் இந்தக் கவுன்சில் பிறப்பிக்கின்றது. ஆண்டொன்றுக்கு ஏறக்குறைய 600 ஆணைகளுக்கு மேல் இவ்விதம் பிறப்பிக்கப்படுகின்றன. போர் காலங்களில் இந்த ஆணைகள் இன்னும் அதிகமாய் பிறப்பிக்கப்படுவது வழக்கம்.

பிரிவி கவுன்சிலுக்கு, சட்டங்களை இயற்றும் உரிமை இல்லை. அவ் வுரிமைகளை கேபினட் மற்றும் பல அரசாங்கத் துறைகள் கைப்பற்றிக் கொண்டன. கேபினட்டானது அரசாங்கக் கொள்கைகளை வகுத்து, அவற்றின் விதிமுறைகளை நிர்ணயம் செய்கின்றது. ஒவ்வொரு சமயமும் பாராளுமன்றத்தின் இரண்டு சபைகளிலும் அவற்றை நிறைவேற்றி செயலாற்றுவது கால தாமதமாகிவிடும். அதனால் பிரிவி கவுன்சிலின் ஆணைகள் மூலமாகவே அவற்றை செயலாற்றுவது அதற்கு வழக்கமாகி விட்டது. பிரிவி கவுன்சிலின் ஆணைகளுக்கு, சட்டங்களுக்குள்ள சக்தி அளிக்கப்பட்டுள்ளது. தவிர பிரிவி கவுன்சில் சில முக்கியமான பணிகளையாற்றுகிறது. பிரிவி கவுன்சிலில் பல குழுக்கள் அமைக்கப்பட்டுள்ளன. 1833-ம் ஆண்டில் இயற்றப்பட்ட சட்டத்தின் மூலமாக நீதிக்குழு (Judicial Committee) ஒன்று அமைக்கப்பட்டது. திருச்சபை நீதிமன்றங்கள் (Ecclesiastical Courts) கடற்படை நீதிமன்றங்கள் (Admiralty Courts) காலனி நீதிமன்றங்கள் (Courts in the Colonies) ஆகிய நீதிமன்றங்களி லிருந்து வரும் மேல் முறையீடுகளை விசாரணை செய்யும் அதிகாரங்களை இந்த நீதிக்குழு பெற்றுள்ளது. டொமினியன்களிலுள்ள உயர்தர நீதிமன்றங்களிலிருந்து வந்த மேல் முறையீடுகளை ஒரு சமயம் இந்த நீதிக்குழுவினர் விசாரித்து வந்தனர். ஆனால் காமன்வெல்த் சட்டம் இயற்றப்பட்டதற்குப் பின்னர் இந்த நீதிக்குழுவினர் டொமினியன் மேல் முறையீடுகளை அதிகமாக விசாரிப்பதில்லை. நீதிக்குழுவினர்களை தவிர மற்றும், விஞ்ஞான தொழிற்குழுவினர்களும், வைத்திய ஆய்வுக் குழுவினரும், வேளாண்மை ஆய்வுக்குழுவினரும் கொண்ட பல குழுக்களும் அமைக்கப்பட்டுள்ளன.

### அமைச்சவையும் கேபினட் குழு அரசாங்கமும்

ஆறும் எட்வர்ட் ஆட்சி செய்து கொண்டிருந்தபொழுது பிரிவி கவுன்சிலில் உள்ள ஒரு குழுவினரிடம் சில முக்கியமான அரசாங்கப்

பொறுப்புகள் தரப்பெற்றன. அதனால் அந்தக் குழுவிற்கு அரசாங்க அலுவல்களைப் பார்க்கும் குழு (Committee of State) என்று பெயர் தரப்பட்டது. இரண்டாம் சார்லஸ் 1667-ல் அவருக்கு நம்பிக்கையான சில ஆலோசனையாளர்களை நியமித்தார். அவர்கள் குழுவை, 'கபால்' (Cabal)* என்று அழைத்தனர். இக் கபால் குழு அடிக்கடி இரகசியமான அறையொன்றில் (Cabinet) கூடியதால் பின்னர் 'கேபினட்' என்ற பெயரில் இது அழைக்கப்பட்டது. இக் குழுவினர் அரசாங்கத்தின் பல கொள்கைகளை நிர்ணயம் செய்து, பிரிவி கவுன்சிலின் அங்கீகாரத்தைப் பெற்றனர். அக் குழுவின் கொள்கைகள் பல அரசாங்கத் துறைகள் மூலமாகச் செயலாற்றப்பட்டன. இந்த 'கபால் முறை' மூன்றும் வில்லியம் காலத்தில் செல்வாக்கிழந்துவிட்டது. அதனால் பாராளுமன்றத்தில் அப்பொழுது இயற்றப்பட்ட வாரிசுரிமைச் சட்டம் (The Act of Settlement) இனிமேற்கொண்டு, எல்லா அரசாங்க விவகாரங்களையும் பிரிவி கவுன்சிலே தீர்மானிக்க வேண்டுமென்றும், அதன் முடிவுகளை பிரிவி கவுன்சில் கூட்டங்களில் கலந்து கொண்ட உறுப்பினர்கள் ஏற்றுக்கொண்டதற்கு கையெழுத்திட வேண்டும் என்றும் முடிவு செய்தனர். தவிர அரசாங்கத்தில் சம்பளம் வாங்கிக் கொண்டு பணியாற்றுகிறவர்கள் பாராளுமன்ற உறுப்பினர்களாக இருக்கக் கூடாது என்றும் கூறினர். ஆனால் இந்த மாற்றங்கள் எல்லாம் ஆன் அரசியார் காலத்தில் ரத்து செய்யப்பட்டன.

### ஹனோவிரிய அரசர்களது ஆட்சியில் கேபினட்டின் வளர்ச்சி

முதலாம் ஜார்ஜ் என்ற ஹனோவிரிய அரசரின் ஆட்சி காலத்தில் கேபினட் முறையில் மாறுதல் ஏற்பட்டது. விக் கட்சியை சார்ந்த சில முக்கியமான பிரமுகர்களை முதலாம் ஜார்ஜ் அவரது அமைச்சர்களாக நியமித்தார். அந்த அரசருக்கு ஆங்கில மொழி தெரியாத காரணத்தால், அவர் 'கேபினட்' கூட்டங்களில் கலந்து கொள்வதை நிறுத்திக் கொண்டார். அதனால் அந்த அரசர், கேபினட் கூட்டங்களில் விவாதிக்கப்படும் அரசாங்கக் கொள்கைகளை நிர்ணயம் செய்யும் பல விவாதங்களில் பங்கெடுத்துக் கொள்ள முடியாமல் போய் விட்டது. அவருக்குப் பதிலாக அவருடைய பிரதம அமைச்சர் அந்தக் கூட்டங்களுக்குத் தலைமை தாங்க நேரிட்டது. இரண்டாம் ஜார்ஜ் காலத்தில் கேபினட் முறையில் ஒரு முக்கியமான வளர்ச்சி காணப்பட்டது. கேபினட் முறை சரியாக செயலாற்ற வேண்டிய வழிகளை சர் ராபர்ட் வால் போல் (Sir Robert Wal Pole) அமைத்துக் கொடுத்தார்.

* கிளிபோர்ட், ஆர்லிங்டன், பக்கிங்காம், ஆஷ்லி, லாடர்டேல் ஆகிய ஆலோசனையாளர்களின் பெயர்களில் காணப்படும் முதல் எழுத்துக் கொண்டது காபல்–(Cabal).

கேபினட் அரசாங்கத்தை தோற்றுவித்த பெருமை சர் ராபர்ட் வால் போலைச் சாரும். அவர் பிரதம அமைச்சராக இருந்தபொழுது, அவருடைய மற்ற அமைச்சர்கள் அவருக்கு விசுவாசமுள்ளவர்களாகவும், கட்டுப்பட்டு நடப்பவர்களாகவும் இருக்கவேண்டுமென்று விரும்பினர். அவர்கள் பிரதம அமைச்சரிடம் பொறுப்புடையவர்களாக இருக்க வேண்டுமென்பதையும் உணர்த்தினர். அவர் பிரதம அமைச்சராகவும், நிதி அமைச்சராகவும் பணியாற்றி, மற்ற அமைச்சர்களின் ஒரு முகக் கொள்கையையும் பொதுப்படையான பொறுப்பையும் வலியுறுத்தி அரசாங்க அலுவல்களை சரிவர நடத்திச் சென்றார். வால் போல் அமைச்சரவையில் அமைச்சராகப் பணியாற்றி வந்த டவுன்செண்ட் (Townsend) என்பவருக்கும், பிரதம அமைச்சருக்கும் கருத்து வேறு பாடுகள் ஏற்படவே, வால் போல், டவுன்செண்டை அமைச்சர் பதவியிலிருந்து விலகச் சொன்னர். அதைப் போன்று 1733-ல் வால் போல் கபால் வரி விதிப்பு மசோதாவைக் கொண்டு வரும்பொழுது செஸ்டர்பீல்ட் (Chester Field) என்ற அமைச்சர் அம் மசோதாவிற்கு எதிர்ப்பு தெரிவித்ததால், வால் போல் அவரை அமைச்சர் பதவியிலி ருந்து விலக்கினர். மக்கள் சபையில் வால்போலுக்கு பெரும்பான்மை ஆதரவு இல்லாததால், 1742-ல் அவர் பிரதம அமைச்சர் பதவியை ராஜிநாமா செய்தார். அதனுல் அவர் பிரதம அமைச்சராக இருந்த பொழுது இரண்டு முக்கியமான கொள்கைகளை வலியுறுத்தினர். அரசாங்கக் கொள்கைகளை நிர்ணயம் செய்யும் பொறுப்பு பிரதம அமைச்சரைச் சார்ந்தது என்றும், அமைச்சரவை பொதுமக்கள் சபைக்குத்தான் பொறுப்பானதாக இருக்க முடியும் என்றும் இரண்டு கொள்கைகளை அவர் வலியுறுத்தினர். மூன்றும் ஜார்ஜ்க்கு வால்போல் பின்பற்றிய கேபினட் முறை ஆட்சி சிறிதும் பிடிக்காததால், அவர் டோரிக் கட்சியினரைக் கொண்டு வால்போலின் கேபினட் ஆட்சி முறையை சீர்குலைக்க முயன்ரூர். ஆனல் அச்சமயத்தில் இங்கிலாந்து அமெரிக்க காலனிகளை இழந்து விட்டதால், மூன்ரும் ஜார்ஜ் தம் விருப்பப்படி ஆட்சி செய்யும் முயற்சியையும் கைவிட நேரிட்டது. அவர் காலத்தில் பிரதம அமைச்சராக வந்த பிட் என்பவரும் விக் கட்சி யினர் கடைப்பிடித்த கேபினட் ஆட்சி முறையைப் பின்பற்றினர்.

### கேபினட்டின் அமைப்பு

இப்பொழுது இங்கிலாந்தில் உண்மையில் அரசாங்கதை நடத்தி வருவது கேபினட் எனும் அமைச்சர் குழுவேயாகும். மக்கள் சபையில் பெரும்பான்மை ஆதரவு பெற்றுள்ள ஓர் அரசியல் கட்சித் தலைவரை, அரசர், பிரதம அமைச்சர் பதவியை ஏற்றுக் கொள்ளச் செய்வார். பின்னர் பிரதம அமைச்சர் மற்ற அமைச்சர்களை நியமனம் செய்யும்

பணியில் ஈடுபடுவார். 1923-ல் ஐந்தாம் ஜார்ஜ் கர்ஸன் பிரபுவைக் காட்டிலும் பால்டுவின் என்பவரே பிரதம அமைச்சராகப் பதவியேற்பதை விரும்பினார். ஏனெனில் பால்டுவின் மக்கள் சபை உறுப்பினர். மக்கள் சபை தான் பிரபுக்கள் சபையைக் காட்டிலும் வலிமை மிக்கது, மேலும் ஒரு பிரதம அமைச்சர் மக்கள் சபையின் தலைவராக இருப்பதே பெரிதும் விரும்பற்பாலது. பிரதம அமைச்சர் பிற அமைச்சர்களை நியமனம் செய்வதற்கு முன்னர், கட்சித் தலைவர்களுடன் ஆலோசனை செய்து, பிறகு அவருடைய அமைச்சர் பட்டியலை வெளியிடுவார். அப்பட்டியலை அரசர் ஏற்றுக் கொண்ட பின்னர், அமைச்சர்கள் பெயர்கள் அரசாங்க கெஜட்டில் வெளியிடப்படும். சில சமயங்களில் கூட்டு அமைச்சரவையும் அமைக்கப்படுவதுண்டு. அப்பொழுது பல கட்சிகளிலுள்ள முக்கியமான தலைவர்களை அமைச்சரவையில் சேர்த்துக் கொள்வார்கள்.

அமைச்சர்களைத் தேர்ந்தெடுப்பதில் பிரதம அமைச்சரின் விருப்பம் தான் மேலோங்கி நிற்கும். ஆனால் சில சமயங்களில் அரசரும் அமைச்சர்களைத் தேர்ந்தெடுப்பதில் தம் விருப்பத்தைத் தெரிவிப்பார். அரசரின் தலையீடு முற்றிலும் இல்லை என்று கூற முடியாது. ஒரு சில அரசியல்வாதிகளை அமைச்சரவையில் சேர்த்துக் கொள்ள வேண்டும் என்று அரசர் வலியுறுத்துவார். சில சமயங்களில் பிரதம அமைச்சர் நியமனம் செய்த சில அமைச்சர்களை நீக்கி விடும்படி அரசர் கூறுவார். சில பொறுப்பான பதவிகளை வகிக்க அவர்களுக்குத் திறமையில்லையென்றும் அரசர் கூறலாம். ஆனால் அரசர், அமைச்சர்களை நியமனம் செய்வதில் ஆலோசனைகளைக் கூறலாமே தவிர பிரதம அமைச்சரைக் கட்டாயப் படுத்த முடியாது. விக்டோரியா அரசியார் ஆட்சியின் பொழுது, அவர்கள் கிளாட்ஸ்டனை (Gladstone) பிரதம அமைச்சராக நியமனம் செய்து, அத்துடன் அமைச்சர்கள் பட்டியலில் ஹேலிபாக்ஸ் பிரபுவையும் (Lord Halifax) சேர்த்துக் கொள்ளுமாறு 1868 டிசம்பர் 4ஆம் தேதியன்று பிரதம அமைச்சருக்கு கடிதம் எழுதினார்கள். மீண்டும் இரு முறைகள், அரசியார் இந்த ஆலோசனையை வற்புறுத்தினார். ஆனால் கிளாட்ஸ்டன் அரசியாரின் ஆலோசனைகளை ஏற்றுக் கொள்ளவில்லை. ஆனால் 1870-ல் பிளாட்ஸ்டன், ஹேலிபாக்ஸ் பிரபுவை அவருடைய அமைச்சரவை அரசாங்கத்தில் சேர்த்துக் கொண்டார். மீண்டும் 1886-ல் சாலிஸ்பரி பிரபு (Lord Salisbury) பிரதம அமைச்சராகப் பதவியேற்றபொழுது விக்டோரியா அரசியார் சர் இ. மாலட் (Sir. E Mallet) என்பவரை வெளிநாட்டுத் துறை காரியதரிசியாக நியமனம் செய்யும்படி பிரதம அமைச்சரைக் கேட்டுக் கொண்டார். ஆனால் காலிஸ்பரி பிரபு, அப்பதவிக்கு, இடஸ்லை பிரபுவை (Lord Iddesligh) நியமனம் செய்தார். அரசியாரின்

வற்புறுத்தல் பேரில்தான் 1895-ல் கிராஸ் பிரபுவை (Lord Cross) கேபினட் அமைச்சராக காலிஸ்பரி பிரபு சேர்த்துக் கொண்டார். சில சமயங்களில், பிரதம அமைச்சர் நியமனம் செய்யும் சில அமைச்சர்களை ஏற்றுக்கொள்ள முடியாது என்றும் அரசியார் கூறுவர். அரசரின் எதிர்ப்பைத் தவிர்க்க கூடிய வரையிலும் பிரதம அமைச்சர் அரசரின் விருப்பத்திற்கு ஏற்ப நடந்து கொள்ளலாம். ஆனல் அரசரின் விருப்பத்தை அப்படியே ஏற்றுக்கொள்ளவேண்டிய கட்டாயம் பிரதம அமைச்சருக்கில்லே. 1868-ல் கிளாரண்டன் பிரபுவை (Lord Clarendon) வெளி விவகார அமைச்சராக நியமனம் செய்யக் கூடாது என்று விக்டோரியா அரசியார் வற்புறுத்தினர். ஏனெனில் அவருடைய டச்சுக் கொள்கைகளும், ஜர்மானிய கொள்கைகளும் அரசியாரின் கொள்கைகளுக்கு முரண்பட்டதாக இருந்தன. இருந்த போதிலும் அப்பொழுது பிரதம அமைச்சராக இருந்த கிளாட்ஸ்டன் அரசியாரின் விருப்பத்தை ஏற்றுக்கொள்ள மறுத்துவிட்டார்.

கேபினட் எனும் அமைச்சுக்குழு உறுப்பினர்களை நியமனம் செய்வது பிரதம அமைச்சரின் மிகப் பெரிய பணியாகும். கட்சியி லுள்ள செல்வாக்கு மிக்க பிரமுகர்களேயும், திறமை மிக்கவர்களேயும் கேபினட் அமைச்சர்களாகப் பிரதம அமைச்சர் நியமனம் செய்வார். அநுபவமிக்கவர்களுக்கும், பிரதம அமைச்சரின் நெருங்கிய நண்பர் களுக்கும் சாதாரண அமைச்சர்கள் பதவி கொடுக்கப்படுவதுண்டு. கேபினட் அமைச்சர்களின் எண்ணிக்கை மிகவும் குறைவாக இருப்ப தால், பிரதம அமைச்சர் அவ்வமைச்சர்களைத் தேர்ந்தெடுக்கும் பணி யானது மிகவும் தர்மசங்கடமானதாகும். அதனல் கட்சியிலுள்ள மிக முக்கியமான பிரமுகர்களைக் கலந்து ஆலோசனை செய்தே பிரதமர் ஏனைய அமைச்சர்களை நியமனம் செய்வார். பிரதம அமைச்சருடன் நெருங்கிய அரசியல் தொடர்புடைவர்களுக்குச் சன்மானமாக சில சமயம் அமைச்சர்கள் பதவி கொடுக்கப்படுவதுண்டு. ஆனல் அதே சமயத்தில் சில அமைச்சர்களைத் தேர்ந்தெடுப்பதில் கட்சியிலுள்ள செல்வாக்கு மிக்கவர்களிடையே மனக் கசப்பு தோன்றுவதும் உண்டு. அதனல் திறமை மிக்கவர்களேயும், அநுபவமிக்கவர்களேயும் பிரதம அமைச்சர் தேர்ந்தெடுத்து கட்சியிலே மன நிறைவை ஏற்படுத்த முயல்வார். 1892-ல் கிளாட்ஸ்டன் பிரதம அமைச்சரானவுடன், மற்ற அமைச்சர் களைத் தேர்ந்தெடுக்க கட்சியின் முக்கிய பிரமுகர்களான மார்லி (Morley) ஹார்கோர்ட் (Harcourt) ஆகியோரைக்கலந்து, அமைச்சர் களுக்கு இலாக்காக்களைப் பகிர்ந்தளிப்பதைப் பற்றி ஆலோசனை செய்தார். இவர்களைத் தவிர சர் ஹென்றி கேம்ப்பெல் பேனர்மான் (Sir Henry Campbell Bannerman) என்பவரையும் கலந்து ஆலோசனை செய்தார். இந்த ஆலோசனைக்குப் பின்னர் அவர் கூறிய

தாவது: 'அரசாங்கத்தை அமைக்கும் பணியில் முதல் முறையாக ஈடு பட்டேன். ஆனால் அப்பணி மிகவும் சிக்கலானது; தர்ம சங்கடமானது. அப்பொழுது எல்லாவற்றையும் ஒளிவு மறைவு இல்லாமல் விவாதித்து, ஆலோசனை செய்ய நேரிட்டது,' வழக்காற்றின்படி, இராணுவத்தி லுள்ளவர்களை அமைச்சரவை அரசாங்கத்தில் சேர்த்துக் கொள்வதில்லை. ஆனால் போர் காலத்தின்பொழுது *1914, 1915*-ல் கிட்சனர் பிரபு கேபினட்டில் உறுப்பினராகச் சேர்த்துக் கொள்ளப்பட்டார். ஆனால் அவர் இராணுவப் பதவியிலிருந்து விலக முடியாது என்ற நிபந்தனையின் மீது கேபினட் அமைச்சராக பதவி வகித்து வந்தார். வழக்கத்திற்கு மாறாக, *1914-19*-ல், பிரிட்டனைச் சாராத, தென் ஆப்ரிக்காவைச் சார்ந்த ஜனரல் ஸ்மட்ஸ் (General Smuts) என்பவரைப் போர் கேபினட்டில் (War Cabinet) அங்கத்தினராகச் சேர்த்துக் கொண்ட னர். *1914* வரையிலும் பிரிட்டினைச் சாராத ஒருவர் கேபினட் அமைச் சராகப் பதவி வகித்ததில்லை.

முன்னர் பாராளுமன்றத்திலுள்ள இரண்டு சபைகளிலிருந்தும் அமைச்சர்களைத் தேர்ந்தெடுத்து வந்தனர். அப்படிச் செய்வதில் அவர்களுக்கு எவ்விதத் தடையும் இருந்ததில்லை. ஆனால் 1937-ல் அரசின் அமைச்சர்கள் சட்டம் (Ministers of the Crown Act) நிறைவேற்றப்பட்ட பிறகு, பிரபுக்கள் சபையிலிருந்து குறைந்தபட்சம், மூன்று கேபினட் அமைச்சர்களும், மூன்று உதவி அமைச்சர்களும் தேர்ந்தெடுக்கப்பட வேண்டுமென்ற வழக்கம் ஏற்பட்டுள்ளது. இந்த சட்டத்தின்படி கேபினட் அமைச்சர்களாவது:- பிரதம அமைச்சரும், கருவூலத்தின் முதல் பிரபும் நிதி அமைச்சரும் (Prime Minister and First Lord of the Treasury, Chancellor of the Exchequer) உள் துறை அமைச்சரும் (Secretary of State for home Affairs) காமன் வெல்த் அமைச்சரும் (Secretary of State for Foreign Affairs) காலனி அமைச்சர், (Secratary of State for Colonies) போர்துறை அமைச்சர் (Secratary of State for War) விமானத்துறை அமைச்சர் (Secratary of State of Air) ஸ்காட்லாந்து அமைச்சர் (Secratary of State for Scotland) கடற்துறை அமைச்சர் (First Lord of Admiralty) வர்த்தக அமைச்சர் (President of the Board of Trade) வேளாண்மை, மீன் பிடிப்புத் துறை அமைச்சர் (Minister of Agriculture & Fisheries) கல்வித்துறை அமைச்சர் (President of the Board of Education) சுகாதார அமைச்சர் (Minister of Health) தொழில்துறை அமைச்சர் (Minister of Labour) போக்கு வரத்து அமைச்சர் (Minister of Transport) இணைப்பு அமைச்சர் (Minister of Co-ordination) கவுன்சிலின் தலைவர் (Lord President of the Council), பிரிவி சீல் பிரபு (Lord Privy Seal) அஞ்சல்துறை

தலைவர் (Postmaster General) பொதுப்பணி அமைச்சர் (First Commissioner of Works) பென்ஷன் அமைச்சர் (Minister of Pen ions) ஆகியோராவர். இவர்களுடைய சம்பள விகிதங்களும் இந்தச் சட்டத்தில் நிர்ணயம் செய்யப்பட்டுள்ளன. முதல் பிரிவின் படி, பிரதம அமைச்சர், கருவூலப் பிரபு பதவி வகிப்பவர்களுக்கு ஆண்டொன்றுக்கு 10,000 பவுன்களும் பதவியை விட்டு விலகியவுடன் பென்ஷன் பணமாக ஆண்டு ஒன்றுக்கு 2000 பவுன்களும் கொடுக்கப் படும். இரண்டாவது பிரிவின்படி, நிதி அமைச்சர், அமைச்சர்கள், கடற்படை முதல் பிரிவு, கல்வித் துறை தலைவர், சுகாதார அமைச்சர், தொழிற்துறை அமைச்சர், போக்குவரத்து அமைச்சர், இணைப்பு அமைச்சர், கவுன்சில் தலைவர், பிரிவி சீல் பிரபு, அஞ்சல்துறை தலைவர், பொதுப்பணி முதல் கமிஷனர் ஆகியோருக்கு ஆண்டொன்றுக்கு 5000 பவுன்களும், மூன்றுவது பிரிவின்படி, உதவி அமைச்சர்களுக்கு ஆண்டொன்றுக்கு 3000 பவுன்களும், பாராளுமன்ற உதவிச் செயலாளர் களுக்கு 1500 பவுன்களும் ஆண்டொன்றுக்கு தரப்பட வேண்டும் என்று இச் சட்டத்தில் கூறப்பட்டுள்ளது. அத்துடன் எதிர்கட்சித் தலைவருக்கும் ஆண்டொன்றுக்கு 5000 பவுன்கள் தரப்பட வேண்டும்.

ஒருமுறை அமைச்சவை அரசாங்கம் அமைக்கப்பட்டால், அதுவே நிரந்தரமானது என்று கூறுவதற்கில்லை. பிரதம அமைச்சரின் விருப்பப் படி, அவர் எப்பொழுது வேண்டுமானாலும் அமைச்சவையை மாற்றி அமைக்கலாம். ஏதாவது அமைச்சர் ராஜிநாமா செய்கின்றபொழுதும் வேறு அமைச்சரைத் தேர்ந்தெடுக்க வேண்டிய பொறுப்பு பிரதம அமைச்சரைச் சார்ந்தது. பிரதம அமைச்சரின் விருப்பு, வெறுப்பு மட்டும் அமைச்சர்களைத் தேர்ந்தெடுக்கப் பயன்படாது. கட்சியின் நலன்கள், அமைச்சர்களின் திறமை, அனுபவம், அரசியின் செல்வாக்கு, பல சூழ்நிலைகளைப் பொறுத்தே அமைச்சர்கள் தேர்ந்தெடுக்கப்படுகின் றனர். 1883-ல் கிளாட்ஸ்டன் பிரதம அமைச்சராக இருந்தபொழுது, ரோஸ்பரி பிரபுவை (Lord Rosebury) கேபினட் தகுதி பெற்ற பிரிவி சீல் பிரபுவாக (Lord Privy Seal) நியமனம் செய்ய அவருக்கு விரும்பவில்லை. ஏனெனில் அவர் கிளாட்ஸ்டன் கண்களுக்கு ஒரு சிறு பையனைக் காட்சி அளித்தார். ஆனால் இரண்டு ஆண்டுகள் கழிந்து அவரை கேபினட் அமைச்சராக நியமனம் செய்தார். 1907-ல் சர் ஹென்றி கேம்பெல் பேனர்மேன் (Sir Henry Cambel Banner Man) அமைச்சவையை மாற்றி அமைக்கவேண்டிய சந்தர்ப்பம் வந்த பொழுது, வின்ஸ்டன் சர்ச்சிலை கேபினட்டில் சேர்த்துக்கொள்ள மறுத்துவிட்டார்; ஏனெனில் அவர் கிளாட்ஸ்டனைப் போன்று பழைமைவாதி என்று பிரதம அமைச்சர் அபிப்பிராயப்பட்டார். அமைச்சர்களை நியமனம் செய்யும்பொழுது அரசர்களின் செல்வாக்கும்

சிபாரிசுகளும் பயன்படுத்தப்படுகின்றன. ஆனால் பிரதம அமைச்சர்கள் அவற்றைக் கட்டாயமாக ஏற்றுக் கொள்ள வேண்டும் என்பதில்லை. அமைச்சர்களை நியமனம் செய்வதில், பிரதம அமைச்சரும், அவரது மற்ற அமைச்சர்களும் அதிக அக்கறை எடுத்துக் கொள்கின்றனர். அவர்களது அபிப்பிராயங்களே முடிவானதாக இருக்கும்.

**கேபினட்டின் ஆதிக்கம்**

ஆங்கிலேய அரசியல் அமைப்பில் கேபினட்டின் ஆதிக்கம் மிகவும் முக்கியமானது என்று இப்பொழுது ஒப்புக்கொள்ளப்படுகிறது. பாராளுமன்ற ஆதிக்கம் 19-வது நூற்றாண்டில் ஓங்கியிருந்தது. ஆனால் அதன் ஆதிக்கத்தை இப்பொழுது கேபினட் கைப்பற்றிக் கொண்டது. 'எந்தக் கொள்கையை நிர்ணயம் செய்தாலும், எந்த மாற்றத்தைச் செய்வதும், அல்லது எந்த முக்கியமான நிகழ்ச்சியும் கேபினட்டின் அனுமதியின்றி ஏற்படுவதில்லை' என்று சர் ஐவர் ஜென்னிங்ஸ் கூறுகிறார். எதையும் முடிவு செய்வது கேபினட் சபையே என்று அவர் அபிப்ராயப்படுகிறார். இவரைப் போன்றே, ஆங்கிலேய அரசியல் அமைப்பை எழுதிய மற்றவர்களும் அபிப்ராயப்படுகிறார்கள். அரசாங்கத்தைச் செலுத்தும் சக்தி, கேபினட் சபைக்கே உள்ளது என்றும் பாராளுமன்றத்திடம் அச்சக்தி இல்லையென்றும் அவர்கள் கூறுகின்றனர். ஆனால் இவ்வளவு முக்கியத்துவம் பெற்ற கேபினட் சபையைப் பற்றி, எந்த ஆங்கிலேயச் சட்டமும் ஒன்றும் கூறாது விட்டது மிகவும் ஆச்சர்யமானதாகும். ஆங்கிலேய அரசியல் அமைப்புகளில் காணப்படும் பல முரண்பாடுகளில் இது மிகப் பெரியதாகும். கேபினட் சபைக்கு அளவு கடந்த அதிகாரங்கள் உள்ளன. ஆனால் அந்த அதிகாரங்கள் மக்கள் சபையில் கேபினட்டுக்குள்ள பெரும்பான்மை இருக்கும் வரையில் தான் என்று எல். எஸ். அமரி என்பவர் கூறுகின்றார்.* அதனால் பாராளுமன்ற ஆதிக்கம் முற்றிலும் மறைந்து விடவில்லை. ஆனால் அதன் ஆதிக்கம் கேபினட்டைப் பொறுத்தளவில் மிகக் குறைந்த அளவில் தான் செலுத்தப்படுகின்றது. அதே சமயத்தில் கேபினட்டின் ஆதிக்கம் ஒரு சர்வாதிகாரியின் ஆதிக்கத்தைப் போன்றதல்ல. கேபினட்டின் ஆதிக்கம் மிகவும் சூசகமானது. கேபினட்டில் உள்ள மற்ற அமைச்சர்களின் செல்வாக்கிற்கும் அதன் வெளியே உள்ள மற்றவர்களின் செல்வாக்கிற்கும் கட்டுப்பட்டுள்ளது. அதன் வெற்றி, மற்றவர்கள் அளிக்கும் ஒத்துழைப்பில் தான் உள்ளதே தவிர, அதனுடைய ஆதிக்கத்தில் மட்டுமல்ல.

* L. S. Amery - Thoughts on the Constitution

வெளித்தோற்றத்தில், கேபினட்டிலுள்ள சுமார் 20 அமைச்சர்கள் மட்டுமே நாட்டிற்கு வேண்டிய கொள்கைகளை நிர்ணயம் செய்கிருர்கள் என்ற பொதுப்படையான அபிப்பிராயம் நிலவுகிறது; உண்மையில் கேபினட் சபையில் நிகழும் விவாதங்கள் இரகசியமாகவே வைத்துக் கொள்ளப்படுகின்றன. யூகமாகத்தான் அவற்றைத் தெரிந்து கொள்ள முடியுமே தவிர, அதிகாரபூர்வமாக அங்கு நடப்பதைத் தெரிந்து கொள்ள முடியாது. இப்பொழுது, எந்தக் கொள்கையையும், சம்மந்தப் பட்ட அமைச்சர்களும் அவர்களின் துறைகளில் உள்ள அதிகாரிகளும் சேர்ந்துதான் கொள்கைகளை நிர்ணயம் செய்கின்றனர். அவ்விதம் மேற்கொள்ளப்பட்ட கொள்கைகளைத்தான் கேபினட் சபையில் அமைச்சர்கள் விவாதித்து கருத்து வேறுபாடுகளை அகற்றி கேபினட் முடிவுகளாக வெளியிடுகின்றனர். கேபினட் இயற்றுகின்ற பல பணிகளையும் இப்பொழுது ஒரு சில முக்கியமான அமைச்சர்களே, அவர்களுடைய ஆலோசனையாளர்களின் உதவியை கொண்டு செய்து வருகின்றனர். ஆனல் அவ்விதம் செய்யும் நடவடிக்கைகள் எல்லாம் பிரதம அமைச்சரின் அனுமதியின் பேரில்தான் செய்யப்படுகின்றன. ஒருசில அமைச்சர்கள் முக்கியமான நடவடிக்கைகளை மேற்கொள்ளுதல், இப்பொழுதுள்ள சூழ்நிலையில் பயனுள்ளதாகக் காணப்படுகிறது. நிறைய பணிகள் அரசாங்கத்திற்கு இருப்பதாலும், பல பணிகளுக்குத் தனிச்சிறப்பான ஆலோசனைகள் தேவைப்படுவதாலும் ,அமைச்சர்களால் மட்டும் முக்கியமான முடிவுகளை எடுக்க முடியாது. அதனுல் பல்வேறு மக்களின் நலன்களையும், அவர்களைப் பிரதிபலிக்கின்ற கழகங்களின் அபிப்பிராயங்களை மதித்தும் ஒரு சில அமைச்சர்கள் சில முடிவுகளை எடுக்கவேண்டிய அவசியம் ஏற்படுகின்றது. அவ்விதமே சம்மந்தப் பட்ட அமைச்சர்கள், அவர்களுடைய ஆலோசனையாளர்கள், அவர்களு டைய இலாக்கா அதிகாரிகள் ஆகியோரின் துணைக்கொண்டு முடிவு களைச் செய்கின்றனர். இவையெல்லாம் பொதுப்படையாக 'கேபினட் முடிவுகளாகவே' கருதப்படுகின்றன* அதனுல் பெரும்பாலும் கொள் கைகளை நிர்ணயம் செய்தல் கேபினட் சபையின் முக்கியமான பணியாக இப்பொழுது கருதப்படுவதில்லை. 'பல்வேறு துறைகளிலும், கேபினட் கமிட்டிகளிலும், பிரதம அமைச்சர் மற்றும் பல அமைச்சர்களும் சந்தித்துப் பேசிக்கொள்வதிலும், கொள்கைகள் உருவாகின்றன. கருத்து வேறுபாடுகள் மட்டும் கேபினட் சபையில் சரி செய்யப்படு கின்றன' என்று மேகின்டோஷ் என்ற ஆசிரியர் கூறுகின்ருர். 'மேலும் அவர் கூறுவதாவது, 'கேபினட்டின் மிக முக்கியமான பணி, பல்வேறு துறைகளின் பணிகளையும், கமிட்டிகளின் பணிகளையும் தொடர்பு படுத்தி சரியாக இணைத்து, அரசாங்கத்தை நடத்துவதாகும்' அதனுல்

* J. P. Mackintosh - The British Cabinet.

கேபினட் சபை ஒரே நிறுவனமாக இருந்து எல்லா அரசாங்க பணிகளை யும் நடத்தி வருவதாக நிலவியிருந்த அபிப்பிராயம் இப்பொழுது மாறி யுள்ளது. கேபினட் சபையிலிருந்து மட்டுமே, அரசாங்கத்தின் எல்லா கொள்கைகளும் உற்பத்தியாகின்றன என்று கூறுவதும் முற்றிலும் உண்மையல்ல. உண்மையில் கேபினட் சபை அமைச்சர்களுக்குக் கொள்கைளை உருவாக்கும் பொறுப்பும், அதிகாரமும் உள்ளன. ஆனால் அவர்களுக்கு நிறைய வேலைகளும் உள்ளன. அதனால்தான், வெவ் வேறு அரசாங்கத் துறைகளிலுள்ள சிறப்பு மிக்க அதிகாரிகள் மூலமாக அவர்கள் கொள்கைகளை உருவாக்கிக் கொள்கின்றனர். கேபினட் அமைச்சர்கள் அரசியல்வாதிகளாக இருப்பதால், அரசாங்கக் கொள்கை களால் ஏற்படும் பல விளைவுகளுக்கு விளக்கம் தர வேண்டிய பொறுப்பு உடையவர்களாவர். அதனால் இறுதியாகக் கொள்கைகளை அங்கீகரிப் பது மட்டுமே அவர்களால் முடிகின்ற வேலையாக உள்ளது. அரசாங்கக் கொள்கைகளை வகுக்கும் சிறிய கமிட்டிகளின் பொறுப்புகளைக் கண்காணிக்கும் பணியையும், இறுதியில் கேபினட் சபையே அக்கொள்கைகளுக்கு பொறுப்பேற்றுக் கொள்வதையும் நாம் காண்கின் றோம். சட்டங்களை இயற்றும் பொறுப்பு கேபினட் அமைச்சர்களுடை யதாகும். எப்பொழுது இச்சட்டங்களைப் பாராளுமன்றத்தில் கொண்டு வரவேண்டுமென்பதும் கேபினட் அமைச்சர்களின் முக்கிய வேலை யாகும். இயற்றப்படுகின்ற சட்டங்களை வெவ்வேறு சட்டசபை குழுக்களின் ஆலோசனைகளுக்கு அனுப்புதலும், பாராளுமன்றத்தில் சட்டமியற்றும் ஒவ்வொரு கட்டத்திலும், சட்டம் சரிவர நகர்ந்து செல்லுகின்றதா என்று விழிப்புடன் பார்த்துக்கொள்ளுதலும், கட்சியின் கட்டுப்பாட்டையும் ஒழுங்குபடுத்திக் கொள்ளவும், கேபினட் அமைச்சர்கள் விழிப்பாக இருக்க வேண்டியுள்ளது. பாராளுமன்ற துவக்கத்தில் நிகழ்த்தப்படுகின்ற அரசியாரின் அரசாங்கத் திட்டங்களைப் பற்றிய பேருரை பிரதம அமைச்சராலும், மற்றும் முக்கியமான அமைச்சர்களாலும் தயாரிக்கப்படுவதாகும். மத்திய அரசாங்கத்தின் எல்லா நிர்வாகக் காரியங்களையும் கேபினட் தான் கட்டுப்படுத்து கின்றது. பல நிர்வாகத் துறைகளை அது ஏற்படுத்துகின்றது; அல்லது மாற்றி அமைக்கின்றது. 1904-ல் போர்துறை மாற்றி அமைக்கப் பட்டது. புதிய அமைச்சர்களை நியமனம் செய்கின்றது. உதாரணமாக அண்மையில், பென்ஷன் அல்லது ஓய்வு பெற்றவர்களின் சம்பளங்களைப் பார்த்துக் கொள்ளவும், தேசிய இன்ஷ்யூரன்ஸ் காரியங்களை பார்த்து கொள்ளவும் ஒரு புதிய அமைச்சர் நியமனம் செய்யப்பட்டார். பல் வேறு அரசாங்கத் துறைகளிடையே ஏற்படும் தகராறுகளை கேபினட் தீர்த்து வைக்கின்றது. பல்வேறு அரசாங்கத் துறைகளிடையே நல்ல தொடர்புகளை ஏற்படுத்தி, அரசாங்கத்தின் ஒருமுகக் கொள்கையை ஏற்படுத்தவும், அதை நிறைவேற்றவும் முயற்சி செய்கின்றது.

சரியான தொடர்புகள் இல்லாத காரணங்களால், சில சமயங்களில் அரசாங்கத் துறைகளிடையே ஏற்படும் முரண்பாடுகளை அகற்றவும் கேபினட் சபை வழி செய்கின்றது. செலவினங்களில் சிக்கனத்தை ஏற்படுத்தவும், அது முயற்சிக்கிறது. தவிர, மிக முக்கியமான வெளி நாட்டுக் கொள்கைகளையும், உள்நாட்டுக் கொள்கைகளையும் கேபினட் சபை பரிசீலனை செய்கின்றது. சில வெளிநாட்டு விவகாரங்களும். உள்நாட்டு விவகாரங்களும் மிக அவசரமாகத் தீர்மானிக்கப்பட வேண்டியவையாக இருக்கும். அவற்றையெல்லாம் விவாதித்துக் கொண்டிருந்தால் காலதாமதமாகும், அதற்குள் விளைவுகளும் விபரீத மாகிவிடும். அச் சமயங்களில் விரைவில் முடிவுகளைக் கேபினட் சபை எடுக்க நேரிடுகின்றது. எல்லாவற்றையும் விட 'பட்ஜெட்' விவகாரங் கள் மக்கள் சபைக்கு வருவதற்குள், அதைபற்றிய வரவு செலவினங்களை யும், மிகவும் இரகசியமாகப் பரிசீலனை செய்ய வேண்டிய பொறுப்பு கேபினட் சபையைச் சார்ந்ததாகும்.

கேபினட் சபை பல இரகசிய வாரியங்களையும் நியமனம் செய்து அவைகளின் மூலமாக, முக்கியமான திட்டங்களையும் பரிசீலனை செய்யும் பழக்கத்தை மேற்கொண்டுள்ளது. அமைச்சரவை காலம் முடியும் வரையிலும், அந்த வாரியங்கள் அல்லது கமிட்டிகள் இரகசிய மாகவே செயலாற்றி வரும். முக்கியமான இரண்டு அரசியல் கட்சிகளும் இந்தப் பழக்கத்தை மேற்கொண்டுள்ளன. சில அரசாங்க காரியங்களை இரகசியமாக வைத்திருப்பதன் நோக்கம், பொதுமக்களுக்கு அரசாங்கத்தின் நடவடிக்கைகள் தெரியக்கூடாது என்பதற்கில்லை யென்ற போதிலும் பல தன்னலக் கும்பல்களின் தலையீடுகளை தவிர்க்க முடிகின்றது. இவ்வித வாரியங்களின் பரிந்துரைகள் கேபினட் சபையில் ஒப்புக்கொள்ளப்பட்டு விரைவில் பாராளுமன்றத்திற்குக் கொண்டு வரப்படும்பொழுதே, இத்திட்டங்கள் அல்லது கொள்கைகள் விவாதத்திற்கும், சில சமயங்களில் கண்டனங்களுக்கும் உரியவை யாகின்றன. எனவே, கொள்கைகள் நிர்ணயம் செய்யும் துவக்க காலத்திலேயே கேபினட்டின் நோக்கங்களைத் தெரிந்துகொண்டால், அநாவசியமான கண்டனங்கள் முதலிலேயே ஏற்பட்டு, பல சிக்கல்கள் ஏற்பட காரணமாகிவிடும். தற்பொழுதுள்ள அரசாங்கம் நியமித்துள்ள பல்வேறு கமிட்டிகளைப் பற்றிய விவரங்களைத் தெரிந்துகொள்ள முடியவில்லையெனினும், இதற்கு முன்னால் இருந்த சில அரசாங்கங் களின் கமிட்டிகளையும், அவை எவ்வாறு செயலாற்றின என்பதையும் தெரிந்துகொள்ள முடிகின்றது. அரசாங்கமும், பாராளுமன்றமும் (Government and Parliament) என்ற நூலை எழுதிய மாரிசன் பிரபு (Lord Morrison) தொழிற்கட்சி அரசாங்கங்கள் 1945–51–ல் நியமித்த வாரியங்களைப் பற்றிய முழு விவரங்களையும் எழுதுகிறார்

அப்பொழுது நியமனம் செய்யப்பட்ட பல வாரியங்களும் தொடர்ந்து செயல்படலாம் என்று யூகிக்க இடமுண்டு. அப்பொழுது முக்கியத் துவம் பெற்றிருந்த புனர் அமைப்பு வாரியம் இப்பொழுது செயலாற்ற வேண்டிய அவசியம் இல்லை. இதைப் போன்ற சில வாரியங்களைத் தவிர, மற்ற வாரியங்கள் தொடர்ந்து செயலாற்றக்கூடும். ஏறக்குறைய முப்பது வாரியங்களுக்குமேல் அப்பொழுது செயலாற்றி வந்தன என்று மாரிசன் பிரபு கூறுகிறார். நாட்டிற்குத் தேவையான பல்வேறு திட்டங்களையும், கொள்கைகளையும், இவ்வாரியங்கள் பரிசீலனை செய்து அவைகளின் ஆலோசனைகளைக் கூறி வந்துள்ளன. பாதுகாப்பு வாரியம் பொருளாதாரக் கொள்கைகள் நிர்ணயம் செய்யும் வாரியம், காமன் வெல்த் நாடுகளின் விவகாரங்களைப் பரிசீலனை செய்யும் வாரியம் என்று அரசாங்கத்தின் பல்வேறு துறைகளுக்கும் வாரியங்கள் நியமனம் செய்யப்பட்டிருந்தன. பொதுவாக இந்தக் கேபினட் வாரியங்களுக்குப் பிரதம அமைச்சர் தலைவராக இருப்பார். அப்பொழுது அட்லி ஒரு கேபினட் வாரியங்களுக்குத் தலைவராக இருந்தார் என்று தெரிகின்ற பொழுது, வாரியங்களின் முக்கியத்துவத்தைத் தெரிந்து கொள்ள முடிகின்றது.

கேபினட் சபையின் முக்கியத்துவம் பல காரணங்களைப் பொறுத்துள்ளது. கட்சியின் ஆதரவும், பாராளுமன்றத்தில் அதிக அளவில் பெரும்பான்மையும், இருந்தால் கேபினட் சபையின் நீடிப்பும் அதனால் அதற்கு வலிமையும் ஏற்படுகின்றது. அண்மையில் ஃபிரான்சில் செயலாற்றிய கேபினட்டுகளுக்கு நீடிப்பு மிகவும் குறைவாக இருந்த காரணத்தால், வலிமை இழந்தவைகளாக இருந்தன. பிரிட்டனில் கேபினட் சபை ஐந்து ஆண்டுகள் வரை செயலாற்ற முடியும். ஐந்து ஆண்டு காலம் முடிந்தவுடன் மறு தேர்தல்கள் நிகழ வேண்டும். எதிர்பாராத விதமாக ஏதாவது நெருக்கடி ஏற்படும்பொழுதோ, அல்லது போர் ஏற்படும்பொழுதோ தேர்தல்கள் நிகழ்வது நிறுத்தி வைக்கப்படலாம். இல்லாவிடில் ஐந்து ஆண்டுகள் முடிந்தவுடன் தேர்தல்கள் சட்டப்படி நடந்தாக வேண்டும். சில சமயங்களில் கேபினட் சபையின் ஐந்து ஆண்டு காலம் முடிவ தற்குள், நான்கு ஆண்டுகளிலேயே பாராளுமன்றம் கலைக்கப்படுவதற்குப் பிரதம அமைச்சர் உத்தரவிடலாம். பிரதம அமைச்சர் மேக் மிலான் 1959-ல் இன்னும் ஓராண்டு காலம் முடிவதற்குள் பாராளுமன்றத்தைக் கலைத்துவிட்டார். அவ்விதம் அவர் செய்ய வேண்டிய அவசியம் இல்லையெனினும், அப்பொழுதுள்ள சூழ்நிலை அவருக்குச் சாதகமாக இருந்ததால், அவர் பாராளுமன்றத்தைக் கலைக்க உத்தரவிட்டார். ஓர் அரசாங்கத்தின் பதவி காலம் முடிவடையும் சமயத்தில், இவ்விதமான அரசியல் உபாயத்தை மேற்கொள்ளுவது சட்டப்படி செல்லத்தக்க

தாகும். ஆனால் பாராளுமன்றம் கலைக்கப்பட வேண்டிய அவசியம் இல்லாமலும், அதே சமயத்தில் ஓரளவு கட்சி பெரும்பான்மையும் இருந்தும், குறுகிய காலத்தில், பாராளுமன்றத்தைக் கலைக்க பிரதம அமைச்சர் உத்தரவிட்டால், அந்தச் செய்கையை மிகவும் சந்தேகத்துடன் மக்கள் கவனிப்பார்கள். நல்ல சூழ்நிலை இருக்கும்பொழுது, ஆளும் கட்சி மீண்டும் பெரும்பான்மை பெற வாய்ப்பிருக்கும்பொழுது பாராளுமன்றம் கலைக்கப்படுவது, சில சமயங்களில் மேற்கொள்ளப்படுகின்றது. 1924, 1929-31 ஆகிய ஆண்டுகளில் தொழிற்கட்சியினருக்குப் போதிய பெரும்பான்மை இல்லாத காரணத்தாலும், எதற்கும் லிபரல் கட்சியின் ஆதரவை நம்பியிருக்க நேர்ந்தாலும் பாராளுமன்றம் கலைக்கப்பட்டது. 1950-51-ல் தொழிற்கட்சி ஆட்சியைக் கைப்பற்றிய போதிலும், பாராளுமன்றத்தில் அக்கட்சிக்கு மிகக்குறைந்த பெரும்பான்மையே இருந்தாலும் பிரதம அமைச்சர் அட்லி பாராளுமன்றத்தைக் கலைத்துவிட உத்தரவிட்டார். 1923-ல் கன்சர்வேடிவ் கட்சிக்கும் இதைப் போன்ற நிலை ஏற்பட்டது. இதைப் போன்ற நிகழ்ச்சிகள் எப்பொழுதோ நிகழக்கூடியவை. வழக்கமாக ஆளும் கட்சிக்குப் பெரும்பான்மை இருக்கும்பொழுது, அக்கட்சி முழு பதவி காலத்தையும் அனுபவித்துவிடும்.

தேர்தல்களில் ஒரு கட்சி வெற்றி பெற்று அரசாங்கத்தை நடத்தும் பொறுப்பை மேற்கொண்ட பின்னரும், சில புதிய சிக்கல்கள் அக்கட்சிக்கு ஏற்படுவதுண்டு. ஒரே கட்சியைச் சார்ந்த பாராளுமன்ற உறுப்பினர்களுள் சிலர், கட்சி கட்டுப்பாட்டையும் ஒழுக்கத்தையும் மீறி, அரசாங்கத்திற்கு விரோதமாக வாக்களிப்பதோ, அல்லது வாக்கெடுப்புகளில் பங்கு எடுத்துக் கொள்ளாமல் இருப்பதோ நிகழலாம். அவ்வித நிகழ்ச்சிகள் ஏற்பட்டுள்ளன. 'மாண்புமிகு உறுப்பினர்கள்' (Honourable Members) என்ற நூலை எழுதிய பீட்டர் ரிச்சார்ட்ஸ் (Peter Richards) என்பவர் கட்சிக் கட்டுப்பாடுகளை மீறிய பல நிகழ்ச்சிகளைக் குறிப்பிடுகிறார். 1945-51-ல் தொழிற் கட்சியில் ஒன்பது முறை கட்சி கட்டுப்பாடுகளை மீறியதாகக் குறிப்பிடுகின்றார். கன்சர்வேடிவ் கட்சியிலும் இதைப் போன்ற நிகழ்ச்சிகள் பல உள்ளன. கட்சிக் கொறடாக்கள், அக்கட்சியைச் சேர்ந்த உறுப்பினர்களை, கட்சியின் கட்டுப்பாட்டிற்குள் கொண்டு வர அதிக கவனம் செலுத்த வேண்டும். சில சமயங்களில் கட்சித் தலைவர்கள் ஆணையிடுகின்றபடி வாக்களிக்கத் தவறிவிடுகின்றனர். அதனால், அதைப்போன்ற பாராளுமன்ற உறுப்பினர்களை என்ன செய்வது என்பது அரசியல் கட்சித் தலைவர்களுக்குத் தலைவலியைக் கொடுப்பதாகும். அவர்கள்மீது அளவு கடந்த ஒழுக்க நடவடிக்கைகளை எடுப்பதால் மட்டும் பிரச்சினை தீர்ந்து விடாது. அதனால் கட்சியின் அங்கத்தினர்கள்

எண்ணிக்கை குறைய காரணமாகலாம். உதாரணமாக, 1954–ல் கன்சர்வேடிவ் கட்சியில் கட்சிக் கட்டுப்பாட்டை மீறி, இருபத்தெட்டு உறுப்பினர்கள் 'சூயஸ் கட்சியினர்' (Suez Group) என்ற குழுவைத் திரட்டி நாஸருக்கு (Nasser) அளித்த பல சலுகைகளைக் கண்டித்தனர். 1962, 1963 ஆகிய ஆண்டுகளிலும் கன்சர்வேடிவ் கட்சியில் சில உறுப்பினர்கள் கட்சியின் ஒழுக்கத்தையும் கட்டுப்பாட்டையும் மீறி உள்ளனர். மீண்டும் அவர்களைத் தேர்தல்களில் அக் கட்சியின் வேட்பாளர்களாக நிற்க முடியாமல் செய்வதைத் தவிர கன்சர்வேடிவ் கட்சி வேறு தீவிர நடவடிக்கையை அவர்கள் மீது எடுக்கமுடியவில்லை. அவர்கள் தொடர்ந்து அக் கட்சியில் உறுப்பினர்களாகத் தான் இருக்கிறார்கள். அதனால் ஒரு சில உறுப்பினர்களின் தனிப்பட்ட கருத்துகளை அக் கட்சி கண்டும் காணாமலும் இருந்து வருகிறது. அவர்களையெல்லாம் மிரட்டி பணியவைப்பதைக் காட்டிலும், தன்மையாகக் கட்சிக் கொள்கைகளையும், அதன் ஒழுக்கத்தையும் எடுத்துக்கூறி ஒழுங்குக்குக் கொண்டு வருவதே முறையாகும். அதற்காகத் தான் அரசியல் கட்சிகள் தனிப்பட்ட வகையில் கட்சிக் கூட்டங்களைக் கூட்டி அக் கட்சியிலுள்ள உறுப்பினர்களின் அபிப்பிராயங்களைத் தெரிந்து கொள்ளுகின்றது. கட்சித் தலைவர் தனிப்பட்டவர்களின் கருத்து வேறுபாடுகளைத் தெரிந்து கொண்டு, அதற்கேற்பமுடிவுகளையும் எடுக்கின்றனர். ஒரு கட்சியிலுள்ள உறுப்பினர்களிடையே கருத்து வேறுபாடுகள் தோன்றினால், அக்கருத்து வேறுபாடுகளை கட்சிக் கூட்டங்களிலேயே தீர்த்துக் கொள்ளுவது நல்லது. தலைவர்களுக்கும், உறுப்பினர்களுக்கும் நல்ல தொடர்பு இருத்தல் அவசியம்.

(1) ஒரு கட்சியின் கட்டுப்பாடும் ஒழுக்கமும் அக்கட்சியின் கேபினட்டிற்கு வலிமையைத் தரும். சில சமயங்களில் அரசாங்கத்திற்கு ஆபத்தில்லையென்ற அளவிற்கு போதியபெரும்பான்மை இருக்கும்பொழுது, கட்சியை சேர்ந்த சில உறுப்பினர் அரசாங்கக் கொள்கைகளைக் கண்டிப்பதும் உண்டு. 2 முக்கியமான கொள்கையில் அரசாங்கத்திற்குப் பாராளுமன்றத்தில் தோல்வி ஏற்பட்டதென்றால் கேபினட் சபை ராஜிநாமா செய்ய வேண்டும் என்ற முறை இருப்பது கேபினட்டிற்கு வலிமையை ஏற்படுத்துவதாகும். 3 ஒரு கட்சியைச் சார்ந்த சில உறுப்பினர் அரசாங்கக் கொள்கைகளில் அதிருப்தியுடையவர்களாக இருந்த போதிலும் அதை வெளியே காட்டமாட்டார்கள். ஏனெனில் அவ்விதம்வெளிப்படையாக எதிர்ப்புகளைக் காண்பிப்பதால் அவர்கள் 4 தங்களது அரசாங்கத்தையே தோல்வியுற முற்பட்டவர்களாகிவிடுவர். அவ்விதம் செய்வது அவர்களுக்கு நன்மை அளிக்காது. ஏனெனில் பாராளுமன்றம் கலைக்கப்பட்டால், மீண்டும் அவர்கள் பாராளுமன்ற உறுப்பினர்களாக வருவது சந்தேகமேயாகும். அதனால் பல உறுப்பினர்களும்,

அவர்களுடைய கட்சிகளின் கருத்து வேறுபாடுகள் தோன்றினாலும் அவற்றைப் பொறுத்துக்கொண்டு கட்சியின் கட்டுப்பாடுகளுக்கு அடங்கியவர்களாகவே இருப்பார்கள். அப்பொழுது தான், அவர்களும் அரசியலில் நீடித்திருக்க முடியும். இல்லையெனில் அவர்களது அரசியல் எதிர்காலத்திற்கு ஒரு முடிவு ஏற்பட்டு விடும்.

கட்சிக்கட்டுப்பாடுகளைப் புறக்கணித்து விட்டு சில உறுப்பினர் அரசாங்கக் கொள்கைகளுக்கு எதிராக வாக்களித்த நிகழ்ச்சிகளும் உண்டு. அப்பேர்பட்ட உறுப்பினர்கள் அவர்களுடைய தனிப்பட்ட கருத்துகளை விட்டுக் கொடுக்க விரும்புவதில்லை. இந்தியாவிற்கு சுயாட்சிக் கொடுக்கலாம் என்ற கன்சர்வேடிவ் கட்சியின் அரசாங்கக் கொள்கையை எதிர்த்து செல்வாக்கு மிக்க பல கன்சர்வேடிவ் கட்சி உறுப்பினர்கள் வாக்களித்தனர். அதைப்போன்று, எகிப்தைப் பற்றிய அரசாங்கக் கொள்கைக்கு 1954-ல் கன்சர்வேடிவ் கட்சியிலேயே நிறைய எதிர்ப்பு இருந்தது. ஆனால் இவை போன்ற நிகழ்ச்சிகள் விதி விலக்குகளாகும். சாதாரணமாக அரசாங்கக் கொள்கைகளுக்கு, ஆளும் கட்சியின் உறுப்பினர்களிடையே முழு ஒற்றுமை இருக்கும் என்ற உறுதியான நம்பிக்கை கேபினட்டிற்கு உள்ளது. ஆனால், அண்மையில் கேபினட் அமைச்சர்களின் ஆதிக்கம் அதிகமாக வளர்ந்து வந்துள்ளது என்ற காரணத்தால், கட்சியிலே அவர்களது ஆதிக்கத்தைக் குறைக்க வேண்டுமென்றும், கட்சி உறுப்பினர்களின் கருத்து வேறுபாடுகளை அமைச்சர்கள் மதிக்கத் தெரிந்து கொள்ள வேண்டுமென்றும் பொதுவான அபிப்ராயம் அதிகரித்து வருகின்றது.

ஒரு கட்சியின் ஒற்றுமைக்கு அக் கட்சியின் ஒழுக்கமும் கட்டுப்பாடும் மிகவும் அவசியமாகத் தேவைப்படுகின்றன. அதைப்போன்று கேபினட் சபையின் ஒற்றுமைக்கு, அந்த கேபினட் சபை அமைச்சர்களின் கூட்டுப் பொறுப்பு (Collective Responsiblity) மிகவும் தேவைப்படுகின்றது. தனிப்பட்ட வகையில் அமைச்சர்களிடையே அரசாங்கக் கொள்கைகளைப் பற்றி கருத்து வேறுபாடுகள் இருக்கலாம். ஆனால் பாராளுமன்ற விவாதங்களில் அவர்களுடைய கருத்து வேறுபாடுகளை வெளிக்காட்டினால் அதனால் அவர்களுடைய அரசாங்கத்திற்கே அபாயம் ஏற்படலாம். கேபினட் சபையில் பிளவு ஏற்பட்டதென்றால் அக் கட்சியிலும் உறுதியாக பிளவு ஏற்படும். ஓர் ஆளும் கட்சியில் பிளவு ஏற்பட்டால், அக் கட்சித் தொடர்ந்து ஆட்சி பீடத்தில் இருப்பது கடினமாகும். 1902–1905-ல் பேல்ஃபோர் அரசாங்கத்தில் (Balfour Government) ஆங்கிலேயத் தொழிற்சாலைகளுக்குப் பாதுகாப்பு அளிக்கும் விவகாரத்தில் அமைச்சர்களிடையே கருத்து வேறுபாடுகள் தோன்றின. அதனால் கன்சர்வேடிவ் கட்சி அரசாங்கத்தை

நடத்துவதே கடினமாகி விட்டது. கேபினட் சபையில் எடுக்கப்படும் முடிவுகளுக்கு எல்லா அமைச்சர்களின் ஆதரவும் முக்கியமாகத் தேவைபடுகின்றது. கேபினட் சபை முடிவுகளுக்குச் சில அமைச்சர்கள் ஆதரவு அளிக்க முடியவில்லையெனில், அவர்கள் பதவியை விட்டு விலக வேண்டும். அவர்களுடைய கோட்பாடுகளை விட்டுக் கொடுக்க இயலாத அமைச்சர்கள் அவர்களுடைய பதவிகளை ராஜிநாமா செய்வதே நல்லதாகும். 1932-ல், தேசிய அரசாங்கத்தின் பொருளாதாரக் கொள்கையை ஏற்றுக்கொள்ள முடியாததால், ஸ்நோடன் பிரபுவும் (Lord Snowden) சர் ஹெர்பர்ட் சேம்வேல் (Sir Herbret Samuel) என்பவரும் அமைச்சர்கள் பதவிகளை விட்டு விலகினர். அரசாங்கத்தின் இராணுவக் கொள்கையில் கருத்து வேறுபாடு ஏற்பட்டதால், 1951-ல் தொழிற்கட்சி அரசாங்கத்திலிருந்து பெவான் (Bevan) என்பவர் பதவியை விட்டு விலகினர். அவர்களுடைய அடிப்படைக் கோட்பாடுகளில் தீவிர நம்பிக்கை வைத்திருந்ததால், அவர்கள் பதவிகளை வேண்டுமென்றால் விட்டுவிடத் தயாராக இருந்தனரே தவிர கேபினட் முடிவுகளை ஏற்றுக்கொள்ள விரும்பவில்லை. சில அடிப்படை கோட்பாடுகளைத் தவிர சாதாரண கருத்து வேறுபாடுகள் அமைச்சர்களிடைய தோன்றினால், வழக்கமாக அவற்றைச் சரி செய்து விடுவர் முடியவில்லையென்கிற பொழுதுதான் அமைச்சர்கள் ராஜிநாமா செய்ய நேரிடுகின்றது. ஆளும் கட்சியிலே கட்டுப்பாடு சீர்குலைந்து விட்டால், எதிர்கட்சி அரசாங்கத்தை ஏற்று நடத்த ஒரு வாய்ப்பை எதிர்பார்த்துக்கொண்டே இருக்கிறது. அதனால் ஆளும் கட்சியில் உள்ள ஒழுக்கத்தையும் கட்டுப்பாட்டையும் அவர்கள் எவ்வாறேனும் பாதுகாத்துக் கொள்கின்றனர்.

பிரிட்டனில் பாராளுமன்றச் சட்டங்கள் மிகவும் சக்தி வாய்ந்தவையாகும். அந்தச் சட்டங்கள் மூலமாக எதை வேண்டுமென்றாலும் பாராளுமன்றம் சாதிக்கலாம். அதனால் அச் சட்டங்களை உருவாக்கும் கேபினட்டிற்கு இன்னும் ஆதிக்கம் அதிகமாகின்றது. ஆங்கிலேய பாராளுமன்றத்தில் இயற்றப்பெற்றச் சட்டங்கள் எவ்வளவு அருவருக்கத்தக்கவையாக இருந்தாலும், மக்களின் உரிமைகளைப் பறிப்பவையாக இருந்தாலும், அச் சட்டங்களை ரத்து செய்ய வேறு எந்த நிறுவனத்திற்கும் அதிகாரம் கிடையாது. அச் சட்டங்கள் செல்லாதவை என்று கூற ஆங்கிலேய நீதிமன்றத்திற்கு அதிகாரம் இல்லை. தவிர, பிரிட்டனில் குறிப்பிட்ட அரசியல் அமைப்பு என்று எதுவும் இல்லாததால், பாராளுமன்றத்தில் இயற்றப்படும் சட்டங்கள், எந்த வரையறைக்குள்ளும் வருவதில்லை. ஆங்கிலேய மக்களின் சில அடிப்படை உரிமைகள் ஏற்கனவே, பல்வேறு சமயங்களில் இயற்றப்பட்ட சில பாராளுமன்றச் சட்டங்களால், அதாவது, பேருரிமைப் பட்டயம், ஆளுரிமைக் காப்புச்

சட்டம், மக்கள் பிரதிநிதித்துவச் சட்டம் போன்ற சட்டங்களைப் பாராளுமன்றம் ஒரே அடியாக ரத்து செய்யக் கூடிய அளவிற்கு அதிகாரம் பெற்றுள்ளது. இதுவரை அச் சட்டங்களைப் பாதுகாத்து வந்திருக்கிறது என்பதைப் பார்க்கும் பொழுது பாராளுமன்றம் கூட, பொதுமக்களின் உணர்ச்சிகளை மதித்து, சட்டங்களை இயற்ற வேண்டும் அல்லது, அவர்களது எதிர்ப்பைப் பெற வேண்டுமென்பதை நன்கு உணர்ந்து தான் உள்ளது. இப்பொழுது பாராளுமன்றத்தில் இயற்றப் படும் சட்டங்கள் கேபினட்டின் கொள்கைகளைப் பிரதிபலிக்கின்றன என்பதில் எவ்வித ஐயப்பாடும் இல்லை. அதனால் கேபினட் நினைத்தால், ஒரு சர்வாதிகார ஆட்சியை பிரிட்டனில் கொண்டு வரமுடியும். ஆனால் அதற்குப் பின்னர் கேபினட், மக்கள் எதிர்ப்பின் முன் நிலை நிற்குமா என்பது வேறு.

ஆனால் அண்மையில் கேபினட்டின் கொள்கைகள் பெரும்பாலும் பாமர மக்களின் நலன்களையொட்டி வளர்ச்சி அடைந்துள்ள சில அரசியல் கோட்பாடுகளுக்கு ஏற்ப உருவாக்கப்பட்டு வருவதால், அரசாங்கத்தின் சர்வாதிகாரப் போக்கு வளர்ச்சியுறுவதற்கு வாய்ப்புகள் இல்லாமல் இல்லை. தொழிலாளர் நலன்களை அரசாங்கம் பாதுகாக்க முன்வரும் பொழுது சில சமதர்மக்கருத்துகள் இடம்பெறச்செய்கின்றன. இதற்கு முன்னர், பெரும்பான்மையான மக்கள் வாக்குரிமை பெற்றிருக்க வில்லை. மக்கள் பிரதிநிதித்துவ சட்டங்கள் இயற்றப்பட்டதற்கு பின்னர், வயது வந்தோர் அனைவரும் வாக்குரிமை பெற்றுவிட்டதால், அரசாங்கம் அதன் கவனத்தை தொழிலாளர் நலன்களில் செலுத்துவதில் ஆச்சரியம் ஒன்றுமில்லை. இதற்கு முன்னர் அரசாங்கம் பின்பற்றிவந்த தலையிடாக் கொள்கை (Laissez - Faire) காலாவதியாகிவிட்ட கொள்கையாகும். மக்களின் நலன்களைக் கருதி, இப்பொழுது அரசாங்கம் எல்லா துறைகளிலும் தலையிட நேரிடுகின்றது. பல தொழிற்சாலைகள் தேசியமாக்கப்படுதல், பல பொருளாதாரத் திட்டங் களை உருவாக்குதல், சம சந்தர்ப்பங்களை மக்களுக்கு அளித்தல், வேலை வாய்ப்புகளை ஏற்படுத்திக் கொடுத்தல் ஆகிய புதிய கொள்கைகளைக் கேபினட் உருவாக்குகின்றபொழுது, அதன் ஆதிக்கம் படிப்படியாக அதிகரித்துக் கொண்டே வருகின்றது. கேபினட் சபை, பாராளு மன்றத்திற்குக் கட்டுப்பட்டதாக இருந்த போதிலும், நிர்வாகப் பொறுப்பை அது ஏற்றுள்ளதால் காலத்திற்கு ஏற்பவும், மக்கள் விருப்பத்திற்கு ஏற்பவும் சில நடவடிக்கைகளை, உடனடியாக எடுக்க நேரிடுகின்றது. கேபினட்டிற்கு இப்பொழுது மிக அதிகமான பொறுப்புகள் ஏற்பட்டு விட்டன. கேபினட்டின் ஒவ்வொரு முடிவை யும் பாராளுமன்றப் பரிசீலனைக்கு அனுப்புவது காலதாமதத்தை ஏற்படுத்துகின்றது. அதனால் நிர்வாக அதிகாரங்களைச் செலுத்துகின்ற

பல நிறுவனங்கள் மூலமாக, கேபினட்டின் கொள்கைகள் செயலாற்றப் படுகின்றன. அவையெல்லாம் பாராளுமன்றத்தின் நேரடியான கண்காணிப்பில் வருவதில்லை. ஆனால் பாராளுமன்ற உறுப்பினர்கள் கேபினட்டின் நிர்வாக முடிவுகளை பாராளுமன்றத்தில் விவாதிக்க உரிமைப் பெற்றுள்ளனர். அடிக்கடி பாராளுமன்றம் நிர்வாக விவகாரங்களில் தலையிடுவது, ஆட்சிக்குத் தடையாக இருப்பதால், பல சாதாரண நிர்வாக நடைமுறைகள் கேபினட்டின் விருப்பத்திற் கேற்பவே செயலாற்றப்படுகின்றன.

நிர்வாக முடிவுகளைச் செயலாற்ற அரசாங்க அதிகாரிகள் உள்ளனர். பாராளுமன்ற நடைமுறையின்படி, ஓரளவிற்கு நிர்வாக உத்தரவுகளைப் பரிசீலனை செய்ய மக்கள் சபையும், மற்றும் பிரபுக்கள் சபை, மக்கள் சபை ஆகிய சபைகளிலிருந்து தேர்ந்தெடுக்கப் பட்ட சில சிறப்பான வாரியங்களும் (Sellect Committees) நிறுவப் பட்டுள்ளன. ஒவ்வொரு நிர்வாக முடிவையும் பாராளுமன்றம் கவனித்துக் கொண்டிருக்க முடியாது. அரசாங்கத்திலுள்ள சிவில் அதிகாரியிடம், இந்தப் பொறுப்பு அளிக்கப்பட்டுள்ளது. பொதுப் படையான பாராளுமன்ற கண்காணிப்பு மட்டுமே, நடைமுறையில் இருக்கும். முக்கியமான கொள்கைகளை மட்டும், கேபினட், பாராளு மன்றத்தின் பரிசீலனைக்குக் கொண்டுவரும். இல்லாவிடில் கேபினட் டின் மீது அதிக எதிர்ப்பு வளர்ந்துவிடும்.

காலதாமதம் அதிக அளவில் ஏற்பட்டால், அரசாங்கத்தின் அன்றாட வேலைகள் தடைபடும். பாராளுமன்றப் பணிகளுக்கும் இது பொருந்தும். பயனற்ற விவாதங்களில் ஒவ்வொரு மசோதாவையும் ஈடுபடுத்திக் கொண்டு வந்தால் அதற்கு ஒரு முடிவே இல்லாமல் போய் விடும். அதனால் விவாதங்களைக் குறுக்குவதற்குப் பாராளுமன்றம் சில முறைகளைப் பின்பற்றுகின்றது. உதாரணமாக ஒரு மசோதாவிற்கு நூறு அங்கத்தினர்களுக்கு மேல் ஆதரவு அளித்தால், அந்த மசோதாவைப் பற்றிய மேற்கொண்டு விவாதம் செய்யாமல், அதை ஏற்றுக்கொள்ளுதல் என்பது ஒரு முறை. இதற்கு 'முடிவுகட்டுதல் முறை' (Closure Motion) என்று கூறுவர். பாராளுமன்றத்தில் மசோதா கடந்து செல்லும் ஒவ்வொரு கட்டத்திற்கும் அரசாங்கம் ஒரு குறிப்பிட்ட காலவரையை ஏற்படுத்தும் முறையை 'கில்லோடின் முறை' (Guillotine Procedure) என்று கூறுவர். அதன்படி, மசோதாக்களை ஒரு குறிப்பிட்ட காலத்திற்குள் நிறைவேற்றுவது, கட்டாயமாகும். இம்முறை காலதாமதத்தைத் தடுக்கிறது. மசோதாக் களைப் பரிசீலனை செய்ய பல வாரியங்களைப் பாராளுமன்றம் நிறுவும். ஒவ்வொரு வாரியத்திலிருந்தும், மசோதாவைப் பற்றிய பல திருத்தங்கள்

வரும். நிலையான வாரியத் (Standing Committee) தலைவர், முக்கிய மான திருத்தங்களை மட்டும் எடுத்துக் கொண்டு, மற்ற திருத்தங் களை நிராகரிக்கும் முறையை, 'கங்காரு முறை' (Kangaroo Procedure) என்று கூறுவர். காலதாமதத்தைத் தவிர்ப்பதற்காக இந்த முறைகளை அரசாங்கம் எல்லா மசோதாக்களுக்கும் பின்பற்றினால் அரசாங்கம் எதேச்சாதிகார ஆட்சியை நடத்துகின்றது என்ற இழிச் சொல் ஏற்பட வாய்ப்புண்டு. இந்த முறைகளை ஒழுங்காக, வேறு உள்நோக்கமின்றி, காலதாமதத்தைத் தவிர்ப்பதற்கு மட்டும் பயன் படுத்துவதால் அரசாங்கத்தின் முடிவுகள் விரைவில் செயலாற்றப்படும். கேபினட்டின் நிர்வாகப்பொறுப்புகள் மிகவும் வளர்ந்துவருவதைப் பார்த் தால் காலதாமதமின்றி அவற்றைச் செயலாற்றும் கடமையும் கேபினட் டிற்கு ஏற்பட்டுள்ளது. அதற்காக அதிக அதிகாரங்களைக் கேபினட் டிற்கு கொடுக்க முடியுமா? எனில் முடியும். அப்படி அதிக அதிகாரங் களை கொடுத்துவிடுவதாலோ, அல்லது கேபினட்டே பயன்படுத்திக் கொள்வதாலோ நாளடைவில் கேபினட் மிகவும் பலம் பொருந்திய நிர்வாக நிறுவனமாக மாறிவருகின்றது. கேபினட் பலம் பொருந்திய நிர்வாக நிறுவனமாக மாறி வந்தாலும் கூட, இறுதியில் கேபினட் சபை, பாராளுமன்றத்திற்கும், பின்னர் மக்களுக்கும் பொறுப்புள்ளதாக நடந்துகொள்ள வேண்டிய அவசியத்தையும் உணர்ந்துதான் செயல் படுகின்றது.

முன்னர் இருந்ததைப் போன்று பிரிட்டனிலும் கூட, தனிப்பட்ட மக்களின் உரிமைகள் அவ்வளவு பாதுகாப்பாக இருக்கின்றன என்று கூறுவதற்கில்லை. இந்த நிலையில் கேபினட்டின் அதிகாரங்கள் எப்படி வரையறுக்கப் பெற்றிருக்கின்றன என்பதைப் பரிசீலனை செய்ய வேண்டும். கேபினட்டிற்கும் மேலாக எந்த நிறுவனம் நாட்டில் அதிக அதிகாரம் பெற்றுள்ளது? மன்னரிடத்தில் உறுதி யாக அந்த அதிகாரம் காணப்படவில்லை. மன்னருக்கும் அரசாங்கத் திற்கும் கருத்து வேறுபாடு தோன்றினால், மன்னர்தான் பணிந்து போக வேண்டுமென்பதை, எட்டாம் எட்வார்ட் (Edward VIII) பட்டத்தைத் துறக்க நேரிட்ட நிகழ்ச்சியிலிருந்து தெரிகிறது. அதினால் கேபினட்டிற்குத்தான் அதிக அதிகாரம் இருப்பதாகத் தோன்றுகிறது. பாராளுமன்றத்தைக் கலைக்க வேண்டுமென்று பிரதம அமைச்சர் விரும்பினால் கேபினட் சபை பாராளுமன்றத்தைக் கலைத்து விட உத்தரவிடுகின்றது. ஆனால் அதே சமயத்தில், கேபினட்டைப் பதவியிலிருந்து விலக்க வேண்டுமென்றால் பாராளுமன்றத்தில் கேபினட்டின் மீது நம்பிக்கையில்லாத தீர்மானத்தை நிறைவேற்றினால் போதும், அந்த கேபினட்டின் அதிகாரம் முற்றுப் பெறுகின்றது. கூட்டாக அது கலைந்து விடுகின்றது. கேபினட் சபை பாராளு

மன்றத்தைக் கலைக்க முற்படும் போது அது தன்னைத் தான் கலைத்துக் கொள்ள வேண்டிய கட்டாயம் ஏற்படுகின்றது. அப்பொழுது பொதுத் தேர்தல்கள் அவசியமாகின்றன. ஆனால் நம்பிக்கையில்லாத் தீர்மானத்தைப் பாராளுமன்றம் அமைச்சரவை மீது கொண்டு வந்து, அது நிறைவேற்றப்பட்டால், உடனடியாகப் பொது தேர்தல்களை நடத்த வேண்டிய அவசியம் இல்லை. ஏனெனில் நம்பிக்கையில்லாத தீர்மானத்தை அரசாங்கத்தின் மீது கொண்டு வந்து அதை வெற்றி கரமாக நிறைவேற்றிய அரசியல் கட்சி, அமைச்சரவையை அமைத்து அரசாங்கத்தை நடத்த முடியும். ஆனால் போர்க் காலத்தைத் தவிர, வழக்கமாக ஓர் அரசாங்கம் பதவியிலிருந்து அகற்றப்பட்டால், பொது தேர்தல்கள் நடத்தப்படுவது தவிர்க்க முடியாததாகின்றது. எடுத்துக் காட்டாக, 1905, 1922 ஆகிய ஆண்டுகளில் அரசாங்கம் தோற்கடிக்கப்பட்ட பொழுது, பொதுத் தேர்தல்களை நடத்த வேண்டிய அவசியம் ஏற்பட்டது. அதனால், நாட்டின் முக்கியமான அதிகாரம், மன்னரிடத்திலோ, அல்லது பாராளுமன்றத்திலோ, அல்லது கேபினட்டிலோ இல்லை. அதிகாரம் வாக்காளர்களிடத்தில்தான் இருக்கின்றது. இதை மறுப்பதற்கில்லை.

பொது மக்கள் அபிப்ராயமும் கேபினட்டின் கொள்கைகளை உருவாக்குவதற்குப் பயனுடையதாக உள்ளது. ஆனால் கேபினட்டின் கொள்கைகள் அனைத்தும் பொது மக்கள் அபிப்பிராயத்தை அடிப்படையாகக் கொண்டுள்ளன என்று கூறுவதற்கில்லை. கேபினட்டின் கொள்கைகளுக்கு ஏற்ப, பொது மக்களின் அபிப்பிராயமும் மாற்றி அமைக்கப்படுவதும் உண்டு. இந்தக் குழப்பம் ஏன் ஏற்படுகிறதென்றால், பொதுமக்கள் அபிப்பிராயம் என்பதை சரியானபடி அளவிடுதல் கடினமாக உள்ளது. அரசில்ய கட்சிகளின் அபிப்பிராயங்கள், ஒரு சில தலைவர்களின் அபிப்பிராயங்களாகவே இருக்கின்றன. பத்திரிகைகள் பொது மக்கள் அபிப்பிராயத்தைக் கூறும்பொழுது, அவை பெரும்பாலும் அந்தப் பத்திரிகை ஆசிரியர்களின் அபிப்பிராயங்களாகவே உள்ளன. இவர்களுடைய அபிப்பிராயங்களை மட்டும் ஏற்றுக் கொண்டு, அவையே மக்கள் அபிப்பிராயம் என்று கூறுவதற்கில்லை. அமைச்சர்கள் அபிப்பிராயங்களை உருவாக்குவதும் வழக்கத்தில் உள்ளது ஆனால் மக்களுக்கு அதிருப்தி தரும் அளவில் அமைச்சர்களின் கொள்கைகள் உருவாக்கப்படுமெனில், அமைச்சர்கள் மக்களின் விருப்பத்தை ஏற்றுக் கொள்ளுதல் நல்லது. அதனால் கேபினட்டின் அதிகாரங்களை மக்கள் அபிப்பிராயமும் கட்டுப்படுத்தத்தான் செய்கின்றது.

கேபினட்டில் இல்லாத அக் கட்சியைச் சார்ந்த சாதாரண பாராளுமன்ற உறுப்பினர்கள் மன்றத்தின் பின்னால் உட்கார்ந்திருப்பதால் மட்டும் அவர்களுக்குச் செல்வாக்கு இல்லையென்றோ, அல்லது

கேபினட் கொள்கைகளை அவர்கள் கண்டிக்க மாட்டார்கள் என்றே கூறுவதற்கில்லை. ஏனெனில் அவர்களும் அந்த அரசியல் கட்சியைச் சார்ந்த பிரமுகர்களே ஆவர். அவர்கள் கட்சியில் பிளவை ஏற்படுத்த வல்லவர்கள். அதனால் கேபினட்டிற்கு ஆட்டத்தையும் அதிர்ச்சியையும் தரத் தக்கவர்கள். அவர்களுடைய கருத்துகளுக்கும் அமைச்சர்கள் செவிசாய்த்தல் நல்லதாகும். பின்னால் வீற்றிருக்கும் கட்சி உறுப்பினர்களால் என்ன சாதித்துவிட முடியும் என்ற கேள்வி அமைச்சர்களின் இறுமாப்பைக் காட்டும். அவர்களுடைய கருத்துகளுக்கு மதிப்பு கொடுக்கப்படவில்லையெனில், அவர்களால் கட்சியில் பிளவு ஏற்படக்கூடும்; அவர்களால் கட்சி விட்டு கட்சி மாறி, அமைச்சரவைக்கே ஆட்டத்தைக் கொடுக்க முடியும்; அவர்களால் மக்கள் அபிப்பிராயத்தைத் திரட்டி, பெரிய எதிர்ப்பையும் கொடுக்க முடியும்.

தன்னலத்தை நாடுகின்ற சில செல்வாக்கு மிக்க குடும்பங்களும் கழகங்களும் நாட்டில் இருக்கின்றன. (Special Interest Groups) உதாரணமாக, தொழிற் சங்கங்கள் (1) (Trade Unions) வர்த்தகச் சங்கங்கள் (2) (Chambers of Commerce) மற்றும் இவைபோன்ற எண்ணற்ற கழகங்கள் நிறுவப்பட்டுள்ளன. அந்தக் கழகங்களின் ஒரு பணி, அரசாங்கத்திடமிருந்து அச் சங்கங்களுக்கு போதிய சிறப்பான சலுகைகளைப் பெறுவதாகும்; அல்லது அமைச்சர்கள் அவைகளின் நலன்களைப் பாதிக்காமல் கொள்கைகளை நிர்ணயம் செய்து கொள்ள வேண்டுமென்பதாகும். அப்பேர்ப்பட்ட தன்னலம் கருதும் சிறப்பான கழகங்களின் நலன்கள் பாதிக்கப்படாமல் கேபினட் சில சமயங்களில் கொள்கைகளை உருவாக்க நேரிடுகின்றது. ஆனால் ஒரு சிலரின் நலன்களுக்காக, நாட்டின் பொதுப்படையான நலன்களுக்கு தீமை விளைவிப்பது, கேபினட்டிற்கு அபாயத்தைத் தேடிக் கொள்வதாகும்.

எல்லாவற்றைக் காட்டிலும் அமைச்சவைக்குப் பெரிய தலைவலியைக் கொடுப்பது பாராளுமன்றத்திலுள்ள எதிர் கட்சியாகும். அதுவும் அரசாங்கம் மதிற்மேல் பூனையாகப் பாராளுமன்றத்தில் குறுகிய பெரும்பான்மையைப் பெற்றிருந்தால், அரசாங்கம் கவிழ்க்கப்படும் அபாயம் எப்பொழுதும் காத்துக்கொண்டிருக்கும். அச் சமயத்தில் எதிர் கட்சி ஆளும் கட்சியாக மாறுவது உண்டு. அதனால் பலமிக்க எதிர் கட்சியின் கருத்துகளைப் புறக்கணித்து அரசாங்கம் அலட்சிய மனப்பான்மையுடன் இருக்க முடியாது. பலமிக்க எதிர்க் கட்சியின், தாக்குதல்கள் மக்களின் ஒரு பகுதியினரது அபிப்பிராயத்தைப் பிரதிபலிக்கின்றது.

மேற்கூறிய பல காரணங்களால் கேபினட் சிறிது விழிப்பாக இருந்து மக்கள் அபிப்பிராயத்தையும், எதிர் கட்சியின் அபிப்பிராயத்தை

யும், மதித்தல் நல்லது. ஆனால் கேபினட் சபை உறுதியாக அதனுடைய கொள்கைகளை நிறைவேற்றும்பொழுது, பல எதிர்ப்புகளை அது அலட்சியம் செய்து, தன்னுடைய ஆதிக்கத்தைச் செலுத்தத்தான் செய்கின்றது. ஆங்கிலேய அரசியல் அமைப்பில் கேபினட் சபை மிக முக்கியமான தகுதியையும் அதிகாரத்தையும் பெறுகின்றது. கேபினட் எனும் அச்சாணியின் மீதே பிரிட்டிஷ் நிர்வாக அரசாங்கம் எனும் சக்கரமானது சுழன்று வருகின்றது.

## பிரதம அமைச்சரும் கேபினட் சபையும்

கேபினட் சபையிலுள்ள எல்லா அமைச்சர்களுக்கும் தலைவராக உள்ளவர் பிரதம அமைச்சர் ஆவார். அதனால் மற்ற அமைச்சர்கள் பிரதம அமைச்சரைக் காட்டிலும் தகுதியில் குறைந்தவர்கள் அல்லர். பிரதம அமைச்சர், மற்ற சக அமைச்சர்களுக்கு முதன்மையாக இருக்கிறார். அதனால் அவருடைய அதிகாரங்களும், பொறுப்புகளும்கூட மிக அதிகமாக உள்ளன.

பிரதம அமைச்சராக நியமனம் செய்யப்படுவதற்கு, ஒருவருக்கு முதலில் கட்சியில் மிகுந்த செல்வாக்கு வேண்டும். அதனால் அவருக்கு ஆதரவாளர்களும் அதிகமாக இருக்க வேண்டும். அவருடைய ஆளுமையைத் தவிர, அவருக்கு அரசியல் அனுபவமும், திறமையும், அரசாங்கத்தை நடத்தும் சாதுரியமும், மிக முக்கியமாக வேண்டும். ஒரு பிரதம அமைச்சர் நியமனம் செய்யப்பட்டதற்குப் பின்னர், அவர் மற்ற அமைச்சர்களைத் தேர்ந்தெடுக்க வேண்டும். பிரதம அமைச்சர் மற்ற அமைச்சர்களைத் தேர்ந்தெடுக்கும் முறைகளைப் பற்றி முன்னரே பார்த்தோம். கட்சி செல்வாக்கும், ஆதரவும் தவிர, இயல்பான திறமை, சாதுரியம் ஆகிய இயல்புகளைக் கொண்ட அமைச்சர்களை அவர் நியமனம் செய்வார். மற்ற அமைச்சர்களை நியமனம் செய்த பின்னர், அவர்களுக்குப் பல பொறுப்புகளைப் பகிர்ந்தளிக்க வேண்டும். மற்ற அமைச்சர்களின் சிறப்பான திறமைகளையும், அனுபவங்களையும் மனதில் கொண்டு, அவர்களுக்குப் பொறுப்புகள் பகிர்ந்தளிக்கப்படும். பிரதம அமைச்சருக்கு, அமைச்சர்களைத் தேர்ந்தெடுப்பது எவ்வளவு சிக்கலான பணியோ, அதைப்போன்றது தான் அவர்களுக்குப் பல துறைகளைப் பகிர்ந்தளிப்பதும். பிறகு பிரதம அமைச்சர் கேபினட் வாரியங்களை நியமனம் செய்வார். ஒவ்வொரு வாரியத்துக்கும் ஒவ்வொரு தலைவரையும் நியமனம் செய்வார். எவ்வளவு வாரியங்களை நியமனம் செய்வார் என்பது பிரதம அமைச்சரின் விருப்பத்தைப் பொறுத்துள்ளது. தவிர, பிரதம அமைச்சரே, சில கேபினட் வாரியங்களில் தலைமை வகிக்க நேரிடும். எத்தனை

கேபினட் வாரியங்கள் நியமனம் செய்யப்பட்டுள்ளன, அவை எப்படி செயலாற்றப்பட வேண்டுமென்பது இரகசியமாகவே வைத்துக் கொள்ளப்படும். ஒரு பிரதம அமைச்சர் பல வாரியங்களிலும் பங்கெடுத்துக் கொள்வார். உதாரணமாக, பிரதம அமைச்சராக அட்லி (Attlee) 1945–51 ஆண்டுகளில் பணியாற்றும்பொழுது அவர், காமன்வெல்த் விவகார வாரியத்திலும் (Committee, for Common Wealth Affairs) தூர கிழக்கு விவகார வாரியத்திலும் (Far Eastern Affairs) பொருளாதாரக் கொள்கைகளை நிர்ணயம் செய்யும் வாரியத்திலும் (Economic Policy) மற்றும் வீடு கட்டும் விவகாரங்கள், தேசிய பொது சுகாதாரம், உணவுப் பொருள்கள், இந்திய விவகாரங்கள் ஆகியவை பற்றிய வாரியங்களிலும் தலைவராகப் பணியாற்றியுள்ளார். எல்லா வாரியங்களிலும் அவரால் பங்கெடுத்துக் கொள்ளுதல், அல்லது தலைமை தாங்குதல், அவருக்குள்ள பல அலுவல்கள் காரணமாக, முடியாமல் போகின்றது.

கேபினட் கூட்டங்களை பிரதம அமைச்சர் அடிக்கடி கூட்ட வேண்டும். பிரதம அமைச்சருக்கு உதவி புரிய தனிப்பட்ட கேபினட் அலுவலகம் நிறுவப்பட்டுள்ளது. இந்த அலுவலகம் பிரதம அமைச்சரின் துறையைச் சார்ந்ததாகும். இந்த அலுவலகத்தில், அன்றாட பிரதம அமைச்சரின் பொறுப்புகள் நிறைவேற்றப்படும். பொருளாதாரத் திட்டங்களையும், மற்ற அரசாங்கக் கொள்கைகளையும் நிர்ணயம் செய்வதற்கு வேண்டிய பல புள்ளி விவகாரங்களைச் சேகரிப்பதும், கேபினட் கூட்டங்களின் நடவடிக்கைகளை இணைத்தலும், மற்றும் பல கேபினட் கமிட்டிகள், உப-கமிட்டிகள் ஆகியவற்றின் நடவடிக்கைகளைத் தொடர்புபடுத்தி, அவற்றைச் சரியானபடி இணைத்து பிரதம அமைச்சருக்கு அறிவித்தலும், இந்த அலுவலகத்தின் முக்கியமான பணிகளாகும்.

கேபினட் கூட்டங்களுக்குப் பிரதம அமைச்சர் தலைமை வகிப்பார். இப் பணி, அவருடைய மிக முக்கியமான பொறுப்பாகும். ஏனெனில், கேபினட் கூட்டங்களில்தான் அரசாங்கக் கொள்கைகள் உருவாக்கப்படுகின்றன. பாராளுமன்றத்தின் பரிசீலனைக்கு இக் கொள்கைகள் அனுப்பப்படுவதற்கு முன்னர், கேபினட் கூட்டங்களில் தான் அவை விவாதிக்கப்படுகின்றன. இக் கூட்டங்களில் அமைச்சர்களின் கருத்து வேறுபாடுகள் பறிமாறிக் கொள்ளப்படும். இக் கருத்து வேறுபாடுகளை அகற்றி, ஒருமுகமான கொள்கையை நிர்ணயம் செய்வது பிரதம அமைச்சரின் முக்கியமான பொறுப்பாகும். அமைச்சர்களிடையே ஏற்படும் கருத்து வேறுபாடுகளைப் பிரதம அமைச்சரால் அகற்ற முடியவில்லையெனில், பிரதம அமைச்சர் தன் பதவியைத்

தொடர்ந்து வகிப்பது மிகவும் கடினமாகிவிடும். அதனால் கட்சியில் பிளவு ஏற்படவும் அரசாங்கமும் வீழ்ச்சியுறவும் வாய்ப்புகள் ஏற்படும். பிரதம அமைச்சர் அதனால் விழிப்பாகவே இருந்து அமைச்சர் களிடையே காணப்படும் கருத்து வேறுபாடுகளைக் களைய முற்படுவார். 1905-ல் பால்ஃபோருக்கு (Balfour) இக் கதி ஏற்பட்டது. அமைச்சர்களிடையே கருத்து வேறுபாடுகள் இருப்பதால் மட்டும் அரசாங்கம் கவிழ்வதோ, அல்லது பிரதம அமைச்சர் பதவியை விட நேரிடுவதோ ஏற்படுவதில்லை. அதற்கு மிக ஆழமானதும், வெறுப்பும் கலந்த உணர்ச்சிகளும் கருத்து வேறுபாடுகளுமே காரண மாகும். அத்தகைய நிலையில் பிரதம அமைச்சருக்கு மிக சங்கடமான நிலை ஏற்பட்டுவிடும். அதனால் அரசாங்கக் கொள்கைகளை கேபினட் கூட்டங்களில் நிர்ணயம் செய்யும் பொழுது, பிரதம அமைச்சர் ஒரு முகமான கருத்தைத் திரட்ட வேண்டும். இங்ஙனம் ஒரு முகமான கருத்தை ஏற்படுத்துவது பிரதம அமைச்சரின் முக்கியமான பொறுப் பாகும். கேபினட் கூட்டங்களில் வாக்கெடுத்து, பின்னர் பெரும் பான்மை வாக்குகளை அடிப்படையாக வைத்துக்கொண்டு முடிவுகளைச் செய்யும் பழக்கம் இல்லை. கேபினட்டின் முடிவுகள் வெளிப்படையில் ஒரு முகமான முடிவுகளாகும். அதனால் அமைச்சர்களிடையே எவ்வித கருத்து வேறுபாடுகள் இருந்த போதிலும், அவற்றை மக்கள் தெரிந்து கொள்ளும் வாய்ப்பில்லை.

எல்லா அரசாங்கப் பணிகளிலும் பிரதம அமைச்சரின் அதிகாரங் களும் செல்வாக்கும் பரவியுள்ளன. அதனால் பிரதம அமைச்சரின் தனிப்பட்ட செல்வாக்கிற்கு நிறைய மதிப்பு உள்ளது. அரசியல் விவகாரங்களைப் பற்றியும் மற்ற பொது விவகாரங்களைப் பற்றியும் பிரதம அமைச்சர் அடிக்கடி அரசியாரிடம் தொடர்பு கொள்ள வேண்டியுள்ளது. பல விவகாரங்களிலும் அவர் அரசியாருக்கு ஆலோசனை கூற வேண்டும். அரசியாருக்குள்ள சில சிறப்பு அதிகாரங் களைக் கூட, பிரதம அமைச்சரின் ஆலோசனையின் பேரில்தான் அரசியார் பயன்படுத்துகிறார். 1894-ல் ரோஸ்பரி பிரபு (Lord Rosebery) பிரதம அமைச்சராக இருந்த பொழுது, பிரபுக்கள் சபையைப் பற்றி மிகவும் கடுமையாகக் கண்டனத்தைத் தெரிவித்த பொழுது, அப் பொழுது அரசியாக இருந்த விக்டோரியா, ரோஸ்பரி பிரபுவைக் கண்டிக்க நேரிட்டது. பிரபுக்கள் சபையைப் பற்றி, ரோஸ்பரி பிரபு என்ன பேசப் போகிறார் என்பதைப் பற்றி அரசியாரிடம் முன்கூட்டியே அவர் அறிவிக்காததே அக் கண்டனத்துக்குக் காரணமாகும். அரசியா ருக்குப் பாராளுமன்றத்தைக் கலைக்கும் சிறப்பு அதிகாரம் உள்ளது. ஆனால் எப்பொழுது பாராளுமன்றத்தைக் கலைக்க வேண்டுமென்று, பிரதம அமைச்சர்தான் ஆலோசனை கூற வேண்டும். ஆனால் பெரும்

பாலும் பாராளுமன்றத்தைக் கலக்கும் அதிகாரத்தை, பிரதம அமைச்சர் தான் பயன்படுத்துகிறார். இதைப்பற்றி, அவருடைய தீர்மானம்தான், முடிவானதாக இருக்கும். அரசியார் அமைச்சர்களையும், மற்றும் உயர் தர அதிகாரிகளையும், மத குருமார்களையும் நியமனம் செய்வதும், பிரதம அமைச்சரின் ஆலோசனையின் பேரிலேயே நடக்கும். மத குருமார்களை நியமனம் செய்யும் பொழுது, கேண்டர்பரி ஆர்ச்பிஷப் அவர்களைக் கலந்து ஆலோசனை செய்வதுண்டு. மற்ற அமைச்சர்களை நியமனம் செய்வது, பிரதம அமைச்சரின் பொறுப்பாகும். தவிர, காலனிகளின் ஆளுநர்களையும், பிரதம அமைச்சர் நியமனம் செய்வார். புதிய பிரபுக்களை உருவாக்குவதிலும், விருதுகளை வழங்குவதிலும், பிரதம அமைச்சரை, அரசியார் கலந்தாலோசனை செய்வார். அரசியார் வெளி நாடுகளுக்குச் செல்லும் சுற்றுப்பயணங்களுக்குப் பிரதம அமைச்சர் தனிப்பட்ட முறையில் அவர்களுக்கு ஆலோசனையாளராக இருப்பார். அதனால் பிரதம அமைச்சர், அரசியாரோ, அல்லது அரசரோ ஆகியவர் களுடன் நெருங்கிய தொடர்பு கொண்டு, எல்லா அரசாங்க விவகாரங் களையும் அவர்களுடன் கலந்து ஆலோசனை செய்ய வேண்டும் என்ற வழக்கம் இருந்து வருகிறது.

தவிர, பாராளுமன்றத்திற்கும், குறிப்பாக அவருடைய ஆதரவாளர் களுக்கும் பிரதம அமைச்சர் பொறுப்புடையவராக நடந்து கொள்வார். பிரபுக்கள் வலிமை இழந்து விட்ட பிறகு, மக்கள் சபை தான் மிகவும் முக்கியமான சபையாக விளங்குவதால், வழக்கமாகப் பிரதம அமைச்சர் மக்கள்சபை உறுப்பினராகத்தான் இருப்பார். பிரபுக்கள் சபையிலி ருந்து கடைசியாக பிரதம அமைச்சராகப் பணியாற்றியவர், சேலிஸ்பரி பிரபு ஆவார். (Lord Salisbury) அவர் 1902-ல் பிரதம அமைச்சர் பதவியை ராஜிநாமா செய்தார். பிரதம அமைச்சரின் பணிகளும், பொறுப்புகளும் மிகவும் அதிகரித்துக் கொண்டு வருவதால், வழக்கமாக நிர்வகிக்கும், மக்கள் சபை தலைவர் பதவியையும் பிரதம அமைச்சர் களால் ஏற்க முடிவதில்லை. அவ்விதம் மக்கள் சபை தலைவராக (Leader of the House of Commons) அவரால் பொறுப்பு ஏற்க முடியவில்லை யென்றாலும், அதிகார பூர்வமாக, அவர்தான் அரசாங்கக் கொள்கைகளை எடுத்துக் கூறுபவராகவும், அக் கொள்கைகளைப் பாதுகாப்பவராகவும் இருப்பார். மற்ற அமைச்சர்கள் சிக்கல்களில் மாட்டிக் கொள்ளும் பொழுது, அவர்தான் அவர்களைப் பாதுகாக்க வேண்டும். சில முக்கிய மான தேசியக் கொள்கைகளை உருவாக்குவதிலும், அவற்றை மக்களிடம் அறிமுகம் செய்வதிலும், அவர்தான் முதன்மையாக இருக்கவேண்டும். கட்சியில் கருத்து வேறுபாடுகள் ஏற்பட்டால், கட்சி உறுப்பினர்கள் கட்சி மாறாமல் பாதுகாத்துக் கொள்ளுவதும், அவர்களுடைய கருத்து வேறுபாடுகளை அகற்றி சுமுகமான சூழ்நிலையை ஏற்படுத்துவதும்

அவரது பொறுப்பாகும். அரசாங்கக் கொள்கைகளைப் பற்றி, பாராளு மன்றத்திலும் கட்சியிலும், அவர் நம்பிக்கையூட்டத் தவறி விட்டால், பதவியை விட்டு விலக நேரிடும். எடுத்துக்காட்டாக, அரசாங்கம் பின் பற்றிய பாதுகாப்பு கொள்கை பற்றி கன்சர்வேடிவ் கட்சி உறுப்பினர் களிடையே கருத்து வேறுபாடுகள் தோன்றிய போது, அவற்றைக் களைய முடியாததால், பிரதம அமைச்சர் பால்ஃபோர் **(Balfour)** பதவியை விட்டு விலக நேரிட்டது. 1940–ல் ஜெர்மன் தாக்குதல்கள் நிகழ்ந்தபொழுது அரசாங்கப் பாதுகாப்புக் கொள்கைகளில் பாராளு மன்ற உறுப்பினர்கள் நம்பிக்கை இழந்துவிட்டதால், சேம்பர்லேயன் **(Chamberlain)** பிரதம அமைச்சர் பதவியை விட்டு விலக நேரிட்டது. ஒரு பிரதம அமைச்சராக இருப்பவர் நல்ல திறமைசாலியாக இருந்தால் மட்டும் போதாது. அவர் நல்ல ஆளுமைப் பெற்றவராகவும் செல்வாக்கு மிக்கவராகவும் இருக்க வேண்டும். அவருடைய கட்சி உறுப்பினர்கள் ஆதரவு மட்டும் அல்லாது முணுமுணுக்கும் எதிர்கட்சி உறுப்பினர்களிடத்திலேயும், அவருக்கு மதிப்பு ஏற்படும் வகையில் பிரதம அமைச்சர்கள் நடந்து கொள்ளவேண்டும். பாராளுமன்ற விவகாரங்களைப் பிரதம அமைச்சர் ஒழுங்காக கவனித்துக் கொள்ள வேண்டும். அடிக்கடி அரசாங்கக் கொறடாவுடன் தொடர்பு வைத்துக்கொண்டு, அவருடைய கட்சி உறுப்பினர்களின் கட்டுப் பாட்டைப் பெற வேண்டும். அரசாங்க அலுவல்களைப் பிரதம அமைச்சர் விழிப்புடன் கவனித்து வருவார்.

பாராளுமன்றத்தில் நிறைவேற்றப்பட்ட சட்டங்கள், மற்றும் அரசாங்க ஆணைகளைச் செயலாற்றும் பொறுப்பு, ஆட்சித்துறை யிலுள்ள அதிகாரிகளுடையதாகும். அதனால் உயர்தர அதிகாரிகளை நியமனம் செய்யும் பொறுப்பைப் பிரதம அமைச்சர் கவனித்துக் கொள்வார். அதனால் உயர்தர அதிகாரிகளின் ஒத்துழைப்பு பிரதம அமைச்சருக்கும், மற்றும் எல்லா அமைச்சர்களுக்கும் மிகவும் தேவைப் படும். அமைச்சரவை மாறுகின்ற பொழுது அதிகாரிகளின் ஒத்துழைப்பு, கட்சி நோக்கமின்றி, அந்த குறிப்பிட்ட மாறுதல்களுக் கேற்ப மாறி அமைகின்றது. அதிகாரிகளுக்கும், பிரதம அமைச்சருக் கும் அல்லது மற்ற அமைச்சர்களுக்கும் கருத்து வேறுபாடுகள் தோன்றுகின்ற பொழுது, சம்பந்தப்பட்ட அதிகாரிகளை வெவ்வேறு துறைகளுக்கு மாற்றுவார்கள். கருத்து வேறுபாடுகள் இல்லாமல், அதிகாரிகள் பிரதம அமைச்சருக்கு விசுவாசமுள்ளவராக இருக்கும் நல்ல சூழ்நிலையை பிரதம அமைச்சர் உருவாக்குவார். அரசாங்கக் கொள்கைகளை நல்ல விதமாகச் செயலாற்ற அரசாங்க அதிகாரிகளை ஊக்குவிக்கும் பொறுப்பு பிரதம அமைச்சருடைய தாகும்.

பிரதம அமைச்சர் பதவியிலிருக்கும் பொழுது அவர் ஒரு சர்வாதிகாரியைப் போன்ற அதிகாரத்தைப் பெறுகிறார். 18-வது நூற்றாண்டில் ஆட்சி செய்து வந்த செல்வாக்கு மிக்க வல்லரசர்கள் பெற்றிருந்த அதிகாரங்களைப் பிரதம அமைச்சர் இப்பொழுது பெற்றிருக்கிறார், என்ற அபிப்பிராயம் நிலவி வருகின்றது. அப்படிப்பட்ட அபிப்பிராயங்கள் ஓரளவிற்கு உண்மையே எனினும், பிரதம அமைச்சர்கள் பல வகைகளிலும் மக்களுக்குக் கட்டுப்பட்டவர்களாகவும் அவர்களுடைய அபிப்பிராயங்களை மதிப்பவர்களாகவுமே இருப்பார்கள். இல்லாவிடில் அவர்களுடைய பதவி பறி போய்விடும். அவர் மக்கள் தலைவராக இருக்க வேண்டுமென்றால் மக்களுடன் தொடர்பு கொண்டிருப்பதுடன், அரசாங்கக் கொள்கைகளை மக்களிடம் எடுத்துக் கூறி அவர்களுடைய நம்பிக்கையையும் பெற வேண்டும். மக்களிடம் பிரதம அமைச்சர் தொடர்பு கொள்வதற்கு இப்பொழுது நவீன வசதிகள் உள்ளன. டெலிவிஷன், பத்திரிகைகள் ஆகியவை அரசாங்கக் கொள்கைகளை மக்களிடத்தில் பரப்புவதற்குப் பயனுடையவையாக இருக்கின்றன. எந்த வகையில் பிரதம அமைச்சர் மக்களிடத்தில தொடர்பு கொள்ள முடியுமோ அதைச் செய்வதோடு மட்டும் நிற்காது, அவர்களுடைய நம்பிக்கையையும் பெற மக்கள் கூட்டங்களிலும், தொகுதி வேலைகளிலும், மற்றும் பல நிகழ்ச்சிகளிலும் பிரதம அமைச்சர் கலந்துகொள்கிறார். அதனால் நாட்டிற்கும், மக்களுக்கும் பிரதம அமைச்சர் பொறுப்புடன் நடந்துகொள்கிறார். அதைப் போன்று அவருடைய கட்சிக்கும் அவருடைய கொள்கைகளை எடுத்துக் கூறி, கட்சியின் ஆதரவையும் பிரதம அமைச்சர் பெறுகிறார்.

மேற்கூறிய மிக முக்கியமான பொறுப்புகளையும், அரசாங்கப் பணிகளையும் தவிர, பிரதம அமைச்சருக்கு வேறு பல அலுவல்களும் உள்ளன. அவர் அரசாங்கக் கடிதங்களைப் படித்து அவைகளுக்குத் தக்க பதில் எழுத வேண்டும். மக்கள் சபை விவாதங்களின் பொழுது அவர் பாராளுமன்றத்தில் இருக்க வேண்டும். அவரும் விவாதங்களில் பங்கெடுத்துக் கொள்ளவும் நேரிடும். அரசாங்கத்தின் பல துறைகளிலுள்ள அதிகாரிகளுக்குச் சரியான உத்தரவுகளைப் பிறப்பிக்க வேண்டும். பல மாநாடுகளில் கலந்து கொள்ள வேண்டும். தவிர கேபினட் கூட்டங்களில் தலைமை வகிக்க வேண்டும். மற்றும் பல நிகழ்ச்சிகளிலும் கலந்து கொள்ள வேண்டும். பிரதம அமைச்சருக்கும் இதைப் போன்ற பல அலுவல்கள் உள்ளன. இவ்வளவு பொறுப்புகளும் அலுவல்களும் அவருக்கு இருப்பதால், அவருடைய அதிகாரங்களும் சர்வாதிகாரிக்குள்ள அதிகாரங்களைப் போன்று நடைபெறுகின்றன; பிரதம அமைச்சர் இவ்வளவு பொறுப்புகளைக் கவனிப்பதால், அவருடைய உடல்நிலை பாதிக்கப்படுகின்றது. அது தவிர்க்க

முடியாதது. பிரதம அமைச்சருக்குள்ள பொறுப்புகளைக் குறைத்து மற்றவர்களுக்கும் பகிர்ந்து கொடுக்க வேண்டுமென்று ஆலோசனைக் கூறுகின்றனர். மற்ற அமைச்சர்களுக்கு இந்தப் பொறுப்புகளைப் பகிர்ந்து கொடுத்தாலும், இறுதியில், அவர்களுடைய பொறுப்புகளைக் கண்காணிக்கவும், அவர்களுடைய வேலைகளைச் சரியாக இணைக்கவும் வேண்டிய முக்கியமான பணி பிரதம அமைச்சரைச் சார்ந்ததாகும். பெரும்பாலும் பிரதம அமைச்சர் முக்கியமான அல்லது சுமையான துறையைத் தன்னிடத்தில் வைத்துக் கொள்வதில்லை. முக்கியமான துறைகளை மற்ற அமைச்சர்களிடமே கொடுத்து விடுகின்றனர். அதனால் பிரதம அமைச்சருக்கு உதவியாக இருக்க திறமையும், அனுபவமும் உள்ள அமைச்சர்களை பிரதம அமைச்சர் நன்ருகத் தேடிப் பிடித்து நியமனம் செய்வார். மற்ற அமைச்சர்களுடன் பொறுப்புகளைப் பகிர்ந்து கொள்வதால் பிரதம அமைச்சரின் அன்ருட அலுவல்கள் குறைகின்றன. பிரதம அமைச்ருக்கும் மற்ற சக அமைச்சர்களுக்கும் உதவி செய்ய பல உதவி அமைச்சர்கள் நியமனம் செய்யப்படுகிருர்கள்.

பிரதம அமைச்சரின் பொறுப்புகள் மற்ற அமைச்சர்களுக்குப் பகிர்ந்தளிக்கப்படுவதால் அவருடைய பொறுப்புகள் சிறிது குறைக்கப் படுவதைப் போன்று, கேபினட் சபையையும் இரண்டு சபைகளாகப் பிரிக்க வேண்டும் என்றும், மிகக் குறைந்த அளவில் ஆறு முக்கியமான அமைச்சர்களும், பிரதம அமைச்சரும் கொண்ட ஒரு கேபினட் சபையும், மற்ற அமைச்சர்கள் கொண்ட ஒரு கேபினட் சபையையும் நிறுவ வேண்டும் என்றும் அமெரி (Amery) என்பவர், அவர் எழுதிய அரசியலமைப்பைப் பற்றிய சிந்தனைகள் (Thoughts on the Constitution) எனும் நூலில் குறிப்பிடுகிருர். ஏன் இவ்வித ஏற்பாட்டைச் செய்யவேண்டுமென்ருல், அவர் மேலும் குறிப்பிடுவதாவது, பிரதம அமைச்சர்களும், மற்ற சில குறிப்பிட்ட அமைச்சர்களும் நாட்டிற்குத் தேவையான கொள்கைகளையும் திட்டங்களையும் உருவாக்குவதில் அதிக கவனம் செலுத்த வேண்டும். அதனுல் அவற்றை விவாதிக்க ஆறுபேர் எண்ணிக்கை கொண்ட சிறிய கேபினட் சபை இருந்தாலே போதுமான தாகும். அப்பொழுது அதிக கருத்து வேறுபாடுகள் இருக்காது. கேபினட்டின் முடிவுகளும் விரைவில் ஏற்படும். இந்தப் பொறுப்புகளைக் கவனிப்பதற்கு அவர்களுக்கு அதிக அவகாசம் வேண்டியிருப்பதால், அவர்கள் மற்ற அரசாங்கத் துறைகளைப் பற்றிய எல்லா பொறுப்புகளையும் வேறு அமைச்சர்களிடம் ஒப்படைத்துவிடல் வேண்டும். அதனுல் ஆட்சியைப்பற்றி கவனிக்க வேறு கேபினட் சபை ஒன்று நிறுவப்பட வேண்டும் என்று அமெரி (Amery) என்பவர் அபிப்பிராயப்படுகிருர். அவருடைய கருத்து நன்ருகத்தான் உள்ளது. ஆனுல் திட்டங்களையும், கொள்கைகளையும் உருவாக்க ஒரு கேபினட்டும்

ஆட்சித்துறையைக் கவனிக்க ஒரு கேபினட்டும் தனித்தனியாக நிறுவப்பட்டால், திட்டங்களுக்கும் ஆட்சிக்கும் தொடர்பே இல்லாமல் போகும். அதனால் பல குறைபாடுகள் நிகழ்ந்து விடும் என்றும் சிலர் கருதுகின்றனர். தவிர, பிரதம அமைச்சரும், மற்ற ஆறு அமைச்சர்களும் சேர்ந்து கேபினட்டிற்குள் ஒரு கேபினட்டை ஏற்படுத்திக் கொண்டால், இவர்கள்தான் முக்கிய அதிகாரங்கள் பெற்ற அமைச்சர்கள், மற்றவர்கள் சாதாரண அமைச்சர்கள் என்று கூறுவர். ஏற்கனவே அதிகாரங்கள் பிரதம அமைச்சரிடம் அதிகமாக குவிந்துள்ளன. இப்பொழுது இன்னும் சில முக்கியமான அமைச்சர்கள் என்று அவர்களைப் பிரித்தெடுத்து, எல்லா அதிகாரங்களையும் ஒரு சிலரிடம் ஒப்படைப்பது கட்சியில் பெரிய மனக்கசப்பை ஏற்படுத்திவிடும். மக்களும் அரசாங்க அதிகாரங்கள் ஒரு சிலரிடம் மட்டும் குவிந்திருப்பதை விரும்புவதில்லை. பிரதம அமைச்சருக்கு நிறைய பொறுப்புகள் இருந்தால், அந்தப் பொறுப்புகளை மற்ற அமைச்சர்களிடத்திலும், அதிகாரிகளிடத்திலும் அளித்துவிட்டு, வெறும் கண்காணிக்கும் பொறுப்பை மட்டும் பிரதம அமைச்சர் வைத்துக் கொள்ளலாம் என்றும் கூறுகின்றனர். இப்பொழுது பிரதம அமைச்சர்கள் ஏறக்குறைய அவ்விதம்தான் செய்து வருகின்றனர்.

# 4. பொதுமக்கள் சபை
# பாராளுமன்றக் கீழவை
# (THE HOUSE OF COMMONS)

உலகிலுள்ள பாராளுமன்றங்களுக்கெல்லாம் ஆங்கிலேய பாராளுமன்றமானது தாய் போன்று விளங்குகிறது. ஏனெனில் அது அவ்வளவு பழமையானது. மற்ற ஜனநாயக நாடுகளுக்கு ஓர் வழிகாட்டியாகவும் பாராளுமன்ற ஆட்சி முறைக்கு ஓர் முன்னோடியாகவும் அது இருந்துள்ளது. ஆங்கிலேய பாராளுமன்றத்தில் இரண்டு சபைகள் உள்ளன. ஒன்று, மக்கள் சபை; மற்றொன்று, பிரபுக்கள் சபை. பிரபுக்கள் சபை அண்மையில் தன் முக்கியத்துவத்தை இழந்து விட்டது. எனவே முதலில் நாம் மக்கள் சபையைப் பற்றி ஆராய்வோம்.

ஜேம்ஸ் நதிக் கரையில் வெஸ்ட்மினிஸ்டர் அரண்மனை என்ற மிகப் பிரம்மாண்டமான அரண்மனை உள்ளது; அதனுள் தான், ஆங்கிலேயப் பாராளுமன்றமும் நிறுவப்பட்டுள்ளது. இப்பொழுதுள்ள பாராளுமன்றம் 1837–52-ல் நிறுவப்பட்டது. மக்கள் சபையில் ஏறக் குறைய 630 உறுப்பினர்கள் உள்ளனர். ஆனால் அச் சபையில் அத்தனை உறுப்பினர்களும் ஒரே சமயத்தில் வந்தால், அங்குள்ள நீண்ட சதுர வடிவில் அமைந்துள்ள அறையில் எல்லாரும் வீற்றிருக்க முடியாது. அமெரிக்க ஐக்கிய நாட்டின் பிரதிநிதிகள் சபையின் நான்கில் ஒரு பாகத்தில் ஆங்கிலேய மக்கள்சபை அமைந்துள்ளது. உறுப்பினர்களில் பலர் கூட்டங்களுக்கு வருவதில்லையாதலால் மக்கள் சபை சிறியதாக இருப்பினும் உறுப்பினர்களுக்குப் பெரிய இடையூறோ இடநெருக்கடியோ ஒன்றும் ஏற்படுவதில்லை.

மக்கள்சபை உறுப்பினர்கள் எண்ணிக்கை அடிக்கடி மாறி வருகிறது. 1955 பொதுத் தேர்தல்களில் 630 உறுப்பினர் இச்

சபைக்குத் தேர்ந்தெடுக்கப்பட்டனர். 1948-ல் இயற்றப்பெற்ற பிரதிநிதித்துவச் சட்டப்படி 613 உறுப்பினர்களுக்கு குறையாமல் இருக்க வேண்டுமென்று உத்தேசமாக மதிப்பிட்டனர். ஸ்காட்லாந்திற்கு 71 உறுப்பினர்களுக்குக் குறையாமலும், வேல்ஸ்க்கு 35 உறுப்பினர்களுக்குக் குறையாமலும், வட அயர்லாந்திற்கு 12 உறுப்பினர்களுக்குக் குறையாமலும் இருக்கவேண்டுமென்று இச் சட்டத்தில் நிர்ணயம் செய்தனர்.

மக்கள் சபையில் தேர்ந்தெடுக்கப்படும் உறுப்பினர்கள் தனித் தொகுதிகளிலிருந்து (Single Member Constituencies) தேர்ந்தெடுக்க படுவர்களாவர். இத் தொகுதிகள் இன்று புவியியல் அமைப்பின்படிப் பிரிக்கப்பட்டுள்ளன. ஆனால் ஆரம்பத்தில் பாராளுமன்றத் தொகுதிகள் புவியியல் அடிப்படையில் பிரிக்கப்படவில்லை. அப்பொழுது பிரதிநிதித்துவ தொகுதிகள் இன வாரியாவோ அல்லது தொழில் வாரியாகவோ தான் பிரிக்கப்பட்டிருந்தன. பண்ணைக்காரர்கள், வியாபாரிகள், உற்பத்தியாளர் ஆகிய வகுப்புகள் அடிப்படையிலும், தொழில் முறை அடிப்படையிலும் பிரதிநிதித்துவம் வழங்கப்பட்டிருந்தது. ஒரு தொகுதியில் உள்ள மக்களுக்கு என்று பிரதிநிதித்துவம் அப்பொழுது அமைக்கப்படவில்லை. சொத்துடைமைகளைக் கொண்டவர்கள், படித்தவர்கள், பட்டதாரிகள் ஆகியோர் மட்டுமே அப்பொழுது வாக்காளர்களாக இருந்தனர். அதனால் மக்கள் பிரதிநிதித்துவமும், இந்த அடிப்படையில் தான் அமைந்திருந்தது. 1948-ல் இயற்றப் பெற்ற மக்கள் பிரதிநிதித்துவச் சட்டத்திற்குப் பிறகு தான் இதைப் போன்ற பிரதிநிதித்துவ முறைகளும் ஒழிக்கப்பெற்றன.

19-வது நூற்றாண்டின் கடைசி வரையிலும், கவுன்டிகளும், பரோக்களும் தனித்தனியாகப் பிரிக்கப்படாமலேயே பாராளுமன்றத் தொகுதிகளாக இருந்தன. ஒவ்வொரு தொகுதியிலிருந்து ஒன்று அல்லது இரண்டு உறுப்பினர்களைத் தேர்ந்தெடுத்து அனுப்பினர். மக்கள் தொகை அப்பகுதிகளில் எவ்வளவு அதிகமாக இருந்தபோதிலும் அதைப் பற்றி கவலை கொள்ளாது ஒவ்வொரு தொகுதிகளிலிருந்தும் இரண்டு உறுப்பினர்கள் தேர்ந்தெடுக்கப்பட்டு வந்தனர். படிப்படியாக கவுண்டிகளும், பரோக்களும் பிரிக்கப்பட்டு, ஒவ்வொரு தனித் தொகுதியாக ஆக்கப்பட்டு, அத் தொகுதியிலிருந்து ஒவ்வொரு உறுப்பினராகத் தேர்ந்தெடுத்தனுப்பும் பழக்கம் ஏற்பட்டது. ஒவ்வொரு பாராளுமன்றத்தொகுதிக்கும் பெயர் கொடுக்கப்பட்டுள்ளது.

பாராளுமன்றத் தொகுதிகள் நீண்டகாலமாக்வே அப்படியே இருந்து வந்துள்ளன. மக்கள் தொகை அதிகமானது, அல்லது குறைந்து

விட்டது என்பதற்காகவும் கூட இத் தொகுதிகள் மாற்றி அமைக்கப் படாமல் அப்படியே இருந்து விட்டன. ஆனால் 18–வது நூற்றாண்டில் தொழிற்புரட்சி ஏற்பட்டதற்குப் பின்னர், வட இங்கிலாந்தில் நிறைய தொழிற்சாலைகள் ஏற்பட்டதன் விளைவாக புதிய தொழில் நகரங்கள் உருவாகின. அங்கு ஏராளமான மக்கள் வந்து குழுமினர். மக்கள் தொகை அந்த நகரங்களில் அதிகரித்து இருந்தும் அந்த நகரங்களுக்குப் பாராளுமன்றத்தில் பிரதிநிதித்துவம் கொடுக்காமலேயே இருந்தனர். அதனால் அந்நகரங்களுக்குப் பிரதிநிதித்துவம் வேண்டுமென்று கிளர்ச்சி செய்தனர். அத்துடன் வாக்காளர் பட்டியலும் விரிவடைந்து பாராளுமன்றச் சீர்திருத்தச் சட்டம் 1832-ல் இயற்றப் பட்டது. 1801 முதற் கொண்டு மக்கள் தொகையைக் கணக்கிட்டு வந்தபோதிலும், மக்கள் தொகை பெருகியுள்ள பகுதிகளில் பிரதிநிதித்துவம் அளிக்காததால், 1832ஆம் ஆண்டில் இயற்றப்பெற்ற பாராளுமன்ற சீர்திருத்தச் சட்டம், சில புதிய பாராளுமன்றத் தொகுதிகளை ஏற்படுத்தியது. மக்கள் தொகை குறைந்த சில தொகுதிகள் ஒழிக்கப் பட்டன. அதற்குப் பின்னரும் மக்கள் தொகை பெருகி வந்த பகுதிகளில் பிரதிநிதித்துவம் இல்லாமலேயே இருந்தது. 1885, 1918 ஆகிய ஆண்டுகளில் இயற்றப்பெற்ற சீர்திருத்தச் சட்டங்கள் மூலமாக பல தொகுதிகள் மாற்றி அமைக்கப்பெற்றன. மேலும் பல புதிய பாராளுமன்றத் தொகுதிகள் உருவாக்கப் பெற்றன. இந்த மாற்றங்களை அவ்வளவு எளிதில் பாராளுமன்றத்தில் கொண்டு வர முடியவில்லை.

இரண்டாவது உலகப் போர் ஏற்பட்டபொழுது பிரிட்டனில் உள்ள பல தொகுதிகளிலும் மக்கள் தொகையில் மாற்றங்கள் ஏற்பட்டிருந்தன. அதனால் புதிய சட்டத்தை இயற்றி, இத் தொகுதிகளின் சீரமைப்பை ஏற்படுத்துவது என்று முடிவு செய்தனர். 1944–ல் ஏற்பட்ட பொது தேர்தல்களில் பிரதிநிதித்துவம் சரியான மக்கள் தொகை அடிப்படையில் அமையவில்லை. அதனால் சமமான தொகுதிகளை நிர்ணயம் செய்வதற்கு 1944–ல் பாராளுமன்றத் தொகுதிகள் சீரமைப்புச் சட்டம் ஒன்றை (Redistribution of Seats Act) பாராளுமன்றத்தில் இயற்றினர். இச் சட்டம் பின்னர், 1945, 1947, 1948 ஆகிய ஆண்டுகளில் திருத்தப்பெற்றது. இச் சட்டங்கள் மூலமாக மக்கள் தொகையின் அடிப்படையில் சமமான பிரதிநிதித்துவம் கொடுக்கப்பட்டது. மிகப் பெரிய தொகுதிகள் ஏற்படுத்தப்பட்டன. இரட்டைத் தொகுதிகள் எல்லாம் அகற்றப்பட்டு, ஒற்றைத் தொகுதிகளாக்கப் பட்டன. லண்டன் நகரம் மட்டும் இதற்கு விதிவிலக்காக இருந்தது. இவ்விதம் தொகுதி சீரமைப்பு ஏற்பட்டதால் பாராளுமன்ற உறுப்பினர்களின் எண்ணிக்கை 615–லிருந்து 640-க்கு

உயர்ந்து விட்டது. தவிர, தொகுதிகளின் சீரமைப்பு அடிக்கடி ஏற்பட வேண்டும் என்றும் நிர்ணயம் செய்தனர்.

பாராளுமன்றத் தொகுதி எல்லைகளைச் சரியாக நிர்ணயம் செய்வதற்கு நான்கு நிரந்தர எல்லை கமிஷன்களை (Boundary Commissions) 1944-ல் இயற்றப்பெற்ற சட்டத்தின் அடிப்படையில் நியமனம் செய்தனர். அந்த எல்லை கமிஷன்களுக்குக் குறிப்பிட்ட பகுதிகளைப்பற்றிய (இங்கிலாந்து, வேல்ஸ், மான்மவுத்ஷயர், ஸ்காட்லாந்து, வட அயர்லாந்து) விவரங்களையும், அங்கு ஏற்படுகின்ற மாற்றங்களையும் அடிக்கடி அரசாங்கத்திற்குத் தெரிவிக்க வேண்டுமென்று பணித்திருந்தனர். இந்த எல்லைக் கமிஷன்கள் மக்கள் சபையின் சபாநாயகர் தலைமையில் பணியாற்ற வேண்டும். இந்தக் கமிஷன்களில் அரசாங்க அதிகாரிகள்தான் நியமனம் செய்யப்பட்டனர். அரசியல்வாதிகள் இக் குழுக்களில் இடம்பெருததால், பல குழப்பங்கள் தவிர்க்கப்படுகின்றன. 1946 முதல் 1948 வரையிலும் இந்த எல்லைக் கமிஷன் அதிகாரிகள் அவர்களுடைய பகுதிகளில் உள்ள தொகுதிகளை பற்றி விவரங்களையும், வரைபடங்களையும் அரசாங்கத்திற்கு அனுப்பி, புதிய தொகுதிகள் சீரமைப்பைச் சிபாரிசு செய்ததால், மீண்டும் 1948-ல் புதிய பாராளுமன்றச் சட்டம் ஒன்றை இயற்ற வேண்டிய அவசியம் ஏற்பட்டது. 1948-ல் இயற்றப்பட்ட சட்டத்திற்கு மக்கள் பிரதிநிதித்துவச் சட்டம் (Representation of People Act of 1948) என்று பெயர். இச் சட்டத்தின்படி ஐக்கிய அரசியல், கவுண்டி, பரோ தொகுதிகளில் புதிய ஏற்பாட்டைச் செய்தனர். அதனால் பல மாறுதல்கள் தொகுதிகளில் ஏற்பட்டன. ஆங்கிலேய மக்களும், அரசியல்வாதிகளும் முதலில் இந்த மாறுதல்களை விரும்பவில்லை. வாக்காளர்களுக்கும், வேட்பாளர்களுக்கும் நிறைய இடையூறுகள் ஏற்பட்டன என்றும் 1948-க்குப் பின்னர் ஏற்பட்ட 1955 பொதுத் தேர்தல்களில் இந்த இடையூறுகள் வெளிப்படையாகவே தெரிந்தனவென்றும் பல கண்டனங்கள் வெளிவந்தன. ஆனால் இவ்வித தொகுதி சீரமைப்பு பத்து அல்லது பதினைந்து ஆண்டுகளுக்கு ஒருமுறை கொண்டுவரப்பட வேண்டுமென்று 1958-ல் அரசாங்கம் அறிவித்தது.

**வாக்காளர்கள்**

இப்பொழுது நாட்டில் வயது வந்த ஆண், பெண் குடிமகன் அனைவருக்கும் பாராளுமன்றத் தேர்தல்களில் வாக்குரிமை அளிக்கப் பட்டுள்ளது. 19-வது நூற்றாண்டிற்கு முன்னர் நிலைமை வேருக இருந்தது. அவர்களுடைய வாக்குரிமை மிகவும் குறைக்கப்பட்டிருந்தது. 1420-ல் இருந்த ஒரு சட்டத்தின்படி, 40 ஷில்லிங்குகள்

ஆண்டொன்றுக்கு வருவாய் உள்ள நிலத்தை வைத்திருக்கும் ஆண்களே வாக்குரிமை அளிக்கத் தகுதி உடையவர்களாவர். அவ்விதம் சொந்த நிலம் வைத்திருக்கும் ஆண்கள் எண்ணிக்கை 1800 ல் சுமார் 12 அரை லட்சம் மக்களுக்கு மேல் உயரவில்லை. அப்பொழுது, நகரப்புறங்களி லுள்ள ஒருசிலர் மட்டுமேதான் வாக்களித்தனர்.

**சீர்திருத்தச் சட்டங்கள் 1832-1948**

1832-ல் பாராளுமன்றத்தில் இயற்றப்பெற்ற பாராளுமன்றச் சீர்திருத்தச் சட்டம் ஆங்கிலேய வரலாற்றில் மிகுந்த முக்கியத்துவத்தை பெறுகின்றது. முதன் முதலில், பிரிட்டனை ஒரு ஜனநாயக நாடாக ஆக்குவதற்கு, இச் சட்டமே அடிப்படை காரணமாக இருந்தது. இச் சட்டம் இயற்றப் பெற்றதற்குப் பின்னர் மூன்று லட்சம் பேர் வாக்காளர் பட்டியலில் இடம் பெற்றனர். ஆனால் தொழிலாளர்களோ, அல்லது குடியானவர்களோ, இச் சட்டத்தின்படி, வாக்குரிமை பெற முடியவில்லை. அதனால் இன்னும் பிரதிநிதித்துவம், சொத்துடையவர் களிடமே இருந்தது. 1884-ல் இயற்றப்பெற்ற மக்கள் பிரதிநிதித்துவ சட்டம் (The Representation of the People Act) கவுண்டிகளி லுள்ள பலருக்கும் வாக்குரிமை அளிக்க வழி செய்தது. அதனால் வாக்காளர் எண்ணிக்கை மூன்று மடங்கு அதிகரித்தது.

முதல் உலகப் போருக்குப் பின்னர் புதிய மக்கள் பிரதிநிதித்துவ சட்டம் 1918-ல் இயற்றப் பெற்றது. இப் புதிய சட்டத்தின்படி 21 வயது அடைந்த ஆண்களும், 30 வயது அடைந்த பெண்களும் வாக்குரிமைப் பெற்றனர். சொத்துரிமைத் தகுதி அகற்றப்பட்டது. குடிமக்களாக இருக்க வேண்டுமென்ற தகுதி அடிப்படையில் வயது வந்த ஆண், பெண்களுக்கு வாக்குரிமை அளிக்கப்பட்டது; அதனால் வாக்காளர் எண்ணிக்கை 8,500,000-லிருந்து 21,000,000-க்கு உயர்ந்தது. ஆனால் பெண்கள், ஆண்களுக்கு அளிக்கப்பட்ட சம உரிமைகள் போன்று தங்களுக்கும் அளிக்கப்பெற வேண்டுமென்று வற்புறுத்தினர். அதனால் 1928-ல் மற்றொரு மக்கள் பிரதிநிதித்துவச் சட்டம் இயற்றப் பெற்றது. அச் சட்டத்தின்படி, ஆண்களுக்கு அளிக்கப்பட்ட எல்லா உரிமைகளும் பெண்களுக்கும் அளிக்கப்பட்டன இச் சட்டம் இயற்றப்பட்டதற்குப் பின்னர், பெண் வாக்காளர் தொகை 15,000,000 க்கு உயர்ந்தது.

1918-க்கு முன்னர் ஆங்கிலேய வாக்காளர் எந்தப் பாராளுமன்றத் தொகுதியிலாவது வாக்களிக்கலாம். ஒரு தொகுதியில் வசிப்பவர்கள் அத் தொகுதியில் மட்டுமே வாக்களிக்க வேண்டுமென்பதில்லை, தவிர

பல வாக்காளர்களுக்கு, பல முறை வாக்களிக்கும் உரிமையும் இருந்தது ஏனெனில் சொத்துரிமை அடிப்படையில் வாக்குரிமை அளிக்கப் பட்டிருந்ததால், அவர்களுக்கு எந்தத் தொகுதியில் சொத்துக்கள் இருந்தாலும், அங்கெல்லாம் அவர்கள் வாக்களிக்கும் உரிமையைப் பெற்றிருந்தனர். எடுத்துக்காட்டாக, ஒருவருக்கு பரோவிலோ, அல்லது கவுண்டியிலோ வாக்குரிமை இருக்கும். ஆனால் அவருக்கு கென்ஸிங்டனில் ஒரு வீடு இருக்கும். லண்டனில் அவருடைய அலுவலகம் இருக்கும். சென்டில் ஒரு வீடு இருக்கும், எனில் எல்லா தொகுதிகளிலும் இவர் வாக்குரிமையைப் பதிவு செய்யும் தகுதியைப் பெற்றிருந்தார். அதனால்தான் 1918-க்கு முன்னர் நிகழ்ந்த தேர்தல்கள் இரண்டு வாரங்கள் வரை நீடிக்கும். அப்படி இருந்தால் தான் பல வாக்காளர்கள் பல தொகுதிகளுக்கும் சென்று வாக்கு அளிக்க முடியும். பலமுறை வாக்களிக்கும் முறை (Plural Voting), 1918-ல் இயற்றப்பெற்ற மக்கள் பிரதிநிதித்துவச் சட்டத்தின்படி அகற்றப்பட்டது. லேபர் கட்சியும், லிபரல் கட்சியும், இச் சீர்திருத் தத்தைக் கொண்டு வருவதில் அதிக ஆர்வமுடையவர்களாக இருந்தன. ஆனால் அவர்களால் 'பலமுறை' வாக்களிக்கும் உரிமையை முற்றிலும் அகற்றமுடியவில்லை. குறைந்த அளவில் இரண்டு முறையாவது வாக்களிக்கும் உரிமை வேண்டுமென்று கன்சர்வேடிவ் கட்சியினர் வற்புறுத்தினர். ஏனெனில் கன்சர்வேடிவ் கட்சியினர்களுக்குத்தான் பல தொகுதிகளிலும் வாக்களிக்கும் உரிமை இருந்தது. ஆனால் 1948-ல் இயற்றப்பட்ட மக்கள் பிரதிநிதித்துவச் சட்டம் 'பலமுறை' வாக்களிப்பதை முற்றிலும் ஒழித்து விட்டது. ஒருவன் ஒரு தொகுதி யில் மட்டுமே வாக்களிக்க உரிமைப் பெற்றுள்ளான் என்பதை அது வலியுறுத்தியது.

## பாராளுமன்றம் கலைக்கப்படுதல் (Dissolution of Parliament)

பாராளுமன்றம் கலைக்கப்பட்டவுடன் புதிய தேர்தல்கள் நிகழும். அப்பொழுது புதிய உறுப்பினர் தேர்ந்தெடுக்கப்படுவர். பாராளு மன்றம் கலைக்கப்படும் வரையிலும் அவ் வுறுப்பினர் பதவியில் இருப்பார் கள். அதனால் அவர்களுடைய பதவிக் காலத்தை உறுதியாக வரை யறுக்க முடியாது. கவுண்டி அல்லது பரோ கவுன்சில்களுக்கெல்லாம் பதவிக் காலம் வரையறுக்கப்பட்டுள்ளது. ஆனால் பாராளுமன்ற உறுப்பினர்களுக்கு அவ்விதம் வரையறுத்தல் இயலாது. பாராளு மன்றத்தின் பதவிக் காலம் ஐந்து ஆண்டுகள் என்று நிர்ணயம் செய்யப் பட்டிருந்தாலும் சில நெருக்கடியான சமயங்களில் தேர்தல்களை நடத்த முடியாத சூழ்நிலை ஏற்படுகிறது. அப்பொழுது பாராளுமன்றத்தின் பதவிக் காலமும் நீடிக்கப்படுகின்றது. 1910-ல் கூடிய பாராளு

மன்றம் 1918 நவம்பர் வரையிலும் நீடித்தது. முதல் உலகப் போரே அதற்குக் காரணமாக இருந்தது. அதை போன்றே, 1935-ல் கூடிய பாராளுமன்றம் 1945 வரையிலும், இரண்டாவது உலகப் போர் காரணமாக நீடிக்கப் பெற்றது. சில சமயங்களில் பாராளுமன்றம் ஐந்து ஆண்டுக்காலம் முடிவதற்குள் கலைக்கப்படுவதும் உண்டு.

1867ஆம் ஆண்டில் இயற்றப்பட்ட பாராளுமன்றச் சீர்திருத்தச் சட்டத்திற்குப் பின்னர், அரசர் இறந்தவுடன் பாராளுமன்றம் கலைக்கப் படும் பழக்கம் நிறுத்தப்பட்டது. பாராளுமன்றம் கலைக்கப்பட வேண்டுமென்றால், அமைச்சவையின் சிபாரிசின் பேரில், கவுன்சிலின் சம்மதத்தைப் பெற்ற அரசரின் ஆணை பிறப்பிக்கப்பட வேண்டும். சாதாரணமாக பாராளுமன்றத்தின் ஐந்து ஆண்டு காலம் முடிவடைந் தால், பாராளுமன்றம் கலைக்கப்படும். ஆனால் பெரும்பாலும் பாராளு மன்றம் ஐந்து ஆண்டு காலம் வரை நீடிக்கப்படுவதில்லை. ஓர் அமைச்சவை, பதவியில் நீடித்திருக்க முடியாது தத்தளிக்கும் நிலையில் இருந்தால் தான் பாராளுமன்றத்தைக் கலைத்துவிட்டு, தேர்தல்களை நடத்த அது உத்தரவிடும். மக்கள் மீண்டும் அக் கட்சிக்குப் பெரும் பான்மையான வாக்குகளை அளித்து, பதவியில் இருக்கச் செய்யும் என்ற நம்பிக்கையின்பேரில்தான் இவ்விதம் செய்யப்படுகிறது. அல்லது நல்ல அரசியல் சூழ்நிலை அக் கட்சிக்கு வாய்க்கும்பொழுது, பெருவாரி யான வாக்குகள் அந்தக் கட்சிக்குக் கிடைக்கும் என்ற நம்பிக்கையின் பேரில் பாராளுமன்றத்தைக் கலைப்பதும் உண்டு. அப்பொழுது அவர் களுடைய பதவி காலத்திற்குப் புதிய உயிர் ஏற்படும். மற்றும் சில சமயங்களில், ஒரு முக்கியமான பிரச்சினையில் கருத்து வேறுபாடுகள் பாராளுமன்றத்தில் ஏற்படின், அப் பிரச்சினையை மக்கள் முன்னிலையில் வைத்து, வெற்றிபெற பாராளுமன்றத்தைக் கலைப்பதும் உண்டு. பிரிட்டனில் பாராளுமன்றத்தின் காலத்தைக் கணக்கிட்டால், சராசரி அதன் பதவிக் காலம் நான்கு ஆண்டுகள் வரைதான் என்பதைக் காண்கிறோம். 1910-ல் ஒரே ஆண்டில் இரு முறைகள் தேர்தல்கள் நிகழ்ந்துள்ளன, 1922, 1923, 1924 ஆகிய ஆண்டுகளில் ஒவ்வொரு ஆண்டிலும் தேர்தல் நிகழ்ந்துள்ளது. அமைச்சவையின்மீது மக்கள் சபையில் நம்பிக்கை இல்லாதுபோனால் தான் அமைச்சவை கலைக்கப் படும். மற்ற சமயங்களில் பிரதம அமைச்சர் தான் பாராளுமன்றத்தைக் கலைக்க அதிகாரம் பெற்றுள்ளார். அவருடைய சிபாரிசின் பேரில்தான் அரசியார் பாராளுமன்றத்தைக் கலைத்துவிட வேண்டும் என்ற முடிவை அமைச்சவை அவ்வளவு எளிதில் தீர்மானித்து விடாது. ஏனெனில் அவர்கள் விருப்பப்படி பாராளுமன்றத்தைக் கலைத்துவிட்டால், அக் கட்சியைச் சார்ந்த பாராளுமன்ற உறுப்பினர் மிகவும் அதிருப்தியுறுவர் ஏனெனில், அவர்கள் மீண்டும் அக் கட்சியில் வேட்பாளர்களாகத்

தேர்ந்தெடுக்கப்பட்டு, தேர்தல்களில் வெற்றி பெறுவது சந்தேகமே யாகும். அவர்கள் அதனால் பாராளுமன்றம் சாதாரணக் காரணங்களுக் காகக் கலைக்கப்படுவதைச் சிறிதும் விரும்புவதில்லை. மீண்டும் அவர்கள் வெற்றிபெற வேண்டுமெனில் எவ்வளவு செலவுகளையும் தொல்லைகளையும் சமாளிக்க வேண்டும் என்ற நிலையை அவர்கள் உணர்ந்திருப்பர். தவிர, வெற்றி தோல்விகளைப் பற்றி அவர்கள் உறுதியாகச் சொல்ல முடியாது. அதனால் முக்கியமான காரணங்கள் இருந்தால் மட்டுமே பாராளுமன்றம் கலைக்கப்படும்.

பாராளுமன்றத்தைக் கலைத்துவிடுவது என்று அமைச்சவை முடிவு செய்துவிட்டால், பாராளுமன்றத்தின் இரண்டு சபைகளையும் கலைக்கும் உத்தரவுகளை அரசியார் பிறப்பிப்பார். பிரபுக்கள் சபை உறுப்பினர்களுக்கு ஸ்காட்லாந்தின் பிரதிநிதித்துவப் பிரபுக்களைத் தவிர சான்சலர் பிரபுவும் **(Lord Chancellor)** வட அயர்லாந்தின் ஆளுநரும் **(Governer of Northern Ireland)** தனித்தனியாக உத்தரவுகளைப் பிறப்பிப்பார். ஏனெனில் அவர்கள் பரம்பரையாக பிரபுக்கள் சபையில் உறுப்பினர்களாக இருக்கும் தகுதி பெற்றவர் களாவர். மற்ற மக்கள் சபை தொகுதிகளுக்கு தேர்தல்களை நடத்த, கவுண்டிகளிலுள்ள ஷெரிப்புகளுக்கும் **(Sheriffs)** பரோகளிலுள்ள மேயர்களுக்கும், நகர மாவட்ட கவுன்சில்களின் தலைவர்களுக்கும் **(Chairman of Urban District Councils)** ஆணைகள் அனுப்பப்படும்.

**வேட்பாளர்கள் மனுக்கள் (Nomination of Candidates)**

அரசியாரின் தேர்தல்கள் அறிவிப்புக்குப் பின்னர் எட்டாவது நாளன்று (ஞாயிற்றுக்கிழமைகளும், மற்ற விடுமுறை நாட்களையும் தள்ளிவிட்டு) வேட்பாளர்களின் மனுக்களை, தேர்தல் அதிகாரி யின் முன்னிலையில் தாக்கல் செய்யப்பட வேண்டும். அந்த வேட்பு மனுக்களில், வேட்பாளரின் பெயர், முகவரி, தொழில் ஆகியவற்றைக் குறிப்பிட வேண்டும். அத்துடன் அத் தொகுதியிலுள்ள வாக்காளர் பட்டியலில் இடம் பெற்றுள்ள இரண்டு வாக்காளர்கள் வேட்பாளரின் பெயரை முன்மொழியவும், வழிமொழியவும், மற்றும் இவ் வேட்பாள ரின் நியமனத்தை ஆதரித்து மற்ற எட்டு பேர் சம்மதிக்கவும் வேண்டும். வேட்பு மனுதாக்கல் செய்யும் பொழுது 150 பவுன் வைப்புத் தொகை யையும் **(Deposit)** கட்ட வேண்டும். வேட்பாளர் போட்டியின்றித் தேர்ந்தெடுக்கப்பட்டாலும், அல்லது அந்தத் தொகுதியில் தேர்தல் நாளன்று பதிவு செய்யப்பட்ட மொத்த வாக்குகளில் எட்டில் ஒரு பாகத்திற்குமேல் அந்த வேட்பாளருக்குக் கிடைத்தால் அவருடைய வைப்புத் தொகை திருப்பித் தரப்படும். இல்லையெனில் வைப்புத் தொகையை இழந்தவராக அந்த வேட்பாளர் கருதப்படுவார்,

2. வழக்கமாக ஒவ்வொரு தொகுதியிலும் கன்சர்வேடிவ் கட்சியும் தொழிலாளர் கட்சியும் (Labour Party) தான் வேட்பாளர்களை நிறுத்தும். இருமுனைப் போட்டி தான் பெரும்பாலும் இருக்கும். ஆனால் சில சமயங்களில் லிபரல் கட்சியும் (Liberal Party) வேட்பாளர்களை நிறுத்துவதுண்டு. கம்யூனிஸ்டுக் கட்சியும் சில தொகுதிகளில் வேட்பாளர்களை நிறுத்தும். ஆனால் பெரும்பாலும் கன்சர்வேடிவ் கட்சியும், தொழிலாளர் கட்சியும் தான் எல்லா தொகுதிகளிலும் போட்டியிடும். கன்சர்வேடிவ் கட்சி, தொழிலாளர் கட்சி மற்றும் உள்ள பல கட்சிகள், அத் தொகுதிகளில் வேட்பாளர்களை நிறுத்துவதற்கு முன்னர், அவர்களைத் தேர்ந்தெடுக்கும் பணியில் ஈடுபடுகின்றன. ஒவ்வொரு கட்சிக்கும் அத் தொகுதியில் அலுவலகம் இருக்கும்; கட்சியின் கிளை நிறுவனங்கள் இருக்கும். ஒரு தொகுதியில் ஒரு வேட்பாளரை நிறுத்தும் முன்னர், அத் தொகுதியிலுள்ள கிளை நிறுவனத்தின் வேட்பாளர் சிபாரிசுகளை கட்சியின் தலைமை காரியாலயம் பரிசீலனை செய்கின்றது. தலைமைக் கட்சி காரியாலயம் பெரும்பாலும் அத் தொகுதியிலுள்ள கிளை நிறுவனத்தின் சிபாரிசுகளை ஏற்றுக்கொள்கின்றது. அத் தொகுதியில் வசிப்பவர்களையே பெரும்பாலும் வேட்பாளராக நியமனம் செய்வர். வேறு தொகுதியில் வசிப்பவர்களும் நிற்கத் தகுதி பெற்றவர்களாக இருந்தபோதிலும், பொதுவாக அவ்வித வேட்பாளர்களைத் தேர்ந்தெடுக்க அக் கட்சிகள் விரும்புவதில்லை. வேட்பாளர்களின் திறமை, நாணயம், பேச்சு வன்மை, கட்சிக்கு உழைத்தல், அநுபவம், செல்வாக்கு, ஆகிய பல கோணங்களிலிருந்தும் பார்த்துதான் வேட்பாளர்களை நியமனம் செய்கிறார்கள். சில தொகுதிகளில் வேட்பாளர்கள் சுயேட்சையாக நிற்பதும் உண்டு.

ஒரு தொகுதியில் வசிப்பவர்தான் அத் தொகுதியில் வேட்பாளராக நிற்க வேண்டுமென்ற பழக்கம் 1774–ல் நீக்கப்பட்டது. இப்பொழுதுள்ள பல பாராளுமன்ற உறுப்பினர், குறிப்பிட்ட தொகுதிகளில் வசிப்பவர்களாக இல்லை என்றாலும் அத் தொகுதிகளிலிருந்து தேர்ந்தெடுக்கப்பட்டவர்களாக உள்ளனர். வேட்பாளர்கள் சொத்துடையவர்களாக இருக்கவேண்டுமென்ற தகுதி 1858–ல் இயற்றப்பெற்ற பாராளுமன்றச் சட்டத்தால் நீக்கப்பெற்றது. இன்னும் சமய அடிப்படையில் சில தடைகள் நீடித்து வருகின்றன. ஆங்கிலேயத் திருச்சபையைச் சேர்ந்த மத குருமார்களும், ரோமன் கத்தோலிக்க மத குருமார்களும், ஸ்காட்லாந்து திருச்சபையைச் சார்ந்த மதகுருமார்களும் வேட்பாளர்களாக நிறுத்தப்படுவதில்லை. இப்பொழுதுள்ள ஒரு வேட்பாளரின் தகுதியெல்லாம், அவர் வயது வந்தவராக இருக்க வேண்டும். பிறப்பிலோ அல்லது வளர்ப்பிலோ ஆங்கிலேய குடிமகனாக இருக்க வேண்டும். எந்த சமயத்தின் அடிப்படையிலாவது ஓர் உறுதிமொழி

எடுக்கின்றவராக இருக்க வேண்டுமென்பதைத் தவிர வேறு எவ்விதத் தடைகளும் இப்பொழுது வேட்பாளர்களுக்கில்லை என்றே கூற வேண்டும். பெண்களும் கூட 1917-ல் இயற்றப்பெற்ற பாராளு மன்றச் சட்டத்தின்படி வேட்பாளர்களாக நிற்கத் தகுதி பெற்றவர்களா கின்றனர். ஆங்கிலேய பிரபுக்கள் மக்கள் சபை தொகுதிகளில் வேட்பாளர்களாக நிற்க அநுமதிக்கப்படுவதில்லை;

3. மக்கள் சபையில் வீற்றிருக்கும் உறுப்பினர்களைப் பார்த்தால் அவர்கள் பலதரப்பட்டவர்களாக இருப்பதைக் காணலாம். பெரிய நிலப் பண்ணையார்கள், வியாபாரிகள், தொழிலதிபர்கள், வழக்கறிஞர் கள், வங்கிச் சொந்தக்காரர்கள், தொழிலாளர்கள், ஆசிரியர்கள், பத்திரிகையாளர்கள், பெண்கள் ஆகியோரைக் காணலாம். அதனுல் மக்கள் சபையில், பலதரப்பட்டவர்களின் பிரதிநிதித்துவம் இருக்கின் றது என்று கூறலாம்.

**தேர்தல்கள்:**

வாக்காளர் பட்டியல்களில் உள்ள வாக்காளர்கள் மட்டுமே வாக்களிக்க அநுமதிக்கப்படுவர். ஒவ்வொரு தொகுதியிலும் உள்ள வாக்காளர்களைக் கணக்கெடுத்து தேர்தல் நடப்பதற்கு ஆறு மாதங் களுக்கு முன்னுலேயே வாக்காளர் பட்டியலைத் தயாரிப்பர். அந்தப் பட்டியல் பொது இடங்களில் வாக்காளர்களின் பார்வைக்காக வைக்கப் பட்டிருக்கும் அந்தத் தொகுதியிலுள்ள வாக்காளர்கள் பெயர்கள் விட்டுப் போயிருந்தனவென்ருல், அதைத் தேர்தல் அதிகாரியின் கவனத்திற்குக் கொண்டு வந்து சேர்த்துக் கொள்ளலாம். சிலசமயங் களில் பெயர்களோ, அல்லது வயதிலோ பிழைகள் ஏற்பட்டிருந்தாலும் அவற்றைத் திருத்தி கொள்ளலாம். ஆனுல் வாக்களிக்கும்பொழுது, வாக்காளர்களது பெயர், வயது இன்னும் மற்ற விவரங்கள் எல்லாம் சரியாக இருந்தால்தான் அவர்கள் வாக்களிக்க அநுமதிக்கப்படுவர்.

தேர்தல் அதிகாரிகள், சட்டத்திற்கு உட்பட்ட விதத்தில் அந்தந்தத் தொகுதிகளில் தேர்தல் நிகழும் நாளைக் குறிப்பிடுவர், பல தொகுதிகளிலும் பல்வேறு நாட்களில் தேர்தல்கள் நடைபெறுவதால், ஏறக்குறைய ஒரு வாரக்காலத்திற்குள் தேர்தல்களின் முடிவுகளும் அறிவிக்கப்பட்டு வந்தன. இந்த முறைகளை எல்லாம் 1918-ல் பாராளு மன்றச் சட்டம் இயற்றிய பிறகு மாறிவிட்டன. இப்பொழுது, தேர்தல்கள் நடைபெறும் என்ற அரசியாரின் அறிவிப்பு விளம்பரப் படுத்தப் பெற்ற பின்னர், எட்டாவது நாளன்று வேட்பாளர்களின் வேட்பு மனுக்கள் எல்லா தொகுகளிலும் தாக்கல் செய்யப்பட வேண்டும். அதற்குப் பின்னர் ஒன்பது நாட்கள் கழித்து எல்லா

தொகுதிகளிலும் தேர்தல்கள் நிகழும். வேட்பாளர்களின் வேட்பு மனுக்கள் தாக்கல் செய்யும் பொழுதோ, போட்டியில்லை என்று தெரிந்தால், அந்த வேட்பாளர் போட்டியின்றி தேர்ந்தெடுக்கப்பட்டு விட்டதாக அன்றே அறிவிக்கப்படும். அதனால் அந்தத் தொகுதியில் தேர்தல் நடைபெறாது.

ஒரு நூற்றாண்டிற்கு முன்னர் தேர்தல்கள் நிகழ்ந்த விதமே வேறு விதமாக இருந்தது. ஏதாவது பொது இடத்தில் வாக்காளர்கள் கூடு வார்கள். தங்களது கைகளை உயர்த்தி அவர்கள் வேட்பாளர்களுக்கு வாக்களிப்பர். அவ்வளவு குறைந்த அளவில் வாக்காளர்கள் எண்ணிக்கை இருந்தது. 1832 முதல்கொண்டு, இரகசிய வாக்களிக் கும் முறை வேண்டுமென்று சீர்திருத்தவாதிகள் வற்புறுத்தி வந்தனர். அதற்குப் பின்னர் 1872-ல் இயற்றப் பெற்ற பாராளுமன்றச் சட்டத் தின் மூலமாக இரகசிய வாக்கெடுப்பு முறையைக்கொண்டு வந்தனர். 1872-ல் இயற்றப் பெற்ற இந்தச் சட்டத்திற்கு பாராளுமன்றம், நகராட்சி தேர்தல் சட்டம் அல்லது பொதுவாக வாக்கெடுப்புச் சட்டம் **(Parliament and Municipal Election Act or The Ballot Act)** என்று கூறுவர். இந்தச் சட்டம் எட்டு ஆண்டுக் காலம் வரையிலும் தான் செல்லுபடியாகும் என்றிருந்த போதிலும் 1918 வரையிலும் இந்தச் சட்டத்திற்கு உயிர் அளித்து வந்தனர். அதற்குப் பின்னர், 1918-ல் நிரந்தரமாகவே இதைப்பற்றி ஒரு சட்டம் இயற்றினர்.

பிரிட்டனில் வாக்காளர்கள் வாக்களிக்கும் விதம் மிகவும் எளிமை யானது. வாக்களிக்கும் இடத்திற்குச் சென்று ஒரு வாக்காளர் அவரது பெயர், விலாசம் ஆகிய விவரங்களை கூறினால், அவ்விவரங்களை ஒப்பிட் டுப்பார்த்த பின்னர், தேர்தல் அதிகாரியின் உதவியாளர் அவரிடம் ஒரு வாக்குச் சீட்டைக் கொடுப்பார். பிரிட்டனில் வழக்கமாக கொடுக்கப் படும் வாக்குச் சீட்டுகள் அஞ்சல் அட்டை அளவு இருக்கும். அமெரிக்க ஐக்கிய நாட்டில் கொடுக்கப்படும் பெரிய வாக்குச் சீட்டுகளைப் போன்றிருக்காது. ஏனெனில், பிரிட்டனில் ஒவ்வொரு தொகுதி யிலும் போட்டியிடுகின்ற வேட்பாளர்களின் எண்ணிக்கை மிகவும் குறைவாகத்தான் இருக்கும். பெரும்பான்மையான தொகுதிகளில் இரண்டு அல்லது மூன்று வேட்பாளர்களின் பெயர்களுக்கு மேலிருக் காது. கொடுக்கப்படும் வாக்குச் சீட்டில் கட்சிகளின் சின்னங்கள் இருக்காது. வேட்பாளர்களின் பெயர்கள் அகர வரிசைப்படி எழுதி யிருக்கும். அத்துடன் அவர்களுடைய முகவரிகள், அவர்கள் செய்யும் தொழில்கள் ஆகியன குறிப்பிடப்பட்டிருக்கும். உதவியாளர் வாக்காளரிடத்தில் வாக்குச் சீட்டைக் கொடுக்கும்பொழுதே அவ் வாக்குச் சீட்டோடு இணைக்கப்பட்டிருக்கும் எதிர்சீட்டில் **(Counterfoil)**

வாக்காளர் பட்டியலில் உள்ள அவரது பதிவு எண்ணைக் குறித்துக் கொண்டு, வாக்குச் சீட்டைக் கொடுப்பார். பின்னர் வாக்காளர் மறைவாக ஒதுக்கப்பட்டிருக்கும் இடத்திற்குச் சென்று அவர் விரும்பும் வேட்பாளரின் பெயரின் பக்கத்தில் பெருக்கல் குறியை இட்டு, பின்னர் அந்த வாக்குச்சீட்டை மடித்து, வாக்குச்சீட்டுப் பெட்டியில் போடுவார். ஒரு தொகுதியில் பல இடங்களில் வாக்குப் பதிவு நடைபெறும். ஆனால் வாக்குகளை எண்ணுகின்றபொழுது, ஒவ்வொரு வாக்களிக்கும் இடத்தில் வைத்து வாக்குச் சீட்டுகளை எண்ணுவதில் எல்லா வாக்குப் பதிவுகள் நிகழ்ந்த இடங்களிலிருந்து வாக்குப் பெட்டிகளைத் திரட்டி, ஒரு குறிப்பிட்ட இடத்தில் வைத்து தேர்தல் அதிகாரி வாக்குச் சீட்டுகளை எண்ணுவார். வாக்குகளை எண்ணும் பொழுது வேட்பாளர்களின் பிரதிநிதிகளும் வாக்குகள் எண்ணுவதைப் பார்த்துக் கொண்டிருப்பர். முதலில், வாக்குப் பதிவு நிகழ்ந்த பல இடங்களிலிருந்து திரட்டி வந்த பெட்டிகளிலிருந்து வாக்குகளை எல்லாம் நன்றாகக் கலந்து, அதற்குப் பின்னர்தான் வாக்குகளை எண்ணுவர். வாக்குச் சீட்டுகளை எண்ணி முடித்தபின்னர், தேர்தல் அதிகாரிகளுக்குக் கொடுக்கப்பட்டுள்ள அதிகாரத்தின் அடிப்படையில் தேர்ந்தெடுக்கப்பட்ட வாக்காளர் பெயரை அறிவிப்பார். அவர் தேர்ந்தெடுக்கப்பட்டார் என்ற சான்றிதழையும் தேர்தல் அதிகாரி அவரிடம் கொடுப்பார். எண்ணப்பட்ட வாக்குகளையும், அதன் பெட்டிகளையும் சான்சரி அலுவலகத்திற்கு (Chancery) தேர்தல் அதிகாரி அனுப்பி வைப்பார். சான்சார் பிரபு அலுவலகத்திலிருந்து மக்கள் சபை அலுவலகத்திலுள்ள அதிகாரிக்கு மக்கள் சபைக்குத் தேர்ந்தெடுக்கப்பட்ட உறுப்பினர்களின் பெயர்களை அனுப்பி வைப்பர். மக்கள் சபையில், அதற்குப் பின்னர், புதிய மக்கள் சபை உறுப்பினர்களது பட்டியலைத் தயாரித்து வெளியிடுவர்.

சில சமயங்களில் தோற்றுப்போன வேட்பாளர்கள், தேர்தலில் பல ஊழல்கள் நிகழ்ந்துவிட்டன, அல்லது வாக்குச் சீட்டுகளை எண்ணுகின்ற பொழுது தவறுகள் நிகழ்ந்து விட்டன, அதனால் ஒரு குறிப்பிட்ட வேட்பாளரின் வெற்றி செல்லத் தக்கதல்ல என்று கருதினால் அவர் இதைப்பற்றி வழக்குத் தொடரலாம். சட்டப்படி இந்த வேட்பாளர் வெற்றிச் செல்லத்தக்கதல்ல என்று மனு செய்தால், அந்த மனுவை மக்கள் சபையே விசாரணை செய்து முடிவு அளிக்கும். அல்லது தேர்தல்களில் ஊழல்கள் இருந்தால், அந்த வேட்பாளரின் வெற்றிச் செல்லத் தக்கதல்ல என்று வழக்கு தாக்கல் செய்யப்பட்டால், இந்த வழக்கை உயர்நீதிமன்றத்தின் நீதிபதிகள் விசாரணை செய்து தீர்ப்பு அளிப்பர். ஒரு தேர்தல் முடிவு செல்லாதது என்று நீதிபதிகள் தீர்ப்பு கூறுவது பெரும்பாலும் இல்லை என்றே கூறலாம். இவ்வித

வழக்குகள் தொடருவதும் மிகவும் குறைவாகவே பிரிட்டனில் ஏற்படுகிறது.

**மக்கள் சபை அதிகாரிகள்**

மக்கள் சபையின் மிகவும் முக்கியமான அதிகாரி சபாநாயகரே (Speaker) ஆவர். மற்றும் உள்ள அதிகாரிகள், எழுத்தர் (Clerk) அவருடைய இரண்டு உதவியாளர்கள், மக்கள் சபை காவல் முகவர் (Sergeant - At - Arms), அவருடைய உதவியாளர்கள், பல குழுக் களின் தலைவரும் உப தலைவரும், மற்றும் ஒரு மத குரு (Chaplin) ஆகிய அதிகாரிகளாவர். எழுத்தர், காவல் முகவர் மற்றும் அவர்களது உதவியாளர்கள் ஆகியோரின் நியமனங்கள் பிரதம அமைச்சரால் சிபாரிசு செய்யப்பட்டு, அரசியாரால் நிரந்தரமாகப் பணியாற்ற நியமனம் செய்யப்படுவர். சேப்ளின் (Chaplin) என்ற மத குருவை சபாநாயகரே நியமனம் செய்வார். பல்வேறு குழுக்களின் தலைவர்களை யும், உதவித் தலைவர்களையும் சபாநாயகர் மக்கள் சபையில் தேர்ந்தெடுக் கப்படுவதைப் போன்று மக்கள்சபை உறுப்பினர்களால் தேர்ந்தெடுக்கப் படுகின்றனர். அந்தப் பாராளுமன்றம் நீடிக்கும் வரையிலும் அவர்களது பதவி காலமும் நீடிக்கும். இவர்கள் கட்சி சார்புடையவர்களாக இருப்பதால் அமைச்சவை பதவியை விட்டு விலகும் பொழுது, இவர்களும் பதவிகளை விட்டு விலகுவர்.

மக்கள் சபையின் உத்தரவுகளில் எழுத்தர், கையெழுத்திடுவார். பிரபுக்கள் சபைக்கு அனுப்பப்படும் மசோதாக்களிலும், பிரபுக்கள் சபையிலிருந்து திருப்பப்படும் மசோதாக்களிலும், குறிப்பு எழுதும் பொறுப்பு எழுத்தரைச் சார்ந்ததாகும். தவிர, மக்கள் சபை கூட்டங் களில் மசோதாக்களை வாசிப்பதும், மற்றும் மக்கள் சபையின் பத்திரங்களை வைத்துக் கொள்ளுதலும், சபாநாயகருடன் ஒத்துழைத்து மக்கள் சபை வெளியிடும் அதிகாரபூர்வான இதழைத் தயாரிக்க உதவு தலும் ஆகிய பணிகளை எழுத்தர் செய்வார். மக்கள் சபையில் ஒழுங்கையும், அமைதியையும் பாதுகாக்கும் பொறுப்பு காவல் முகவரைச் சார்ந்ததாகும். பல குழுக்களின் தலைவர், அல்லது அவர் வராத பொழுது உதவி தலைவர், மக்கள் சபை ஒரு குழு (Committee) போன்று செயலாற்றுகின்ற பொழுது, மக்கள் சபை நிகழ்ச்சிகளுக்குத் தலைமை வகிக்க வேண்டும். மற்ற சமயங்களில் சபாநாயகர் விரும்பினால், தனிப்பட்டோர் மசோதாக்களைக் கொண்டு வரும்பொழுது, பொதுப்படையான கண்காணிப்பைச் செலுத்தும் பொறுப்பு இக் குழுக்களின் தலைவரைச் சார்ந்ததாகும்.

**சபாநாயகர் (Mr. Speaker)**

மக்கள் சபையில் சபாநாயகரின் பதவி மிகவும் மதிப்பிற்குரியதாகும். 1377-ல் முதன்முதலாக இப் பதவியில் அமர்ந்தவர் சர். தாமஸ் ஹங்கர் ஃபோர்ட் **(Sir Thomas Hungerford)** என்பவராவர். அவருக்கு முன்னதாகவே, இந்தப் பதவி இருந்திருக்க வேண்டுமென்று நம்பப்படு கிறது. சில நூற்றாண்டுகளுக்கு முன்னர், மக்கள் சபை உறுப்பினர் கள் நேரடியாக சட்டமியற்றும் பொறுப்பைப் பெறாத பொழுது, அவர்கள் சில குறைகளை மன்னரிடத்தில் சபாநாயகர் மூலமாக முறை யிட்டனர். அவர்களுடைய மனுக்களை சபாநாயகர் மன்னரிடம் அனுப்பி வைப்பார். மன்னரிடம் தொடர்பு கொள்வதற்காகவே, மக்கள் சபையில் சபாநாயகர் பணியாற்றி வந்தார் மக்கள் சபையில் மற்ற உறுப்பினர்களைப் போன்று சபாநாயகர் அதிகமாகப் பேசவேண்டிய தில்லை. இப்பொழுதும் அவர் அதிகமாகப் பேசுவதில்லை மக்கள் சபை கூட்டங்களுக்கு அவர் தலைமை வகிப்பார்.

முன்பெல்லாம், அரசர் சபாநாயகரை நியமனம் செய்வார். பின்னர், பெயரளவில் சபாநாயகர் தேர்ந்தெடுக்கப்பட்டார். நல்ல கற்றறிந்த ஓர் அறிஞரை அரசர் சிபாரிசு செய்ய, மக்கள் சபை உறுப்பினர் அவரைத் தேர்ந்தெடுத்து வந்தனர். இப்பொழுதும் மக்கள் சபை உறுப்பினர்கள் தேர்ந்தெடுக்கும் ஒரு சபாநாயகரை, அரசர் நிராகரிப்பதில்லை. 1679 முதல் அரசர்கள், மக்கள் சபை தேர்ந்தெடுக்கும் சபாநாயகரை நிராகரித்ததில்லை. புதிதாக மக்கள் சபை கூடும்பொழுது சபாநாயகர் தேர்ந்தெடுக்கப்படுவார். அந்த மக்கள் சபை கலைக்கப்படும் வரையிலும் அவரே சபாநாயகராக இருப் பார். வழக்கமாக பலமுறை மக்கள் சபையில் உறுப்பினராகத் தேர்ந் தெடுக்கப்பட்ட ஒருவருக்கே இந்தப் பதவி கொடுக்கப்படும். ஏனெனில் பாராளுமன்ற அனுபவம் அவருக்கு நிறைய இருக்கும். பாராளுமன்ற விதிமுறைகளை எல்லாம் நடைமுறையில் அவர் நன்கு தெரிந்திருக்க வேண்டும். வழக்கமாக சபாநாயகராகத் தேர்ந்தெடுக்கப்படுவர், மற்ற அரசியல் கட்சி உறுப்பினர்களாலும் ஏற்றுக் கொள்ளத்தக்கவராக இருக்கவேண்டுமென்பதே மரபாகும். கன்சர்வேடிவ் கட்சி பதவியில் இருந்தால், இயல்பாகவே ஒரு கன்சர்வேடிவ் கட்சியைச் சார்ந்தவராகவே ஒரு சபாநாயகரைத் தேர்ந்தெடுத்துக் கொள்வர். சபாநாயகராக இருப்பவர் நடுநிலை தவறாதவராக இருக்க வேண்டுவதால், வழக்கமாக மக்கள் சபையிலுள்ள எல்லா கட்சி உறுப்பினர்களும் சம்மதத்தைத் தெரிவிப்பது மரபாகக் கொள்ளப்படுகிறது. ஒரு முறை சபாநாயகரை பதவியிலிருந்தவர் மீண்டும் தேர்தல்களில் போட்டியிட்டால், அவரை

போட்டியின்றி தேர்ந்தெடுப்பது மரபாகும். அதனால் அவர் சுயேச்சையாகவே போட்டியிடுவார். அப்பொழுது அவரையே சபாநாயகராகத் தேர்ந்தெடுப்பது வழக்கமாகப் பின்பற்றப்படுகின்றது. எந்த அரசியல் கட்சி பதவிககு வந்தாலும், சபாநாயகர் தேர்தலுக்கு அவர்கள் எதிர்ப்பு தெரிவிப்பதில்லை.

ஒரு சபாநாயகராகப் பதவியில் இருப்பவர், நன்கு கற்றறிந்தவராகவும், திறமைசாலியாகவும், அநுபவசாலியாகவும் சாதுர்யமுடையவராகவும் இருக்க வேண்டும். அவர் பணமுடை இல்லாதவராக இருக்க வேண்டும். அதனால் அவருக்கு நிறைய சம்பளம் கொடுக்கப்படுகிறது. அவர் சிறிது ஆணவமுடையவராகவும் இருக்க வேண்டுமென்று ஒரு காலத்தில் கருதியதுண்டு. அப்பொழுதுதான் மக்கள் சபை உறுப்பினர்களை அவரால் கட்டுப்படுத்த முடியும் என்று கருதினர். ஆனால் இப்பொழுது ஆணவமுடையவராக இருக்க வேண்டிய அவசியமில்லை. ஆனால் அதற்கு பதிலாக நிறைய சம்பளம் அவருக்குத் தரப்படுகிறது. மக்கள் சபையில் நிகழும் கூட்டங்களுக்கு அவர் தலைமை வகிக்க வேண்டும். அப்பொழுது அவர் சபாநாயகருக்கே உரித்தான உடையை அணிந்து கொண்டும், தலையில் செயற்கையான விக் முடியை (Wig) தரித்துக் கொண்டும், உயர்ந்த சபாநாயகரின் நாற்காலியில் வீற்றிருக்க வேண்டும். மக்கள் சபையில் ஓர் உறுப்பினர் பேச வேண்டுமென்றால் முதலில் அவர் சபாநாயகரை விளித்து, அவருக்குரிய மரியாதையை செலுத்திவிட்டுத்தான் பேச வேண்டும். மக்கள் சபை உறுப்பினர்கள் விளித்துப் பேசும் பழக்கமில்லை. மற்றும் யார், யார் எப்பொழுது பேச வேண்டுமென்பதை சபாநாயகரே தீர்மானிப்பார். உறுப்பினர்கள் ஒழுங்கில்லாமல் மக்கள் சபையில் நடந்து கொள்வார்களெனில் அவர்கள் மீது ஒழுங்கு நடவடிக்கையை சபாநாயகர் எடுத்துக் கொள்வார். அவர்கள் சபையில் வீற்றிருக்க முடியாத அளவிற்கு ஆணைகளை அவர் வெளியிட ஒழுங்கில்லாமல் சபையில் நடந்து கொள்பவர்களை, அவருடைய ஆணையின் பேரில் காவல் முகவர் அவர்களை வெளியேற்ற முடியும். பொதுவாக, மக்கள் சபையின் ஒழுங்கையும், மதிப்பையும் பாதுகாக்கும் பொறுப்பு சபாநாயகரைச் சார்ந்ததாகும். மக்கள் சபையில் அளவிற்கு மீறி ஒழுங்கினம் பரவினால், அவர் மக்கள் சபையை ஒத்திவைப்பார். பாராளுமன்ற விதி முறைகளைப் பயன்படுத்தி சமயத்திற்கேற்ப அவர் முடிவுகளைச் செய்வார். தீர்மானங்கள் மீது அளிக்கப்படும் வாக்குகளை கணக்கெடுத்து முடிவுகளை அவர் கூறுவார். மக்கள் சபை நடவடிக்கைகளைப் பொறுத்த வரையிலும் அவருடைய முடிவே முடிவானதாகும். அவருடைய முடிவுகள் தவறில்லாதவை என்று பாவிக்கப்படும். அவரது முடிவுகளை உறுப்பினர்கள் எதிர்க்கும் மரபில்லை.

ஆனால் வழக்கமாக சபாநாயகர் அவரது விருப்பு, வெறுப்புகளை வைத்துக்கொண்டு சபை நடவடிக்கைகளைப் பாதுகாப்பதில்லை. மற்ற உறுப்பினர்கள் அவர் மீது வைத்திருக்கும் உயர்ந்த நம்பிக்கைக்கு ஏற்ப மக்கள் சபையின் மதிப்பை மனதில் வைத்துக் கொண்டுதான், அவருடைய முடிவுகள் இருக்கும். 1911-ல் இயற்றப்பெற்ற பாராளுமன்றச் சட்டப்படி, ஒரு மசோதா நிதி மசோதாவா இல்லையா என்பதை நிர்ணயம்செய்யும் பொறுப்பு சபாநாயகரையே சார்ந்ததாகும். சில சமயங்களில் குழுக்களை அமைக்கும் பொறுப்புகளும், மாநாடுகளை கூட்டும் பொறுப்புகளும் அவரையே சாரும். சில சமயங்களில் சபாநாயகரே அவ்வித மாநாடுகளுக்கும் தலைமை வகிப்பார்.

சபாநாயகராகப் பணியாற்றும் பொழுது அவர் தனிப்பட்ட கொள்கைகளையும், கட்சி சார்பான கொள்கைகளையும் விடுத்து, நடுநிலைமை தவறாது பணியாற்ற வேண்டும். சபை கூட்டங்களில் நிகழும் விவாதங்களில் அவர் பங்கெடுத்துக் கொள்வதில்லை. மக்கள் சபை முழுவதும் சில சமயங்களில் ஒரு குழுவாகப் பணியாற்றும் பொழுதும், அவர் விவாதங்களில் பங்கெடுத்துக் கொள்வதில்லை. சபையில் கொண்டுவரப்படும் தீர்மானங்களின் மீது சபாநாயகர் வாக்களிப்பதில்லை. சில சமயங்களில் இருதரப்பிலும் ஒரே அளவான வாக்குகள் இருக்கும்பொழுது, அவருக்கு அளிக்கப் பட்டிருக்கும், முடிவு நிர்ணய வாக்கைப் (Casting Vote) பயன் படுத்தலாம். ஆனால் மீண்டும் அத் தீர்மானத்தை மறு பரிசீலனை செய்யும் வாய்ப்பை அளிக்கும் வரையில்தான், அந்த முடிவு நிர்ணய வாக்கை அவர் பயன்படுத்துவார். சபாநாயகரைத் தேர்ந்தெடுத்த தொகுதிக்கு உண்மையில் ஒரு பிரதிநிதி இல்லையென்றே வைத்துக் கொண்டாலும், அத் தொகுதிக்கு சபாநாயகரைத் தேர்ந்தெடுத்த பெருமை உண்டு. மீண்டும் சபாநாயகரே அத் தொகுதியில் போட்டியின்றி தேர்ந்தெடுக்கப்பட வேண்டுமென்ற மரபும் உண்டு. ஒரு சபாநாயகர் ஏன் நிரந்தரமாக நியமனம் செய்யப்படக் கூடாது என்ற கேள்விக்கு இடமே இல்லை. ஒரு குறிப்பிட்ட தொகுதியி லிருந்து சபாநாயகர் தேர்ந்தெடுக்கப்பட்டாலும் இப்பொழுது, அத் தொகுதியின் வேலைகளை அண்மையிலுள்ள மற்ற தொகுதியின் பிரதிநிதி கவனித்துக் கொள்வார். அத் தொகுதியிலுள்ள மக்களின் குறைகளைப் பரிசீலிக்க சபாநாயகரே வேறு ஒரு பிரதிநிதியைக் கேட்டுக் கொள்ளலாம். சபாநாயகர் கட்சி அலுவல்களில் கலந்து கொள்வதில்லை. கட்சி பத்திரிகைகளிலும், கட்சி சங்கங்களிலும் அவர் பங்கெடுத்துக் கொள்வதில்லை. அவர் மற்ற மக்கள் சபை உறுப்பினர்களிடம் சரியாகப் பழகுவதுமில்லை. அவர் மீண்டும் தேர்தலில் நிற்க வேண்டுமென்றாலும், அதற்காக அவர் தேர்தல்

பிரச்சாரம் செய்வதில்லை. சபாநாயகரின் பதவி அவ்வளவு உயர்ந்தது; மதிப்பிற்குரியது.

ஆண்டொன்றுக்கு அவர் சம்பளமாகப் பெறுவது 5000 பவுன்களாகும். 1857-க்குப் பின்னர், சபாநாயகருக்கு வெஸ்ட் மினிஸ்டர் அரண்மனையில் ஒரு தனி இல்லமும் கொடுக்கப்பட்டுள்ளது, 1919-ல் விடுவிக்கப் பெற்ற கவுன்சில் ஆணையின்படி (Order in Council) அவருடைய அதிகாரப்பூர்வமான அந்தஸ்து கவுன்சில் தலைவருக்கு (Lord President of the Council) அடுத்தபடியாக அமைக்கப்பட்டிருக்கிறது; அதாவது ஆங்கிலேய நாட்டின் ஏழாவது குடிமகனாக அவருடைய அந்தஸ்து நிர்ணயிக்கப்பட்டுள்ளது. சபாநாயகர் பதவியிலிருந்து விலகி ஓய்வு எடுத்துக்கொள்ள வேண்டுமென்று விரும்பினால், அவர் வைகவுண்ட் பிரபுவாக உயர்த்தப்பட்டு (Viscount) நல்ல ஓய்வு பணம் பெறவும் வழி செய்யப்பட்டுள்ளது.

**குழுக்கள் முறை (The Committee System)**

முதலாம் எலிசபெத் அரசியார் ஆட்சி காலம் முதற்கொண்டே, மசோதாக்களின் இரண்டாவது வாசிப்பு மக்கள் சபையில் முடிந்த பின்னர், அம்மசோதாக்களை ஒரு ஆய்வுக்குழுவின் (Select Committee) பரிசீலனைக்கு அனுப்புவது வழக்கமாகி விட்டது. 1919-க்கு பின்னர், குழுக்களின் சேவை மிகவும் அதிகரித்து விட்டது. மக்கள் சபையின் மசோதாக்களைப் பரிசீலனை செய்யும் குழுக்களை ஐந்து வகைகளாகப் பிரிக்கலாம். 1. மக்கள் சபையே ஒரு குழுவாக இருப்பது; 2. பொது மசோதாக்களைப் பரிசீலனை செய்யும் ஆய்வுக் குழுக்கள் (Select Committees). 3. நிலைக் குழுக்கள் (Standing Committees) 4. கூட்டுக் குழுக்கள் (Joint Committees), 5. தனிப்பட்டோர் மசோதாக்களைப் பரிசீலனை செய்யும் குழுக்கள். மக்கள் சபையே ஒரு குழுவாக இருந்து சில சமயங்களில் பணியாற்றுகின்றது. மக்கள் சபை ஒரு குழுவாகப் பணியாற்றும் பொழுது சபாநாயகர் அக் குழு விலிருந்து விலகிக் கொள்வார். அப்பொழுது அக் குழுவின் நடவடிக் கைகளை, வழிமுறைகள் தலைவர் (The Chairman of Ways and Means) கவனித்துக் கொள்வார். மசோதாக்கள் விரிவாக இங்குப் பரி சீலனை செய்யப்படுவதால், ஒரே பிரச்சினையைப் பற்றி உறுப்பினர்கள் பல முறையும் பேசுதவற்கு அனுமதிக்கப்படுகின்றனர். எந்த மசோதாவையும் இந்தக் குழுவின் பரிசீலனைக்கு அனுப்பலாம் என்றி ருந்த போதிலும், சில பொதுவான மசோதாக்கள் மட்டுமே இந்தக் குழு வின் பரிசீலனைக்கு இப்பொழுது அனுப்பப்படுகின்றன. ஒரு மசோதா

வின் இரண்டாவது வாசிப்பு முடிந்த பின்னர், ஓர் உறுப்பினர் அந்த மசோதாவை மக்கள் சபை குழுவின் பரிசீலனைக்கு அனுப்பப்பட வேண்டும் என்று கேட்டுக் கொண்டால், அது அக் குழுவின் பரிசீல னைக்கு அனுப்பப்படும். சில சமயங்களில் மசோதாவின் ஒரு பகுதி இக் குழுவினிடமும், மற்ற பகுதிகள் வேறு குழுக்களின் பரிசீலனைக்குப் அனுப்பப்படும். ஓர் அரசாங்கத்திற்கு மிகவும் குறைவான பெரும் பான்மை ஆதரவு மட்டுமிருந்தால், வழக்கமாக மக்கள் சபை குழுவின ரிடம் அம் மசோதாக்களை அனுப்புவார்கள். ஏனெனில் நிலைக் குழுவின் பரிசீலனைக்கு அனுப்பப்பட்டால், அங்கும் சரியான பெரும்பான்மை ஆதரவு மிகவும் குறைந்து விட்டால், மசோதா நிறைவேற்றப்படாமல் போய்விடலாம். அரசாங்க உறுப்பினர் யாருக்காவது உடல் நலம் சரி யில்லாது போய்விட்டாலும், இந்த நிலைமை ஏற்படலாம்.

## நிலைக் குழுக்கள் (Standing Committees)

பொது மசோதாக்கள் நிலைக் குழுவின் பரிசீலனைக்கு அனுப்பப் படுகின்றன. 1882-க்கு பின்னர் தான் இவ்வித நிலைக் குழுக்கள் நிய மிக்கப்பெற்றன. அதற்கு முன்னர், அக் குழுக்களுக்கு 'மாண்புறு குழுக்கள்' (Grand Committees) என்ற பெயர் கொடுக்கப்பட்டி ருந்தன. எவ்வளவு நிலைக் குழுக்களை வேண்டுமென்றாலும் நியமித்துக் கொள்ளலாம். அது எவ்வளவு மசோதாக்களைப் பரிசீலனை செய்ய வேண்டுமென்ற அவசியத்தைப் பொறுத்திருக்கின்றது. சமீபத்தில் நான்கு நிலைக் குழுக்கள் நியமிக்கப்பெற்றிருந்தன. ஒரு சமயத்தில் ஆறு நிலைக் குழுக்களும் கூட அமைக்கப்பட்டிருந்தன. புதிய பாராளு மன்றம் கூடும் பொழுது இந்தக் குழுக்கள் அமைக்கப்படும். அந்தப் பாராளுமன்றம் கலைக்கப்படும் வரையிலும் இந்தக் குழுக்கள் செயலாற்றும். மக்கள் சபையில் எல்லா மசோதாக்களையும் இப்பொழுது கவனிக்க முடியாத அளவு வேலை அதிகரித்து விட்டதால், இந்த நிலைக் குழுக்கள் அமைக்கப்படுகின்றன. அதனால் இந்த நிலைக் குழுக்கள் அமைக்கப்படுவதை மக்கள் சபை அதிருப்தியுடன் தான் செய்கின்றது. மக்கள் சபைக்குப் பதிலாகத்தான் இந்த நிலைக்குழுக்கள் நியமிக்கப் பெற்று செயலாற்றுவதால், மக்கள் சபை குழுவில் பின் பற்றப்படும் விதிமுறைகளைத்தான் இங்கும் பின்பற்றுகின்றனர்.

ஒவ்வொரு நிலைக் குழுவிலும் இருபது உறுப்பினர்கள் நியமனம் செய்யப்படுகின்றனர். ஆனால் சில சமயங்களில் பிரத்தியேக மசோதாக் களைப் பரிசீலனை செய்வதற்கு இன்னும் முப்பது உறுப்பினர்களையும் நியமனம் செய்யக்கூடும். அரசாங்கம், மற்ற எதிர்கட்சி உறுப்பினர் களுடன் கலந்தாலோசனை செய்து, இவ்விதம் அதிக உறுப்பினர்களை

நியமனம் செய்வதுண்டு. வழக்கமாக, 30 முதல் 40 வரையிலும் உறுப்பினர்கள் நியமனம் செய்யப்படுவதுண்டு. மக்கள் சபை குழுவை போன்று, இந்த நிலைக் குழுக்களும், பிரத்தியேகமான அல்லது சிறப்பான மசோதாக்களைப் பரிசிலனை செய்வதில்லை. பொதுவான மசோதாக்களைத் தான் பரிசீலனை செய்யும். அந்தக் குழுக்களுக்கு, A, B, C, D மற்றும் ஸ்காட்லாந்து குழுக்கள் என்ற வகையில் பிரிக்கப்பட்டிருக்கும். ஸ்காட்லாந்து குழுவைத் தவிர, மற்ற குழுக்களுக்கு சபாநாயகர் மசோதாக்களை பரிசீலனை செய்ய அனுப்பி வைப்பார். மற்ற மசோதாக்களை முடித்த பின்னர், வேறு மசோதாக்களையும் சபாநாயகர் அனுப்பி வைப்பார். மசோதாக்களின் தன்மையை நன்கு உணர்ந்த சில உறுப்பினர்கள் இந்த நிலைக் குழுக்களில் சேர்த்துக் கொள்ளப்படுவர். இக் குழுக்களில் நியமனம் செய்யப்படும் உறுப்பினர்கள் கட்சி பாகுபாடு இல்லாது சபாநாயகரால் நியமனம் செய்யப்படுவதும் உண்டு. அமெரிக்க ஐக்கிய நாட்டிலும், மற்றுமுள்ள ஐரோப்பிய நாடுகளிலும் உள்ள பாராளுமன்ற நிலைக் குழுக்களும், பிரிட்டனிலுள்ள நிலைக் குழுக்களுக்கும் நிறைய வேறுபாடுகள் உள்ளன அங்குள்ள நிலைக் குழுக்கள் பிரத்தியேகமான சில பிரச்சினைகளைப் பரிசீலனை செய்ய நியமிக்கப்பெற்றுள்ளன. சான்றாக, அந்நிலைக் குழுக்கள், வெளிநாட்டு விவகாரங்கள், நிதி, வாணிமம், பயிர்த்தொழில் ஆகிய குறிப்பிட்ட துறைகளில் எழும் மசோதாக்களை மட்டும் பரிசீலனை செய்யும். பிரிட்டனில் நியமனம் செய்யப்பட்டுள்ள இந்த நிலைக் குழுக்களில் தலைமை தாங்கும் தலைவர்கள் ஏற்கனவே தேர்ந்தெடுக்கப்பட்டுள்ள 'தலைவர்கள் பட்டியலிலிருந்து' சபாநாயகர் தேர்ந்தெடுத்து நியமித்துக்கொள்வார். இந்த தலைவர்கள் பட்டியலை தயாரிக்கும் பொழுதும் சபாநாயகரின் பங்கு இருக்கும்.

மக்கள் சபை குழு மிகவும் முக்கியமான அரசாங்க மசோதாக்களை பரிசீலனை செய்து வந்தாலும், இன்னும் எவ்வளவோ வேலைகளை இந்த குழுவால் செய்ய முடியாத காரணத்தால் நிலைக் குழுக்களின் பரிசீலனைக்கு அனுப்பப்படுகின்றன. அதனால் பெரும்பாலான மக்கள் சபை குழுவின் வேலைகளை, இந்த நிலைக் குழுக்கள் தான் செய்து வருகின்றன. அதனால் மக்கள் சபை இந்த நிலைக் குழுக்களுக்கு மிகவும் கடமைபட்டிருக்கின்றது. தவிர, நிலைக் குழுக்களின் வேலைகளும் மிகவும் அதிகமாகிவிட்டதால், பாராளுமன்ற கூட்டம் நடைபெறும் பொழுது கூட, அந்த நிலைக் குழுக்கள் தனியாகக் கூடி, அதன் வேலைகளை கவனிக்க, அனுமதிக்கப்பட்டிருக்கின்றன. மக்கள் சபையில் முக்கியமான மசோதாக்களில் வாக்கெடுப்பு நடைபெறும் பொழுது மட்டுமே அந்த உறுப்பினர்கள் மக்கள் சபைக்கு வந்தால் போதுமானது என்றளவில் அவர்களது வேலைகள் அதிகரித்து விட்டன. மக்கள் சபையில்

மசோதாக்கள் இரண்டாவது வாசிப்பு முடியும் பொழுதே, மக்கள் சபை உறுப்பினர்கள் இந்த மசோதாக்களைப் பற்றித் தெரிந்து கொள்ளவும், விவாதிக்கவும் வாய்ப்பு ஏற்பட்டு விடுவதால், அதற்குப் பின்னர், இந்த மசோதாக்கள் பரிசீலனை செய்யப்படவும், சரியாக அமைக்கப்படவும் நிலைக் குழுக்களுக்கு அனுப்பப்படுகின்றன. அதனால் நிலைக் குழுக்களின் பரிசீலனைக்குப் பின்னர் வருகின்ற மசோதாக்களை மீண்டும் மக்கள் சபை உறுப்பினர்கள் விவாதிப்பதில்லை. பெரிய மாற்றங்களையோ, அல்லது திருத்தங்களையோ மக்கள் சபை உறுப்பினர்கள் கொண்டு வருவதில்லை. நிலைக் குழுக்களின் பரிசீலனைக்குப் பின்னர் அமைச்சரவைக்கு அது அறிவிக்கப்படும். அரசாங்க மசோதாக்கள் நிலைக் குழுக்களுக்கு அதிக எதிர்ப்புகளுக்குள்ளாவதில்லை. ஆனால் ஃபிரான்சில் அவ்விதமான நிலை இல்லை. பல அரசாங்க மசோதாக்களும் நிலைக் குழுக்களில் அடிபட்டு, அமைச்சரவைக்கே அபாயத்தைத் தேடிக் கொடுத்து விடும். அமெரிக்க ஐக்கிய நாட்டிலும், பல மசோதாக்கள் நிலைக் குழுக்களின் பரிசீலனை கட்டத்திலேயே அடிபட்டு விடுகின்றன.

மக்கள் சபையில் உள்ள இந்த நிலைக் குழு முறை பயனுள்ளதாக கருதப்படுகிறது. இந்த முறையில் மேலும் பல மாற்றங்களைக் கொண்டு வர ஆங்கிலேயர்கள் விரும்பவில்லை. நிலைக் குழுவில் நியமனம் செய்யப்படும் உறுப்பினர்களின் எண்ணிக்கையை மிகவும் குறைக்க வேண்டுமென்றும், அப்பொழுதுதான் இன்னும் விரைவாக பணியாற்ற முடியும் என்று சிலர் கருதுகின்றனர். மற்றும் இந்த குழுக்களில் சிறப்பாகபணியாற்ற பாராளுமன்ற உறுப்பினர்களிலிருந்தே சில வல்லுநர்களைத் தேர்ந்தெடுப்பதைத் தவிர மற்றும் சிவில் அதிகாரிகள், வல்லுநர்கள் ஆகியோரின் ஆலோசனைகளையும் கேட்க வேண்டுமென்று சிலர் விரும்புகின்றனர். தவிர இந்த நிலைக் குழுக்கள் சில பிரத்தியேகப் பிரச்சினைகளையும், சில அரசாங்க நிர்வாகத் துறைகளின் அலுவல்களையும் கவனிக்கவேண்டும் என்று கருதுகின்றனர். மற்றும் சிலர் மக்கள் சபை குழுவினிடம் மசோதாக்களைப் பரிசீலனைக்கு அனுப்புவதை முற்றிலும் நிறுத்தி விட்டு, எல்லா மசோதாக்களையும் நிலைக் குழுக்களின் பரிசீலனைக்கு அனுப்ப வேண்டுமென்று கருதுகின்றனர். ஆனால் இந்த மாற்றங்களை எல்லாம் செய்ய ஆங்கிலேயர்கள் அதிகமாக விரும்புவதில்லை.

### 3. ஆய்வுக் குழுக்கள் (Select Committees)

ஒவ்வொரு ஆய்வுக் குழுவிலும் 15 உறுப்பினர்களுக்கு மேல் நியமனம் செய்யப்படுவதில்லை. ஆய்வுக் குழுக்கள் அவ்வப்பொழுது நியமனம் செய்யப்படுகின்றன. சில பிரச்சினைகளைப் பற்றி சட்டங்களை

இயற்ற திட்டமிட்டுக் கொண்டிருக்கும்பொழுதும், அல்லது சட்டங்களைக் கொண்டு வரும்பொழுதும், அப் பிரச்சினைகளைப் பற்றியும் அதற்குரிய மசோதாக்களைப் பற்றியும் பரிசீலனை செய்ய இவ்வித ஆய்வுத் குழுக்கள் நியமிக்கப்படுகின்றன. இந்த ஆய்வுக் குழுக்கள் அனுப்பும் விவரங்களிலிருந்து நல்ல முறையில் மக்கள் சபை உறுப்பினர்கள் புரிந்து கொள்கிறார்கள். எவ்வளவு ஆய்வுக் குழுக்களை நியமனம் செய்வது என்பது அடிக்கடி மாறிக் கொண்டே இருக்கும். ஒவ்வொரு பாராளுமன்ற தொடர் கூட்டத்திலும் சில ஆய்வுக் குழுக்கள் அமைக்கப்படுகின்றன. பாராளுமன்ற உரிமைகள், பொது நிதி மதிப்பீடு, விண்ணப்பங்கள், அறிக்கைகள், வெஸ்ட் மினிஸ்டர் அரண்மனையில் உள்ள சமையல் மற்றும் சிற்றுண்டி தயாரிப்புக்களைக் கவனித்தல் ஆகிய பல பிரச்சினைகளைக் கவனிக்கவும் ஆய்வுக் குழுக்கள் நியமிக்கப்படுகின்றன. ஒவ்வொரு ஆய்வுக் குழுவும் அதனுடைய தலைவரைத் தேர்ந்தெடுத்துக் கொள்கிறது. ஒவ்வொரு குழுவிலும் நிகழ்கின்ற நடவடிக்கைகளைப் பற்றி முழு விவரங்களையும் பதிவு செய்து கொள்கின்றனர். பாராளுமன்ற கூட்டத்தின் முடிவில் பிரசுரிக்கப்படும் பத்திரிகைளிலும், பிரசுரங்களிலும் அக் குழுக்களின் அறிக்கைகள் வெளியிடப்படும். அவ் வறிக்கைகளை வெளியிட்ட பிறகு அந்த ஆய்வுக் குழுக்கள் கலைக்கப்படுகின்றன. மீண்டும் பாராளு மன்றம் கூடும்பொழுது அதே பிரச்சினைகளைப் பரிசீலனை செய்ய வேண்டுமென்றாலும் வேறு ஆய்வுக் குழுக்களை நியமனம் செய்து கொள்வர். பொதுவாக மூன்று விதமான ஆய்வுக் குழுக்களை நியமனம் செய்கின்றனர்.

1. ஒவ்வொரு பாராளுமன்ற தொடர் கூட்டத்திற்கும் நியமனம் செய்யப்படும் ஆய்வுக் குழுக்கள் **(Sessional)** 2. தற் காலிக ஆய்வுக் குழுக்கள் **(Adhoc Select Committees)** 3. சிறப்பான ஆய்வுக் குழுக்கள் **(Specialist)**

### 4. கூட்டுக் குழுக்கள் (Joint Committees)

19-ஆவது நூற்றாண்டு முதற்கொண்டு கூட்டுக் குழுக்கள் முறையாகப் பயன்படுத்தப்படுகின்றன. இரண்டு சபைகளுக்கும் பொதுவான அரசியல் அல்லாத பிரச்சினைகளைக் கவனிக்க கூட்டு குழுக்கள் நியமிக்கப்படுகின்றன. தவிர சில கருத்துகளின் அடிப்படையில் எழுகின்ற தனியார் மசோதாக்களைப் பரிசீலனை செய்யவும் இவ்வித கூட்டுக் குழுக்கள் நியமிக்கப்படுகின்றன. ஒரு கூட்டுக் குழுவில் ஒவ்வொரு சபையிலும் உள்ள ஒரு சில ஆய்வுக் குழு உறுப்பினர்களை நியமனம் செய்வதுண்டு. ஒவ்வொரு சபை யிலிருந்தும் ஒரே எண்ணிக்கையான உறுப்பினர்களை இக் குழுவில்

நியமனம் செய்வர். இக் குழுவின் தலைவர் வழக்கமாக ஒரு பிரபுவாகத்தான் இருப்பார். இக் குழுவின் அறிக்கைகளை அந்தந்த சபை உறுப்பினர்கள் அவரவர்களது சபைகளுக்கு அனுப்புவர்.

### 5. தனியார் மசோதா குழுக்கள் (Private Bills Committees)

இக் குழுக்களை இரண்டு வகைகளாகப் பிரிக்கலாம். (1) எதிர்ப்பின்றி கொண்டுவரப்படும் மசோதாக்களைப் பரிசீலனை செய்யும் குழு. இந்தக் குழுவில் வழிமுறை குழுவின் தலைவரும், உதவி தலைவரும் மற்றும் நான்கு உறுப்பினர்களும் இருப்பார்கள். ஏற்கனவே நியமனக் குழுவினால் தயாரிக்கப்பட்ட பட்டியலில் உள்ள உறுப்பினர்களைத் தேர்ந்தெடுத்துக்கொள்வர். (2) எதிர்ப்புடன் கொண்டுவரப்படும் மசோதாக்களைப் பரிசீலனை செய்யும் குழு இந்த மசோதாக்களை வழக்கமாக தனிப்பட்டோர் கொண்டுவருவர். இவற்றைப் பரிசீலனை செய்யும் குழுவில் ஒரு தலைவரும், மூன்று உறுப்பினர்களும் நியமனம் செய்யப்படுவர். இவர்களெல்லாம் நியமன குழுவினால் நியமனம் செய்யப்படுபவர்களாவர். இந்தத் தனியார் மசோதாவில் உறுப்பினர்களுக்கு எவ்வித சுயநலனும் இல்லை என்று அவர்கள் உறுதியளிக்க வேண்டும். இந்த மசோதாக்களைப் பற்றி பொதுமக்கள் அதிக ஆர்வம் காட்டாததால், உறுப்பினர்களும் இந்தக் குழுவில் பணியாற்றுவதில் ஆர்வம் காட்டுவதில்லை.

### பாராளுமன்ற உறுப்பினர்கள்

அமெரிக்க ஐக்கிய நாட்டிலும், ஃபிரான்சிலும் உள்ள கீழ் சபை உறுப்பினர்களுக்கும், பிரிட்டனில் உள்ள மக்கள் சபை உறுப்பினர்களுக்கும் நிறைய வேறுபாடுகள் உள்ளன. அமெரிக்க ஐக்கிய நாட்டில் உள்ள மேல் சபையான ‘செனேட்’ (Senate)-ல் உள்ள உறுப்பினர்கள் கட்சி கட்டுப்பாட்டிற்குள் வர மிகவும் முயற்சி எடுத்துக் கொள்ளப்படுகிறது. அமெரிக்க ஐக்கிய நாட்டின் கீழ் சபையான பிரதிநிதிகள் சபையில் ஓரளவிற்கு பிரதிநிதிகளுக்கு சுதந்திரமாக வாக்களிக்கும் உரிமை பெயரளவில் உள்ளது. தனிப்பட்ட உறுப்பினர்கள் விருப்பம்போல தீர்மானங்களில் வாக்களிக்கின்றனர். ஏனெனில் அங்கு அமைச்சவை ஆட்சி இல்லை. தனிப்பட்ட உறுப்பினர்கள் விருப்பம் போன்று வாக்களிப்பதால் அமைச்சவை வீழ்ச்சியுறுவதில்லை. இருந்தாலும் அவர்களுடைய சுதந்திரத்திற்கும் ஒரு வரையறை உண்டு. அவர்களும் கட்சி கட்டுப்பாட்டை மீற முடியாது. ஃபிரான்சில் அமைச்சவை ஆட்சி வேறு விதமாக அமைக்கப்பட்டிருக்கிறது. அமைச்சவையும் அங்கு பலவீனமாக

உள்ளது. அங்கு பாராளுமண்றம்தான் மிகவும் பலமுள்ளதாக அமைக்கப்பட்டிருக்கிறது. அதனால் ஃபிரஞ்சு பாராளுமன்றத்தின் கீழ் சபையான தேசிய சட்டசபையில் (National Assembly) உறுப்பினர்களுக்கு ஓரளவிற்கு சுதந்திரம் அளிக்கப்பட்டிருக்கிறது என்று கூறவேண்டும். ஆனால் பிரிட்டனிலுள்ள கீழ் சபையான மக்கள் சபை உறுப்பினர்கள் விருப்பம் போல நடந்து கொள்ளமுடியாது. அவர்கள் கட்சி கட்டுப்பாட்டின் விதி முறைகளைப் பின்பற்றித்தான் நடந்து கொள்ளமுடியும். இல்லையெனில் அமைச்சவை வீழ்ச்சியுறும் அதனால் அரசாங்கத்தின் நிலையான தன்மையை மனதில் கொண்டு, உறுப்பினர்கள் தங்கள் சுதந்திர உணர்ச்சிகளைப் பிரிட்டனிலுள்ள பாராளுமன்றத்தில் அடக்கிக் கொள்கின்றனர். அப்பொழுதுதான் அவர்களுடைய முழு ஆதரவு அமைச்சவைக்குக் கிடைக்கும்.

**சம்பளங்கள்**

நீண்ட காலமாக மக்கள் சபை உறுப்பினர்கள் எவ்வித ஊதியத்தையும் பெறுமல் பணியாற்றி வந்தனர். அவர்கள் அரசருக்குச் செய்யும் சேவையாகவே இப் பணியைக் கருதினர். ஆனால் 19-வது நூற்றுண்டில் மக்கள் சபை உறுப்பினர்களுக்கு சிறிது பணம் கொடுக்கப்பட்டது. இந்த நூற்றுண்டின் துவக்கத்தில் மக்கள் சபை உறுப்பினர்களுக்கு ஆண்டுக்கு 400 பவுன்கள் சம்பளமாகக் கொடுக்கப்பட்டது. அந்தச் சம்பளம் 1937-ல் 600 பவுன்களாகவும், 1946-ல் 1000 பவுன்களாகவும் அதிகரிக்கப்பட்டது. லண்டனில் அவர்கள் வீடு அமைத்துக்கொண்டும் அலுவலகத்தை வைத்துக் கொண்டும் இருப்பது அவர்களால் முடியவில்லை என்பதால் மீண்டும் அவர்களுடைய சம்பளத்தை அதிகரிக்க முயற்சிகள் மேற்கொள்ளப் பட்டன. எல்லா அரசியல் கட்சிகளும் கூடி ஒரு மாநாட்டை நடத்தி, மக்கள் சபை உறுப்பினர்களின் சம்பளத்தை 1500 பவுன்களாக அதிகரிக்க வேண்டும் என்று அரசாங்கத்தைக் கேட்டுக் கொண்டனர். அப்பொழுதுள்ள கன்சர்வேடிவ் அரசாங்கம் இந்த வேண்டுகோளை நிராகரித்து விட்டது. அதற்குப் பின்னர் 1957-ல் உறுப்பினர்கள் சம்பளம் ஆண்டுக்கு 1000 பவுன்கள் என்றும், 750 பவுன்கள் செலவுப்படியாகவும் கொடுக்கப்பட்டது. 1939-முதற் கொண்டு உறுப்பினர்களுக்கு ஒரு சிறிய தொகை ஓய்வுப் பணமாகக் கொடுக்கப்பட்டு வருகின்றது. இந்தப் பணம் மிகவும் சிறிய தொகையாக இருப்பதால், அரசாங்கம் இவர்களுக்கு ஏதோ தருமம் கொடுப்பதைப் போன்று சிலர் கருதினர். உறுப்பினர்களே அவர்களுடைய ஓய்வு நிதிக்கு பணம் அளித்து வந்தனர். 1957-வரை யிலும் பொது நிதியிலிருந்து உறுப்பினர்களுக்கு ஓய்வு பணம்

கொடுப்பதற்கு அதிக ஆதரவு கிடைக்கவில்லை, அமெரிக்க ஐக்கிய நாட்டில் பிரதிநிதிகளுக்கு அளிக்கப்படும் அலுவலகச் செலவுகளும் பிரயாணப்படி செலவுகளும் ஆங்கிலேய உறுப்பினர்களுக்கு அளிக்கப்படுவதில்லை. ஆனால் ஆங்கிலேய உறுப்பினர்களுக்கும் அவர்கள் தொகுதிகளிலிருந்து அடிக்கடி பாராளுமன்றத்திற்கு வரப் போக 'இலவச ரயில்வே சலுகைகள் கொடுக்கப்பட்ட போதிலும், அலுவலகங்களை வைத்துக்கொள்ளவும், உதவியாளர்களை வைத்துக் கொள்ளவும்," ஆகும் செலவினங்களைக் கொடுப்பதில்லை.

# 5. பிரபுக்கள் சபை

## பாராளுமன்ற மேலவை

## ( THE HOUSE OF LORDS )

ஒரு நூற்றாண்டுக் காலத்திற்கு முன்னர் பிரபுக்கள் சபை மிகவும் முக்கியத்துவம் வாய்ந்ததும், மதிப்பிற்குரியதாகவும் இருந்தது. இப்பொழுது பிரபுக்கள் சபை வலிமை இழந்து, மக்கள் சபையின் நிழலில் நீடித்திருக்க வேண்டிய அவசியம் ஏற்பட்டுள்ளது. அதனுடைய அதிகாரங்கள் மிகவும் குறைக்கப்பட்டு விட்டன. பிரபுக்கள் சபை இரண்டாம் சபையாக மட்டுமில்லாது, இரண்டாம் தர சபையாகவும் இப்பொழுது நீடித்து வருகிறது. பிரிட்டனில் உள்ள ஒருமுக அரசாங்கத்திற்கு ஒரு மேல்சபை தேவையில்லையென்றும், அதுவும் பொது மக்களைப் பிரதிபலிக்காத பிரபுக்கள் சபை தேவை இல்லை என்றும் அதற்கு எதிர்ப்பு ஏற்பட்டுக் கொண்டே இருக்கிறது. எனினும் பழமையின் சின்னமாக பிரபுக்கள் சபை இன்னும் நீடித்து வருகிறது. ஆங்கிலேய மக்கள் பொதுவாக பழமையை அதுவும், குறிப்பாக அவர்களுடைய பழைய நிறுவனங்களை விரும்புகிறார்கள். அதனால் பிரபுக்கள் சபையும் ஓர் அலங்காரச் சபையாக இன்னும் நீடித்து வருகிறது.

இந்த பிரபுக்கள் சபையில், அரச குடும்பத்தைச் சார்ந்த இளவரசர்கள், பரம்பரைப் பிரபுக்கள், ஆயுட்கால பிரபுக்கள், ஸ்காட்லாந்து பிரபுக்களின் பிரதிநிதிகள், அயர்லாந்து பிரபுங்களின் பிரதிநிதிகள், சட்ட பிரபுக்கள் (Law Lords) மதப் பிரபுக்கள் ஆகியோர். ஏறக்குறைய 800 முதல் 900வரையிலும் உறுப்பினர்களாக உள்ளனர்.

பிரபுக்கள் சபையிலுள்ள அதிகாரிகளை அனைவரும் நியமனம் செய்யப்படுகின்றவர்களாவர். பிரபுக்கள் சபையின் கூட்டங்களுக்கு தலைமை வகிப்பவர் சான்சலர் பிரபு. அவர் பிரபுவாக அச் சமயத்தில் இல்லையெனில் பிரபுவாக உடனே அவருடைய தகுதி உயர்த்தப்படும். பிரபுக்கள் சபையில் தலைமை வகிக்கின்ற சான்சலர் பிரபு, பிரபுக்கள்

சபையில் அமைதியையும், ஒழுங்கையும் பாதுகாக்க வேண்டிய அவசிய மில்லை. பிரபுக்கள் சபையே அப் பணியைச் செய்து கொள்ளும். பிரபுக்கள் சபை கூட்டங்களில் யார் பேசுவது என்பதையும் அச்சபையே முடிவு செய்து கொள்ளும் தவிர பிரபுக்கள் சபையில், பிரபுக்கள் பேசும் பொழுது தலைவரை விளித்துப் பேச வேண்டியதில்லை, எமது பிரபுக்களே (My Lords) என்று பிரபுக்களை விளித்துப் பேசினால் போதும். மற்ற அரசியல் கட்சி உறுப்பினர்களைப் போன்று சான்சலர் பிரபு சாதாரணமாக பேசலாம்; சாதாரணமாக கட்சி உணர்வோடு வாக்களிக்கலாம். ஆனால் சான்சலர் பிரபுக்கு முடிவு நிர்ணய ஓட்டு (Casting Vote) கிடையாது.

பிரபுக்கள் சபையில் ஒரு பொதுப்படையாக நிலைக் குழுக்களை அமைப்பதோ அல்லது ஆய்வுக் குழுக்களை அமைப்பதோ செய்வ தில்லை. பிரபுக்கள் சபை விரும்பினால் அவ்வித குழுக்களை அமைத்துக் கொள்ளலாம். அக் குழுக்களை அமைக்கும் பொழுதே அவைகளின் தலைவர்களையும் நியமனம் செய்துவிடுவார்கள். இரண் டாவது வாசிப்பிற்கும், மூன்றாவது வாசிப்பிற்கும் இடையே மசோதாக் களைப் பற்றி அதிக விவரங்கள் தேவைப்பட்டால், இம் மசோதாக்களை இக் குழுவினர்களிடம் அனுப்பி வைப்பர்.

ஒரு நூற்றாண்டுக்கு முன்னர், பிரபுக்கள் சபை மிகவும் மதிப்பிற் குரிய சபையாக இருந்து பணியாற்றி வந்துள்ளது. மூன்னர் மக்கள் சபையைக் காட்டிலும், பிரபுக்கள் சபைதான் கவர்ச்சியாக இருந்துள் ளது. ஆங்கிலேய வரலாற்றில் அதனுடைய பணியை மறந்து விடுவதற்கில்லை. ஆனால் இந்த நூற்றாண்டில்தான் பிரபுக்கள் சபையின் நிலை மிகவும் 'சிக்கலாக' மாறிவிட்டது. அதனுடைய எதிர்காலம் எப்படியிருக்கும் என்று உறுதியாகச் சொல்வதிற்கில்லை.

பிரபுக்கள் சபை நீண்ட காலமாகவே இறுதி முறையீட்டு நீதிமன்றமாகப் பணியாற்றி வருகிறது. (Final Court of Appeal) பிரபுக்கள் சபை இந்தப் பணியாற்றுவதில் பொதுப்படையான அதிருப்தி நிலவியதால், பிரபுக்கள் சபையில் 19-வது நூற்றாண்டின் பிற்பகுதியில் சில சட்ட பிரபுக்களை (Law Lords) நியமனம் செய்தனர். சட்டம் தெரிந்த பிரபுக்கள் முறையீட்டு வழக்குகள் விசாரித்து வந்ததால், மக்களிடையே காணப்பெற்ற பொதுப்படை யான அதிருப்தி அகன்றது. ஆனால் பிரபுக்கள் சபை சட்டமியற்றும் வேலையைச் செய்வது இந்த நூற்றாண்டிலுள்ள மக்களால் பொறுத்துக் கொள்ள முடியவில்லை. பிரபுக்கள் சபை சட்டமியற்றும் பணியாற்று வதை மக்கள் விரும்பாததற்கு மூன்று காரணங்கள் கூறப்படுகின்றன.

(1) இச் சபையிலுள்ள 90 சதவிகித உறுப்பினர், பரம்பரைப் பிரபுக்களாவர். அவர்கள் பிரபுக்களாக இருக்கின்ற காரணத்தாலேயே, பிரபுக்கள் சபையில் உறுப்பினர்களாக இருக்கத் தகுதி பெற்றவர்களாகிறார்கள். இந்த பிரபுக்களுக்கு அவ்வளவு முக்கியத்துவம் கொடுக்க வேண்டியதில்லை என்று மக்கள் அபிப்பிராயப்படுகின்றனர். (2) பிரபுக்கள் சபையில் பெரிய நிலப் பண்ணையாளர்களும், தொழிலதிபர்களும் பிரதிநிதித்துவம் பெற்றுள்ளதைப் போன்று நடுத்தர வகுப்பினரும், தொழிலாளர்களும் இச் சபையில் பிரதிநிதித்துவம் பெறாதது ஒரு குறைபாடாகக் கருதப்படுகிறது. (3) பிரபுக்கள் சபையிலுள்ள உறுப்பினர்கள் கன்சர்வேடிவ் கட்சியை மட்டுமே ஆதரிக்கின்றவர்களாக இருப்பதால், அச் சபையின் மீது மக்களுக்கு அதிருப்தி ஏற்பட்டுள்ளது' மற்ற பல குறைபாடுகளையும் எடுத்துக் கூறியபோதிலும் அவை அவ்வளவு முக்கியமானதாகக் கருதப்படவில்லை. சான்றாக, பிரபுக்கள் சபை உறுப்பினர்கள் கூட்டங்களுக்கே வருவதில்லையென்றும், முப்பது உறுப்பினர்கள் வந்தால் அதுவே பெரிய காரியம் என்றும் கருதுகிறார்கள். ஒவ்வொரு சமயத்தில் மூன்று உறுப்பினர்கள் இருந்தாலே, 'கோரம்' போதுமானது என்று கருதப்படுகிறது. ஆனால் பிரபுக்கள், இச் சபை கூட்டங்களில் அதிகமாக வராததால் இச் சபை கலைக்கப்பட வேண்டுமென்று மக்கள் கருதவில்லை. மக்களாட்சிக் கருத்துகள் மக்களிடையே ஆழமாகப் பதிந்துள்ள இக்காலத்தில் பிரபுக்கள் சபை தேவைதானா என்ற கேள்வி பிறக்கிறது.

1832-க்கு முன்னர், பாராளுமன்றம் பிரபுக்களின் ஆதிக்கத்திலிருந்தது, சட்டங்களை இயற்றுவது, நீதி பரிபாலனம் செய்தல், நிர்வாகம் நடத்துதல் ஆகிய எல்லா பொறுப்புகளிலும், பிரபுக்கள் அல்லது சொத்துடையவர்கள் ஆதிக்கம் செய்து வந்தனர். அதனால் பிரபுக்கள் சபை கீழ் சபையான மக்கள் சபையுடன் எல்லா வகைகளிலும் சம அதிகாரங்கள் பெற்றிருந்தன. அப்பொழுது ஜனநாயக ஆட்சி என்பது பெயரளவில்தான் இருந்தது. பிரதிநிதித்துவ முறை மிகவும் குறைந்த அளவில்தான் இருந்தது. ஆனால் 1832, 1867, 1884 ஆகிய ஆண்டுகளில் இயற்றப்பெற்ற பாராளுமன்ற சீர்திருத்தச் சட்டங்கள் மக்கள் சபையில் சில முக்கியமான மாற்றங்களை செய்தன. மக்களின் பிரநிதித்துவம் சிறிது பரவலாக அமைந்தது. ஜனநாயக முறையில், முதன் முதலாக மக்கள் சபையில் சிறிது முன்னேற்றமான சீர்திருத்தங்கள் கொண்டுவரப்பெற்றன. ஆனால் அதே சமயத்தில் பிரபுக்கள் சபையில் எவ்வித மாற்றமும் ஏற்படவில்லை. அப்பொழுதும் அந்த சபை சொத்துடையவர்கள், பிரபுக்கள் ஆகியோரின் நலன்களைப் பாதுகாக்கத்தான் அக்கறை காட்டியது. மிகப் பழைய கொள்கைகளையும் கோட்பாடுகளையும் சிறிதும்

விட்டுவிடத் தயாராக இல்லை. அதனால் மக்கள் சபையில் நிறைவேற்றம்படும் மசோதாக்கள் பிரபுக்கள் சபையில் நிறைவேறுவது மிகவும் கடினமாகிவிட்டது. முன்னேற்றக் கருத்துகளைக் கொண்ட மசோதாக்களுக்கு பிரபுகள் சபை முட்டுக் கட்டையாக இருந்தது. மக்கள் சபையும், மற்ற அரசாங்க நிறுவனங்களும் காலத்திற்கேற்ப பெரிய மாறுதல்களுக்குள்ளாகி வருகின்ற பொழுது, மாற்றங்களையே அனுமதிக்காத பிரபுக்கள் சபை அரசியலில் செல்லாக் காசாகப் பாவிக்கப்பட்டு வருகிறது. கிளாட்ஸ்டன் காலத்தில் பெரும்பான்மை யான பிரபுக்கள் கன்சர்வேடிவ் கட்சியை ஆதரிக்க முன் வந்தனர், அப்பொழுதிருந்து இன்றுவரை, பிரபுக்கள் சபையில் கன்சர்வேடிவ் களைத் தவிர மற்ற அரசியல் கட்சியினருக்கு இடமில்லையென்றாகி விட்டது. பிரபுக்கள் சபை முழுவதும் கன்சர்வேடிவ் கட்சியாக இருக்கும்பொழுது, மசோதாக்கள் சட்டமாக நிறைவேற்றப்பட வேண்டுமென்றால் பிரபுக்கள் சபையின் சம்மதமும் அவசியம் வேண்டுமென்ற நிலைமை இருந்ததால் மக்கள் சபையில் வேறு கட்சியினர் பதவியில் இருந்தால் முட்டுக் கட்டைகள் அதிகமாக ஏற்பட்டுக் கொண்டிருந்தன. அதனால் பிரபுக்கள் சபையின் அதிகாரங்களை கட்டுப்படுத்த வேண்டிய அவசியம் ஏற்பட்டது. 1893-ல் பதவியிலிருந்த கிளாட்ஸ்டன் அரசாங்கம் எந்தச் சட்டத்தை யும் இயற்ற முடியாத நிலை ஏற்பட்டுவிட்டது. ஏனெனில் பிரபுக்கள் சபை ஒவ்வொரு மசோதாவையும் நிராகரித்து விட்டது. கேம்ப்பெல்-பேனர்மேன் (The Campbell-Bannerman) அமைச்சவை 1905-ல் மக்கள் சபையில் மிக அதிக பெரும்பான்மையைப் பெற்றிருந்த போதிலும், பிரபுக்கள் சபையின் எதிர்ப்பு காரணமாக எதையும் செய்ய முடியவில்லை. ஹெர்பர்ட் ஆஸ்குவித் (Herbert Asquith) பிரதம அமைச்சராக இருந்தபொழுது 1909-ல் அவருடைய நிதி மசோதா ஒன்றை பிரபுக்கள் சபை நிராகரித்தது. லிபரல் கட்சியினர் அரசாங்கம் நாட்டின் வருவாயை அதிகரிக்க சில வரியையும் மற்ற சொத்துக்களின் மீது வரியையும் விதித்து ஒரு நிதி மசோதாவை நிறைவேற்றி பிரபுக்கள் சபைக்கு அனுப்பினர். பிரபுக்கள் சபை இந்த மசோதாவை நிராகரிக்கவே, ஆஸ்குவித் பிரபுக்கள் சபையின் அதிகாரங்களைக் குறைக்காமல் அரசாங்கத்தை நடத்த முடியாது என்று கூறி விட்டார். அதனால் பிரபுக்கள் சபையின் அதிகாரக் குறைப்பை ஓர் பிரச்சினையாக வைத்து 1910-ல் பொது தேர்தல்கள் நிகழ்ந்தன. இந்தத் தேர்தலுக்குப் பின்னர் அரசாங்கத்தின் பாராளுமன்ற மசோதா 1911-ல் சட்டமாக நிறைவேற்றப்பட்டது.

1911-ல் இயற்றப்பெற்ற பாராளுமன்றச் சட்டம் (The Parliament Act of 1911) ஆங்கிலேய அரசியல் அமைப்பில் மிக

முக்கியமான மாறுதலை ஏற்படுத்தியது. அதாவது, ஒரு நிதி மசோதாவை நிராகரிக்கும் அதிகாரம் பிரபுக்கள் சபைக்கு இனிமேற் கொண்டு கிடையாது என்று திட்டவட்டமாக இச் சட்டம் அறிவித்தது. மக்கள் சபையிலிருந்து அனுப்பப்பெற்ற ஒரு நிதி மசோதா, பிரபுக்கள் சபையில், அந்த மசோதாவில் எவ்வித திருத்தத்தையும் செய்யாது ஒரு மாத காலத்திற்குள் நிறைவேற்றி அனுப்ப வேண்டுமென்றும், இல்லாவிடில் ஒரு மாத காலம் முடிந்த பின்னர், அந்த மசோதா அரசரின் சம்மதத்தைப் பெற்று, சட்டமாக அறிவிக்கப் படும் என்று இந்தச் சட்டம் கூறுகிறது. நிதி மசோதா என்பது வரி விதிப்பு மட்டுமல்லாது, செலவினங்கள், கடன்கள், தணிக்கை ஆகிய பொருள்களைப் பற்றியதுமாகும் என்று விளக்கம் கொடுக்கப் பட்டுள்ளது. எது நிதி மசோதா என்பதை நிர்ணயம் செய்யும் பொறுப்பு மக்கள் சபையில் உள்ள சபாநாயகருடையதாகும். இது பற்றி, அவர் கூறுகின்ற தீர்ப்பே முடிவானதாகும். மற்றும் சாதாரண மசோதாக்களானாலும், மக்கள் சபையில் தொடர்ச்சியாக மூன்று கூட்டங்களில் அவை நிறைவேற்றப்படுமாயின் பிரபுக்கள் சபையின் ஒப்புதல் இருப்பினும் இல்லாவிடினும் அவை சட்டமாகிவிடும் என்றும் அச் சட்டம் அறிவித்தது. தவிர பாராளு மன்றத்தின் காலம் ஏழு ஆண்டுகளிலிருந்து ஐந்து ஆண்டுகளுக்குக் குறைக்கப்பட்டது. இதனால் பிரபுக்கள் சபை ஒரு மசோதாவை அறவே ரத்து செய்யும் அதிகாரம் ஒழிக்கப்பெற்றது. பிரபுக்கள் சபை சாதாரண மசோதாக்களை இரு முறை நிறுத்தி வைக்கத்தான் முடியும். இந்தச் சட்டம் நிறைவேற்றப்பட்டதற்குப் பின்னர், லாயிட் ஜார்ஜின் பட்ஜட் மூன்று முறை மக்கள் சபையில் நிறைவேறி விட்டதால் அது, பிரபுக்கள் சபைக்குப் போகாமலேயே செயலாற்றப்பட்டது. அதனால் இந்தச் சட்டம் பிரபுக்கள் சபையின் அதிகாரத்தை மிகவும் குறைத்து விட்டது.

பிரபுக்கள் சபையின் அதிகாரங்கள் குறைக்கப்பட்ட பின்னர், அச் சபை நாட்டிற்குத் தேவைதானா என்ற பிரச்சினை கிளம்பியது. ஒரு மேல்சபை, பாராளுமன்ற ஆட்சிமுறைக்குத் தேவையானது தான் என்று வைத்துக் கொண்டாலும் பரம்பரை பிரபுக்கள் மட்டும அந்த மேல் சபையில் உறுப்பினராக இருப்பது ஏன் என்ற கேள்வி எழுந்த வுடன், பிரபுக்கள் சபை அமைப்பில் மாறுதல்களைக் கொண்டு வரவேண்டுமென்று விரும்பினர். அதற்குள் முதல் உலகப் போர் ஏற்பட்டதால், இந்தப் பிரச்சினை அவ்வளவு முக்கியத்துவம் வாய்ந்த தாக கருதப்படவில்லை. இருப்பினும் 1918-ல் மேல்சபையில் என்ன சீர்திருத்தங்களைக் கொண்டு வருவது என்பதைப் பற்றி பரிசீலனை செய்ய பிரைஸ் பிரபுவின் (Lord Bryce) தலைமையில் ஒரு குழு

அமைக்கப்பெற்றது. இதற்காக கூட்டப்பெற்ற மாநாட்டில் பிரபுக்கள் சபையில் கொண்டு வர வேண்டிய சில சீர்திருத்தங்களை முடிவு செய்தனர்.

பிரபுக்கள் சபையில் சீர்திருத்தங்களைக் கொண்டுவந்தாலும், பழைய பிரபுக்கள் சபைக்கும், சீர் அமைக்கப்படும் பிரபுக்கள் சபைக்கும் 'தொடர்ச்சி' இருக்க வேண்டுமென்றும், அது பொதுமக்களுடன் தொடர்பு கொள்ளும் சபையாக இருக்க வேண்டுமென்றும், ஆலோசனைகளைக் கூறியது. தவிர, அச் சபையில் எப்பொழுதும், ஒரே மாதிரியான ஓர் அரசியல் கட்சியின் ஆதிக்கம் இருக்க கூடாதென்றும் அறிவித்தது. மற்றும் பிரபுக்கள்சபை உறுப்பினர்களின் எண்ணிக்கை 327 ஆக குறைக்கப்பட வேண்டுமென்றும், அவர்களில் 81 உறுப்பினர்கள் பாராளுமன்றத்தின் இரு சபைகளிலிருந்தும் அமைக்கப்பட்ட ஒரு கூட்டுக் குழுவின் மூலமாக பிரபுக்கள் சமுதாயத்திலிருந்து தேர்ந்தெடுக்கப்பட வேண்டுமென்றும், மற்ற 246 உறுப்பினர்கள் 13 தேர்தல் குழுக்களால் (Electoral Colleges) தேர்ந்தெடுக்கப்பட வேண்டும் என்று ஆலோசனை கூறினர். இந்தத் தேர்தல் குழுக்களில், ஒவ்வொரு மாவட்டத்திலும் உள்ள பாராளுமன்ற உறுப்பினர்கள் அந்தந்த மாவட்டங்களிலுள்ள பிரபுக்களை தேர்ந்தெடுக்க வேண்டுமென்றும், அச் சபையின் ஆயுள் 12 ஆண்டு காலம் இருக்க வேண்டுமென்றும், இரு பிரிவுகளின் உறுப்பினர்கள் ஒவ்வொரு நான்கு ஆண்டுகளுக்குப் பின்னர் விலகவேண்டுமென்றும் ஆலோசனை கூறியது. பிரைஸ் பிரபுவின் (Lord Bryce) ஆலோசனைகளை யாரும் அதிகமாகப் பொருட்படுத்தவில்லை. அவை நடைமுறைக்குப் பயனற்ற ஆலோசனைகள் என்று கருதப்பெற்றன. லாயிட்ஜார்ஜ் கூட்டு அமைச்சரவை இந்த ஆலோசனைகளைச் செயலாற்ற முயற்சி செய்தது. ஆனால் பொது மக்கள் இப் பிரச்சினையில் சிறிதும் கவலை கொள்ளாததால், இதை அப்படியே விட்டு விட்டார். 1924-1929-ல் பதவியிலிருந்த கன்சர்வேடிவ் கட்சியின் பிரதம அமைச்சரான ஸ்டான்லி பால்டுவின் (Stanley Baldwin) இப் பிரச்சினையை கவனிப்பதாகக் கூறினார். ஆனால் மேற்கொண்டு அவர் ஒன்றும் செய்யவில்லை. அதற்குப் பின்னர் பதவிக்கு வந்த தொழிற்கட்சி அமைச்சர்கள் இப் பிரச்சினைக்கு அதிக முக்கியத்துவம் கொடுக்கவில்லை. இப் பிரச்சினை அப்படியே நின்று விட்டது.

1945-ல் நிகழ்ந்த பொதுத் தேர்தலுக்குப் பின்னர், தொழிற்கட்சி மக்கள் சபையில் நல்ல பெரும்பான்மைப் பெற்றது. பிரபுக்கள் சபையில் சில சீர்திருத்தங்களைக் கொண்டு வரவேண்டிய அவசியமும் ஏற்பட்டது. தொழிற்கட்சியின் மசோதாக்களைப் பிரபுக்கள் சபை

புதிய கண்ணோட்டத்துடன் பரிசீலனை செய்து சில குறைகளைத் தான் சுட்டிக்காட்டியதே தவிர, மசோதாக்களை நிறைவேற்றி வைத்தது. தேசியமயமாக்கும் சில திட்டங்களையெல்லாம் பிரபுக்கள் சபை நிராகரிக்கவில்லை; ஆனால் அவற்றை நிறைவேற்ற காலதாமதம் செய்தது. போக்குவரத்து தேசியமயமாக்கும் மசோதா, தேசிய சுகாதார மசோதா, நகர்புறத் திட்ட மசோதா ஆகிய மசோதாக்களில் பிரபுக்கள் சபை நிறைய திருத்தங்களைக் கொண்டு வந்தது. காலதாமதத்தைத் தவிர்ப்பதற்காக, இந்தத் திருத்தங்களை தொழிற்கட்சி அமைச்சவை ஏற்றுக்கொள்ள நேரிட்டது. அதனால் பிரபுக்கள் சபையின் அதிகாரங்களைக் குறைக்க வேண்டிய அவசியம் ஏற்பட்டது. மற்றொரு தேர்தலில் இந்தப் பிரச்சினையை மக்கள் முன்னிலையில் வைத்து தீர்த்துக்கொள்வது என்று தான் அப்பொழுது அமைச்சவை கருதியது. ஆனால் காலதாமதம் ஆகின்றது என்ற காரணத்தால், 1911-ல் இயற்றப்பெற்ற பாராளுமன்றச் சட்டத்தையே திருத்தம் செய்வது என்று முடிவு செய்தனர். அதனால் 1947-ல் 1911- பாராளுமன்றச்சட்டத்தின் திருத்த மசோதாவைக் கொண்டு வந்தனர். அதன்படி மூன்று பாராளுமன்ற கூட்டங்கள் என்பதற்கு பதிலாக இரண்டு கூட்டங்களே போதும் என்றும், இரண்டு ஆண்டுகள் காலதாமதம் செய்யலாம் என்பதை ஓராண்டுக் காலத்திற்குக் குறைத்தும், மக்கள் சபையில் மசோதாவை நிறைவேற்றினர். இம் மசோதாவை கன்சர்வேடிவ் கட்சியினர் மிகவும் வன்மையாக எதிர்த்தனர்.

அதற்கு சாலிஸ்பரி பிரபுவின் (Marquis of Salisbury) தலைமையில் ஒரு கன்சர்வேடிவ் கட்சியின் கோஷ்டி, பிரபுக்கள் சபையில் சில சீர்திருத்தங்கள் கொண்டுவருவதைப் பற்றி ஆலோசனை கூறினர். அவர்களின் திட்டப்படி, பிரபுக்கள் சபையில் நிரந்தரமான பரம்பரை பிரபுக்கள் வீற்றிருப்பது ஒழிக்கப்பட வேண்டுமென்றும். பிரபுக்கள் எண்ணிக்கை குறைக்கப்பட வேண்டுமென்றும், நாட்டிற்கு நல்ல சேவை செய்த பிரபுக்களை மட்டும் நியமிக்க வேண்டுமென்றும் ஆலோசனை கூறினர். இவர்கள் நடத்திய பேச்சு வார்த்தைகளில் எல்லாம் தொழிற் கட்சி அமைச்சர்கள் பங்கெடுத்து கொண்டனர். ஆனால் இரு கட்சிகளிடையே எந்த முடிவும் ஏற்படவில்லை. பின்னர் இன்னும் சில மாற்றங்கள் செய்யப்பெற்றன. அதன்படி, பிரபுக்களின் சேவையை அடிப்படையாக வைத்து அவர்களை நியமனம் செய்ய வேண்டுமென்றும், பெண்களும் பிரபுக்கள் சபையில் அநுமதிக்கப்பட வேண்டுமென்றும், எந்த ஓர் அரசியல் கட்சியும் நிரந்தரமான ஆதிக்கத்தைப் பெறக் கூடாதென்றும், பிரபுக்கள் சபையில் இல்லாத பிரபுக்கள் மக்கள் சபை தேர்தல்களுக்குப்

போட்டியிடத் தகுதி பெற வேண்டும் என்றும் கூறினர், இந்த மாற்றங்களைச் செய்வதில் இரு அரசியல் கட்சிகளும் பொதுவாக ஒப்புக்கொண்ட போதிலும், பிரபுக்கள் சபையின் அதிகாரங்களைப் பற்றி பேசும்பொழுது இவ்விரு கட்சிகளிடையே கருத்து வேறுபாடு கள் தோன்றின.

இவ்வித பேச்சு வார்த்தைகள் நிகழ்ந்து கொண்டிருக்கும்பொழுது பிரபுக்கள் சபை ஜூன் 9, 1948-ல் சீர்திருத்த மசோதாவை நிராகரித்தது. தொழிற் கட்சி அரசாங்கத்திற்கு அப்பொழுது ஒரு சிக்கலான நிலைமை ஏற்பட்டது. ஏற்கனவே ஒப்புக்கொண்ட அனைத்துக் கட்சி முடிவுகளை ஏற்றுக் கொள்வதா, அல்லது திருத்த மசோதாவை மீண்டும் கொண்டு வருவதா என்று முடிவு செய்யாது அமைச்சவை தவித்துக் கொண்டிருந்தது. பின்னர், திருத்த மசோதாவை மீண்டும் கொண்டு வருவதென்று முடிவு செய்தனர். 1911-பாராளுமன்றச் சட்டப்படி, ஒரு மசோதா மக்கள் சபையில் மூன்று தொடர்ச்சியான கூட்டங்களில் நிறைவேற்றப்பட்டு, அதற்குள் இரண்டு ஆண்டுகள் முடிந்தால், பிரபுக்கள் சபை அந்த மசோதாவை நிராகரித்த போதிலும் அது சட்டமாக்கப்படும். 1949-வது ஆண்டில் இயற்றப்பெற்ற பாராளு மன்றச் சட்டப்படி பிரபுக்கள் சபை மசோக்களை இரண்டு பாராளு மன்ற கூட்டங்களுக்கு மட்டுமே காலதாமதம் செய்யமுடியும். அதிக அளவிற்குச் சென்றால் ஒரு வருடத்திற்கு அதனால் மசோதாக்களை நிறுத்தி வைக்கமுடியும். அதனால் பிரபுக்கள் சபையின் அதிகாரங் கள் இச் சட்டத்தின் மூலமாக பெரும் அளவிற்குக் குறைக்கப்பட்டு விட்டன. பிரபுக்கள் சபையை ஒழிக்காமலேயே, பிரபுக்கள் சபையின் அதிகாரங்களைக் குறைத்த போதிலும், பிரபுக்கள் சபையின் உறுப்பினர்களைப் பற்றி எந்த நடவடிக்கையும் எடுக்கவில்லை என்ற குறை இருந்து வருகிறது. 1949-51—ஆண்டுகளில் எந்த அரசியல் கட்சியும், இந்தப் பிரச்சினையில் அதிக ஆர்வம் காட்டவில்லை. 1951-ல் நிகழ்ந்த பொது தேர்தல்களில், மேலும் பிரபுக்கள் சபையில் சீர்திருத்தங்கள் கொண்டுவரப் போவதாக கன்சர்வேடிவ் கட்சி கூறியது. அனைத்துக் கட்சிகள் மாநாடு கூட்டப்பெற்றது. மீண்டும் பிரபுக்கள் சபை சீர்திருத்தங்களைக் கொண்டுவர வேண்டுமென்ற கன்சர்வேடிவ் கட்சியின் திட்டத்தைத் தொழிற் கட்சி ஏற்றுக் கொள்ளவில்லை. பல முறைகளும் பிரபுக்கள் சபையில் சீர்திருத்தங்களை கொண்டுவர வேண்டுமென்று கன்சர்வேடிவ் அரசாங்கம் கூறிக் கொண்டு வந்தது.

1957-ல் கன்சர்வேடிவ் அரசாங்கம் பிரபுக்கள் சபை பற்றிய ஒரு மசோதாவைக் கொண்டுவர வேண்டுமென்று விரும்பியது. பிரபுக்கள்

சபையிலுள்ள பாரம்பரை பிரபுக்கள் எண்ணிக்கையைக் குறைக்க வேண்டுமென்றும்; பிரபுக்கள் சபையில் உறுப்பினர்களாக இருக்க ஆயுட்கால பிரபுக்களை நியமிக்க வேண்டுமென்றும், பெண்களுக்கும் கூட அவ் வுரிமை கொடுக்கப்பட வேண்டுமென்றும், பிரபுக்கள் சபையில் பணியாற்றும் உறுப்பினர்களின் நல்ல சேவைகளுக்கு பணா ஈடு கொடுக்க வேண்டுமென்றும் என்ற அடிப்படையில் ஒரு மசோதாவைக் கொண்டுவரத் திட்டமிட்டனர். இதைப் பற்றிய அரசியாரின் பேருரைக்குப் பின்னர், மக்கள் சபையிலும், பிரபுக்கள் சபையிலும், மேற்கூறிய சீர்திருத்தங்களைப் பற்றி விவாதித்தனர். பிரபுக்கள் சபையில் நியமனம் செய்யப்படும் ஆயுட்கால பிரபுக்கள் எண்ணிக்கை மிகவும் குறைவாக இருக்கவேண்டுமென்று கூறிவந்தனர். ஒவ்வொரு ஆண்டிற்கும் பத்து ஆயுட்கால பிரபுக்களை நியமனம் செய்யலாம் என்ற அபிப்பிராயம் நிலவியது. ஆனால் கன்சர்வேடிவ் அரசாங்கம் எந்தக் குறிப்பிட்ட எண்ணிக்கையும் முதலிலேயே நிர்ணயம் செய்யவேண்டிய அவசியம் இல்லை என்று கருதியது. ஆயுட்கால பிரபுக்களை நியமனம் செய்வதால், பரம்பரை பிரம்புக்களை நியமனம் செய்யும் வழக்கத்தை விட்டுவிடுவதாக பொருளில்லை என்று கன்சர்வேடிவ் அரசாங்கத்தின் பிரதம அமைச்சர் கூறினர். பெண் பிரபுக்களை நியமனம் செய்வதைப் பற்றி விவாதம் நிகழ்ந்தது. ஆனால் பெண்களுக்கும் அந்த உரிமைகள் தரப்பட வேண்டுமென்று பின்னர் ஒப்புக் கொள்ளப்பட்டது. பிரபுக்கள் சபையில், பிரபுக்கள் வீற்றிருக்கும் பொழுது அவர்கள் தினசரி செலவுகளுக்கு ஒவ்வொருவருக்கும் 3 பவுன் 3 ஷில்லிங் கொடுக்கலாம் என்று ஒப்புக் கொள்ளப்பட்டது. 1957-ல் ஒப்புக் கொள்ளப்பட்ட ஆலோசனைகள், பிரபுக்கள் சபையில் கொண்டுவரப்படும் மிகச் சிறிய சீர்திருத்தங்களேயாகும் என்று கருதினர். நாற்பது ஆண்டுகளாகச் சீர்திருத்தங்களைக் கொண்டுவரப் போகின்றோம் என்று கூறிவந்த கன்சர்வேடிவ் கட்சி, பரம்பரை பிரபுக்களைப் பற்றி ஒன்றுமே செய்யாமல் விட்டுவிட்டதால், மக்கள், பிரபுக்கள் சபையை ஏன் கலைத்துவிடக் கூடாது என்று அபிப்பிராயப் பட்டனர்.

பிரபுக்கள் சபையில் என்ன சீர்திருத்தங்களைக் கொண்டுவந்த போதிலும் அச் சபை பழைய மதிப்பிற்குரிய நிலையைப் பெறமுடியாது 1911-க்குப் பின்னர் அச் சபையின் அதிகாரங்கள் மிகவும் குறைக்கப் பட்டு விட்டன. தொழிற் கட்சியும், கன்சர்வேடிவ் கட்சியும் கூட, பிரபுக்கள் சபைக்கு, மக்கள் சபைக்குக் கொடுக்கப்பட்டிருக்கும் அதிகாரங்களைப் போன்று சம அதிகாரங்கள் சட்டமியற்றும் பணிகளில் அளிக்க மாட்டார்கள் என்பது உறுதியாகிவிட்டது. பிரிட்டனுக்கு ஒரு மேல் சபை அவசியமா என்ற பிரச்சினையை அவர்கள்

இப்பொழுது தள்ளி வைத்துள்ளனர். பிரபுக்கள் சபை மீது பல குற்றச் சாட்டுகளையும், குறைபாடுகளையும் கூறினாலும் பிரபுக்கள் சபை ஆங்கிலேய அரசாங்கத்திற்கு நல்லவிதமாக பணியாற்றி வருகின்றது என்பதையும் காணலாம்.

பிரபுக்கள் சபை மூன்று விதங்களில் ஆங்கிலேய அரசாங்கத்திற்கு நல்ல சேவை செய்து வருகிறது. பிரபுக்கள் சபையில் உள்ள உறுப்பினர்கள், பழைய அமைச்சர்கள், அயல்நாட்டு தூதுவர்கள், இராணுவ தளபதிகள் மற்றும் நல்ல முதிர்ந்த அனுபவம் பெற்றவர்களாக உள்ளனர். மக்கள் சபையில் எல்லா மசோதாக்களையும் ஆர அமர பரிசிலனை செய்ய அவர்களுக்கு நேரம் கிடைப்பதில்லை. பிரபுக்கள் சபையில் அவ்வளவு அரசாங்கப் பொறுப்புகளும், அவசரமும் இல்லையென்ற காரணத்தால், அவர்கள் நிதானமாக மசோதாக்களைக் கவனித்து, அவர்களுடைய முதிர்ந்த அனுபவங்களின் காரணமாக நல்ல ஆலோசனைகளைக் கூறுகின்றனர். அவை அரசாங்கத்திற்குப் பயனுள்ளவையாக இருக்கின்றன. பிரபுக்கள் சபையில் நிகழும் விவாதங்களையும் சில ஆங்கிலேய மக்கள் கூர்ந்து கவனிக்காமல் இல்லை. பிரபுக்கள் சபை சட்டமியற்றுவதில் அதனுடைய அதிகாரங்களை இழந்துவிட்ட போதிலும், மக்கள் சபையிலிருந்து அனுப்பிடும் மசோதாக்களை நன்றாக பரிசீலனை செய்து சில குறைகளை எடுத்துக் கூறவும் சில திருத்தங்களைச் செய்ய வேண்டுமென்றும் ஆலோசனை கூறிவருகிறது. பல பிரச்சினைகளில் இப்பொழுது பிரபுக்கள் சபை, கட்சி சார்பற்ற ஆலோசனைகளையும், திருத்தங்களையும் கூறிவருவதால், அரசாங்கம் அவற்றைப் பெரும்பாலும் ஏற்றுக் கொள்கின்றது. அரசாங்கத்தின் கொள்கைகளுக்கு முரண்பட்டிருக்கும் திருத்தங்களை மட்டும் ஏற்றுக் கொள்வதில்லை. அதனால் பிரபுக்கள் சபை, மசோதாக்களை நன்கு பரிசிலனை செய்து குறைகளை எடுத்துக் கூறுவதால், அரசாங்கத்திற்கு நல்ல சேவை செய்கிறது. தவிர மக்கள் சபையில் வரும் எண்ணற்ற தனியார் மசோதாக்களை மக்கள் சபை ஒழுங்காகக் கவனிக்க நேரம் இல்லாததால் அவற்றை முதலிலேயே பரிசிலனை செய்யும்படி பிரபுக்கள் சபைக்கு அனுப்பி வைக்கின்றனர். பிரபுக்கள் சபை, அவற்றை பரிசீலனை செய்து மக்கள் சபைக்கு அனுப்பி வைப்பதால் மக்கள் சபையின் பெரும்பாலான சுமை குறைகிறது. பிரபுக்கள் சபை இந்த மசோதாக்களைப் பரிசீலனை செய்த பின்னர் மிகவும் விரைவாக மக்கள் சபை அவற்றைச் சட்டங்களாக்கின்றன.

**பாராளுமன்றம் பணியாற்றும் விதம்**

வருடத்தில் குறைந்தது, ஆறு மாதங்களுக்கு மேல் பாராளுமன்றத்தின் இரண்டு சபைகளும் கூடுகின்ற ஒவ்வொரு முறையும்

பாராளுமன்றம் கூடி, பின்னர் ஒத்திம்போடும் காலத்தை, 'பாராளுமன்ற கூட்டம்' (Session) என்று கூறுவது வழக்கம். தேர்தல் நிகழ்ந்த பின்னர், இரண்டு மூன்று வாரங்களில் பாராளுமன்றம் கூட்டப்பட வேண்டும். ஒவ்வொரு சபையும் அதன் விருப்பப்படி தள்ளிப் போடப் படுகின்றது. இரண்டு சபைகளும் ஒன்றாகத் தள்ளிவைக்க வேண்டும் என்ற அவசியமில்லை அரசியார் விரும்பினால், அப்படியும் செய்யலாம் தள்ளி வைத்திருப்பது (Adjournment) என்பது சபையின் நடவடிக்கைகளைத் தற்காலிகமாக நிறுத்தி வைத்திருப்பது என்று பொருளாகும். பாராளுமன்ற நடவடிக்கைகளை ஒத்திப்போடுதலை (Prorogation) அரசியார் தான் அறிவிக்க வேண்டும். ஒத்திப்போடுதல் என்கின்றபொழுது, பாராளுமன்றக் கூட்டம் முடிவடைகின்றது என்று பொருள். மற்றொரு கூட்டம் தொடங்குகின்ற பொழுது, ஒரு மசோதா மீண்டும் முதலிருந்து ஆரம்பிக்கப்படும். பாராளுமன்றம் கலைக்கப்படும் பொழுது அரசியாரின் அறிவிப்பு வேண்டும். பாராளுமன்றம் கலைக்கப்பட்டதற்குப் பின்னர், தேர்தல்கள் நிகழும். மக்கள் சபையின் புதிய உறுப்பினர்கள் தேர்ந்தெடுக்கப்படுவார்கள்.

தேர்தல்களுக்குப் பின்னர், பாராளுமன்றத்தின் இரண்டு சபைகளும் ஒரே சமயத்தில் கூட்டப்படும் முதலில் அந்தந்த சபை உறுப்பினர்கள் அந்தந்த சபையில் கூடுவார்கள். அதற்குப் பின்னர், பிரபுக்கள் சபையிலிருந்து ஒரு சேவகன் வந்து, மக்கள் சபை உறுப்பினர்களை, பிரபுக்கள் சபைக்கு அழைப்பார், அங்கு இந்தப் பாராளுமன்றம் கூட்டப்பட்டிருப்பதாக, அரசியாரின் அறிவிப்பை வாசிப்பர். பின்னர் மக்கள் சபையின் சபாநாயகரைத் தேர்ந்தெடுக்க வேண்டுமென்று சான்சலர். பிரபு கூறவே, மக்கள் சபை உறுப்பினர் மக்கள் சபைக்குச் சென்று, சபாநாயகரைத் தேர்ந்தெடுக்கும் பணியில் ஈடுபடுவர். அதற்கு அடுத்த நாள், புதிதாகத் தேர்ந்தெடுக்கப்பட்ட சபாநாயகர், மற்ற மக்கள் சபை உறுப்பினர்களுடன் மீண்டும் பிரபுக்கள் சபைக்குச் சென்று, சான்சலர் பிரபுவின் மூலமாக அவருடைய தேர்தலை அறிவிப்பார். அப் பதவிற்கு சபாநாயகர் தேர்ந்தெடுக்கப்பட்டதை ஒட்டி அரசியாரின் பாராட்டுதல்கள் அப்பொழுது தெரிவிக்கப்படும். சபாநாயகர், மக்கள் சபையின் பழைய மரபுகளைப் பாதுகாப்பதாக உறுதிமொழி அளித்தவுடன், அவரும், மற்ற மக்கள் சபை உறுப்பினர் களும், மக்கள் சபைக்கே திரும்புகின்றனர். அங்கு அவர்கள் உறுதி மொழி எடுத்து, பதவி ஏற்பர். பின்னர், மக்கள் சபை உறுப்பினர் பட்டியலில் கையெழுத்திடுவர்.

பின்னர், அடுத்த நாளன்று, அரசியார் தகுந்த அரசாங்க மரியாதை களுடன் பாராளுமன்றத்திலுள்ள பிரபுக்கள் சபைக்குச் செல்வார்.

அப்பொழுது, மக்கள் சபை உறுப்பினர்களும் கூடியிருப்பர். பிரதம அமைச்சரால் தயாரிக்கப் பெற்ற, அரசாங்கக் கொள்கைகளைப் பற்றிய அறிக்கையை, அரசியார் வாசிப்பார். இதை அரசியாரின் பேருரை என்று கூறுவர் (Speech from the Throne). அரசியாரின் பேருரை முடிந்த பின்னர், மக்கள் சபை உறுப்பினர் அவர்கள் சபைக்குத் திரும்புவர். அந்தப் பேருரை மீண்டும் இரண்டு சபைகளில் படிக்கப் படும் அதற்குப் பின்னர், விவாதங்கள் தொடர்ந்து நிகழும். பின்னர் பல்வேறு குழுக்கள் அமைக்கப்படுகின்றன., பல மசோதாக்களும் கொண்டுவரப்படுகின்றன. மக்கள் சபையின் நடவடிக்கைகள் அப்பொழுதிலிருந்து ஆரம்பமாகின்றன. முதல் பாராளுமன்றக் கூட்டத்திற்குப் பின்னர். முதலில் பின்பற்றப்பட்ட மரபுகள் எல்லாம் மீண்டும் தொடர வேண்டிய அவசியமில்லை. பழங்கால மரபுகளை இன்னும் ஆங்கிலேயர் பின்பற்றி வருகின்றனர். பாராளுமன்றம், ஒரு பழங்கால கண்காட்சியாகவே இன்னும் விளங்குகிறது.

அரசியாரின் பேருரை படிக்கப்பட்ட பின்னர் பேருக்காவது ஒரு மசோதாவைக் (Dummy Bill) கொண்டு வருவர். ஏன் இப்படி செய்கின்றார்கள் என்றால், அரசியாரின் பேருரையில் பொதுப்படையாக கூறப்பட்டிருக்கும் பொருள்களைத் தவிர, வேறு எந்த பொருள் பற்றியும் அவர்கள் மசோதாக்களைக் கொண்டு வரலாம் என்பதை வற்புறுத்தவே, அவர்கள் இப்படிச் செய்கிறார்கள்.

பாராளுமன்றக் கூட்டம் ஒத்திவைக்கப்படும் பொழுதும் சில பழைய மரபுக்களை அவர்கள் பின்பற்றுகின்றனர். அரசியார் இந்தப் பாராளுமன்ற ஒத்திவைப்பை நேரில் வந்து காணமாட்டார். அரசியாரின் அதிகாரிகள் வந்து ஒத்திவைப்பு பேருரையை வாசித்து முடித்த பின்னர் பாராளுமன்றம் ஒத்திவைக்கப்படும்.

மக்கள் சபை கூட்டம் துவங்குகின்ற பொழுது, சபாநாயகர் மக்கள் சபை உறுப்பினர்கள் பின்தொடர அவருடைய உயர்ந்த இடத்திற்கு வருவார். இறைவணக்கம் முடிந்த பின்னர், சபாநாயகர் 'கோரம்' முதலில் இருக்கிறதா என்று பார்த்துவிட்டு, பிறகு சபை நடவடிக்கைகளைத் துவங்குவார். கோரம் (Quorum) வேண்டுவதற்கு 40 உறுப்பினர்களாவது வந்திருக்க வேண்டும். இதைப் போன்றே பிரபுக்கள் சபையிலும், நடவடிக்கைகள் ஆரம்பமாகின்றன. அன்றைய நாள் முடிவடையும்பொழுது சபாநாயகர் அவர் நாற்காலியை விட்டு எழுந்து வெளியே செல்வார். உடனே, 'யார் வீட்டிற்குச் செல்கிறார்?' (Who Goes Home) என்ற பெரிய கூச்சலை கிளப்புவார்கள். இருநூறு ஆண்டுகளுக்கு முன்னர், இந்த மரபு இருந்தது.

இன்னும் அவர்கள் இதை விடாது பின்பற்றுகிறார்கள். முன்னர் இரவு நேரத்தில் உறுப்பினர் செல்வது சிறிது அச்சமாக இருக்கும் என்ற காரணத்தால், துணைக்கு இரண்டு ஆட்களை அனுப்பி வந்தனர். அப்பொழுது வீதிகளில் மின்சார விளக்கு கிடையாது. உண்மையிலேயே சிறிது அச்சமாகத் தான் இருந்திருக்கும். ஆனால் இப்பொழுது அந்தக் கேள்வியைக் கேட்பதில் பொருளே இல்லை.

பாராளுமன்றத்தின் இரண்டு சபைகளும் ஏற்கனவே ஏற்றுக் கொள்ளப்பட்ட விதிமுறைகளைப் பின்பற்றியே அவைகளின் நடவடிக்கைகளைச் செயலாற்றி வருகின்றன. 18ஆவது நூற்றாண்டில் பாராளு மன்றத்திற்கு அவ்வளவு அதிக வேலை இல்லை. அதனால் எதையும் சம்பிரதாயப்படி நிதானமாகச் செய்து வந்தது. ஆனால் இப்பொழு துள்ள அவசர நிலையில் உடனுக்குடன் சட்டங்களை இயற்ற வேண்டும். நிதானமாக எதையும் செய்வதற்கு இடமில்லை. அதனால் பழைய விதி முறைகளை யெல்லாம் சுருக்கி எளிதாக வேலையைப் பார்க்க வழிகளை அமைத்துக் கொண்டனர்.

ஒவ்வொரு தேர்தலுக்குப் பிறகு, மக்கள் சபையில் பல புதிய மாற்றங்களைக் கொண்டு வருகின்றனர். அதனுடைய சீரமைப்பு வேலை தொடர்ந்து நடைபெற்று வருகிறது. மக்கள் சபையில் பின்பற்றப் படும் சில உத்தரவுகள் 'எழுதப்பட்ட உத்தரவுகளாக' இருப்பதால் அவை 'நிலையான உத்தரவுகளாகப்' (Standing Orders) பாவிக்கப்படு கின்றன. அவை சரியில்லை என்கிற பொழுதுதான் அவை மாற்றப் படுகின்றன. மக்கள் சபை நடவடிக்கைகளை நடத்த, இப்பொழுது ஏறக்குறைய '96 நிலையான உத்தரவுகள்' உள்ளன. இந்த எண்ணிக்கை இன் னும் அதிகமாக இருக்கலாம் என்று நம்பப்படுகிறது. மக்கள்சபை யின் தனிப்பட்ட நடவடிக்கைகளை நடத்த, 249 நிலையான உத்தரவுகள் இருக்கின்றன. இவற்றைத் தவிர ஒவ்வொரு பாராளுமன்ற கூட்டத்தைப் பொறுத்து அக்கூட்டம் முடியும் வரையிலும் சில நடை முறை விதிகளும் உள்ளன. மக்கள் சபையில் சாதாரண பெரும் பான்மையை வைத்துக் கொண்டே, எந்தச் சட்டத்தையும் ரத்து செய்ய லாம். அல்லது அதைத் திருத்தலாம், அல்லது வேறு சட்டத்தைக் கொண்டு வரலாம். சபாநாயகருக்கு இந்த நடைமுறை விதிகளையும் நிலையான உத்தரவுகளையும், மற்றும் பாராளுமன்ற மரபுகளையும், பழக்க வழக்கங்களையும் நன்கு தெரிந்திருக்க வேண்டும். சபாநாயகருக்கு இவற்றைப் பற்றி ஆலோசனை கூற வல்லுநர்கள் இருந்த போதிலும், அவருக்கு இவையெல்லாம் தெரிந்திருத்தல் நல்லதாகும். பிரதம அமைச்சர்களுக்கும் கூட இந்த நடைமுறை விதிகளை நினைவில் வைத்துக் கொள்ள முடியாததால், சில சமயங்களில் குழப்பம் ஏற்படுவதுண்டு.

சபாநாயகர், அன்றைய அலுவல்களைத் தொடங்கி வைப்பார். அன்றைய நாளின் நிகழ்ச்சி நிரல் முதலில் தயாரிக்கப்பட்டிருக்கும். முதலில், தனிப்பட்டோர் மசோதாக்களைப் பரிசீலனை செய்வார்கள். அதற்குப் பின்னர், விண்ணப்பங்கள் கொடுக்கப்படும். இந்த அலுவல்களை விரைவாக முடித்துக் கொள்வார். இவைகளுக்கு அதிக நேரம் பிடிக்காது. பின்னர் கேள்வி நேரம் வரும். அன்றைய நாளில் விறுவிறுப்பாக இருக்கக் கூடிய நிகழ்ச்சி இதுவேயாகும். மக்கள் சபையில் உள்ள பார்வையாளர்களுக்கு இந்த நிகழ்ச்சி தான் பொழுது போக்காக இருக்கும். கேள்வி நேரம் மிகவும் முக்கியமானதுமாகக் கருதப்படுகிறது. ஏனெனில் அரசாங்கத்தின் பல கொள்கைகளையும் உறுப்பினர்கள் அமைச்சர்களிடமிருந்து தெரிந்து கொள்வதற்கு கேள்வி நேரம் நல்ல வாய்ப்பாகும். கேள்வி நேரத்திற்குப் பின்னர், புதிய உறுப்பினர்கள் இருந்தால் அவர்களை சபாநாயகர் அறிமுகம் செய்து வைப்பார். பிறகு அன்று கொண்டுவரப்படும் மசோதாவை, எழுத்தர் சபையில் வாசிப்பார். அவர் வாசித்து முடிந்தவுடன், அந்த மசோதாவின் மீது விவாதம் நிகழும். நள்ளிரவு வரை பெரும்பாலும் விவாதங்கள் தொடர்ந்து நிகழும். பெரும்பான்மையான உறுப்பினர்கள் வீட்டிற்குச் சென்றிருப்பார்கள், நள்ளிரவுக்குப் பின்னர், சபை தள்ளிவைக்கப் படும்.

மசோதாக்கள் மீது விவாதம் நிகழும் பொழுது, பல உறுப்பினர்கள் பேச முன்வருவர். யார் யார் பேசுவார்கள் என்பதைக் கட்சி 'கொறடாக்கள்' முன்கூட்டியே சபாநாயகரிடம் அறிவித்திருப்பார்கள்; அதனால், சபாநாயகர் விவாதத்தில் பங்கெடுத்துக் கொள்பவர்களை அழைத்துப் பேச சொல்வார். பல கட்சிகளிலிருந்தும் பேச விரும்புவோருக்கு வாய்ப்புகளை அளிப்பார். ஒரே பொருளின் மீது இரு முறை ஓர் உறுப்பினர் பேசுவதற்கு அனுமதிக்கப்படமாட்டார். ஆனால் அந்த உறுப்பினர் ஏற்கனவே பேசியதில் சிலவற்றை மற்ற உறுப்பினர்கள் தவறுதலாகப் புரிந்து கொண்டால், அந்த சந்தேகத்தைத் தீர்க்க மீண்டும் சபாநாயகர் ஒரு வாய்ப்பு அளிக்கலாம். ஆனால் அவர் அப்படி செய்வது அவருடைய விருப்பத்தைப் பொறுத்ததாகும். உறுப்பினர்கள் அவர்களுடைய உரைகளையாற்றும் பொழுது எழுதி வைத்துப் படிக்க கூடாது. ஆனால் அவர்கள் குறிப்புகளை வேண்டுமென்றால் வைத்துக் கொள்ளலாம். உறுப்பினர்கள் அவர்களுடைய இடங்களில் இருந்தவாறே பேசலாம். ஆனால் அமைச்சர்கள் வேண்டுமென்றால், பொதுவான மேடைக்கு வந்து பேசலாம். வரவு செலவு திட்டங்களையெல்லாம் அமைச்சர்கள் சபையில் சமர்ப்பிக்கும் பொழுதும் பொதுவான மேடைக்கு வந்து பேசுவது தான் வழக்கம். விவாதங்களில் கலந்து கொள்ளும் உறுப்பினர்கள்

யாரையும் அவமரியாதையான வார்த்தைகளைக் கொண்டுத் தாக்கிப் பேசகூடாது. அப்படிச் செய்தால் சபாநாயகர் தக்க நடவடிக்கையை அந்த உறுப்பினர் மீது எடுத்துக் கொள்வார்.

மக்கள் சபையில் நிகழும் விவாதங்களில் பெரும்பான்மையானவை மிகவும் சலிப்பைத் தருவதாக இருந்தாலும், சில சமயங்களில் விவாதங்கள் காரசாரமாகவும் பரபரப்பை யூட்டுவதாகவும் இருக்கும். முன்பிருந்ததைப் போன்று உறுப்பினர்கள் மணிக்கணக்காக பேசும் பழக்கத்தை விட்டு விட்டனர். பின்னர், நாவன்மை திகழ பெரும் சொற்பொழிவுகளாகப் பொழிந்து தள்ளுவார். ஆனால் இப்பொழுதெல்லாம் மிகவும் சுருக்கமாகவும் தெளிவாகவும் பேசுகின்றனர். மற்ற நாடுகளிலுள்ள பாராளுமன்ற விவாதங்களின் தரத்தைக் காட்டிலும் ஆங்கிலேய பாராளுமன்ற உறுப்பினர்களின் தரம் மிகவும் உயர்வாக உள்ளது என்று கூறுகின்றனர். மக்கள் சபை விவாதங்களில் காணப்படும் பரபரப்பும், விறுவிறுப்பும் பிரபுக்கள் சபை விவாதங்களில் இல்லையென்ற போதிலும் பிரபுக்கள் சபையில் நிகழும் விவாதங்கள் மிகவும் தரமுள்ளவையாக உள்ளன என்று கூறுகின்றனர்.

மக்கள் சபையில் நிகழும் விவாதங்கள், அல்லது தீர்மானங்களைக் கொண்டுவருதல் ஆகிய பொருள்களின் மீது மக்கள் சபை உறுப்பினர்கள் ஓர் அளவு இல்லாது பேசிக்கொண்டே போகலாம். இவ்விதம் பேசுவதைத் தடுக்கவும், உடனடியாகத் தீர்மானங்களை நிறைவேற்றவும் சபாநாயகர் மூன்று வழிகளைப் பின்பற்றலாம். தீர்மானத்தின் மீது ஓர் உறுப்பினர் பேசிக்கொண்டிருக்கும் பொழுது கூட, ஓர் உறுப்பினர் எழுந்து ‘இப்பொழுது கேள்வியைக் கேட்கலாம்’ என்று கூறி, மேற்கொண்டு விவாதத்தை நடத்தாமலும், அல்லது ஒரு திருத்தத்தையும் கொண்டுவராமலும் தீர்மானத்தின் மீது வாக்கெடுப்பை நடத்தி விவாதத்தை முடிக்கலாம். இம் முறையை, சாதாரணமாக, விவாத முடிவு முறை (Simple Closure) என்று கூறலாம். ஆனால் இந்த முறையின்படி, தீர்மானத்திற்கு சாதகமாக 100 உறுப்பினர்களாவது வாக்களித்திருக்க வேண்டும். ஆனால் இந்த முறை பலத்த விவாதங்கள் நிகழும் பொழுது பயன்படாது. 1887-ல் கொண்டுவரப் பெற்ற ஒரு விதி முறையின்படி மசோதாவின் மீது நிகழும் விவாதத்தை முடிக்க ஒரு குறிப்பிட்ட நாளைக் குறித்து, அந்த நாளில் இந்த மசோதாவின் மீது வாக்கெடுப்பு நடக்கும் என்று சபாநாயகர் அறிவிப்பார். அந்த மசோதாவைப் பற்றி முழுவதுமாகப் பரிசீலனை செய்திருந்தாலும் சரி, இல்லையெனினும் சரி, அந்த குறிப்பிட்ட நாளில் மசோதாவின் மீது வாக்கெடுப்பு எடுக்கப்பெற்று, அந்த மசோதாவின் விதியை நிர்ணயம் செய்துவிடுவர். ஒரு மசோதாவின் விதியை இவ்வளவு கடுமையாக நிர்ணயம் செய்வதால் இதற்கு கில்யோடின் முறை’

(Guillotine) என்று பெயர் வழங்கப்பெற்றது. 1893–ல் இந்த முறையில் ஒரு சிறிய மாற்றத்தைக் கொண்டு வந்தனர். அந்த மாற்றத்தின் படி, ஒரு மசோதாவை முழுமையாக இவ்விதம் நிர்ணயம் செய்வதற்கு பதிலாக, மசோதாவின் ஒவ்வொரு பாகத்தையும் ஒரு குறிப்பிட்ட நாளன்று வாக்கெடுப்பு எடுத்து நிர்ணயம் செய்வது, 'கில்லோடின்' முறையைக் காட்டிலும் சிறந்தது என்று கருதி 'மசோதாவை ஒவ்வொரு பாகமாகத் தீர்த்தல்' (Closure by Compartments) என்ற முறையைப் பின்பற்றினர், இந்த முறையை மக்கள் சபையில் அதிகமாகப் பின்பற்றுகின்றனர். மற்றும் 'கங்காரு முறை' (Kangaroo) என்பதையும் பயன்படுத்தி அதிக அளவு விவாதங்கள் நிகழாமல் பார்த்துக்கொள்கின்றனர். இந்தமுறையின்படி, மசோதாவின் ஒவ்வொரு கட்டத்தையும் தாண்டிச் சென்று, எது மிகவும் முக்கியமானது என்று கருதுகின்றனரோ அதை மட்டும் எடுத்துக் கொள்கின்றனர். அந்தக் குறிப்பிட்ட திருத்தங்களின் மீது மட்டுமே விவாதம் நிகழும். மசோதாவின் மற்ற பாகங்களைப் பற்றி அவர்கள் கவலைப்படுவதில்லை. இவ்விதம் முக்கியமான திருத்தங்களை மட்டும் பொறுக்கி எடுப்பதற்கு சபாநாயகரின் அனுமதியும், பல குழுக்களின் தலைவர்களின் அனுமதியும் வேண்டும். 1919–ல் இந்த கங்காரு முறையை மக்கள் சபை அங்கீகரித்து, அதை ஒரு விதி முறையாகவே அமைத்து விட்டனர்.

ஒரு மசோதாவின் மீது நிகழும் விவாதம் முடிந்ததென்றால், அதன் மீது வாக்கெடுப்பு எடுக்கப்படும். மிகவும் சாதாரண முறையின்படி, முதலில் சபாநாயகர், மசோதாவிற்கு சாதகமாக வாக்களிப்பவர் யார்? சாதகமாக வாக்களிக்காதவர் யார்? என்ற கேள்விகளைக் கேட்டு வாக்கெடுப்பின் முடிவை அறிவிப்பார். ஆனால் சபாநாயகரின் முடிவு சரியானதல்ல என்று எந்த உறுப்பினராவது கூறினால், உடனே இந்த வாக்காளர்களைப் பிரித்து (Divison) முடிவைக் கூறுவார். அப்பொழுது மின்சார மணியோசை கிளம்பும், கட்சிக் கொறடாக்கள், ஆங்காங்குள்ள உறுப்பினர்களை இரண்டு நிமிடத்திற்குள் கொண்டுவந்து சேர்ப்பார்கள். மசோதாவிற்கு சாதகமாக வாக்களிப்பவர்கள், சபாநாயகருக்கு வலது புறத்தில் உள்ள அறைக்குச் செல்வர்; சாதகமாக வாக்களிக்காதவர்கள் அவருக்கு இடதுபுறமுள்ள அறைக்குச் செல்வர். ஆளும் கட்சி கொறடாக்களும், எதிர் கட்சி கொறடாக்களுமாக நான்கு பேர், வாக்காளர்களைக் கணக்கெடுத்து, பெரும்பான்மை ஆதரவுள்ள கொறடா முடிவுகளை அறிவிப்பார். இந்தமுறையின்படி முடிவைக் கூற 15 நிமிடங்கள் பிடிக்கும், பிரபுக்கள் சபையிலும். எல்லா முக்கியமான பிரச்சினைகளையும்' 'பிரித்தெடுத்தல்' முறையின்படியே நிர்ணயம் செய்கின்றனர். மக்கள் சபையிலும், பிரபுக்கள் சபையிலும் நிகழும் எல்லா விவாதங்களையும் ஒரு சொல் விடாது அப்படியே பதிவு செய்து, அதைப்

பிரசுரித்து வெளியிடுகின்றனர். 'பாராளுமன்ற விவாதங்கள்' என்ற தலைப்பில் அவை வெளியிடப்படுகின்றன.

பாராளுமன்றத்தில் சட்டமியற்றும் முறை நீண்டகாலமாகவே பின் பற்றப்பட்டுவருகிறது. ஒரு மசோதா சட்டமாகி, அரசியாரின் சம் மதத்தைப் பெற வேண்டுமென்றால் அது ஒரு நீண்ட பிரயாசத்தை மேற்கொள்ள வேண்டியுள்ளது. பல கட்டங்களைக் கடக்க வேண்டியுள் ளது. மிகப் பழம் காலத்தில் பின்பற்றப்பட்ட சம்பிரதாயங்களை ஆங் கிலேயர் இன்னும் அப்படியே பின்பற்றி வருகின்றனர். அதனால் பல தொல்லைகளும், காலதாமதமும் ஏற்பட்ட போதிலும், பழைய முறையை அவர்கள் இன்னும் பின்பற்றி வருவது குறிப்பிடத்தக்கதாகும். சட்ட மியற்றும் பொழுது முதலில் மசோதாவை அறிமுகம் செய்யவேண்டும் மசோதாவை அறிமுகம் செய்வது இரண்டு சபைகளில் எந்த சபையில் வேண்டுமென்றாலும் செய்யலாம். அப்பொழுது அந்தச் சபையில் மூன்று வாசிப்புகள் நிகழவேண்டும். வாசிக்கப்பெற்ற மசோதாவை மற்ற சபையின் அங்கீகாரத்திற்கு அனுப்ப வேண்டும். அங்கும் மூன்று வாசிப்புகள் நிகழவேண்டும். இரண்டு சபைகளிலும் மசோதா நிறை வேறியவுடன், அந்த மசோதாவை பிரபுக்கள் சபைக்கு அனுப்ப வேண்டும். அரசியாரின் ஒப்புதல் அந்த மசோதாவிற்கு அளிக்கப்பட்ட பின்னர், அந்த மசோதா சட்டமாகின்றது.

தனியார் மசோதா **(Private Bill)** என்பது ஒரு குறிப்பிட்ட நபருக்கோ, அல்லது சில நபர்களுக்கோ.சில உரிமைகளைத் தருவதையும் அல்லது ஒரு குறிப்பிட்ட பகுதியில் சட்டத்தை மாற்றி அமைப்பதையோ குறிக்கும். ஒருவருக்கு சில உரிமைகளை அளிக்க வேண்டுமென்றால், தனியார் மசோதாவைக் கொண்டுவர வேண்டும். பெரும்பாலும் ஒரு நகரசபைக்கோ, அல்லது தனிபட்ட நிறுவனத்திற்கோ, சில உரிமைகளை அளிக்கலாம். முன்னர் தனியார் மசோதாக்கள் ஒரு ரயில்வே கம்பெனிக்கு புதிய ரயில் பாதை களை அமைத்துக் கொள்ள நிறைவேற்றப்பட்டு வந்தன. இப்பொழுது ரயில்வேக்கள் தேசியமயமாக்கப்பட்டு விட்டதால், அதற்கென்று தனிப் பட்ட சட்டம் இயற்றத் தேவையில்லை. ஆனால் பலஉள்ளாட்சி அரசாங் கங்கள், அரசாங்கத் திட்டம் பல கோரிக்கைகளை கேட்டுக்கொண்டே இருப்பதால், தனியார் மசோதர்க்களைக் கொண்டுவரவேண்டிய அவசியம் ஏற்படுகின்றது. அதனால் அரசாங்கம் தனியார் மசோதாக்களைத் தயாரித்து பாராளுமன்றத்தில் சமர்ப்பிக்கின்றது. அந்த மசோதாக்கள் பின்னர் நிறை வேற்றப்படுகின்றன.

# 6. ஆட்சித் துறை

## ( ADMINISTRATION )

பிரிட்டனின் ஆட்சியை நடத்தும் பலநிறுவனங்கள் பாராளுமன்றத்தின் அண்மையில் உள்ள 'ஒயிட் ஹால்' (White Hall) என்றவெண் மாளிகையிலும் அதற்கு அண்மையிலும் அமைக்கப்பட்டுள்ளன. பல துறைகள் புதிதாக அமைக்க வேண்டியிருந்ததால், பல ஆட்சி நிறுவனங்கள் லண்டன் நகர் முழுவதிலும் ஆங்காங்காங்கு அமைக்கப் பெற்றுள்ளன. அரசாங்கத்தின் ஆட்சி 'ஒயிட் ஹாலில்' இருந்துதான் நடைபெறுகிறது என்று கூறுவது பொருந்தும்.

பிரிட்டனில் எண்ணற்ற ஆட்சித் துறைகள் அமைக்கப்பட்டுள்ளன. ஆனால் அமெரிக்க ஐக்கிய நாட்டை ஒப்பிடும் பொழுது அவ்வளவு துறைகள் பிரிட்டனில் இல்லை என்றே கூற வேண்டும். ஏனெனில் அமெரிக்க ஐக்கிய நாட்டில் நிறைய மாநிலங்கள் உள்ளன. அனைத்தும் அமெரிக்க கூட்டரசாங்கத்துடன் இணைந்து செயலாற்றும் பொழுது ஆட்சித் துறைகள் அதிக அளவில் இருக்கும். ஆனால் பிரிட்டன் ஒருமுக அரசாங்கத்தைக் கொண்டுள்ளது. தவிர பிரிட்டனின் மக்கள் தொகையும் குறைவானதேயாகும். அதனால் பிரிட்டனிலுள்ள பல ஆட்சித்துறைகளிடமும் நல்ல தொடர்பும் இணைப்பும் இருப்பதைக் காண்கிறோம். பிரிட்டனுடைய ஆட்சித் துறைகளுக்கும் உள்ளாட்சித் துறைகளுக்கும், மற்றும் அரசாங்கக்கட்டுப்பாட்டில் இயங்கும் பலநிறுவனங்களுக்குல் நல்லதொடர்பும், இணைப்பும் ஏற்பட்டுள்ளதைக் காண்கிறோம். பிரிட்டனின் ஆட்சி முறை ஓரளவிற்கு காலப்போக்கில் ஏற்பட்டமாறுதல்களுக்கேற்ப வளர்ந்துள்ளது. கடந்த நூற்றாண்டுக் காலத்தில் ஆட்சித் துறையில் வளர்ந்துள்ள அலுவல்கள் காரணமாக நிறைய ஆட்சித் துறைகள் தோன்றியுள்ளன. முதல் உலகப் போர், இரண்டாவது உலகப் போர், மற்றும் தொழிற்கட்சியின் தேசிய உடைமையாக்கிய திட்டங்கள், பொது நலத் திட்டங்கள் காரணமாக ஆட்சித் துறையில் புதிய வளர்ச்சி ஏற்பட்டுள்ளது.

சில பழைய ஆட்சித் துறைகள் காலப்போக்கிலும் மாறாது அப்ப படியே உள்ளன. அண்மையில் தோன்றிய புதிய ஆட்சி நிறுவனங் களுக்கும், பழைய நிறுவனங்களுக்கும் நிறைய வேறுபாடுகள் இருப்ப தை நாம் காண்கிறோம். பிரிட்டனில் உள்ள பல ஆட்சி துறை நிறுவ னங்கள் பல காரணங்களுக்காகவும், பல நோக்கங்களுக்காகவும் அமைக் கப் பெற்றன. எல்லா நிறுவனங்களும் அமெரிக்க ஐக்கிய நாட்டில் காங்கிரஸ் சட்டத்தின் மூலமாக ஏற்பட்டிருப்பதைப் போன்று பிரிட்ட னில் ஏற்படவில்லை.

கருவூலத் துறை, கடற்படைத் துறை (Treasury, Admiralty) ஆகிய துறைகள் பழைய கால சின்னங்களாகவே இன்னும் உள்ளன.

வெளிநாட்டு அலுவலகம், உள்துறைஅலுவலகம் ஆகியவை, பழங் காலஅரசரின் செயலர்கள் அலுவகத்திலிருந்து ஏற்பட்ட நிறுவனங்களே யாகும். வர்த்தக வாரியம் (Board of Trade) கல்வித் துறை அமைச் சரவை முதலியன (Ministry of Education) 'பிரிவி கவுன்சிலின்' குழுக்களிலிருந்து தோன்றிய துறைகளாகும். பொதுநல அமைச் சரவை, (Ministry of Health) பாதுகாப்பு அமைச்சரவை (Ministry of Defence) ஆகிய துறைகள் பாராளுமன்றச் சட்டங்கள் மூலமாகத் தோன்றியவையாகும். சில துறைகள் பழையவை என்றாலும் அரசாங் கத்தின் முக்கியமான பணிகளையாற்றுகின்ற துறைகளாக, (நிதி, பாது காப்பு)இன்னும் விளங்குகின்றன. கல்வித்துறை, பொதுத்துறை, தொழிற்துறை ஆகியவை அரசாங்கத்தின் புதிய நிறுவனங்களாகும். கருவூலத்துறை மற்ற நிறுவனங்களுடன் ஒப்பிட முடியாத அளவில் தனித்துஇயங்குகின்றது. பல துறைகளுக்கும் ஒரே மாதிரியான பதவிப் பெயர்கள்கொடுக்கப்படவில்லை. சில நிறுவனங்கள் அரசாங்கஅமைச்சர் களின் அலுவகங்களாக (Offices of Secretaries of State) கருதப்படு கின்றன. மற்றவை அமைச்சவை நிறுவனங்களாகக் (Ministries) கருதப்படுகின்றன. சில நிறுவனங்கள் வாரியங்களாகக் (Boards) கருதப்படுகின்றன. தவிர, ஐக்கிய அரசு(United Kingdom)முழுவதற் கும் ஒரே மாதிரியான ஆட்சி முறையும் அமைக்கப் படவில்லை. ஸ்காட் லாந்தின் ஆட்சி முறையை ஸ்கர்ட்லாந்தின அரசாங்க அமைச்சர் கவ னித்துக் கொள்கிறார். ஸ்காட்லாந்தின் ஆட்சி முறை, இங்கிலாந்து ஆட்சி முறையுடன் சரியாக இணைக்கப்பெறவில்லை. வடக்கு அயர் லாந்தின் ஆட்சி முறை; பெரும்பாலும் அப் பகுதியிலுள்ள பாராளு மன்றத்தின் மூலமாக நடத்தப்படுகின்றது. ஆட்சிமுறை ஒரே தேக்க நிலையில் இல்லாது, அவ்வப்பொழுது மாறுதல்களையும், புதிய இணைப்பு ஏற்றுக்கொள்ளும் அளவில் அமைக்கப்பட்டுள்ளது,

ஒவ்வொரு துறை வாரியாக பார்ப்போமெனின் ஆட்சியின் நடைமுறை விதிகள் மாறுபட்டுள்ளன. ஆனால் ஒரே மாதிரியான தன்மையும் பின்பற்றப்பட்டு வருகின்றது. சில துறைகளில் ஆட்சியை நடத்தும் முதல்வராக ஒரு தனி அமைச்சர் நியமிக்கப்பட்டிருக்கிறார். சில துறைகளை வாரியம் கவனித்து வருகிறது. ஒரு துறையை வாரியம் கவனித்து வருகிறதென்றால் அவ் வாரியத்திற்கு ஒரு தலைவர் நியமிக்கப்பட்டிருப்பார். பெரும்பாலும் அவருடைய தகுதி ஒரு தனி அமைச்சருக்கு இருப்பதைப் போன்றிருக்கும்.

ஒவ்வொரு துறையின் தலைவரையும், பிரதம அமைச்சர் தேர்ந்தெடுப்பார். அப்படி தேர்ந்தெடுக்கப்படுகின்ற துறைத் தலைவர்கள் அக் கட்சியின் செல்வாக்கு பெற்ற பிரமுகர்களாக இருப்பர். அக் கட்சி பதவியிலிருக்கும் வரையிலும், அவர்களும் பதவிகளில் இருப்பார்கள். அத்துறைத் தலைவர்களுக்கு பாராளுமன்ற அநுபவம் இருக்கலாமே தவிர, ஒரு குறிப்பிட்ட துறையை நடத்திச் செல்லும் அநுபவம் தேவையாகப் பெரும்பாலும் கருதுவதில்லை. அவர்கள் அரசியல்வாதிகளே தவிர, அநுபவமிக்க ஆட்சியாளர்களல்லர். அவர்களுக்கென்று ஒதுக்கப்பெற்றத் துறைகளின் ஆட்சியைக் கண்காணித்து நடத்திச் செல்ல வேண்டிய பொறுப்பு அவர்களுடையதே என்றாலும், அதைக்காட்டிலும் அவர்களுடைய முக்கியமான பொறுப்பு, அரசாங்க கொள்கைகளை நிர்ணயம் செய்வதும், அவர்களுடைய துறைகளைப்பற்றியவிவரங்களைபாராளுமன்றத்தில் பாதுகாத்துக் கொள்வதுமேயாகும். துறையின் அலுவல்களைக் கவனித்துக்கொள்ள வல்லுநர்கள் அரசியல் கட்சி சார்பற்ற விதத்தில் நியமனம் செய்யப்பட்டுள்ளனர். அவர்கள் நிரந்தரமாக ஒரு துறையில் பணியாற்றுகிறவர்களாவர். அமைச்சர்கள்வரலாம்,போகலாம், ஆனால் ஆட்சியாளர்கள் நிரந்தரமாகத் துறை வேலைகளைக் கவனித்துக் கொள்வர். ஒரு துறைத் தலைவருக்கு உதவியாக ஒரு பாராளுமன்றச் செயலரும் (Parliamentary Secretary) நியமனம் செய்யப்படுவார். அவரும் ஓர் அமைச்சராக இருப்பார். அவருடைய துறைக்குப் பாராளுமன்றத்தில் அவர் பிரதிநித்துவம் வகிப்பார். பின்னர் நிரந்தர துறை அதிகாரிகள், நிரந்தர செயலர், துணைச் செயலர்கள், உதவிச் செயலர்கள், மற்றும் பலர் துறையில் பணியாற்றுவர். துறையில் அன்றாட வேலைகளை அவர்கள் கவனித்துக் கொள்வர்.

அரசாங்கத்திலுள்ள சில முக்கியமான துறைகளாவன:- கருவூலம் (Treasury) பாதுகாப்பு (Defence) வெளிநாட்டுத் துறை, காமன் வெல்த் துறை, உள்துறை (Foreign, Common wealth, and Home Affairs) வர்த்தக வாரியம் (Board of Trade) விவசாயம், மீன், உணவு அமைச்சவை (Ministry of Agriculture, Fisheries and

Food) தொழில், தேசிய சேவை அமைச்சவை (Ministry of Labour and National service) போக்குவரத்து, விமானபோக்குவரத்து அமைச்சவை (Ministry of Transport and civil aviation) பொதுநலஅமைச்சவை (Ministry of Health) கல்வி அமைச்சவை (Ministry of Education), மின்சார அமைச்சவை (Ministry of Power) தேசிய இன்ஸ்யூரன்ஸ், அல்லது ஆயுள் பாதுகாப்பு, பென்ஷன் அல்லது ஓய்வு கால ஊதிய அமைச்சவை (Ministry of National Insurance and Pensions) குடியிருப்பு, உள்ளாட்சி அமைச்சவை (Ministry of Housing and Local Government) முதலியவைகளாகும்.

ஆட்சித் துறைகள் சிறப்பாகப் பணியாற்ற அவ்வப்பொழுது ஆலோசனை குழுக்களை (Hdvisory bodies) நியமனம் செய்கின்றனர். ஒவ்வொரு துறையிலும் சரியான முறையில் திட்டங்களைத் தீட்டவும், கொள்கைகளை வகுக்கவும், சிறப்பான அம்சங்களைத் தெரிந்துகொள்ளவும் வல்லுநர்களின் ஆலோசனைகளைக் கேட்டறிதல் பழக்கமாக அமைந்துள்ளது. சில ஆலோசனைக் குழுக்கள் நிரந்தரமாகப் பணியாற்றவும் நியமனம் செய்யப்பட்டுள்ளனர். சில குழுக்கள் அவ்வப்பொழுது எழும் விவரங்களைத் தெரிந்து, ஆராய்ந்து நன்மை தீமைகளை எடுத்துக் கூற நியமனம் செய்யப்பட்டுள்ளனர். முதல் முதலில் கல்வித்துறை வாரியம் இவ்விதமாகத்தான் உருவாக்கப் பெற்றது. 1909-ல் இயற்றப்பெற்ற பாராளுமன்றச் சட்டத்தின் மூலமாக வர்த்தக வாரியமும், 1911–ல்தேசிய இன்ஸ்யூரன்ஸ் அல்லது ஆயுள் காப்புறுதிச் சட்டமும் இயற்றப்பெற்றன.

1919–ல் இயற்றப்பெற்ற சட்டங்கள் படி, போக்குவரத்து அமைச்சவை, பொது நல அமைச்சவை விவசாயம் மீன் அமைச்சவை, ஆகியத்துறைகள் தோற்றுவிக்கப்பட்டன. 1918–ல் அரசாங்க ஆட்சித்துறைக் குழு ஆலோசனைக் குழுக்களை நியமனம் செய்யும் சிபார்சுகளைச் செய்தது. அமைச்சர்களின் பொறுப்புகளில் இந்த ஆலோசனைக் குழுக்கள் தலையிடாது இருக்க வேண்டுமென்ற பொதுப்படையான கொள்கையைத் தவிர, ஆலோசனைக் குழுக்களை நியமனம் செய்ய பாராளுமன்றம் தாராளமாக அனுமதி வழங்கியது. அரசாங்கத் திட்டங்கள் சரிவர செயலாற்றப் படுவதற்கு இந்த ஆலோசனைக் குழுக்களின் சேவை மிகவும் முக்கியமானதாகக் கருதப்படுகிறது. இந்த ஆலோசனைக் குழுக்களின் பணி வெறும் ஆலோசனைகக் கூறுவதோடு சரி, மற்றபடி அக் குழுக்கள் துறைகளின் ஆட்சியில் தலையிடவோ, அல்லது அதிகாரம் செய்யவோ அனுமதிக்கப்படுவதில்லை.

ஒப்படைக்கப் பெற்ற சட்டம் செய்யுரிமை (Delegation of Lagislative Power) தற்பொழுது மிகவும் அதிகரித்து விட்டது. பாராளுமன்றம் மிகவும் முக்கியமான சட்டங்களை இயற்றவே நேரம் காணுமல், தவிக்கின்றது. அதனால் ஆட்சித் துறையில் எழும் அன்றாட நடைமுறைகளையும், அலுவல்களையும் கவனித்து சட்டங்களை இயற்றிக் கொண்டிருக்க பாராளுமன்றத்திற்கு நேரமுல்லை. தவிர ஆட்சித் துறையில், அன்றாடப் பணிகளையாற்றும் பொழுது, சில விதி முறைகளை அத் துறைகளே அமைத்துக் கொள்ள வேண்டிய அவசியம் ஏற்படுகிறது. அவற்றை அடிப்படையாக வைத்து தினசரி முடிவுகளைச் செய்ய வேண்டியுள்ளது. அதனால் பாராளுமன்றம் ஒரு துறை சம்பந்தப் பெற்ற பொதுப்படியான சட்டத்தை மட்டும் இயற்றி, மற்ற விதி முறைகளை அன்றாட நடை முறைகளுக்கேற்ப அமைத்துக் கொள்ளும் படி பாராளுமன்றம் ஆட்சியாளர்களிடம் அதிகாரத்தையும், சட்டம் இயற்றும் உரிமையையும் ஒப்படைக்கிறது. அதனால் ஆட்சியை ஒழுங்காக நடத்த முடிகின்றது. இல்லாவிடில் ஒவ்வொரு சட்டத்திற்கும் ஆட்சித்துறை பாராளுமன்றத்தை எதிர் நோக்கியிருக்க நேரிடுகிறது. பாராளுமன்றம் கூட்டப்படாமல் இருக்கும் பொழுது இத் துறைகள் மீண்டும் பாராளுமன்றம் கூட்டப்படும் வரையிலும் காத்துக் கொண்டிருந்தால், அரசாங்கத்தின் ஆட்சி நடைபெறும். அதனால் தான் ஒப்படைக்கப்பெற்ற சட்டமியற்றும் உரிமை ஆட்சி துறைகளுக்கு அளிக்கப்பட்டுள்ளது. இவ்வித உரிமை ஆட்சித் துறைகளுக்கு மட்டுமல்லாது, அரசியலாரின் பிரிவி கவுன்சிலும் கூட சட்டங்களை இயற்றவும், ஆணைகளை அளிக்கவும் அதிகாரம் பெற்றுள்ளது. அரசியாரின் தனிப் பிரகடனங்கள் மூலமாகவும் சட்டங்கள் இயற்றப்படலாம். ஸ்டூவர்ட் அரசர்கள் ஆட்சி செய்த பொழுது, அரசர்களுக்கு சட்டமியற்றும் உரிமை இல்லையென்று பாராளுமன்றம் வற்புறுத்தி வந்தது. ஆனால் நாளடைவில பாராளுமன்றத்திற்கு வேலை அதிகமாகி விட்டதால் சட்டமியற்றும் உரிமைகளை பொதுவாக அரசர்களிடத்திலும் ஒப்படைத்துள்ளது. இதை ஒரு குறைபாடாகக் கருதினாலும் அன்றாட ஆட்சி நடத்துவதற்கு மிகவும் தேவையாக இருக்கிறது. 1919-ல் 102 சட்டங்கள் இயற்றப்பட்டதில் 60 சட்டங்கள் வரையிலும், மற்ற பல ஆட்சித்துறை நிறுவனங்களால் இயற்றப்பெற்றன. ஒவ்வொரு ஆண்டிலும் இந்த எண்ணிக்கை அதிகரித்துக் கொண்டே வருகிறது. 1927-ல் 43 சட்டங்களில் 26 சட்டங்கள் வேறு நிறுவனங்களால் இயற்றப்பெற்றன. அந்த ஆண்டில் பல்வேறு துறைகள் 1349 சட்டங்களையும் உத்தரவுகளையும் பிறப்பித்துள்ளன. 1946-ல் 66 பொதுப்படையான சட்டங்கள் அரசரால் பிறப்பிக்கப்பட்டன; 2287 சட்டங்களும் உத்தரவுகளும் பல்வேறு துறைகளால் பிறப்பிக்கப்பெற்றன. இந்த எண்ணிக்கை சமீப காலத்தில் இன்னும் அதிகரித்து வருகின்றது.

பாராளுமன்றம் தான் சட்டமியற்றும் நிறுவனமாகும். அதன் விருப்பத்திற்கேற்ப எந்தச் சட்டமும் இயற்றப்படும்; எந்தச் சட்டமும் ரத்து செய்யப்படும். சட்டமியற்றும் அதிகாரத்தை சூழ்நிலைக்காகத் தான் மற்ற ஆட்சித் துறை நிறுவனங்களிடம் அஃது ஒப்படைத்துள்ளது. ஆட்சித்துறை சட்டங்களையும், அவைகளின் ஒப்படைக்கப் பெற்ற சட்டம் இயற்றும் உரிமைகளையும், பற்றி நீதிமன்றத்தில் வழக்குகள் எழுந்தால், நீதிபதிகள் அச் சட்டங்களின் தன்மையை ஆராய்ந்து தக்க தீர்ப்பு அளிப்பர். பாராளுமன்றச் சட்டங்களை நீதிபதிகள் செல்லாதவை என்று கூற முடியாது. ஆனால் பல்வேறு ஆட்சித்துறைச் சட்டங்கள் தக்க அனுமதியின்றி இயற்றப்பட்டால் அவை செல்லத்தக்கவை அல்ல என்று நீதிபதிகள் தீர்ப்பளிக்கலாம். ஆனால் பொதுப்படையாக ஒப்படைக்கப் பெற்ற சட்டமியற்றும் உரிமைகளை பொதுமக்கள் அதிருப்தியுடன்தான் காண்கின்றனர்.

ஆட்சித்துறைச் சட்டங்கள் அதிகரிக்கவே, ஆட்சித்துறைகளே சில சமயங்களில், அத் துறைகளின் சட்டங்கள் மீறப்படும் பொழுது நீதி மன்றங்களாகவும் பணியாற்றி வழக்குகளில் தீர்ப்பு கூற வேண்டிய அவசியம் ஏற்படுகிறது. இப்பொழுது ஒவ்வொரு ஆட்சித் துறையும், அத் துறை சம்பந்தப்பட்ட வழக்குகளை விசாரித்து தீர்ப்பு கூறுகின்றது. இவ்விதம் வழக்குகளை விசாரித்து தீர்ப்பளிக்கும் முறையை ஆங்கிலேய மக்கள் கண்டிக்கின்றனர். தனி மனிதன் உரிமைகள் பாதிக்கப்படுகின்றன என்றும் சட்டத்தின் ஆட்சி சீர்குலைகின்றது என்றும் கூறுகின்றனர். ஆட்சித்துறை நீதி மன்றமாகப் பணியாற்றுகின்ற பொழுது இந்தக் குறைபாடு இருக்கத்தான் செய்கிறது. இருப்பினும், ஆட்சித் துறையில் வழக்குகளுக்கு தீர்ப்பு அளிக்கப்படுவதில், சம்பந்தப்பட்ட கட்சிக்காரர்களுக்கு, காலதாமதம் தவிர்க்கப்படுகின்றது; பணம் அதிகமாக விரயம் ஆவதில்லை; மற்றும் பல சட்ட நுணுக்கங்கள் தேவைப்படுவதில்லை என்ற பல காரணங்களால், ஆட்சித் துறைகள் தீர்ப்பளிக்கும் முறை கைவிடப்படுதற்கில்லை. ஆனால் இவை நீதி மன்றங்களுடன் சரியான தொடர்பை வைத்துக்கொள்ள வேண்டுமென்றும், மக்களின் உரிமைகள் பாதுகாக்கப்பட வேண்டுமென்றும், சர் ஆலிவர் ஃபிராங் (Sir Oliver Frank) என்பவருடைய தலைமையில் ஒரு குழுவினர் ஆட்சித்துறைத் தீர்ப்புகளை ஆய்ந்து அறிக்கை விட்டபொழுது கூறுகின்றனர்.

அண்மையில் ஆட்சி அலுவல்கள் அதிகரித்துக் கொண்டு வருகின்றன. பல்வேறு ஆட்சித் துறைகளும் நிறுவப்பெற்றுள்ளன. இந்த ஆட்சி துறைகளிடையே, பொதுப்படையான இணைப்பும், தொடர்பும் ஏற்பட வேண்டும். இல்லாவிடில் முரண்பாடுகள் ஏற்படும்;

பணி விரயம் அதிகமாகும்; சில சமயங்களில் குழப்பமும் ஏற்படும். ஆதலால் ஆட்சித் துறைகளிடையே இணைப்பை ஏற்படுத்த ஆங்கிலேய அரசாங்கம் மூன்று வழிகளைப் பின்பற்றுகின்றது. (1) பல்வேறு துறைகளிடையே தொடர்புகொள்ளும் குழுக்களை அமைத்தல் **(Interdepartmental Committees)** (2) கேபினட் குழுக்களை அமைத்தல். (3) இணைவு அமைச்சர்களை நியமித்தல் **(Appointment of Coordinating Ministers)** பல்வேறு துறைகளிடையே தொடர்பு கொள்வதற்கு நிரந்தரக் குழுக்களும், சில சமயங்களில் தற்காலிகக் குழுக்களும் நியமனம் செய்யப்படுகின்றனர். சில விவகாரங்கள் பல அமைச்சவைகளுக்கும் பொதுப்படை தொடர்புடையவையாக இருக்கும் அந்த அமைச்சவைகளிடையே இந்தக் குழுக்கள் பொதுவான இணைவுகளை ஏற்படுத்த முடியும். அதனால் ஆட்சி செலுத்துவதில் முரண்பாடுகள் தவிர்க்கப்படுகின்றன. கேபினட் குழுக்கள் என்பன அமைச்சர்களை உறுப்பினர்களாகக் கொண்டிருப்பதால் மேல் மட்டத்தில் மட்டுமே அவர்கள் செயலாற்றக் கூடியவர்களாக உள்ளனர். ஆனால் அவர்களுக்கு நிறைய அலுவல்கள் இருப்பதால், இவ் விவ காரங்களையெல்லாம் அவர்களால் சரியாகக் கவனிக்க முடிவதில்லை. அதைப் போன்றுதான் இணைப்பு அமைச்சர் நியமனம் செய்யப்படுவதும் கூட. இலாக்கா இல்லாத அமைச்சர் என்ற ஓர் அமைச்சரை நியமனம் செய்யும் பொழுது அவர் எல்லா இலாக்காக்களையும் பார்த்து, இணைப்பை ஏற்படுத்துவது நடைமுறையில் சாத்தியமாகக் காணப்படு வதில்லை. ஏனெனில் இப்பேர்பட்ட அமைச்சர், மற்ற அமைச்சர்களுக் கெல்லாம் அமைச்சராக இருப்பதை பெரும்பாலும் விரும்புவதில்லை. வெறும் இணைப்புக்காக மட்டும் ஓர் அமைச்சரை நியமனம் செய்வதை முதலில் பொதுமக்கள் விரும்புவதில்லை. ஆனால் ஓர் அமைச்சர் பல்வேறு துறைகளிடையே இணைப்பை ஏற்படுத்த வேண்டிய அவசியம் இப்பொழுது ஏற்பட்டுள்ளது.

# 7. நிரந்தர நிர்வாகப் பொதுப்பணித் துறை

## (THE PERMANENT CIVIL SERVICE)

அரசாங்க அமைச்சர்கள், பல்வேறு வாரியங்களின் தலைவர்கள், துறை அமைச்சர்கள், துணை அமைச்சர்கள் ஆகியோர்களுக்கு அரசாங்கக் கொள்கைகளை நிர்ணயம் செய்வதும், அவர்களுடைய துறை அலுவல்கள் சரியாகச் செயலாற்றப் படுகின்றனவா என்று கண்காணிப்பதுமே முக்கிய அலுவல்களாக இருக்கின்றன. அவர்கள் வரிகளை வசூல் செய்வதில்லை; கணக்குகளைத் தணிக்கை செய்வதில்லை, பள்ளிகளைத் தணிக்கைச் செய்வதில்லை. இவை போன்ற எண்ணற்ற பணிகளைச் செய்ய பல ஆயிரக் கணக்கான சிறிய நிரந்தர அதிகாரிகள் நியமனம் செய்யப்பட்டுள்ளனர். அவர்களே நிரந்தரப் பொதுத் துறை அலுவலர்கள் என அழைக்கப்படுபவராவர். பெரும்பான்மையான பொதுத் துறை அலுவலர்கள் லண்டன் நகரிலுள்ள அலுவலகங்களிலும் மற்றும் பலர் நாடு முழுவதும் நிறுவப்பெற்றுள்ள அலுவலகங்களிலும் பணியாற்றுகின்றனர். அவர்கள் ஆட்சித் துறைகளில் பணியாற்றி மக்களுடைய அன்றாடத் தேவைகளைக் கவனிக்கின்றவர்களும் மக்களுடன் தொடர்பு கொள்கின்றவர்களுமாவர். ஜோசப் சேம்பர்லேயன் ஒரு முறை ஒரு சில பொதுத்துறை அலுவலர்களை நோக்கி, 'நாங்கள் இல்லாமலேயே நீங்கள் பணியாற்ற முடியும் என்ற சந்தேகம் எனக்குண்டு. ஆனால் அமைச்சர்களாகிய நாங்கள், நீங்கள் இல்லாமல் உறுதியாகப் பணியாற்ற முடியாது' என்று கூறினார். உண்மையில் பொதுத்துறை அலுவலர்களின் பணி மிகவும் மகத்தானதாகும். பாராளுமன்றமும், அமைச்சவையும் பல விதி முறைகளையும், சட்டங்களையும் இயற்றிக் கொண்டே வருகின்றன. இவற்றைத் தவிர, துறையில் உள்ள அதிகாரிகள் வேறு நடைமுறைக்கும், சூழ்நிலைக்கும் ஏற்ப எண்ணற்ற விதிகளை அமைத்த வண்ணம் உள்ளனர். இந்த விதிகளையும் சட்டங்களையும் ஒழுங்காகப் பின்பற்றி, ஆட்சி அலுவல்களை நடத்திச் செல்கின்றவர்கள்தான் பொதுத்துறை

அலுவலர்கள் ஆவார். பிரிட்டனில் உள்ள பொதுத்துறை அலுவலர்கள், மற்றைய நாடுகளிலுள்ள அலுவலர்களைக் காட்டிலும் திறமைக்கும், நாணயத்திற்கும், மதிப்பிற்கும் உரியவர்களாகின்றனர்.

அமைச்சர்கள், பல்வேறு வாரியத்தலைவர்கள் அரசியல் கட்சியைச் சார்ந்தவர்களாவர். அவர்கள் கட்சி, அதிகாரத்தில் இருக்கும் வரையில் தான் அவர்களும் பதவியில் இருக்க முடியும். அடுத்த தேர்தலில் ஒரு கட்சி தோற்று விட்டதென்றால், மற்றொரு கட்சி பதவியேற்கின்றது. ஆனால் பொதுத்துறை அலுவலர்கள் அப்படி அல்ல. அவர்களுக்கும் அரசியல் கட்சிக்கும் தொடர்பு இல்லை. அவர்கள் எந்த கட்சியையும் சாராததால் தான் அவர்களின் மதிப்பு உயர்கிறது. உயர்ந்த பதவிகளில் உள்ள பொதுத்துறை அலுவலர்கள் கட்சி சார்பான அரசாங்கக் கொள்கைகளைப் பற்றி எழுதவோ, அல்லது பேசவோ கூடாது. அவர்கள் பாராளுமன்றத்தில் உறுப்பினர்களாக வரவேண்டுமென்றால், அவர்கள் வகிக்கும் பொதுத்துறைப் பணியை விட்டு விட்டுத் தான் தேர்தல்களில் கலந்து கொள்ள முடியும். ஆனால் உள்ளூர்களில் பணியாற்றும் பல சிறிய அலுவலர்கள் ஆங்காங்குள்ள கட்சிகளில் தொடர்புடையவர்களாக உள்ளனர். ஆனால் பொதுத் துறை அலுவலர்கள் அரசியல் கட்சி சார்பற்றவர்களாக இருந்தால் தான், எந்தக் கட்சி பதவிக்கு வந்தாலும் ஒழுங்காக பணியாற்ற முடியும்.

ஆட்சித் துறைகளில் தலைவர்களாக நியமனம் செய்யப்படும் அமைச்சர்களுக்கு போதிய அனுபவம், அல்லது திறமை அத் துறைகளைப் பற்றிய அலுவல்களில் இருக்காது. அதனால் அத் துறையில் அனுபவம் பெற்றவர்களும், சிறப்பான திறமை பெற்றவர்களும், நீண்டகாலமாகப் பணிபுரிந்து வரும் பொதுத்துறை அலுவலர்களேயாவர். அமைச்சர்களுக்கு துறை வேலைகளைப் பற்றி பொதுப்படையாகத்தான் தெரிந்திருக்க முடியும். அவர்கள் துறை அலுவல்களையே கவனித்துக் கொண்டிருந்தால், மக்களிடையே தொடர்பு கொள்ளவும், கேபினட் கூட்டங்களுக்குச் செல்லவும், பாராளுமன்றக் கூட்டங்களுக்குச் செல்லவும் முடியாமற் போய்விடும். அரசியல்வாதிகளுக்கு மக்கள் தொடர்பும், பாராளுமன்றமும் தான் முக்கியமானதாகும். அதனால் அமைச்சர்கள் முழு கவனத்தையும் தங்கள் துறை அலுவல்களைக் கவனிப்பதில் செலவழிக்க முடியாது. தவிர அமைச்சர்கள், பல அரசியல் காரணங்களுக்காக, பல்வேறு துறைகளிலும் பணியாற்ற வேண்டியவர்களாக உள்ளனர். இந்த நிலையில் அவர்களுக்கு அவர்களுடைய துறை அலுவல்களைப் பற்றி முழுமையாகத் தெரிந்திருக்க வேண்டிய அவசியம் இல்லை. சான்றாக, வின்ஸ்டன் சர்ச்சில், வர்த்தக வாரியத்தின் தலைவராகவும், உள்துறை செயலராகவும் கடற்படைத்

தலைமை பிரபுவாகவும், போர் அமைச்சராகவும், விமானத்துறை அமைச்சராகவும், குடியேற்ற நாட்டுத் துறை அமைச்சராகவும், நிதித் துறை சான்சலராகவும் பணியாற்றியுள்ளார் என்கிறபொழுது, அவரை எந்தத் துறையில் வல்லுநர் என்று கூறுவது? பெரும்பாலும் அமைச்சர்களாகப் பிரிட்டனில் வருகிறவர்கள், வழக்கறிஞர்களோ, வியாபாரிகளோ, நிலப்பண்ணையாளர்களோ, அல்லது அரசியல்வாதிகளாகவோ தான் இருப்பார்கள். சில சமயங்களில் பத்திரிகையாளர்களும், பேராசிரியர்களும் கூட அமைச்சர்களாக வருவதுண்டு.

அதனால் அமைச்சர்களைப் பற்றிக் குறை கூறும்பொழுது, அவர்கள் நிர்வகிக்கும் துறைகளுக்கு அந்தந்தத் துறையில் அனுபவம் பெற்ற அமைச்சர்களை நியமித்தல் நல்லது என்று விரும்புகின்றனர். அப்பொழுது தான் அவர்களுடைய துறைகளில் என்ன நடக்கின்றது என்பதை அவர்களால் புரிந்துகொள்ள முடியும். நிதித்துறையில் பணிபுரியும் ஒரு சாதாரண எழுத்தருக்கே சில தகுதிகள் உள்ளன. சில தேர்வுகளில் தேறிய பின்னரே அவருக்கு அந்தச் சிறிய பதவி கிடைக்கிறது. ஆனால் நிதி அமைச்சராக இருப்பவர் எதைப் பற்றியும் தெரிந்து கொள்ள வேண்டிய அவசியமில்லை என்கிறபொழுது ஆச்சர்யமாகத்தானிருக்கும். போர் அமைச்சராகப் பணியாற்றும் பொழுது, போர் நடவடிக்கைகள் ஆகியவற்றைத் தெரிந்து கொள்ளாத ஒருவரை நியமனம் செய்து என்ன பயன் என்று கேட்கிறார்கள். ஆனால் உண்மையில் அமைச்சர்களுக்கு அவர்களுடைய அரசியல் பணிதான் முக்கியமானது. இத் துறைகளைப் பற்றிய பொதுவான அறிவு இருந்தால் போதுமானது. மற்றவைகளைப் பொதுத்துறை அலுவலர்கள் கவனித்துக் கொள்வர். அமெரிக்க ஐக்கிய நாட்டில், ஜனாதிபதி பல்வேறு துறைகளுக்கு அனுபவம் மிக்கத் துறைத் தலைவர்களை நியமனம் செய்கிறார் என்றால் அந்த நாட்டின் பழக்கங்கள் வேறு. அந்துறைத் தலைவர்களை ஜனாதிபதியே நியமனம் செய்வார். அவர்களும் அவருக்குத்தான் கட்டுப்பட்டிருக்க வேண்டும். தவிர, ஜனாதிபதி தேர்ந்தெடுக்கும் துறைத் தலைவர்கள் அரசியல்வாதிகளாக இருக்க வேண்டிய அவசியமில்லை. ஆனால் பிரிட்டனிலுள்ள அரசியல் சூழ்நிலை வேறு.

ஆங்கிலேய ஆட்சித்துறையில் அமைச்சர்கள் அரசாங்கத்தை மக்கள் விரும்பத்தக்க விதத்தில் நடத்துகின்றனர்; ஆட்சி அலுவலர்கள் அதைத் திறம்பட நடத்துகின்றனர்.

## பொதுத்துறை அலுவலின் வளர்ச்சி

18, 19-ஆவது நூற்றாண்டுகளில் பொதுத்துறை அலுவல் பணி பெரும்பாலும் அரசியல்வாதிகள், நில பிரபுக்கள், அமைச்சர்கள்

ஆகியோரின் உறவினர்களுக்கும், நண்பர்களுக்கும், கட்சி ஆதரவாளர்களுக்கும்தான் கொடுக்கப்பட்டு வந்தது. திறமை, நாணயம், தகுதி ஆகியவற்றைப் பற்றி அரசாங்கம் கவலைப்படவில்லை. இவ்விதம் அரசியல் செல்வாக்கு பெற்ற அதிகாரிகள் பணியாற்றிய விதமும், ஏதோ ஓய்வு நேர வேலையைப் பார்ப்பது போன்றுதானிருந்தது. அரசாங்க சம்பளம் அவர்களுக்கு வேறு பக்கத் தொழில் செய்வதற்காகவே கொடுக்கப்பட்டு வந்தது. தேர்தல் சமயங்களில் அவர்களும் அரசியல்வாதிகளுக்கு உதவி செய்வதில் முனைந்திருந்தனர். ஏற்கனவே ஆட்சித் துறைகளில் அமைச்சர்களுக்கு ஆட்சி முறைகளே தெரியாது இருந்தபொழுது, அவர்களுக்கு உதவி செய்ய நியமனம் செய்யப்பெற்ற அதிகாரிகளும் ஏறக்குறைய அமைச்சர்கள் இருந்த நிலையில்தான் இருந்தனர். ஆங்கிலேய பிரபுக்களுக்கு பொதுத்துறை அலுவல் பணி அவர்களுக்கு வேண்டியவர்களுக்கு நிவாரணம் அளிக்கும் ஒரு துறையாகவே கருதப்பட்டதாக ஜான் பிரைட் (John Bright) ஒரு முறை கூறினர். பொதுத்துறை அலுவல் பணியில் அவ்வளவு குறைபாடுகள் இருந்ததால், அத் துறையில் சீர்திருத்தங்களைக் கொண்டு வரவேண்டிய அவசியம் ஏற்பட்டது. தகுதிக்கும், திறமைக்கும் முக்கியத்துவம் கொடுத்தால்தான் பொதுத்துறை அலுவல் பணி நன்முக நடக்க முடியும் என்று கருதினர்.

1833-வரை பொதுந்துறை அலுவலில் இவ்வித நிலையே நீடித்து வந்தது. அதற்குப் பின்னர், பல சீர்திருத்தங்களை இத் துறையில் கொண்டு வரவேண்டுமென்பதற்காக, டிரவிலியான் - நார்த்காட் (Trevelyan-Northcote) ஆகியோர் பொதுத்துறை அலுவலில் சீரமைப்பு செய்வதைப் பற்றி ஆய்வு செய்து ஓர் அறிக்கையை விடுத்தனர். அப்பொழுதும் கூட, 'திறமை'யின் அடிப்படையில் முழு சீர்திருத்தங்களும் கொண்டு வரப்பட முடியவில்லை, படிப்படியாகத்தான் திறமையின் அடிப்படையில் ஆட்களை நியமனம் செய்ய முன் வந்தனர். திறமையைப் பரிசோதிப்பதற்காக, 1855-ல் பொதுத்துறைக்கு ஆட்களை நியமனம் செய்யும் குழு ஒன்று அமைக்கப்பட்டது. அக் குழுவில் மூன்று உறுப்பினர் நியமனம் செய்யப்பட்டனர். முதலில் பொதுத்துறையில் உதவியாளர்களைத் தேர்ந்தெடுக்கத் தேர்தல்களை நடத்தும் பொறுப்பு அக் குழுவிடம் ஒப்படைக்கப்பட்டது. ஏற்கனவே பணியாற்றி வந்தவர்களை இத் தேர்வுகள் பாதிக்கவில்லை. ஆனால் 1859-ல் ஓய்வு பெறுவதற்கு முன்னர், இத் துறையில் பணியாற்றுகின்றவர்கள் இக் குழுவினர் நடத்தும் தேர்வுகளில் தேறினல்தான் அவர்களுக்கு இறுதிக் கால உதவிப் பணம் கிடைக்கும் என்று கூறிவிட்டதால், எல்லோருமே இத் தேர்வுகளில் கலந்து கொள்ள வேண்டிய அவசியம் ஏற்பட்டது.

தேறியதாக, அவர்கள் நியமனக் குழு உறுப்பினர்களிடமிருந்து சான்றுகளைப் பெறவேண்டும். 1870-ல் பொதுத் துறையில் உள்ள எல்லா பதவிகளுக்கும் போட்டித் தேர்வுகள் நிகழ அரசாங்கம் சட்டம் இயற்றியது. இந்தச் சீர்திருத்தங்களைக் கொண்டுவரும் பொழுது அரசியல்வாதிகள் கடுமையாக எதிர்த்தனர். ஏனெனில் அவர்களுக்கு இதனால் சில நஷ்டங்கள் ஏற்பட்டன. மேற்கூறிய சீர்திருத்தங்களைக் கொண்டு வந்ததற்குப் பின்னர், இருபது ஆண்டுகள் வரையிலும் பொதுத்துறை அலுவல் நியமனக் குழு பலத்தக் கண்டனங்களுக் குள்ளாகியது. ஆனால் படிப்படியாக பொதுத்துறை அலுவலில் நியமனம் செய்யப்படுகின்றவர்கள், தகுதி, திறமை ஆகியவற்றின் அடிப்படையில் தேர்ந்தெடுக்கப்பட்டனர். 1875, 1884-90, 1910-14, 1918, 1929-31 ஆகிய ஆண்டுகளில் மேலும் பல சீர்திருத்தங்களை அரசாங்கம் கொண்டு வந்தது. இந்தச் சீர்திருத்தங்களைக் கொண்டு வரும் பொழுது பாராளுமன்றம் அவ்வளவு ஆர்வத்தைக் காட்ட வில்லை. இச் சீர்திருத்தங்களை நிர்வாகத் துறையினரே கொண்டு வந்தது மிகவும் குறிப்பிடத்தக்கதாகும்.

இப்பொழுது பொதுத்துறைப் பணி அலுவல்களை ஐந்து வகைகளாகப் பிரித்துள்ளனர்.

(1) ஆட்சியாளர்கள் பணியைச் செய்ய (Administrative)

(2) விஞ்ஞானத் துறைகளில் பணியாற்ற வல்லுநர்கள், தொழில் நுணுக்கம் தெரிந்தவர்கள், தொழிற் பயிற்சி பெற்றவர்கள். (Professional, Scientific and Technical.)

(3) நிர்வாகிகள் (Executive)

(4) எழுத்தர்கள் பணிகளைச் செய்ய (Clerical)

(5) நிர்வாகத் துறைகளைச் செய்ய (Departmental)

ஆட்சித் துறையில் மிகவும் முக்கியமான பணிகளையாற்றுகிறவர் கள் ஆட்சியாளர்களேயாவர். அவர்கள்தான் அரசாங்கத்தின் ஆட்சியை நடத்துகிறவர்களாவர். 21 வயது முதல் 24 வரையிலும் உள்ள மேல் படிப்பு பெற்ற கல்லூரி பட்டதாரிகளே இந்தப் பணிகளுக்குத் தேர்ந்தெடுக்கப்படுகிறார்கள். அவர்கள், பொதுத்துறை அலுவல் நியமனக் குழுவினர் நடத்தும் தேர்வுகளில் தேறியிருக்க வேண்டும். பல தேர்வுகளுக்குப் பின்னர் தேர்ந்தெடுக்கப்படும் இந்த ஆட்சியாளர் கள் ஆட்சித் துறைகளில் அமைச்சர்களாகவும், உதவி அமைச்சர்களாக வும் நியமனம் செய்யப்படுவர். நிர்வாகப் பிரிவிலிருந்து சிலர் இந்தப்

பணிக்கு மேல் பதவி உயர்வு பெறுகின்றனர். அவர்களின் எண்ணிக்கை மிகவும் குறைவாகவேவுள்ளது. ஆட்சியாளர்களின் எண்ணிக்கை ஏறக்குறைய 3000 பேர் வரையிலும் இப்பொழுது உயர்ந்துள்ளது. பெண்களும் இந்தத் துறையில் பணியாற்றுகிறார்கள். பொதுத்துறை அலுவல்களில் பணியாற்றும் இவர்கள் மொத்த அலுவலர்களில் ஒரு சதவிகிதத்தவனரேயாவர்.

தொழிற் பயிற்சி பெற்றவர்கள், விஞ்ஞானப் பயிற்சி பெற்றவர்கள், மற்றும் தொழில் நுணுக்கம் தெரிந்த வல்லுநர்கள் சமீப காலத்தில் தான் பொதுத்துறை அலுவல்களில் சேர்த்துக் கொள்ளப் படுகின்றனர். அவர்களுக்கு ஆட்சி துறை சம்பந்தப்பட்ட அலுவல்கள் மிகவும் குறைவாகவே இருக்கும். மிகவும் பிரத்தியேகமான தொழிற் துறைகளில் அவர்களுடைய பணி பயன்படுத்திக் கொள்ளப்படுகிறது. இவர்களுடைய எண்ணிக்கை, ஆட்சியாளர்களின் எண்ணிக்கையைக் காட்டிலும் அதிகமாக உள்ளது. இவர்களுடைய செல்வாக்கு, ஆட்சியாளர்களின் செல்வாக்கைக் காட்டிலும் குறைவானதாகவே மதிப்பிடப் படுகிறது. இருந்தபோதிலும் அவர்களுடைய பணி சில தொழிற் துறைகளில் மிகவும் அவசியமாகத் தேவைப்படுகிறது. இப் பிரிவில் தேர்ந்தெடுக்கப்படுபவர்களின் வயதும் ஆட்சியாளர்களின் வயதைக் காட்டிலும் அதிகமாகவே உள்ளது.

நிர்வாகப் பிரிவில் பணியாற்றுகிறவர்கள் எண்ணிக்கை இப்பொழுது ஏறக்குறைய 60,000 பேர்கள் வரையிலும் உள்ளது, 18-19 வயதுகளில் உள்ளவர்கள், அவர்களுக்கென்று நடத்தப்படும் தேர்வுகளில் வெற்றி பெற்ற பின்னர், இப் பணிகளில் நியமனம் செய்யப்படுகின்றனர். எழுத்தர் பிரிவிலிருந்தும் அவர்கள் பதவி உயர்வு இப் பிரிவுக்கு பெறுகின்றனர். உயர்நிலைப்பள்ளிப் படிப்பு முடிந்தவுடன் பலர் இப் பணியில் சேர முன்வருகின்றனர். நிர்வாகப் பிரிவில் உள்ள சில பணிகள், பல்கலைக்கழகப் பட்டதாரிகளுக்கு ஒதுக்கப்பட்டுள்ளது. இவர்களுடைய பணிகளை பெரும்பாலும் அரசாங்கக் கணக்குகளை வைத்துக்கொள்வதற்குப் பயன்படுத்தப் படுகின்றன. அவர்களுக்கு அளிக்கப்படும் பதவி உயர்வுகள் மிகவும் குறைவாகவேவுள்ளன. அவர்களுடைய முன்னேற்றத்திற்கான வாய்ப்புகளும் மிகவும் குறைவாகவே உள்ளன.

பொதுப்பணி அலுவல்களில் வேலை செய்யும் எழுத்தர்களும், உதவியாளர்களும், தட்டெழுத்தர்களும் மற்றும் பலரும் ஆயிரக் கணக்கான அளவில் உள்ளனர். அவர்களுடைய பணி ஆட்சித் துறையில் மிகவும் தேவைப்படுகின்றது. அன்றாட ஆட்சித்துறை

வேலைகளை இவர்கள்தான் கவனித்துக் கொள்கின்றனர். மற்ற தனிப் பட்டோர் நிறுவனங்கள் எழுத்தர்களைத் தேர்வுகள் நடத்தாமலேயே நியமனம் செய்து கொள்வதால், தேவையான அளவில் அரசாங்கப் பணிகளுக்கு எழுத்தர்கள் கிடைப்பதில்லை. அதனால் அவர்களை நியமனம் செய்யும் பொழுது அரசாங்கம் தேர்வுகளை நடத்தாமலேயே அவர்களின் உயர்நிலைப்பள்ளி சான்றுகளை வைத்துக்கொண்டு நியமனம் செய்கின்றனர். பெண்களும் இந்தப் பணிகளுக்கு அதிகமாக நியமனம் செய்யப்படுகின்றனர். இவர்களுக்கு அதிக அளவில் பதவி உயர்வுகள் கிடைக்கும் வாய்ப்புகள் இல்லை.

பல துறைகளிலும் சில தனிப்பட்ட, வரி ஆய்வாளர்கள், தொழிற்சாலை ஆய்வாளர்கள், சுங்க வரிகளை வசூல் செய்கின்றவர்கள், ஆகியோரைப் போன்று நியமனம் செய்யப்படுகின்றனர். அவர்களெல்லாம் அத் துறைகள் சம்பந்தப்பட்டவர்களாவர்.

பல உள்ளாட்சி நிறுவனங்களில் பணியாற்றுகிறவர்களும், தேசிய உடைமையாக்கப்பட்ட நிறுவனங்களில் பணியாற்றுகிறவர்களும் பொதுத்துறை அலுவல்களில் சாராதவர்கள். பொதுத்துறைச் சட்ட திட்டங்களுக்குள் அவர்கள் வருவதில்லை. அவர்களுக்கென்று தனிச் சம்பள விகிதங்கள் நிர்ணயம் செய்யப்பட்டுள்ளன.

பொதுத்துறை அலுவல்களுக்கு ஆட்களை நியமனம் செய்ய தனியாக மூன்று பேர் கொண்ட பொதுத்துறை அலுவல் நியமனக் குழுவினர் (Civil Service Co nmission) நியமனம் செய்யப்பட்டுள்ளனர். அவர்கள் கருவூலத்திற்கு (Treasury) கட்டுப்பட்டவர்களாக இருப்பர். அவர்கள் மேற்கொள்ளும் நடவடிக்கைகளுக்கு கருவூலத்தின் சம்மதம் தேவைப்படுகின்றது. அரசாங்கத்தின் எல்லா துறைகளிலும் நியமனம் செய்யப்படுவர்களின் தகுதிகளை அவர்கள் நிர்ணயம் செய்வர். அவர்கள் எந்த வகையில் தேர்ந்தெடுக்கப்பட வேண்டும் என்பதையும் வரையறுப்பர். நியமனம் செய்யப்பட்டவர்கள், அவர்களுடைய தகுதிகள் ஆகிய விவரங்களை லண்டன் கெஜட்டில் அவர்கள் வெளியிடுவர். நியமனக் குழுவினர் தேர்வுகளை நடத்துவார்கள். தேர்தலில் தேறியவர்கள் பட்டியல் அவர்களிடம் இருக்கும். உண்மையில் இத் தேர்வுகளில் தேறியவர்களை, பல ஆட்சித் துறைகள் நியமனம் செய்கின்றன என்றுதான் கூற வேண்டும். ஆனால் இந்த நியமனக் குழுவின் முக்கியமான வேலை, நியமனம் செய்யப்படுவர்களுக்கு வைக்கும் தேர்வுகளேயாகும். நியமனக் குழுவினர் எக் காரியத்தைச் செய்தாலும் கருவூலத்தின் சம்மதத்தைப் பெற்றேயாக வேண்டும். நியமனம் செய்யப்படுகிறவர்களின் சம்பளவிகிதங்கள், விதிகள், கட்டுப்பாடு ஆகிய எல்லாவற்றையும் கருவூலம் கவனித்துக் கொள்ளும்.

எல்லா பணிகளுக்கும் ஒரே மாதிரியான முறையில்தான் நியமனம் செய்யப்படுகின்றது என்று கூறுவதற்கில்லை. தேர்வுகள், நேர்முகப் பேட்டிகள் மற்ற சிவில் அதிகாரிகளால் பரிசீலனை செய்தல் ஆகிய பல முறைகளிலும் அதிகாரிகள் தேர்ந்தெடுக்கப்படுகின்றனர். தேர்வுகள் எழுதித் தேர்வு பெற்ற பின்னர், நேர்முகப் பேட்டிகள் ஆகிய வற்றைப் பயன்படுத்தி ஒருவரின் திறமையைக் கண்டுபிடிக்கின்றனர். இந்தச் சோதனைகளையெல்லாம் பொதுத்துறை அலுவல் நியமனக் குழுவினர்தான் செய்வர். ஆட்சியாளர்களின் தேர்வுகளுக்குப் பெரும் பாலும் பல்கலைக்கழகப் பாடங்களின் அடிப்படையிலேயே தேர்வுகள் நடத்தப்படுகின்றன. வேலையில் சேருகின்ற பொழுதே ஒருவருக்கு அவருடையத் துறையைப் பற்றித் தெரிந்திருக்க வேண்டிய அவசிய மில்லையென்று ஆங்கிலேய அரசாங்கம் கருதுகிறது. இவ் வேலைகளை செய்ய அவர்களுக்குப் போதிய ஆற்றலும் திறமையும் உள்ளனா என்பதைத்தான் முக்கியமாக அரசாங்கம் தெரிந்து கொள்ள விரும்புகிறது. நியமனம் செய்யப்படுபவர்களைப் பரிசீலனை செய்த பின்னர், தகுதி பெற்றவர்களின் பட்டியலை வெளியிடுவர். அப் பட்டியலில் உள்ளவர்களுக்கு வரிசையாக பல துறைகளிலும் பதவிகள் காலியாகின்றபொழுது இவர்கள் நியமனம் செய்யப் படுவார்கள்.

இவர்கள் நியமனம் செய்யப்படும் பொழுது இவர்களுக்கும் பொது அறிவு மட்டுமிருக்கும். துறைகளில் உள்ள வேலைகளுக்கு இவர் களுக்கு அதற்குப் பின்னர், மிகவும் குறைந்த அளவில் தான் பயிற்சி அளிக்கப்படும். அது முழுமையான பயிற்சி ஆகாது. இருந்த போதிலும், அவர்கள் துறைகளில் வெளியிடப்பட்டுள்ள பல விதிகளை யும் சட்டங்களையும் படித்து தெரிந்து கொள்ள வேண்டும். பின்னர் துறைகளில் பணியாற்றுகின்ற பொழுது அவர்களாகவே கற்றுக் கொள்ள வேண்டும். ஆங்கிலேய அரசாங்கம் அதற்கென்று ஒரு முழு அளவில் பயிற்சியை அளிப்பதில்லை.

பொதுத் துறை அலுவல்களில் பணியாற்றுகிறவர்கள், நிரந்தர மாக்கப்பட்டதற்குப் பின்னர், அவர்கள் பதவியை விட்டு ஓய்வு எடுத்து கொள்ளும் வரையிலும் பணியாற்றலாம். அவர்கள் சரியாக பணியாற்ற வில்லை, அல்லது அவர்களுடைய நடத்தை, நாணயம் சரியில்லை யென்கிற பொழுது, அவர்கள் பதவியிலிருந்து நீக்கப்படுவார்கள். ஆனால் ஒழுங்கான முறையில் அவர்கள் பணியாற்றினால் அவர்களுடைய வேலைகளுக்கு அபாயம் ஏற்படாத வரையில் அவர்களுக்கு அரசாங்கம் பாதுகாப்பு அளித்துள்ளது. பொதுத் துறை ஊழியர்களை சரியான காரணமின்றி அரசாங்கம் வேலையிலிருந்து நீக்குவதில்லை.

திறமை மிக்க அதிகாரிகளை அரசாங்கம் பொதுத் துறை அலுவல் களில் நியமனம் செய்வதால் அதற்கேற்ப அவர்களுடைய சம்பள விகிதங்களையும் நிர்ணயம் செய்யும். தனிப்பட்ட நிறுவனங்களில் பணியாற்றுகிறவர்களுக்கு, அரசாங்கத்தில் பணியாற்றுகின்றவர்களைப் போன்று நிரந்தரமான பாதுகாப்பு, தனிப்பட்ட நிறுவனங்களில் பணி யாற்றுகிறவர்களுக்கு இருக்கமுடியாது. இது ஒரு பெரிய நன்மையாகும். ஆனால் மற்ற வகைகளில் அரசாங்க ஊழியர்களுக்குப் பல தொல்லைகள் ஏற்படுகின்றன. அவர்கள் அரசியலில் கலந்து கொள்ளக் கூடாது. அவர்கள் வேறு எந்த வியாபாரத்தையும் செய்யக்கூடாது. ஆகிய பல கட்டுப்பாடுகள் உள்ளன. தனிப்பட்ட நிறுவனங்களில் பணியாற்று கிறவர்கள் நிறைய பணத்தைச் சேமித்துக் கொள்ள முடிகிறது. அரசாங்க ஊழியர்களால் இவ்விதம் செய்ய முடியாது. பொதுத்துறை அலுவல்களில் உள்ள மிக உயர்ந்த அதிகாரிகள், கீழ்மட்டத்திலுள்ள அதிகாரிகளைக் காட்டிலும் 30 பங்கு அதிக ஊதியம் பெறுவதை காண்கிறோம். கருவூலத்தில் பணியாற்றும் சில செயலர்களின் சம்பளங்கள் ஆண்டுக்கு 6500 பவுன்களாகும். அமைச்சர்கள் பெறு வதைக் காட்டிலும் சில செயலர்கள் அரசாங்கத்தில் அதிக சம்பளங் களைப் பெறுகின்றனர். தனிப்பட்ட நிறுவனங்கள் இந்த அளவிற்கு மேலாகச் சம்பளங்களைக் கொடுப்பதால் அரசாங்கமும் அந்த அளவிற்கு அதிகச் சம்பளங்களைக் கொடுத்தால் தான் அரசாங்கம் திறமை மிக்க அதிகாரிகளை வைத்திருக்க முடியும். அதனால் ஓரளவிற்குத் தனியார் நிறுவனங்களில் அளிக்கப்படும் சம்பள விகிதங்களைப் போன்று தான் அரசாங்கத்திலும் அளிக்கப்படுகின்றது. அதிகமாகச் சம்பளம் வாங்கும் அதிகாரிகள் அரசாங்கப் பொதுத்துறையில் குறைவாகவே உள்ளனர். பெரும்பான்மையான பொதுத்துறை அலுவல் ஊழியர்கள் ஆண்டொன் றுக்கு 1200 பவுன்களுக்கும் குறைவாகவே பெறுகின்றனர். 2000 பவுன்களுக்கு மேல் பெறுகிறவர்கள் எண்ணிக்கையும் மிகவும் குறை வாகவே உள்ளது.

பொதுத்துறை அலுவல்களில் பணியாற்றுகிறவர்கள் ஓய்வு எடுத்துக் கொள்ளுதல், அவர்கள் உதவிப் பணம் பெறுதல் ஆகிய வற்றைப் பாராளுமன்றம் மிகவும் தாராளமாக நிர்ணயம் செய்துள்ளது. சாதாரணமாக, 60-65 வயதுகளில் பதவியை விட்டு ஓய்வு எடுத்துக் கொள்ளலாம். ஆனால் 65-வது வயது அடைந்தவுடன் ஒருவர் கட்டாய மாக ஓய்வு எடுத்துக் கொள்ளவேண்டும். 60 வயதிற்கு முன்னால் ஓய்வு எடுத்துக் கொள்ள வேண்டுமென்றால், அவரால் இனிமேல் வேலை செய்ய முடியாது என்று மருத்துவரிடம் சான்றிதழ் பெறுதல் வேண்டும். பணியாற்றுகிறவர்கள் அவர்கள் பதவிகளில் இருக்கும் பொழுது ஓய்வு உதவி நிதிக்காக மாதா மாதம் பணம் கட்டத் தேவை

யில்லை. அவர்கள் கடைசி மூன்று ஆண்டுகளில் வேலை செய்து கொண்டிருந்த பொழுது என்ன சம்பளம் பெற்றுக் கொண்டிருந்தார்களோ, அதில் பாதியை அவர்களுடைய ஓய்வு காலத்தில் உதவிப் பணமாகப் பெறுவர். ஓராண்டில் பெறும் உதவிப்பணத்தைப் போன்று மூன்று நடவை அதிகமான அளவில் அவர்களுக்கு மொத்த உதவித் தொகையும் அளிக்கப்படும். அதை அவர்கள் ஒரு சிறிய வீடு வாங்கவோ, அல்லது கடை வைத்துக்கொண்டு பிழைக்கவோ பயன் படுத்திக்கொள்வார்கள்,

தனியார் நிறுவனங்களில் பணியாற்றும் ஊழியர்கள் எல்லாரும் அவர்களுக்கென்று சங்கங்களை அமைத்துக் கொண்டுள்ளனர். அத்துடன் அவர்கள் சங்கங்கள் தொழிற்சங்க நிறுவனங்களுடனும் மற்றும் தொழிற்கட்சியுடனும் இணைந்துள்ளன. இந்தச் சங்கங்களைப் போன்று, இங்கிலாந்திலுள்ள பொதுத்துறை அலுவலகங்களில் பணி யாற்றும் எல்லா ஊழியர்களும் பல சங்கங்களை அமைத்துக் கொண் டுள்ளனர். பொதுத்துறை அலுவல் கூட்டணி (The Civil Service Alliance) அஞ்சல்துறையில் பணியாற்றும் ஊழியர்கள் சங்கம் (The Union of Post Office Workers) ஆகிய இரு சங்கங்களும் மிகப்பெரியவையாகும். இவர்கள் சங்கங்களை இந்த நூற்றுண்டில் தான் அரசாங்கம் அங்கீகரித்துள்ளது. அவர்களுடைய குறைபாடுகள், சம்பள விகிதங்கள் ஆகியவற்றை அச் சங்கங்கள் பாதுகாத்துக் கொள்ளும். தவிர, இந்தச் சங்கங்கள் வெளியேயுள்ள தொழிற்சங்கங் களுடன் இணைந்து கொள்ளவும், மற்றும் தொழிற்கட்சியுடன் இணைந்து கொள்ளவும் அரசாங்கம் அனுமதி அளித்துள்ளது. இவ் விதம் பொதுத்துறை ஊழியர்கள் சங்கங்களை அமைத்துக் கொண்டிருப் பதால், அவர்களுடைய கோரிக்கைகளை வற்புறுத்த வேலைநிறுத்தங்கள் செய்வதும் அவர்களுடைய உரிமைகளாகி விட்டன. 1926-ல் பிரிட்ட னில் பொதுத்துறை ஊழியர்களின் வேலைநிறுத்தம் ஏற்பட்டு அரசாங்கத்தையே திணறடித்து விட்டது. ஸ்டான்லி பால்டுவின் தலைமையில் பதவியிலிருந்த கன்சர்வேடிவ் அரசாங்கம் 1927-ல் தொழிற் தகராறுகள், தொழிற்சங்கக் சட்டம் ஒன்றை (Trade Disputes and Trade Unions Act) நிறைவேற்றினர். இந்தச் சட்டம் மிகவும் உணர்ச்சி வேகத்தில் இயற்றப்பட்டது. இந்தச் சட்டத்தால், தொழிற்கட்சிகளுடனும், தொழிற்சங்கங்களுடனும் பொதுத்துறை ஊழியர்கள் தொடர்பு வைத்துக் கொள்ளக்கூடாது என்று தடை விதித்தனர். எந்த அரசியல் கட்சிகளுடனும், பொதுத் துறை ஊழியர் சங்கங்கள், நேரிடையாகவோ, அல்லது மறை முகமாகவோ, தொடர்பு வைத்துக் கொள்ளக் கூடாது என்று தடை விதித்தனர். அதனால் பொதுத்துறை ஊழியர்கள், அரசியல் கட்சி

களுடனும் தொழிற்சங்கங்களுடனும் தொடர்பு வைத்துக் கொள்வதை நிறுத்திக் கொண்டனர். ஆனால் அவர்களுடைய எதிர்ப்பு மிகவும் பலமாக இருந்தது. தொழிற்கட்சி பதவிக்கு வரும்பொழுது இந்தச் சட்டத்தை ரத்து செய்து விடுவதாக தொழிற்கட்சியினர் வாக்குறுதி அளித்தனர். 1931-ல் தொழிற்கட்சி இச் சட்டத்தை ரத்து செய்ய முடியவில்லை. ஆனால் 1946-ல், 1927-ல் இயற்றப்பெற்ற தொழிற் தகராறுகள், தொழிற்சங்க சட்டத்தை ரத்து செய்து விட்டனர். பொதுத்துறை ஊழியர்கள் சங்கங்கள் எந்த அரசியல் கட்சியுடனும் தொழிற் சங்கங்களுடனும் தொடர்பு வைத்துக் கொள்ளவும், இணைந்து கொள்ளவும் அனுமதிக்கப்பட்டனர். பொதுத்துறை ஊழியர்கள் சங்கங்கள் அவர்களுடைய குறைகளை எடுத்துக் கூறவும், அவர்களுடைய உரிமைகளைப் பாதுகாத்துக் கொள்ளவும் வாய்ப்புகள் அளிக்கப் பட வேண்டுமென்று வற்புறுத்தி வந்தனர். சட்டமியற்றும் குழுக்களில் ஊழியர்களுக்கும், அதிகாரிகளுக்கும் பிரதிநிதித்துவம் வேண்டுமென்று கோரி வந்தனர். இந்தக் குறையையும் தீர்க்க அரசாங்கம், 'விட்லி கவுன்சில்கள்' (Whitley Councils) 1919-ல் நிறுவப்பட அனுமதி அளித்தது. நாளடைவில் இந்த 'விட்லி கவுன்சில்கள்' எல்லா துறை களிலும் நிறுவப்பெற்றன. இந்த ஏற்பாட்டின்படி, 1. அரசாங்க அலுவலகங்களில் தொழிலாளர் குழுக்கள் (துறைமுகங்களில், வெடி மருந்து சாலைகளில் பணியாற்றுகிறவர்களைப்போன்று) அமைக்கப் பெற்றன. 2. துறைக் குழுக்கள் அமைக்கப்பெற்றன. இந்தத் துறைக் குழுக்கள் துறைக்குத் துறை மாறியிருந்தன. இந்தக் குழுக் களில், ஊழியர்களும், அதிகாரிகளும் தங்களுடைய பிரதிநிதிகளைத் தேர்ந்து அனுப்பினர். இரு தரப்பிலும் தேர்ந்தெடுக்கப்பட்ட பிரதி நிதிகள் எண்ணிக்கை சமமாக இருந்தது, 3. ஒரு தேசிய குழுவும் (National Council) அமைக்கப்பட்டது. இக் குழுவில் கருவூலத்தை சார்ந்த அதிகாரிகள் பிரதிநிதித்துவம் பெற்றனர். அந்த எண்ணிக் கைக்குச் சமமாக, ஊழியர்களின் பிரதிநிதிகளும் பிரதிநிதித்துவம் பெற்றனர். இந்த ஊழியர்களின் பிரதிநிதிகள், பொதுத்துறை சங்கங்கள் மூலமாகத் தேர்ந்தெடுக்கப்பட்டவர்களாவர். இந்த 'விட்லி கவுன்சில்கள்' பொதுத்துறை ஊழியர்களின் பல விவகாரங்களையும் பாதுகாக்கின்றன.

# 8. அரசு உடைமையாக்கப்பட்ட தொழில்கள்

## (THE NATIONALIZED INDUSTRIES)

இரண்டாவது உலகப் போருக்குப் பின்னர், பிரிட்டனில் பொருளாதாரத் துறையில் நிறைய மாற்றங்கள் ஏற்பட்டன. பிரிட்டனிலுள்ள சில பொது முக்கியத்துவம் பெற்ற தொழில்கள் தேசிய உடைமையாக்கப் பெற்றன. இருப்பினும் 80 சதவிகிதத் தொழில்கள் பிரிட்டனிலுள்ள தனியார் ஆதிக்கத்தில் தான் உள்ளன. தொழிற் கட்சியின் செல்வாக்கு அதிகமானதால், சில முக்கியமான, நிலக்கரிச் சுரங்கங்கள், போக்குவரத்து, மின்சக்தி ஆகியவற்றை அரசுடைமைகளாக்கினர். தவிர, தொழிற்கட்சியின் திட்டங்களின்படி, தேசியப் பொது நலப் பணி (The National Health Service) தேசியக் காப்புறுதித் திட்டம் (National Insurance Scheme) 1946-ல் இயற்றப்பெற்ற விவசாயச் சட்டம், (The Agricultural Act of 1946) நகரம், கிராமங்கள் சீரமைப்புத் திட்டம் (The Town and Country Planning Act of 1947) குடியிருப்புத் திட்டம் (Housing Program) 1944-ல் இயற்றப்பெற்ற கல்விச்சட்டம் ஆகிய அரசாங்கத் திட்டங்களையும் அரசாங்கத்தின் தேசிய உடைமைகளாக்கும் திட்டங்களாகவே சிலர் கருதுகின்றனர். தனியார் துறையிலிருந்து சில முக்கியமான தொழில்களை அரசுடைமைகளாக்கிஞல் தான், பொது நல நாடு (Welfare State) என்ற குறிக்கோளை அடைய முடியும் என்று அரசாங்கம் கருதுகிறது. ஆனல் அரசுடமைகளாக்கும் அரசாங்கக் கொள்கைகளுக்கும், பொது நலத் திட்டங்களுக்கும் வேறுபாடு உள்ளது. சான்ருக, தேசிய பொது நலப் பணியை எடுத்துக் கொள்ளலாம். அரசுடமையாக்கப்படுவது தொழில்களையும், அவைகளோடு தொடர்புடையவற்றிற்கு மட்டுமே இப்பொழுது அரசாங்கம் கவனித்து வருகிறது. மற்ற பல தொழில்களும் தனியார் ஆதிக்கத்திலேயே உள்ளன.

பொதுவாக, இரண்டாவது உலகப் போருக்குப் பின்னர், அதுவும், 1945-ல் தொழிற்கட்சி அரசாங்கம் நிறுவப்பட்டதற்குப் பின்னர் தான் அரசுடமையாக்கும் திட்டங்கள் நிறைவேற்றப்பட்டன என்ற நிலை இருந்த போதிலும், இந்தக் காலத்திற்கு முன்னரும், அரசுடமையாக்கும் சில திட்டங்கள் இருந்தன. ஆனால் அத் திட்டங்களைப் பற்றி மக்களுக்கு அதிகமாகத் தெரியவில்லை. 19-வது நூற்றாண்டிலேயே அரசாங்கம் இத் திட்டத்தில் கவனம் செலுத்தியது. அப்பொழுதிருந்த கன்சர்வேடிவ் கட்சி, அரசுடமைத் திட்டத்திற்கு விரோதமாக இருந்த போதிலும், நடைமுறையில் 1906-ல் சில துறைகளில் இத் திட்டத்தை நிறைவேற்ற முயற்சி எடுத்துக் கொண்டது. லிபரல் கட்சி அரசாங்கமும் இந்த நூற்றாண்டின் முற்பகுதியில் சில முயற்சிகளை மேற்கொண்டது. இரண்டு உலகப் போர் நிகழ்வதற்கிடையே உள்ள காலத்தில் மின் விசை விநியோகம் நகரங்களால் தான் செய்யப்பட்டு வந்தது. உள்ளூர் போக்குவரத்துக்களையும் அரசாங்கமே கவனித்து வந்தது. நிலக்கரிச் சுரங்கங்களிடமிருந்து லாபப்பங்கை 1930 முதல் அரசாங்கம் பெற்று வந்தது. பின்னர். நிலக்கரிச் சுரங்கங்களை அரசுடமையாக்க இந்த நடவடிக்கை முன்னோடியாக அமைந்தது. 1926-ல் மத்திய மின்சார வாரியம் அமைக்கப்பட்டது. இரண்டாவது உலகப்போருக்கு முன்னர், பல ரயில் பாதைகளை, கட்டாயமாக நான்கு நிறுவனங்களோடு இணைத்தது. இரண்டாவது உலகப் போர் சமயத்தில் யுத்த நடவடிக்கையாக, ரயில்வேக்களை அரசாங்கமே எடுத்து நடத்த வேண்டிய அவசியம் ஏற்பட்டது. 1926-ல் பிரிட்டனின் வானொலி நிகழ்ச்சிகள் 'பிரிட்டிஷ் பிராட்காஸ்டிங் கார்ப்பரேஷன்' என்ற பொது நிறுவனத்திடம் ஒப்படைக்கப்பட்டன. மேற்கூறிய நிகழ்ச்சிகளிலிருந்து, இரண்டாவது உலகப் போர் நிகழ்வதற்கு முன்னரே, பல்வேறு கட்சிகளும், அரசுடமையாக்கும் திட்டத்தில் அக்கறை கொண்டிருந்தன. தவிர சில தொழில்களை தனியார் ஏற்று நடத்த ஆர்வம் காட்டவில்லை. சில தொல்லைகள் இருந்ததால், அவர்கள் இத் தொழில்களை ஏற்று நடத்த முன் வரவில்லை. ஆதலால் அரசாங்கம் அந்தத் தொழில்களை ஏற்று நடத்த வேண்டிய அவசியம் ஏற்பட்டது. அதனால் தான் பிரிட்டனில் இன்னும் 80 சதவிகிதம் தொழில்கள் தனியார் துறையிலேயே இருக்கின்றன.

பல துறைகளில் அரசாங்கம் அரசுடமையாக்கும் திட்டத்தில் ஈடுபடவில்லை. என்றபோதிலும், பெரும்பான்மையான துறைகளில் அரசாங்கத்தின் தலையீடும் கட்டுப்பாடும் வளர்ந்து வருகின்றன. ஏனெனில் அரசாங்கக் கொள்கைகளான அரசுடமை, பொது நலத் திட்டங்கள் ஆகியவற்றை நிறைவேற்றும் பொழுது, அவைகளுக்கேற்ப பல தொழில்களிலும், பலதுறைகளிலும் அரசாங்கக் கட்டுப்

பாடுகள் (Controls) ஏற்படுவதில் ஆச்சரியமில்லை. தனியார் தொழில்கள் விரிவடையும் பொழுது ஒவ்வொரு கட்டத்திலும், அவர்கள் அரசாங்கத்தின் அனுமதியைப் பெற வேண்டிய அவசியம் ஏற்படுகிறது தவிர, மூலப்பொருள்கள் வாங்குவதிலிருந்து, என்ன பொருள்களை உற்பத்தி செய்கிறார்கள், எவ்விதம் வியாபாரம் செய்கிறார்கள் ஆகிய எல்லா நடவடிக்கைகளிலும் அரசாங்கக் கட்டுப்பாடுகள் அல்லது அரசாங்க ஆலோசனைகள் அந் துறைகளில் அதிகமாகக் காணப்படுகின்றன. நெருக்கடியான பொருளாதாரச் சூழ்நிலை ஏற்பட்டு விட்டால், சில சமயங்களில் அரசாங்கக் கட்டுப்பாடுகள் இருக்க வேண்டியுள்ளன என்று அரசாங்கம் விளக்கம் தருகிறது. ஆனால் இந்த அரசாங்க நடவடிக்கைகள், சமுதாயத்தின் பொதுநலன்கள் கருதி எடுக்கப்படுவதைக் காண்கிறோம்.

அரசுடைமையாக்கப்பட்ட சில துறைகளையும், சில தொழில்களையும் பொது நிறுவனங்கள் (Public Corporations) கவனித்து வருகின்றன. இந்தப் பொது நிறுவனங்கள் பாராளுமன்றச் சட்டங்களால் நிறுவப் பெற்றன. அவைகளுக்கென்று தனிச் சட்டங்கள் நிறுவப் பெற்றுள்ளன. பாராளுமன்றத்தின் கட்டுப்பாட்டில் இந்த நிறுவனங்கள் இருந்தாலும், அவைகளை எப்பொழுதும் எப்படியும் மாற்றி அமைக்க, முடியுமென்றாலும், பாராளுமன்றம் பொது நிறுவனங்களைப் பார்த்துக் கொள்ளும் பொறுப்பைத் தனித்தனி அமைச்சர்களிடம் அளித்திருக்கிறது. சான்றாக, மின்சார அமைச்சர் தேசிய நிலக்கரி வாரியத்திற்கும், மின்சாரத் துறைக்கும், அணுசக்தி துறைக்கும் பொறுப்பாவார். அந்தப் பொது நிறுவனங்களுக்கு இந்த அமைச்சரே பொறுப்பு ஏற்றுக்கொண்டு, அந்த நிறுவனங்களின் காரியங்களுக்கு அனுமதி வழங்குவார். அரசாங்கத்திற்கும், இப்பொது நிறுவனங்களுக்கும் உள்ளத் தொடர்பும், உறவும் எவ்விதம் உள்ளது என்பதைத் திட்டவட்டமாகக் கூறமுடியாது. ஓர் அமைச்சவைக்குப் பதிலாக ஒரு தனி அமைச்சர் மூலமாக, பொது நிறுவனங்களுக்கும் பாராளுமன்றத்திற்கும் தொடர்பு நிறுவப்படுகிறது. அமைச்சர்களுக்கு நிறைய வேலைகள் இருப்பதால் அவர்களால் இந்தப் பொது நிறுவனங்களைச் சரியாகப் பார்த்துக்கொள்ள முடிவதில்லை. அதனால் அவர்களுக்குப் பதிலாக, அவர்களுடைய பொதுத்துறை அதிகாரிகள் மூலமாகத்தான் பொது நிறுவனங்களைப் பார்த்துக் கொள்கிறார்கள். அமைச்சர்களின் பொறுப்புகளை அவர்களே நிறைவேற்றுகிறார்கள். அதனால் அவர்கள் தலையீடு இந்த நிறுவனங்களில் அதிகமாக உள்ளது. சட்டப்படி, அவர்களுக்கும் இந்தப் பொது நிறுவனங்களுக்கும் சம்பந்தமில்லை. பொது நிறுவனங்கள் இவர்களுடைய தலையீட்டை விரும்புவதில்லை.

1945-50 ஆகிய ஆண்டுகளில் தான் அதிக அளவில் பொது நிறுவனங்கள் நிறுவப் பெற்றன. அவைகளின் அமைப்புகளிலும் அதிகாரங்களிலும் ஒரே விதமான நிர்வாகம் இருக்க வேண்டுமென்று தான் விரும்பப்படுகிறது. என்றபோதிலும் ஒரு பொது நிறுவனத்திற்கும், மற்ெருரு பொது நிறுவனத்திற்கும் அமைப்பிலும் அதிகாரங்களிலும் அதிக வேறுபாடுகள் உள்ளன. ஒருவகையில் இந்த வேறுபாடுகள் இருக்கத்தான் செய்யும். ஏனெனில் ஒவ்வொரு பொது நிறுவனத்தின் தன்மையும் வெவ்வேறு விதமாக உள்ளது. நிலக்கரி சுரங்கத் தொழிலுக்கும் நிறைய வேறுபாடுகள் உள்ளன. அதனுல் அந்த நிறுவனங்களின் விவகாரங்களும் வெவ்வேருகத்தானிருக்க முடியும். இந்த வேறுபாடுகள் தோன்றுவதற்கு, பொது நிறுவனங்களின் பகிர்ந்து கொள்ளப்படுவதால் தோன்றியவையாகும் என்று சிலர் கருதுகின்றனர். 1945-ல் நிலக்கரித் தொழில் அரசுடமையாக்கப் பெற்றது. அப்பொழுது ஒரே நிலக்கரி வாரியம் தான் நிறுவப் பெற்றது. ஆனுல் அந்த ஒரே ஒரு நிலக்கரி வாரியத்தால் நாடு முழுவதும் உள்ள நிலக்கரித் தொழிலை நிர்வாகம் செய்வது, முடியாத காரியமாக இருந்தது. மின்சாரம் அரசுடமையாக்கப்பட்ட பொழுது 14 வாரியங்களாக நிறுவப்பட பாராளுமன்றம் சட்டமியற்றியது. 14 வாரியங்களும், உரிய அதிகாரங்களுடன் தனித்தனி பொது நிறுவனங்களாகவே செயலாற்ற பாராளுமன்றம் அனுமதி அளித்திருந்தது.

இப்பொழுது அரசுடமையாக்கப்பெற்று, பொது நிறுவனங்களாக திகழும் நிறுவனங்கள், வானெலி, டெலிவிஷன், 'பேங்க் ஆப் இங்கிலாந்து (Bank of England), நிலக்கரி, மின்சாரம், பிரயாணிகள் விமானப் போக்குவரத்து, (Civil Aviation) ரெயில்கள், உள்நாட்டு போக்குவரத்து, கேஸ் (Gas), அணுசக்தி, இரும்பும் எஃகும் ஆகிய தொழில்களாகும். இந்தத் தொழில்களைத் தொழிற்கட்சி அரசுடமையாக்கி விட்டதற்குப் பின்னர், வேறு எதை அரசுடமையாக்குவது என்று ஆலோசனை செய்து வந்தனர். இவ்வளவு தொழில்களே (20 சதவிகிதம்) அரசுடமையாக்கியது போதுமானது என்ற அபிப்பிராயம் தொழிற் கட்சியிலேயே நிலவியது. ஆனுல் 1952-க்குப் பின்னர் தொழிற்கட்சியின் வருடாந்திர மாநாடுகளிலும், தொழிற் சங்க மாநாடுகளிலும், மற்ற தொழில்களையும் அரசுடமையாக்க வேண்டுமென்ற வற்புறுத்தல் அதிகமாகி வந்தது. ஏற்கனவே அரசுடமையாக்கப்பெற்ற தொழில்கள் ஒழுங்காக நிகழ வேண்டுமென்ருல் மேற்கொண்டு பல தொழில்களையும் அரசுடமையாக்க வேண்டுமென்ற அபிப்பிராயம் நிலவியது. ஆனுல் மேற்கொண்டு மற்ற தொழில்களை அரசுடமையாக்குவது, ஆங்கிலேய மக்களைப்

பொறுத்த அளவிலும் அதிருப்தி அளிக்கும் என்று தொழிற் சங்க காங்கிரஸ் இந்த சமயத்தில் அபிப்பிராயப்பட்டது. அதனுல் இதைப் பற்றி மேலும் பரிசீலனை செய்து ஒரு முடிவிற்கு வருவது என்று கூறியது. 1955-ல் தொழிற் கட்சியிலும், தொழிற் சங்க காங்கிரசிலும் மேலும் தொடர்ந்து பல தொழில்களை அரசுடமையாக்க வேண்டுமென்று வற்புறுத்தினர். அவர்களின் பொருளாதாரக் கோட்பாடுகளின்படி, மேலும் தொழில்களை அரசுடமையாக்க வேண்டுமென்று பெவானும் (Bevan) அவருடைய மற்ற நண்பர்களும் வற்புறுத்தினுர்கள். கிளமென்ட் அட்லிக்குப் பின்னர், தொழிற்கட்சித் தலைவராக வந்த ஹ்யூ கெய்ட்ஸ்கில் (Hugh Gaitskell) என்பவர் 1955-ல் தொழிற் கட்சியின் வருடாந்திர மாநாட்டில் அரசுடமையென்பது ஒரு முடிவான குறிக்கோள் என்று அவர் கருதவில்லையென்றும், ஆனுல் அது குறிக்கோளைப் பெற வழியே என்று கூறினுர். அரசுடமையாக்கினுல் நன்மைகள் அதிகமாக உள்ளன என்ருல் தொடர்ந்து செய்யலாம், இல்லையெனில் விட்டுவிட வேண்டியது என்று அவர் மேலும் கூறினுர். தொழிற் கட்சியில் உள்ள பல தலைவர்களும் பல தொழில்களையும் அரசுடமையாக்க வேண்டுமென்று வற்புறுத்தி வந்தனர். எந்தத் தொழில்களையெல்லாம் அரசுடமையாக்குவதென்று தொழிற் கட்சித் தலைவர்களிடையே கருத்து வேறுபாடுகள் உள்ளன. விவசாய நிலங்களை அரசுடமையாக்க வேண்டுமென்று பெவான் விரும்புகிருர். உடனடியாக, குடியிருப்பவர் நிலங்களையாவது அரசுடமையாக்க வேண்டுமென்று அபிப்பிராயப்படுகிருர். தொழிற் கட்சியின் இடதுசாரிகள் உடனடியாக, கப்பற் கட்டும் தொழில், விமானங்கள் தயாரிக்கும் தொழில்; ஆகியவற்றை அரசுடமைகளாக்க வேண்டுமென்று விரும்புகிருர்கள். பஞ்சாலைத் தொழில்களையும் அரசுடமையாக்க வேண்டும் என்று சிலர் விரும்புகின்றனர். பெரும்பான்மையோர், இன்ஷ்யூரன்ஸ் நிறுவனங்களையும், சில பாங்கிகளையும் அரசுடமையாக்க வேண்டுமென்று கருதுகின்றனர். லட்சக்கணக்கான குடியிருப்பு வீடுகளை அரசுடமையாக்க வேண்டுமென்று 1957-ல் முடிவு செய்தனர். 1956-ல் கெயிட்ஸ்கில்லின் (Gaitskell) ஆலோசனையின் பேரில் நஷ்டம் அடைந்து வரும், அல்லது உற்பத்தியைச் செய்ய முடியாத சில பலவீனமான தொழில்களை, முழுவதும் அரசுடமையாக்காமல், ஒரு சில பகுதிகளை மட்டும் அரசுடமையாக்குவதைப் பற்றி பரிசீலனை செய்தனர். மேலும் தொடர்ந்து தொழில்களை அரசுடமையாக்குவது அரசாங்கத்தைக் கைப்பற்றும் அரசியல் கட்சிகளைப் பொறுத்துள்ளது.

# 9. பொது நல நாடு

## (THE WELFARE STATE)

ஆங்கிலேய மக்களின் பொதுவான விருப்பம் ஒரு பொது நல நாட்டை அமைக்க வேண்டுமென்பதாகும். அரசாங்கம் மக்களின் நலன்களை, சமுதாய பாதுகாப்புத் திட்டம், திட்டமிட்ட பொருளாதாரம் ஆகிய செயல்களின் மூலமாகப் பாதுகாக்க வேண்டும் என்றும் அந்நிலை எய்தும் பொழுது அது பொது நல நாடாகும் என்றும் மக்கள் கருதுகின்றனர். ஆங்கிலேய அரசியல் அமைப்பில், அரசியாரின் பங்கு, பாராளுமன்றம், அமைச்சவை ஆகிய நிறுவனங்கள் வளர்ச்சியுற ஆங்கிலேய மக்கள் எவ்வளவு உறுதியாக இருந்தனரோ, அதைப்போன்று பொதுநல நாட்டை அமைப்பதற்கும் ஆங்கிலேய மக்கள் உறுதிப்பாடுடன் உள்ளனர். உண்மையில் எந்த வித அரசாங்கமாக இருந்தாலும், ஓரளவிற்கு அது பொது மக்களின் நலன்களுக்காகச் செயலாற்றுவதால், அது பொது நல அரசாங்கமாகத்தான் இருக்க முடியும். ஆனால் திட்டமிட்ட பொது நல அரசாங்கம் மக்களுக்கு நல்ல வசதிகளைச் செய்து கொடுக்கும்.

பிரிட்டனில் பொது நலப் பணிகளை அரசாங்கம் 19-வது நூற்றுண்டிலேயே மேற்கொண்டது. தொழிற்சாலைச் சட்டங்கள், இரவலர் சட்டங்கள் (Poor laws) பொது சுகாதாரச் சட்டங்கள் ஆகியவை பொது நலக் குறிக்கோளை அடைய முதல் முதலில் இயற்றப்பட்டவையாகும். ஆனால் பெரும்பான்மையான பொது நலச் சட்டங்கள் இந்த நூற்றுண்டில் தான் இயற்றப்பெற்றன. இரண்டாவது உலகப் போருக்குப் பின்னர் இன்னும் அதிக அளவில் சட்டங்கள் இயற்றப்பெற்றன. 1950–ல் பிரிட்டன், மற்ற பொது நல நாடுகளுக்கு ஓர் எடுத்துக்காட்டாக விளங்கியது. ஜனநாயக நாடுகளில் தலை சிறந்து விளங்கும் பிரிட்டன் மக்கள் நலன்களில் அதிக ஆர்வம் காட்டுவது ஆச்சர்யத்திற்குரியதல்ல. அதற்கு முக்கிய காரணம் 1800–க்கு பின்னர்

பிரிட்டனில் மக்கள் தொகை அதிகரித்து விட்டதால், அவர்கள் நலன் களைக் கவனிக்க வேண்டிய அவசியம் ஏற்பட்டது.

நாட்டின் பொது நல சீர்திருத்தங்கள் இரண்டாவது உலகப் போருக்குப் பின்னர், தொழிற்கட்சி பதவியில் இருக்கும் பொழுது மேற்கொள்ளப்பெற்றன.

தொழிற் கட்சி 1945-ல் பதவியில் இருந்த பொழுது எண்ணற்ற பொது நல சட்டங்களையும், அதன் எல்லா திட்டங்களையும் நிறைவேற்று கின்ற அளவிற்கு, மக்கள் சபையில் அக் கட்சிக்கு அவ்வளவு செல்வாக்கு இருந்தது. மக்களும் தொழிற் கட்சியின் பொது நலத் திட்டங்களைப் பெரிதும் ஆதரித்தனர். 1951-ல் கன்சர்வேடிவ் கட்சி பதவிக்கு வந்த பொழுது, தொழிற் கட்சி அரசாங்கம் கொண்டு வந்தத் திட்டங்களை ரத்து செய்யவில்லை. அவர்களும் ஓரளவிற்குச் சில திட்டங்களை செய லாற்றினர். பொது நலத் திட்டங்களை நிறைவேற்றியதால் அரசாங் கத்திற்கு நிறைய செலவினங்கள் ஏற்பட்டன

சமுதாயப் பாதுகாப்பு நடவடிக்கைகளில் பிரிட்டன் உலகில் உள்ள எல்லா நாடுகளைக் காட்டிலும் முன்னணியில் நிற்கிறது. வயது முதிர்ந் தோர்களுக்கு உதவிப் பணம் அளிக்கும் திட்டம், வேலையில்லாதார்க்குக் காப்புறுதி அல்லது இன்ஸ்யூரன்ஸ் (Unemployment Insurance) ஆகிய பல திட்டங்களும் பிரிட்டன் ஏற்கனவே மக்களுக்கு அளித்துள்ளது. பிரிட்டனில், சுருக்கமாகக் கூறினால், தொட்டிலிலிருந்து சுடுகாடு செல்லும் வரைக்கும் மக்களின் நலன்கள் நன்கு பாதுகாக்கப்படுகின்றன.

முன்னர், அரசாங்கம் சிலருக்கு மட்டுமே உதவிகளை அளித்து வந்தது. அந்த உதவி அரசாங்கம் அளித்த தருமமாகவே கருதப்பட்டது. அரசாங்கத்திடமிருந்து மக்கள் நலன்களைப் பெற அவர்களுக்கு உரிமை யுண்டு என்ற எண்ணத்தை அரசாங்கம் அவர்களிடம் ஏற்படுத்தவில்லை. அரசாங்கம் இவ்வித உதவிகளை அளிக்கின்ற பொழுது, உதவி பெறுகின்றவர்கள், அதைப் பெறத் தகுதியுள்ளவர்கள் தானா என்பதைப் பல வகையிலும் விசாரித்துப் பார்த்துத் தான் பணத்தைக் கொடுத்து வந்தனர். மக்கள் இவ்விதம் அரசாங்கத்திடமிருந்து 'தருமம்' பெற விரும்பவில்லை. தொழிற் கட்சியினர், இந் நிலையை மாற்ற வேண்டுமென்று விரும்பினர். வேலையிழந்தோர், வேலையில்லாதோர் முதலியோர் அவர்களுடைய தவறுகளுக்காக அப்படி வருந்துவதில்லை. அதனால் அவர்கள் வேலையில்லாமல் இருக்கும் பொழுது, அவர்களுக்கு உதவிப் பணம் வழங்க அரசாங்கம் முன் வந்தது. இத் திட்டம் பின்னர் தேசிய இன்ஸ்யூரன்ஸ் அல்லது காப்புறுதித் திட்டம் (National

Insurance) என்ற பெயரில் நிறைவேற்றப்பட்டது. இத் திட்டத்தை அவர்கள் சமுதாயப் பாதுகாப்பு என்று அழைக்க விரும்பவில்லை. அரசாங்கம் தொழிலாளர்களுக்கு விநியோகம் செய்ய 'முத்திரைகளை' அவர்கள் வேலையில் உள்ள பொழுது ஒவ்வொரு வாரமும் வாங்கினர். அவர்கள் முதியோர்களாகி விட்டாலும், அல்லது உடல் நலம் குன்றியிருந்தாலும், அல்லது வேலையில்லாமல் இருந்தாலும் அம் முத்திரைகளைக் கொண்டு அவர்களுக்குரிய உதவிப் பணத்தைப் பெற்றுக் கொள்ள முடிந்தது. தொழிலாளர்களின் மற்ற பண வசதிகளைப் பற்றி அரசாங்கம் கவலையுறவில்லை.

தேசிய இன்ஸ்யூரன்ஸ் திட்டம் நன்கு வேரூன்றும் வரையிலும், அரசாங்கம் அளித்து வந்த உதவிகளை உடனே நிறுத்தி விட முடியவில்லை. அதனால் தேசிய உதவி வாரியம் (National Assistance Board) உதவிகளைத் தொடர்ந்து அளிப்பதற்காக நிறுவப் பெற்றது.

இன்ஸ்யூரன்ஸ் திட்டம், தேசிய இன்ஸ்யூரன்ஸ் அமைச்சவையிடம் ஒப்படைக்கப்பெற்றது. இந்த அமைச்சவை, பின்னர், தேசிய இன்ஸ்யூரன்ஸ், உதவிப்பண அமைச்சவை என்று பெயரிடப் பெற்றது. இந்த அமைச்சவை இன்ஸ்யூரன்ஸ் திட்டத்தை நிறைவேற்றி வந்த பொழுதும், மக்களுக்கு அளிக்கும் உதவித் தொகை நாளுக்கு நாள் அதிகரித்து வந்தது. இன்ஸ்யூரன்ஸ் உதவி, இன்ஸ்யூரன்ஸ் செய்து கொண்டவர்களுக்குத் தான் கிடைக்கும். அவ்விதம் இன்ஸ்யூரன்ஸ் செய்து கொண்டவர்கள், வயோதிக காலத்தில் உதவிப் பணம், அல்லது வேலையில்லாத பொழுது உதவிப் பணம், அல்லது உடல் நலக் குறைவு ஏற்படுகின்ற பொழுது உதவிப் பணம் பெற முடியும். ஒவ்வொரு காரணத்திற்கும், அவர்கள் தனித்தனியாகப் பணம் கட்டத்தேவையில்லை. அவர்கள் வேலைகளில் இருக்கின்ற பொழுது இன்ஸ்யூரன்ஸ் செய்து கொள்ள வேண்டும். 1958-ல் 18 வயதுக்கு மேற்பட்டவர்கள் வேலையில் இருந்தால் வாரத்திற்கு ஒவ்வொருவரும், 9 ஷில்லிங் 5 பென்ஸ் இன்ஸ்யூரன்ஸ் சந்தாவாக அளிக்கவேண்டும். 18-வயதிற்கு மேற்பட்ட பெண்கள் 7 ஷில்லிங் 8 பென்ஸ் கொடுக்க வேண்டும். அவர்களை வேலையில் வைத்திருப்போரும், அவர்களுடைய இன்ஸ்யூரன்ஸ் சந்தாவை கட்ட வேண்டும். ஒவ்வொரு ஆளுக்கும் வாரந்திற்கு, அவர்கள் 8 ஷில்லிங் 1 பென்ஸ் சந்தாவாக அளிக்கிறார்கள். சொந்தமாக வேலைகளைச் செய்வோர், சிறிது அதிகமான பணத்தைக் கட்டவேண்டும். 11 ஷில்லிங் 6 பென்ஸ் அவர்கள் சந்தாவாக நிர்ணயம் செய்யப் பட்டுள்ளது. வேலையில்லாதவர்களும் இந்த இன்ஸ்யூரன்ஸ் திட்டத்தில் சேர்ந்துக் கொள்ளலாம். ஆனால் அவர்களுக்குக் கம்பெனிகள் அளிக்கும் உதவி சந்தா கிடைக்காது. இவ்விதம், தொழிலாளர்களின்

இன்ஸ்யூரன்ஸ் சேமிப்பு அவர்களுடைய நெருக்கடி காலங்களில் உதவுகிறது. அவர்கள் செலுத்துகின்ற பணம் ஓரே தேக்க நிலையில் இருக்காது. அந்தப் பணம் பல நல்ல காரியங்களுக்காகப் பயன்படுத்தப்படுகிறது. சில சமயங்களில் பண வீக்கம், அல்லது மற்ற காரணங்களால், தொழிலாளர் செலுத்தும் பணம் போதாமல் இருக்கலாம் அதனுல் பாராளுமன்றம் நாட்டிலுள்ள பொருளாதார சூழ்நிலைக்கு ஏற்ப அடிக்கடி, தொழிலாளர்களின் இன்ஸ்யூரன்ஸ் சந்தாக்களில் மாற்றங்களைச் செய்கின்றது. ஆனல் தொழிலாளர்கள் இறுதியில் பெறுகின்ற இன்ஸ்யூரன்ஸ் தொகை குறைந்த அளவில் தான் உள்ளது.

வயோதிக காலத்தில் உதவிப்பணம் பெறுதல் (Old Age Pensions) அல்லது ஓய்வு காலத்தில் உதவிப்பணம் பெறுதல் என்பது (Retirement Pensions) அவர்கள் செலுத்திய இன்ஸ்யூரன்ஸ் சந்தாவைப் பொறுத்து அவர்கள் சாகும் வரையிலும் கொடுக்கப்படும். 65 வயதிற் மேற்பட்ட ஆண்களும், 60 வயதிற்கு மேற்பட்ட பெண்களும் வயோதிக உதவிப் பணம் பெறத் தகுதியானவர்களாவர். அவர்கள் ஒரு குறிப்பிட்ட அளவிற்கு வாராந்தர இன்ஸ்யூரன்ஸ் சந்தாக்களை செலுத்தியிருக்க வேண்டும். 1958-ல் அவர்களுக்கு அளிக்கப்பட்ட உதவிப்பணம், வாரத்திற்கு 50 ஷில்லிங், 60 வயதிற்குள் மனைவி இருந்தால் 30 ஷில்லிங் அதிகம். மற்றும் ஒரே குழந்தை அல்லது முதல் குழந்தைக்கு 15 ஷில்லிங் அதிகம், மற்ற ஒவ்வொரு குழந்தைக்கும் 7 ஷில்லிங் என்ற விகிதத்தில் உதவிப்பணம் தரப்படுகிறது 65 வயது முதல் 70 வயது வரையுள்ள வயதினர், வேறு சில வேலைகளில் ஈடுபட்டிருந்தால், அவர்களுடைய உதவிப் பணம் சிறிது குறைக்கப்படும். வேலையில்லாதார்களுக்கு அளிக்கப்படும் உதவிப் பணம், குறைந்தது 180 வேலையில்லா நாட்களுக்குக் கொடுக்கப்படும். அவர்களுடைய இன்ஸ்யூரன்ஸ் சந்தா சிறிது அதிகமாக இருந்தால், இந்தக் காலம் இன்னும் நீடிக்கப்படும். திரும்பவும் வேலை கிடைத்த பிறகு அவர்கள் 13 வாரங்களுக்கு அதிகப்படியாக இன்ஸ்யூரன்ஸ் சந்தா செலுத்தினுல், மீண்டும் அவர்களுக்கு உதவிப்பணம் கிடைக்கும். 1958-ல் 18 வயதிற்கு மேற்பட்ட ஆண், பெண் வாரத்திற்கு 50 ஷில் லிங்குகள் தரப்பெற்றன. திருமணம் ஆகிய பெண், தொழில் செய்ய முடியாத அவள் கணவரை ஆதரிக்கும் பொழுதும், அல்லது அவளுடைய கணவனிடமிருந்து எந்த உதவியையும் பெருமல் இருந்த போதும் அவளுக்கு முழு உதவிப் பணமும் கிடைக்கும். உடல் நலம் குறைந்தோருக்கு அளிக்கப்படும் உதவிப் பணமும், வேலையில்லாதோருக்கு அளிக்கப்படும் உதவிப் பணத்தைப் போன்று, அதே விதமான நிபந்தனைகளில் தான் கொடுக்கப்பட்டது. வேறு எந்த உதவியுமின்றி வாழ்க்கை நடத்தும் 60 வயதிற்குட்பட்ட விதவைகளுக்கும்,, விதவை

கள் உதவிப் பணம் கொடுக்கப்படுகிறது. 1958-ல் 13 வாரங்களுக்குத் தொடர்ச்சியாக வாரம் 70 ஷில்லிங் வீதம் அவர்களுக்கு உதவிப் பணம் கொடுக்கப்பட்டது. தவிர அவளுடைய ஒரே குழந்தை அல்லது முதல் குழந்தை இருந்தால் அதற்கு 16 ஷில்லிங் 6 பென்சும், மற்ற ஒவ்வொரு குழந்தைக்கும் 8 ஷில்லிங் 6 பென்ஸ் வீதமும் அதிகமாக உதவிப் பணம் கொடுத்கப்படும். ஒரு விதவைக்குக் குழந்தைகள் இல்லையென்றால் அவள் 50 ஆண்டுகளுக்கு மேல் வயதாகியிருந்தால் திருமணம் ஆகி 3 ஆண்டுகள் முடிவடைந்திருந்தால் முதல் 13 வாரங்களுக்குப்பின்னரும் அவள் 50 ஷில்லிங் உதவிப் பணம், 1958-ல் பெற்று வந்தாள். மற்றும் தொழில் செய்யும் பொழுது உடல் உறுப்புகளுக்கு காயம் ஏற்பட்டால், அதனால் ஏற்படும் இழப்பை ஈடுகட்டவும் குழந்தைகளை வளர்ப்பதற்காகவும் குடும்ப உதவிப்பணம் அளித்தல் ஆகிய பல நன்மைகளை அரசாங்கம் செய்து வருகிறது.

இந்தத் திட்டங்கள் யாவும் மிக அதிகமான அளவில் மக்களுக்குப் பயன் அளிக்கும் வகையில் அமைந்துள்ளது. பல ஆயிரக்கணக்கான மக்கள் இத் திட்டங்களால் பயன் பெற்று வருகிறார்கள். இருந்தாலும் கொடுக்கப்படும் உதவிப்பணம் மிகவும் குறைவாக உள்ளது என்று மற்ற நாடுகளில் உள்ளவர்கள் கருதுகின்றனர். எல்லா பொருள்களின் விலைகளும் ஏறிக் கொண்டிருக்கும் இச் சமயத்தில், இவ்வளவு குறைவான உதவிப் பணம், அவர்களுக்குப் போதாது என்பது உண்மையென்றபோதிலும் ஓரளவிற்கு அவர்களுக்கு உதவியைச் செய்யத்தான் அரசாங்கத்தால் முடியும். அதுவும் இல்லையென்றால் அவர்கள் தெருவில் நிற்க வேண்டிய நிலை ஏற்பட்டுவிடும். இருப்பினும் இன்னும் அதிக அளவில் அவர்களுக்கு உதவிப் பணம் அளிக்கும் திட்டங்களை அரசாங்கம் பரிசீலனை செய்து வருகிறது.

ஆங்கிலேய மக்களின் பொது உடல் நல வளர்ச்சிக்காகவும், பாதுகாப்பிற்காகவும் தேசிய உடல்நலப் பணித் திட்டம் (The National Health Service) 1946-ல் துவக்கப்பெற்றது. இதற்குரிய சட்டத்தை பாராளுமன்றம் 1946-ல் நிறைவேற்றியது. இங்கிலாந்து, வேல்ஸ் ஆகிய பகுதிகளில் உள்ள மக்களின் நல்வாழ்விற்காகவும், அவர்களின் உடல் நலக் குறைபாடுகளைக் கவனித்து, தக்க சிகிச்சை அளிக்கவும், இந்தத் திட்டம் துவங்கப்பெற்றது. இத் திட்டத்தின் கீழ் 20,000க்கு மேற்பட்ட மருத்துவர்கள் பணியாற்றுகிறார்கள். சிறப்பான சிகிச்சைகளை அளிப்பதற்கும் தக்க மருத்துவர்கள் நியமனம் செய்யப்பட்டுள்ளனர். அதனால் அவர்கள் அரசாங்கத்தின் கீழ் பணிபுரியும் டாக்டர்களாகின்றனர். அதனால் அவர்கள் முழு நேரமும் பணி செய்ய வேண்டியவர்களாகின்றனர். அவர்கள் தனிப்பட்ட முறையில் சிகிச்சை அளிக்கவும்

அனுமதிக்கப்பட்டுள்ளனர். நோயாளிகள் இந்த அரசாங்க மருத்துவர்களிடம் சிகிச்சை பெற்றுக் கொள்ளலாம். ஆங்கிலேய மக்கள் இத்திட்டத்திற்காக இன்ஸ்யூரன்ஸ் செய்து கொள்ளவேண்டும். 1957-ல் ஆண்கள் வாரத்திற்கு 1 ஷில்லிங் 5 பென்ஸ் இன்ஸ்யூரன்ஸ் சந்தா அளித்து வந்தனர். பெண்கள் 1 ஷில்லிங் 4 பென்சும், 18 வயதுக்குட்பட்ட ஆண், பெண்களுக்கு ஒரு ஷில்லிங்கும் சந்தா செலுத்த வேண்டியவர்களாகினர். அவர்கள் சிகிச்சை பெறும் பொழுது, முதல் ஒரு ஷில்லிங்கைக் கொடுத்தால் போதுமானது. பல் சிகிச்சைக்கு அவர்கள் முதலில் ஒரு பவுன் அளித்தால் போதும். மற்ற செலவுகளை அரசாங்கம் ஏற்றுக்கொள்ளும். நாட்டின் மொத்த வருவாயில் 10 சதவிகிதம் மக்களின் சிகிச்சைகளுக்காகச் செலவிடப்படுகிறது.

பொருள் துறை வழக்குகளில், சம்மந்தப்பட்ட ஏழை மக்களுக்கு வழக்கறிஞர்களை நியமனம் செய்து கொள்ளும் உதவியை அரசாங்கம் அளித்துள்ளது. இதற்கான சட்டத்தைப் பாராளுமன்றம் 1949-ல் இயற்றியது. இந்தச் சட்ட உதவியைப் பெறும் பொழுது, அவர்கள் தாமாகவே வழக்குகளைத் தொடர முடியாது அல்லது வழக்கறிஞர்களை நியமனம் செய்து கொள்ள முடியாது என்று உள்ளூர் குழுக்களில் நிரூபித்த பின்னரே இந்த உதவியைப் பெற முடியும். இந்த உதவியை வேண்டுபவர்கள் ஓரளவிற்காவது செலவுகளை ஏற்றுக்கொண்டால் தான் அவர்களுக்குச் சட்ட உதவி அளிக்கப்படும் என்று அறிவிக்கப்பட்டிருந்தது. மக்களிடையே இந்தத் திட்டத்திற்கு நல்ல ஆதரவு இருந்தால், மேலும் பல வழக்குகளுக்கும் இந்தச் சட்ட உதவியை அளிக்க அரசாங்கம் முயற்சி செய்து வருகிறது. இந்தச் சட்ட உதவியைப் பெற்றவர்களில் பெரும்பான்மையோர் விவாகரத்து வழக்குகளில் ஈடுபட்டவராவர்.

மக்கள் தொகை மிகவும் அதிகரித்து விட்டதாலும் போர் காலத்தில் நிறை கட்டடங்களுக்கும் வீடுகளுக்கும் சேதம் ஏற்பட்டு விட்டதால், புதிய கட்டடங்களையும், நிறைய வீடுகளையும் கட்ட வேண்டிய பொறுப்பு தொழிற் கட்சி அரசாங்கத்திற்கும், கன்சர்வேடிவ் அரசாங்கத்திற்கும் ஏற்பட்டது. 1951-ல் பதவியில் இருந்த கன்சர்வேடிவ் அரசாங்கம் குடியிருப்புத் திட்டத்தைத் துவங்கி, ஓராண்டிற்குள் 300,000 வீடுகளைக் கட்டி முடித்தனர். சில குடியிருப்புத் திட்டங்கள் அரசாங்கப் பொது நிறுவனங்களால் மேற்கொள்ளப்பெற்றன. ஆனால் பொது நிறுவனங்களைக் காட்டிலும், தனியார் நிறுவனங்கள் இத் துறையில் அதிக அளவில் சாதித்துள்ளன. 1945-ல் தொழிற் கட்சி அரசாங்கம் இத் துறையில் அதிக ஆர்வம் காட்டியது. தவிர பிரிட்டனில், சிறிய சிறிய புதிய நகரங்களை

உருவாக்கினர். அந்தச் சிறிய நகரங்களில் புதிய தொழிற்சாலைகள் நிறுவப்பெற்றன. கிராமப்புறங்களில் உள்ள மக்கள் இப் புதிய தொழிற்சாலைகளில் வேலை வாய்ப்புகளைப் பெற வசதிகள் செய்து தரப் பெற்றுள்ளன. லண்டன் மாநகரத்தில் உள்ள மக்கள் தொகையின் ஒரு பகுதியை, அந் நகரத்தின் ஐம்பது மைல் சுற்றுப்புறங்களில் புதிய குடியிருப்புப் பகுதிகளை நிர்மாணித்து, குடியேறச் செய்ய வேண்டுமென்று 'லண்டன் கவுண்டி கவுன்சில்' உறுப்பினர் திட்டங்களை உருவாக்கி வருகின்றனர்,

இரண்டாவது உலகப் போருக்குப் பின்னர் பிரிட்டனில் உணவுப் பொருள்கள் விலைகள் மிகவும் உயர்ந்து விட்டதால் ,சாதாரண மக்கள் பெரிதும் தொல்லைகளுக்குள்ளாகினர். போர்க் காலத்தில் பின்பற்றிய உணவுப் பங்கீட்டு முறையை, தொழிற் கட்சி அரசாங்கம் சிறிது காலத்திற்குப் பின்பற்றியது. தவிர அரசாங்கமே பல்வேறு நிறுவனங்கள் மூலமாக உணவுப் பொருள்களை வாங்கி சில்லறையாக விற்க ஏற்பாடுகளைச் செய்தது. அதனால் உணவுப் பொருள்களின் விலை மிகவும் குறைந்துவிட்டது. உணவுப் பொருள்களை வாங்குவதற்கும், குறைந்த விலையில் விற்பனை செய்வதற்கும் உணவு மானியங்கள் தரப்பெற்றன. அதனால் ஒரு சமயத்தில் அரசாங்கத்திற்கு 400,000,000 பவுன்களுக்கும் அதிகமாகச் செலவாகியது.

கன்சர்வேடிவ் கட்சியினர், உணவுப் பொருள்களுக்கு அளித்து வந்த மான்யத் தொகையை மிகவும் குறைத்த போதிலும், உணவுப் பொருள்கள் உற்பத்திக்கு மிகுந்த ஆதரவு அளித்தனர். இரண்டாவது உலகப் போருக்கு முன்னர் உணவுப் பொருள் உற்பத்தி நாட்டிலுள்ள மக்கள் தொகைக்குப் போதாமல் இருந்தது. பெரும்பான்மையான உணவுப் பொருள்களை இறக்குமதி செய்து வந்தனர். ஆனால் இரண்டாவது உலகப் போர் சமயத்தில், மக்கள் நன்றாக நிலங்களில் உழைத்ததன் பயனாகவும், அரசாங்கம் அளித்த உதவித் தொகை காரணங்களாலும், உணவு உற்பத்தி இரண்டு மடங்குக்கு உயர்ந்தது. இரண்டாவது உலகப் போர் முடிந்த பின்னரும், ஆங்கிலேய அரசாங்கம் அந்த நிலையை அப்படியே நீடிக்கச் செய்தது. கன்சர்வேடிவ் அரசாங்கம் பதவியேற்ற பின்னர், நிலப் பண்ணையாளர்களுக்கு உணவு உற்பத்தியைப் பெருக்கப் பல வகைகளிலும் உதவி செய்தனர். கடன் உதவியும் விவசாயப் பொருள்கள் விற்பனைக்கு வசதிகளும் அளித்ததோடு ஒரு வருடத்திற்கு முன்னரே விவசாயப் பொருள்களுக்கு விலை நிர்ணயம் செய்தும் உதவினர். அதனால் அரசாங்கத்திற்கு நிறைய செலவு ஏற்பட்டது. விவசாயச் சட்டம் 1946-ல் பாராளுமன்றத்தில் இயற்றப்பெற்றது. ஆங்கிலேய

விவசாயிகள் இச் சட்டம் நிறைவேற்றப் பெற்றதற்குப் பின்னர் நல்ல பயனடைந்தனர்.

திட்டமிட்ட பொருளாதாரக் கொள்கையைப் பின்பற்றுவதில் பிரிட்டன் அதிக ஆர்வம் காட்டியது. பொதுப் பொருளாதாரத் திட்டங்களை நிறைவேற்ற, 1932, 1943, 1944 ஆகிய ஆண்டுகளில் பாராளுமன்றம் சட்டங்களை இயற்றியது. அதனால், கவுண்டி கவுன்சில்களும், பரோ கவுன்சில்களும் அவைகளின் பொருளாதாரத் திட்டங்களை உருவாக்குவதிலும் அப் பகுதிகளில் முன்னேற்றத்தை ஏற்படுத்துவதிலும் தீவிர ஆர்வம் காட்டினர். இரண்டாவது உலகப் போர் அவர்களுடைய திட்டமிட்ட பொருளாதார முன்னேற்றங்களுக்குப் பெருந்த இடையூறாக இருந்தது. போரினால் பல பொருளாதார, சமுதாய தீய விளைவுகள் ஏற்பட்டன. 1944-ல், இப் பிரச்சினைகளைத் தீர்க்க பாராளுமன்றச் சட்டங்கள் இயற்றப் பெற்றன. 1945-51-ல் தொழிற் கட்சி அரசாங்கம் பொதுப் பொருளாதாரத் திட்டங்களை உருவாக்குவதில் அதிக அக்கறை காட்டியது. இத் திட்டங்களை, மத்திய அரசாங்கத்தின் பல துறைகளும் நிறைவேற்றப் பெரும் முயற்சி எடுத்துக் கொண்டன. சோவியத் யூனியனிலும், மற்ற நாடுகளிலும் இயற்றப்பெற்ற மாபெரும் பொருளாதாரத் திட்டங்களை பிரிட்டன் உருவாக்கவில்லை. பிரிட்டனில் உருவாக்கப் பெற்ற பொதுப் பொருளாதாரத் திட்டங்களின் முக்கியமான குறிக்கோள்களாவன:-

(1) முழு வேலை வாய்ப்புகளை அளிப்பது. (2) பண வீக்கத்தைக் கட்டுப்படுத்துவது. (3) சர்வதேச நாணய சமநிலையை ஏற்படுத்துதல். (4) தொழில்களை உருவாக்குவதற்கான செலவினங்கள். (5) மக்களின் பொது நலன்களைப் பாதுகாத்தல். (6) போதுமான தேசிய பாதுகாப்பு ஆகிய குறிக்கோள்களைப் பெற, திட்டமிட்ட பொருளாதாரக் கொள்கைகளை அரசாங்கம் பின்பற்றியது.

திட்டங்களை நிறைவேற்ற, பாராளுமன்றம் இயற்றிய மிகவும் முக்கியமான சட்டம் நகரங்களுக்கும், கிராமங்களுக்கும் உரிய திட்டச் சட்டம் 1947 (Town and Country Planning Act of 1947) என்பதாகும். ஒரு பிரத்தியேகமான அமைச்சவையே இச் சட்டத்தை நிறைவேற்ற நிறுவப்பெற்றது. இந்த அமைச்சவை இப்பொழுது, குடியிருப்பு, உள்ளாட்சித் துறை அமைச்சவையுடன் இணைக்கப் பெற்றுவிட்டது. இத் திட்டங்களை நிறைவேற்றும் பொறுப்புகள் கவுண்டி கவுன்சில்களுக்கும், கவுண்டி பரோ கவுன்சில்களுக்கும், அளிக்கு

பட்டுள்ளன. முன்னர் இயற்றப்பெற்ற பல சட்டங்களின்படி நஷ்ட ஈடு கொடுக்க வேண்டியிருந்ததால், நிறைய செலவு அரசாங்கத்திற்கு ஏற்பட்டது. பொது நலன்களுக்காக திட்டங்கள் உருவாக்கப்பெற்ற போதிலும் தனிப்பட்டவர்களின் நிலங்களை அரசாங்கம் பறிமுதல் செய்யும்போது, அதற்குரிய நஷ்டஈடு அளிப்பது, ஆங்கிலேய அரசாங்கத்தின் பழக்கமாகிவிட்டது. ஆனால் இந்த இடையூறுகளும் பின்னர் இயற்றப்பெற்றப் பாராளுமன்றச் சட்டங்களால் மாற்றப் பெற்றன. கவுண்டி கவுன்சில்களும், கவுண்டி பரோ கவுன்சில்களும் திட்டங்களைத் தீட்டி, குடியிருப்பு, உள்ளாட்சித்துறை அமைச்சருக்கு அனுப்பி, அவருடைய ஒப்புதலைப் பெறவேண்டும். ஐந்து ஆண்டு க்ளுக்கு ஒருமுறை இதைப் பற்றி பரிசீலனை செய்யப்படும். மாற்றங் களும் செய்யப்படும். நகரப் பகுதிகள், கிராமப்பகுதிகள் தேவைகளுக் கேற்ப இந்த முன்னேற்றங்களை, கவுண்டி கவுன்சில்களும், கவுண்டி பரோ கவுன்சில்களும் கொண்டுவருகின்றன.

# 10. காமன்வெல்த்தும், மற்ற குடியேற்ற நாடுகளும்

## (COMMONWEALTH AND COLONIES)

ஆங்கிலேய அரசாங்கத்தைப் புரிந்துகொள்ள வேண்டுமென்றால், அதனுடைய பரந்த காமன்வெல்த் நாடுகளைப் பற்றியும், குடியேற்ற நாடுகளைப் பற்றியும் அவசியம் தெரிந்து கொள்ள வேண்டும். ஐக்கிய அரசின் (United Kingdom) பரப்பளவு மொத்தம் 94,300 சதுரமைல் களாகும்; அதன் மக்கள் தொகை 50,000,000 ஆகும். காமன்வெல்த், மற்றும் அதன் காலனிகளின் மொத்த பரப்பளவின் அளவு, 14,000,000 சதுர மைல்களாகும். அவைகளின் மொத்த மக்கள் தொகை ஏறக் குறைய 600,000,000 பேர்களாவர்.

ஒரு காலத்தில் ஆங்கிலேயப்பேரரசு மிகவும் பெரியதாக இருந்தது. 'ஆங்கிலேயப் பேரரசில் சூரியன் மறைவதில்லை' என்று கூறுவர். ஒருவகையில் இக் கூற்று உண்மையானதேயாகும். ஏனெனில் ஆங்கிலேயப் பேரரசில் ஏறக்குறைய உலகின் கால்பங்கு நிலப்பகுதி அடங்கியிருந்தது. ஆங்கிலேயக் குடியேற்றங்கள், வட அமெரிக்கா விலும், ஆஸ்திரேலியாவிலும், இந்தியாவிலும், ஆப்பிரிக்காவிலும் ஏற்பட்டன. அவர்கள் நாளடைவில் ஆங்கிலேயப்பேரரசை விரிவடையச் செய்தனர். லண்டனிலுள்ள குடியேற்ற நாட்டு அலுவலகம், இக் கடல் கடந்த பகுதிகளை ஆட்சி செய்ய ஆளுநர்களையும் மற்ற ஊழியர்களையும் நியமனம் செய்தது.

ஆனால் இப்பொழுது, ஆங்கிலேயப் பேரரசு சீர்குலைந்து விட்டது. இந்த ஆங்கிலேயப் பேரரசில் இருந்த பல பகுதிகள் சுதந்தரம் பெற்ற தனிநாடுகளாகத் திகழ்கின்றன. அதனால் இன்னும் அந்த நாடுகளை யெல்லாம் ஆட்சிசெய்த ஆங்கிலேயப் பேரரசு என்று காலம் மாறி, அந்த நாடுகளுடன் நட்புறவு கொண்டுள்ள காமன்வெல்த் நாடுகள்

அல்லது மிகவும் சுருக்கமாக 'காமன்வெல்த்' என்று மட்டும் அழைக்கப் படுகிறது. பேரரசிலிருந்த பகுதிகள் எவ்விதம் சுதந்திரம் பெற்றன; எவ்விதம் பேரரசு காமன்வெல்த்தாகியது என்பதைப் பற்றிய விவரங்களை இங்கு கூறுவதற்கில்லை. ஒவ்வொரு நாட்டிலும், சுதந்திர எழுச்சி ஏற்பட்டதால், பேரரசில் உள்ள நாடுகள் சுதந்திரம் பெற்று தனிநாடுகளாகிவிட்டன. இந்தியா, பர்மா, பாகிஸ்தான், சிலோன், ஆப்பிரிக்காவில் பல நாடுகள் சுதந்திரம் பெற்ற நாடுகளாகி விட்டதால் 'பேரரசு' என்ற சொல் மதிப்பிழந்து இப்பொழுது இந்த நாடுகள் காமன்வெல்த் நாடுகள் என்று அழைக்கப் பெறுகின்றன. காமன் வெல்த் நாடுகளில், கானடா, நியூசீலாந்து (Canada Newzeland) ஆகியவை 'டொமினியன்கள்' என்று அழைக்கப்படுகின்றன. 1907-ல் கூடிய பேரரசு மாநாட்டில் பொறுப்பான சுயாட்சியைப் பெற்றுள்ள இப் பகுதிகளைக் குறிப்பதற்காக, இந்த பெயர் கொடுக்கப் பெற்றது. ஏனெனில் மற்ற குடியேற்ற நாடுகள் இன்னும் சுயாட்சியைப் பெற தகுதி பெறுதவையாக இருந்தன. பின்னர் இயற்றப்பெற்ற வெஸ்ட் மினிஸ்டர் சட்டத்தின்படி, இன்னும் நான்கு நாடுகள், ஆஸ்திரேலியா, தென் ஆப்பிரிக்கா, ஐரிஸ்ஃபிரீஸ்டேட் (Irisfreestate) நியூபவுன் லாந்து (Newfoundland) ஆகியவை 'டொமினியன்' நாடுகள் என்ற தகுதியைப் பெற்றன. 1949-ல் ஐரிஸ்ஃபிரீஸ்டேட், பின்னர் அயர் (Eire) என்று அழைக்கப் பெற்ற நாடு டொமினியன் என்றபெயரைக் கூட வைத்துக் கொள்ள விரும்பவில்லை. நியுபவுண்ட்லாந்து கானடா வுடன் 1949-ல் பத்தாவது மாகாணமாக இணைந்து கொண்டது. இரண்டாவது உலகப் போருக்குப் பின்னர், இந்தியா, பாகிஸ்தான், சிலோன், ஆகியவை காமன்வெல்த் நாடுகளாகின. கோல்டு கோஸ்டு, கானு ஆகிய ஆப்பிரிக்க நாடுகள் 1957-ல் காமன்வெல்த்தில் உறுப்பினர் நாடுகளாகின. 1957-ல் காமன்வெல்த்தில் மலேயா உறுப்பினர் நாடாகியது. பல ஆப்பிரிக்க நாடுகள் காமன்வெல்த்தில் இடம் பெற்றன.

காமன்வெல்த்தில் தகுதிபெற்ற உறுப்பினராக இருக்க வேண்டு மென்றால் சுதந்திரம் பெற்ற நாடாக இருக்க வேண்டும். தனிச் சுதந்திரம் பெற்ற நாடுகளாக இருப்பதால், காமன்வெல்த்தில் உறுப்பினர் நாடுகளாக இருப்பது அந்த நாடுகளின் விருப்பத்தைப் பொறுத்ததாகும். பர்மா, அயர் ஆகியநாடுகள் காமன்வெல்த்திலிருந்து விலகிவிட்டன. அண்மையில் பாகிஸ்தான் காமன்வெல்த்திலிருந்து விலகிவிட்டது. எந்தெந்த நாடுகள் தொடர்ந்து காமன்வெல்த்திருக் கும் என்று உறுதியாகக் கூறுவதற்கில்லை. இந்த நாடுகள் காமன் வெல்த்தில் இருப்பதற்குக் காரணம் சில உறவுகளை வளர்க்கவும், குறிக் கோள்களை அடையவுமே எனினும், பல காமன்வெல்த் நாடுகளில்

எந்த உறவுகளையும் பெருமலேயே தொடர்ந்து உறுப்பினர்களாக உள்ளன.

காமன்வெல்த் நாடுகளில் அரசியாரின் நிலை என்ன என்பதைப் பார்த்தால், ஒவ்வொரு நாட்டிற்கும் அவர்களுடைய நிலை மாறுபட்டிருப்பதைக் காணலாம். குடியரசு அந்தஸ்து பெற்ற நாடுகளில் அரசியார் அதிகாரம் பெறுவதில்லை. சான்றாக கானடாவை எடுத்துக்கொண்டால் கானடாவின் அரசியார் என்று அழைக்கப்படுவாரே தவிர, இங்கிலாந்து நாட்டின் அரசியார் என்று அங்கு அழைக்கப்படுவதில்லை. அதனால் கானடாவின் அரசியார், கானடா நாட்டின் அமைச்சர்களின் ஆலோசனையின் பேரில் கானடாவின் ஆட்சியில் செயலாற்றுவார் என்று கருதப்பட வேண்டும். 1931-ல் இயற்றப்பெற்ற வெஸ்ட்மினிஸ்டர் சட்டத்தின்படி, டொமினியன்கள் அல்லது காமன்வெல்த் நாடுகளுக்கு வெளி விவகாரங்களைச் சுதந்திரமாக நிர்ணயம் செய்துகொள்ளும் உரிமை அளிக்கப்பட்டிருந்தது. சர்வதேச சங்கத்தில் இந்த டொமினியன் நாடுகள் சுதந்திர நாடுகளாக அங்கம் வகித்தன. 1936-ல் முடிதுறத்தல் சட்டம் (Abdication Act) இயற்றப்படுவதற்கு முன்னர் டொமினியன் நாடுகள் ஒப்புதலையும் பாராளுமன்றம் பெற்றது; ஏனெனில் ஆங்கிலேய அரச பரம்பரையில் இது ஒரு பெரும் மாற்றத்தை ஏற்படுத்தியது. பிரிட்டனுக்கும் ஜெர்மனிக்கும் இரண்டாவது உலகப் போர் ஏற்பட்டபொழுது, டொமினியன் நாடுகளுக்கு ஒரு பெரிய சோதனை ஏற்பட்டது. பிரிட்டன் தான் ஜெர்மனியின் மீது செப்டம்பர் 3, 1939-ல் போர்ப் பிரகடனம் செய்ததே தவிர, டொமினியன் நாடுகள் போர்ப் பிரகடனம் செய்யவில்லை. ஆஸ்திரேலியன் காமன்வெல்த், அதனுடைய பாராளுமன்றத்தில் ஒரு தீர்மானத்தை நிறைவேற்றி செப்டம்பர் 5-ல் ஜெர்மனியின்மீது போர் தனியாக பிரகடனம் செய்தது. தென் ஆப்பிரிக்க யூனியனில் அப்பொழு திருந்தே தளபதி ஹெர்ட்ஸ்டாக்கின் (General Hertzog) அரசாங்கம் இந்தப் போரில் நடுநிலைமை வகிக்க வேண்டுமென்று ஒரு தீர்மானத்தை கொண்டு வந்தது. அத் தீர்மானம் தோற்கடிக்கப்பட்டதால், அந்த அரசாங்கம் கலைக்கப் பெற்று, வேறு அரசாங்கம் தளபதி ஸ்மட்ஸ் (General Smuts) தலைமையில் ஏற்பட்டது. இந்த அரசாங்கம் ஜெர்மனியின்மீது செப்டம்பர் 6-ம் தேதியன்று போர் தொடுத்தது. கானடாவும் இதைப்பற்றி பாராளுமன்றத்தில் விவாதித்த பிறகு, செப்டம்பர் 9-ம் தேதியன்று போர் தொடுத்தது. அயர்லாந்து அரசாங்கம் இந்தப் போரில் நடுநிலைமை வகிப்பது என்று முடிவு செய்தது. இந்த முடிவுகள் எல்லாம் டொமினியன்களின் விருப்பப்படி செய்யப்பட்டவையே தவிர, பிரிட்டனின் தலையீடு இதில் இல்லையென்று தெரிகிறது. பல காமன்வெல்த் நாடுகள், மற்ற நாடுகளுக்கு

தனித் தூதுவர்களை அனுப்பியுள்ளன. மற்ற நாடுகளுடன் சுதந்திரமான அடிப்படையில் வர்த்தக ஒப்பந்தங்களையும் செய்துள்ளன, டொமினியன் நாடுகள் காமன்வெல்த்திலிருந்து பிரிந்துபோகும் உரிமையையும் பெற்றுள்ளன. தென் ஆப்பிரிக்க யூனியன் காமன்வெல்த்திலிருந்து பிரிந்துபோய் விட்டதால், அந்த நாட்டின்மீது அந்நிய ஆக்கிரமிப்பு ஏற்பட்டதென்றால், காமன்வெல்த் அதனுடைய பாதுகாப்பிற்கு உதவாது. கானடா பிரிட்டனில் உள்ள பிரிவி கவுன்சிலுக்கு மேல் முறையீடுகளை அனுப்புவதை நிறுத்திக் கொண்டது. அத்துடன் கானடாவின் அரசியல் அமைப்பில் ஒரு திருத்தத்தை ஏற்படுத்தி, மேற்கொண்டு ஆங்கிலேயப் பாராளுமன்றம் கானடாவின் அரசியல் அமைப்பைத் திருத்த முடியாது என்று அறிவித்தது. வெஸ்ட் மினிஸ்டர் சட்டம் நிறைவேற்றப்பட்டதற்குப் பின்னர், தலைமை ஆளுநர் அல்லது கவர்னர் ஜெனரல் பதவிக்கும் புதிய அந்தஸ்து ஏற்பட்டது. அவர் இப்பொழுது இங்கிலாந்து நாட்டின் அரசியாருக்குப் பதில் ஆளாக இருப்பதில்லை. கானடா நாட்டு அரசியாரின் பதில் ஆளாகவே அவர் கருதப்படுகிறார். கவர்னர் ஜெனரலின் பதவி நியமனம் அந்த நாட்டின் அமைச்சர்களின் ஆலோசனைக்கு பின்னரே செய்யப்படுகிறது, இப்பொழுது கவர்னர் ஜெனரல் ஒரு டொமினியன் அரசியல் அமைப்பின் தலைவராக மட்டும் கருதப்படுகிறார். அந்த நாட்டின் அமைச்சவையின் ஆலோசனையின் படி அவர் செயலாற்ற வேண்டும்.

காமன்வெல்த்தில் உள்ள உறுப்பினர் நாடுகள் முன்னர் ஆங்கிலேய பேரரசின் ஆதிக்கத்தில் உள்ளவையாக இருந்தால் அவை யாவற்றிலும் ஏறக்குறைய ஒரே விதமான அரசியல் மொழியும், பாராளுமன்ற ஆட்சி முறையும் இருப்பதைக் காண்கிறோம். சில நாடுகளில் மாற்றங்கள் ஏற்பட்டுள்ளன. காமன்வெல்த் நாடுகள் சுதந்திரம் பெற்ற நாடுகளாகையால் அவைகளின் விருப்பப்படி உள்நாட்டிலும், வெளிவிவகாரங்களிலும் கொள்கைகளையும், அரசாங்கங்களையும் நிர்ணயம் செய்து கொள்ளலாம். பிரிட்டன், பாகிஸ்தான் இன்னும் சில காமன்வெல்த் நாடுகள் தென் கிழக்கு ஆசிய நாடுகளின் கூட்டுறவு (SEATO) உடன்படிக்கையை செய்து கொண்டன. அதைப் பின் தொடர்ந்து பாக்தாத் உடன்படிக்கையும் செய்து கொண்டன. ஆனால் இந்தியா இவ்வித உடன்படிக்கைகளைச் செய்து கொள்வதில் விருப்பமில்லையென்று கூறி எந்த நாடுகளின் கூட்டணியிலும் சேராது நடுநிலைமை நாடாக இருக்க விரும்புவதையே ஆதரிப்பதாக அறிவித்தது. காமன்வெல்த்திலுள்ள நாடுகள் தனிச் சுதந்திரம் பெற்ற நாடுகளாகையால், எந்தக் காரியத்தையும் சுதந்திரமாகச் செய்யும் உரிமையை அவைகள் பெற்றுள்ளன.

காமன்வெல்த்தில் அங்கத்தினராக இருப்பது அந்த நாட்டின் விருப்பத்தைப் பொறுத்தே இருக்கிறது. பர்மா குடியரசு நாடாக அறிவித்து, காமன்வெல்த்திலிருந்து விலகிக் கொண்டது. அப்பொழுது பர்மா அரசாங்கத்தின் அமைச்சராக இருந்த லிஸ்டோவல் பிரபு (Lord Listowel) பர்மா சுதந்திர மசோதாவின் இரண்டாவது வாசிப்பைப் பிரபுக்கள் சபையில் நிறைவேற்றுகின்ற பொழுது, 'எந்த நாட்டையும் காமன்வெல்த்தில் அங்கத்தினராக இருந்தே ஆக வேண்டும் என்று கட்டாயப்படுத்த நாங்கள் தயாராக இல்லை. யார் உண்மையில் அங்கத்தினர்களாக இருக்க விரும்புகிறார்களோ, அவர்களுக்கே இந்த விலை மதிப்பற்ற சலுகையை அளிக்க முடியும். அவர்களும் காமன்வெல்த்திற்கு ஆற்றும் கடமைகளையும், அதனால் ஏற்படும் நன்மைகளையும் உணர்ந்திருப்பர்' என்று கூறுகிறார். காமன்வெல்த் நாடுகளின் நடைமுறை உறவுகளின் அடிப்படையில், அந்த நாடுகள் ஒன்றாக இணைந்துள்ளன. காமன்வெல்த் நாடுகளிடையே கருத்து வேறுபாடுகள் இருக்கலாம். ஒரு சமயத்தில், இந்தியா, பிரிட்டன், பாகிஸ்தான், சிலோன் ஆகிய நாடுகள் சீன குடியரசிற்கு அங்கீகாரம் அளித்தன. ஆனால் ஆஸ்திரேலியா, கானடா, நியூசிலந்து நாடுகள் அதற்கு அங்கீகாரம் அளிக்கவில்லை. ஆஸ்திரேலியாவின் பிரதம அமைச்சருக்கு விருந்தளிக்கும் ஒரு விழாவில் இந்தியப் பிரதமர் நேரு 1950-ல் கூறுவதாவது. 'நாமெல்லாரும் காமன்வெல்த்தில் உறுப்பினர்கள் இந்த நாடுகளின் சட்டம் ஒரு பழைய திரட்டாகும். எப்படி இந்த நாடுகளின் சட்டம் ஒன்றிணைந்தது என்பது விந்தையானது. இவைகளிடையே பகைமை உணர்ச்சியிருப்பதையும் காண்கிறோம். ஆனால் இந்த நாடுகளிடையே நம்மையும் அறியாத ஒரு தொடர்பு இருப்பதையும் காண்கிறோம். அதே சமயத்தில் ஒவ்வொரு நாடும் முழு சுதந்திரத்துடன் எதையும் எப்படியும் செய்து கொண்டிருக்கிறது. ஒரு கட்டுப்பாடும், கட்டாயமும் இல்லை. இப்பொழுது காமன்வெல்த் மிகவும் வளர்ச்சியுற்றிருக்கிறது. அதே சமயத்தில் நிறைய மாற்றங்களும் ஏற்பட்டிருக்கின்றன. காமன்வெல்த் உறுப்பினர் நாடுகள் ஒத்துப்போவதில்லை; அவைகளின் நலன்கள் முரண்பட்டுள்ளன; ஒவ்வொன்றும் ஒவ்வொரு திசை நோக்கி செல்கின்றன. இவ்வளவு வேறுபாடுகள் இருந்த போதிலும், இந்த உறுப்பினர் நாடுகள் சந்திக்கும் பொழுது நண்பர்களாக உள்ளன. ஒருவரை ஒருவர் புரிந்து கொள்ள முயற்சி செய்கின்றன. ஏதாவது ஒரு அடிப்படையில் ஒன்றாகச் செயலாற்ற முயற்சி செய்கின்றன' என்று கூறுகிறார். காமன்வெல்த்தில் உறுப்பினராக உள்ள நாடுகள் விருப்பம் போல இருக்க முடியும்; விருப்பம் போல வெளியேறவும் முடியும். இருந்தாலும் காமன்வெல்த்தில் உள்ள நாடுகளுக்கு சில நன்மைகளும் இல்லாமல் இல்லை. காமன்வெல்த் நாடுகளிடையே

ஏற்படுகின்ற வியாபாரங்களுக்கும், மற்ற வர்த்தக நடவடிக்கைகளுக்கும் சலுகைகள் அளிக்கப்படுகின்றன. காமன்வெல்த் நாடுகளுக்குச் செல்லவும், குடியேறவும் சலுகைகள் தரப்படுகின்றன. மற்ற நாடுகளின் கூட்டுறவையும், உதவியையும் பொறுத்துத்தான் எந்த அளவில் நன்மைகளைப் பெற முடியும் என்பதை நிர்ணயம் செய்யலாம்.

காமன்வெல்த்திற்கென்று ஒரு அமைப்போ, அல்லது பட்டயமோ கிடையாது. சில மரபுகளைப் பின்பற்றித்தான் அது செயலாற்றுகிறது. அவ்வப்பொழுது காமன்வெல்த் நாடுகளின் மாநாடு கூட்டப்பெற்று, அந் நாடுகளின் பொதுப்படையான பிரச்சினைகளை விவாதிக்கின்றனர். அந்த நாடுகள் பெரிதும் பயன் அடையவே இவ்வித மாநாடுகள் கூட்டப்படுகின்றன. காமன்வெல்த் நாடுகள் துவக்கத்தில், அதாவது சுதந்திரம் பெறுவதற்கு முன்னர், ஆங்கிலேயப் பேரரசின் கீழ் இருந்ததால், அந் நாட்டின் தொடர்பால் சில பொதுப்படையான மரபுகள் காமன்வெல்த் நாடுகளில் வளர்ச்சியுற்றுள்ளன. பாராளுமன்ற ஆட்சிமுறை, சட்டத்தின் இறைமை மக்களின் அடிப்படை உரிமைகள், சட்டத்தின் முன் எல்லாரும் சமம் என்ற கொள்கை, வயது வந்தோர்களுக்கு வாக்குரிமை, சுதந்திரமான தேர்தல்கள், சட்டச் சபையின் மேலாண்மை, கட்சி முறை, பாராளுமன்ற ஆட்சிமுறை ஆகிய பொதுப்படையான அம்சங்கள் ஏறக்குறைய எல்லா காமன் வெல்த் நாடுகளிலும் இருப்பதைக் காண்கிறோம். எர்ஸ்கின் மே (Erskin May) என்பவர் எழுதிய ஆங்கிலேய பாராளுமன்ற முறை (The British Parliamentary Procedure) எல்லா காமன்வெல்த் நாடுகளிலும் பின்பற்றப்படுகிறது. காமன்வெல்த் மாநாடுகளில் இந்த நாடுகளைப் பற்றிய பொதுவானப் பிரச்சினைகள் பரிசீலனை செய்யப் படுகின்றன. பொதுவாக வர்த்தக ஒப்பந்தங்களும், பொருளாதாரச் சலுகைகளும், இந்த நாடுகள் பெற்று பயன் அடைய வாய்ப்புகள் உள்ளன. காமன்வெல்த்தில் உள்ள ஒவ்வொரு உறுப்பினர் நாடும் அந்த நாட்டு மக்களின், 'குடிமகன் உரிமைகளையும்' 'நேசியத்தையும்' நிர்ணயம் செய்கிறது. ஐக்கிய அரசில் காமன்வெல்த் நாடுகளின் எல்லா குடிகளும், 'குடிமகன் உரிமைகளைப் பெறத் தகுதி பெற்றவர் களாவர். அவர்கள் மக்கள் சபை உறுப்பினர்களின் தேர்தல்களில் போட்டியிடவும், தேர்தல்களில் வாக்குகளை அளிக்கவும் தகுதி பெற்றவர்களாவர்; ஆனால் ஐக்கிய அரசில் அளிக்கப்பட்டிருக்கும் இந்த உரிமைகள் எல்லா காமன்வெல்த் நாடுகளிலும் அதே மாதிரியாக அளிக்கப்படும் என்பதில்லை. அயர்லாந்து குடியரசில் உள்ள மக்களும் கூட, ஆங்கிலேய மக்கள் பெறும் உரிமைகளைப் போன்று அங்கு பெறுகின்றனர். மாறுபட்ட சூழ்நிலையில் பிரிட்டன் இவ்விதம் மற்ற காமன்வெல்த் நாடுகளுடன் இணைந்து, செயலாற்றும் மனப்பான்மையை

காட்டுகிறது. சில காமன்வெல்த் நாடுகளின் 'குடிமை உரிமைகளை'ப் பற்றிய சட்டங்கள் இயற்றப்பட்டுள்ளன. சான்றாக கேனடியன் குடியுரிமைச் சட்டம், 1946, பிரிட்டிஷ் நேஷனாலிடி சட்டம் 1948 (The British Nationality Act 1948) நியுசிலந்து குடியுரிமைச் சட்டம் 1948 (New Zealand Citizenship Act) ஆஸ்திரேலியாவின் தேசிய குடியுரிமைச் சட்டம் 1948; சிலோன் குடியுரிமைச் சட்டம் 1948; தென் ஆப்ரிக்கக் குடியுரிமைச் சட்டம் 1949; தெற்கு ரொடிஷிய குடியுரிமைச் சட்டமும் பிரிட்டிஷ் தேசிய சட்டமும் 1948; பாகிஸ்தான் குடியுரிமைச் சட்டம் 1951; இந்தியக் குடியுரிமைச் சட்டம் 1951 ஆகியவை தனித்தனியே இயற்றப் பட்டுள்ளன.

காமன்வெல்த் நாடுகள் பின்வரும் பிரச்சினைகளில் பொதுவான உறவுகளைக் கொண்டுள்ளன:-

(1) காமன்வெல்த் மாநாடுகள் அடிக்கடி கூட்டப்படுகின்றன. காமன்வெல்த் நாடுகளின் பிரதம அமைச்சர்கள் அந்த மாநாடுகளில் கலந்து கொள்கிறார்கள். பொதுப்படையான உறவுகளையும், அந் நாடுகளின் வளர்ச்சிக்காக உதவி பெறும் வாய்ப்புகளையும் அவர்கள் பரிசீலனை செய்கிறார்கள். சான்றாகக் கொலம்போ திட்டம் மற்றும் அவர்களுடைய அந்நியவிவகாரங்களை பற்றியும், ஐக்கிய நாடுகளின் பல அங்கங்களில் பங்கெடுத்துக் கொள்வது போன்ற பிரச்சினைகளிலும் அவர்கள் அக்கறை காட்டுகிறார்கள்.

(2) சர்வதேச வர்த்தகத் துறையில், காமன்வெல்த் நாடுகள் பிரத்தியேக கவனம் செலுத்துகின்றன. பெரும்பாலான காமன் வெல்த் நாடுகள் ஸ்டர்லிங் நாணயச் செலவாணிப் பிரிவைச் சார்ந்தவையாகும். வளர்ச்சியுற்ற காமன்வெல்த் நாடுகள், பின்தங்கிய நாடுகளுக்கு உதவி அளிக்கும் பொறுப்பை ஏற்றுக் கொள்கின்றன.

(3) காமன்வெல்த் நாடுகளின் வெளிவிவகார அமைச்சர் களின் மாநாடு கொலம்போ நகரின் 1950-ல் கூடியபொழுது ஒரு ஆலோசனைக் குழுவை நியமித்தனர். அக் குழுவினர் ஸிட்னியிலும், பின்னர் லண்டனிலும் கூடி ஆலோசனை செய்து, தெற்கு ஆசியாவிலும், தென்கிழக்கு ஆசியாவிலும் உள்ள பின்தங்கிய நாடுகளுக்கு பொருள் உதவியும், விஞ்ஞான, தொழில் நுணுக்க உதவியும் அளிப்பதென்று முடிவு செய்தனர்.

(4) சமுதாயத் துறையிலும், பண்பாட்டு வளர்ச்சிக்காகவும் காமன்வெல்த் நாடுகள்மாணவர்களுக்கு கல்விபெறும் சலுகைகளை, அளிப்பதென்று முடிவு செய்தன. காமன்வெல்த் நாடுகளிடையே மற்றும் உலகில் அமைதியை நிலவும், நல்ல உறவுகளை ஏற்படுத்திக் கொள்ள பரஸ்பரம் உதவுவது என்று முடிவு செய்தன.

காமன்வெல்த் நாடுகள் தொடர்பு கொள்வதற்கு காமன்வெல்த் பொது நலத் தொடர்பு அலுவலகம் பிரிட்டனில் நிறுவப் பெற்றுள்ளது. அவ் வலுகலத்திலிருந்து காமன்வெல்த் நாடுகளுக்கு வேண்டிய எல்லா செய்திகளையும், விவரங்களையும் அனுப்பி வைக் கின்றனர். காமன்வெல்த் நாடுகளின் உயர் ஆணையாளர்கள் அல்லது ஹைகமிஷனர்கள் எல்லா நாடுகளிலும் அந்த நாடுகளின் உறவுகளைப் பலப்படுத்திக் கொள்வதற்காக நியமனம் செய்யப்பட்டுள்ளனர். இந்த ஹைகமிஷனர்களின் பணிகளும், பொறுப்புகளும் தூதுவர்களின் பணிகளையும், பொறுப்புகளையும் போன்றதேயாகும். இவர்கள் மூலமாக, காமன்வெல்த் நாடுகளின் உறவுகள் பலப்படுத்தப்படுகின்றன. தவிர, இந் நாடுகளின் உறவுகள், அடிக்கடி கூட்டப்படும் காமன் வெல்த்தின் பிரதமஅமைச்சர்கள் மாநாடுகள், வெளி விவகார அமைச்சர் களின் மாநாடுகள், நிதி அமைச்சர்களின் மாநாடுகள், பாதுகாப்பு அமைச்சர்களின் மாநாடுகள், மூலமாக மேலும் பலப்படுத்தப் படுகின்றன. அதனால் அவர்களிடம் தோன்றும் சில கருத்து வேறுபாடுகளை அகற்றிக் கொள்ள வாய்ப்புகள் ஏற்படுகின்றன. பிரதம அமைச்சர்களின் மாநாடுகள் லண்டனில் தான் நடைபெறும். இந்த மாநாடுகள் இரகசியமாகத்தான் நடைபெறும். ஏனெனில் திறந்த மனத்துடன் பேச்சு வார்த்தைகளை நடத்தும் பொழுது, வதந்திகளுக்கும் பகைமை உணர்ச்சிகளுக்கும் இடமளிக்கக் கூடாது. என்பதற்காகத்தான் இரகசியமாக இந்த மாநாடுகள் நடைபெறு கின்றன. தவிர, காமன்வெல்த் நாடுகளின் அமைச்சர்கள் சுற்றுப் பிரயாணங்களை மேற்கொண்டு நல்ல உறவுகளை ஏற்படுத்திக் கொள்கின்றனர். இவ்விதம் காமன்வெல்த் நாடுகளிடையே உறவை ஏற்படுத்திக் கொள்ள நல்ல முயற்சிகள் மேற்கொள்ளப்படுகின்றன.

# 11. அரசியல் கட்சிகள்

பிரிட்டனில் அரசியல் கட்சிகள் நன்ருக வளர்ச்சியுற்றுள்ளன. அதனுல் கட்சி அடிப்படையில் அங்கு அரசாங்கம் அமைக்கப்படுகிறது. பொதுத் தேர்தல்களில் மக்கள் சபையில் அதிக உறுப்பினர்களைப் பெறும் அரசியல் கட்சி அரசாங்கத்தை அமைக்கிறது. அதனுல் தான், அரசாங்கம் பிரிட்டனில் கட்சி அடிப்படையில் அமைகிறது என்று கூறுகிருர்கள். கட்சி அடிப்படையில்லாது அரசாங்கம் அமைக்கப்பட முடியாதா என்பது வேறு கேள்வியாகும். ஆனுல் ஜனநாயக அமைப்பில் கட்சி அடிப்படையில் தான் அரசாங்கம் அமைய முடியும். ஏனெனில் மக்கள் விருப்பங்களையும், அபிப்பிராயங்களையும் கட்சிகளே அதிகமாகப் பிரதிபலிக்கின்றன.

மேலெழுந்த வாரியாகப் பார்த்தால் கட்சி அடிப்படையில் அமைகின்ற அரசாங்கம் திருப்தி அளிக்கரததைப் போன்று தான் தோன்றும். ஒரு கட்சி பதவிக்கு வந்தால், வேறுபட்ட கருத்துகளைக் கொண்ட மற்ற கட்சிக்காரர்களிடம் பழிவாங்கும் உணர்ச்சியுடன் நடந்து கொள்வார்கள். தேர்தல்களில் எல்லாரும் ஒரே அரசியல் கட்சிக்கு மட்டும் வாக்களிப்பதில்லை. பல கட்சிகளுக்கும் பல்லாயிரக் கணக்கான மக்கள் வாக்களிக்கிருர்கள். ஒரு கட்சி பதவிக்கு வந்தால், இவர்கள் அந்த அரசாங்கத்திற்கு ஆதரவு அளிப்பார்களா என்பது சந்தேகமே. தவிர சிறுபான்மை கட்சியிலுள்ள திறமையானவர்கள் அரசாங்கத்தில் பங்கெடுத்துக் கொள்ள முடியாத ஒரு நிலைமை ஏற்படுகின்றது. இவ்வித கருத்துகள் கட்சி அடிப்படையில் அமைகின்ற அரசாங்கத்திற்கு எதிராகக் கூறப்படுகின்றன. எவ்வித அரசாங்கத்தை அமைத்துக் கொண்டாலும் ஒரு சிலருக்கு அதிருப்தி தான் ஏற்படும். எல்லாருக்கும் பிடித்தமான ஓர் அரசாங்கத்தை அமைத்துக் கொள்ளும் ஒரு முறையை இன்னும் யாரும் கண்டுபிடிக்க வில்லை. ஓரளவிற்கு கட்சி அரசாங்கம் அமைக்கப்பெற்ருலும், அரசாங்கத்தை அமைத்தற்குப் பின்னர், கட்சி மனப்பான்மையை

அகற்றிவிட்டு, பொதுவாக மக்களின் நலன்களைக் கருதி ஆட்சி செய்வது விரும்பத்தக்கதாகும். கட்சி அரசாங்கம் அமைக்கப்பட்டதற்குப் பின்னர், கட்சி வேறு, அரசாங்கம் வேறு என்ற நிலைமை உருவாகிவிடுகிறது. சில சமயங்களில் நாட்டை ஆட்சி செய்ய கட்சி சார்பற்ற அரசாங்கம் அமைக்கப்படுவதும் உண்டு. சில நெருக்கடி காலங்களிலும், போர் காலங்களிலும் இவ்வித முறை பின்பற்றப் படலாம். அப்பொழுது சில திறமை மிக்கவர்களையும், அனுபவ மிக்கவர்களையும் 'ஆட்சி செய்ய நியமிக்கலாம். ஆனால் அவர்கள் மக்களின் விருப்பத்திற்கேற்ப அரசாங்கத்தை அமைக்க நியமிக்கப் பட்டவர்களல்லர் என்பதையும் மனதில் கொள்ள வேண்டும். பிரிட்டனில் எந்தக் கட்சி அரசாங்கம் அமைக்கப்பட்டதென்றாலும், சில பொதுப்படையான குறிக்கோள்களை அந்நிய படையெடுப்பு களிலிருந்து பாதுகாப்பு அளித்தல், மக்களுக்கு வேண்டிய உயர்ந்த வாழ்க்கைத் தரம், சுதந்திரமாக வாழ்கின்ற உரிமைகள் ஆகியவற்றை அரசாங்கம் அளிக்கும் என்ற நம்பிக்கை ஆங்கிலேய மக்களுக்குண்டு. இக் குறிக்கோள்களைப் அடைவதில் கட்சிகள் பல்வேறு கொள்கைகளை பின்பற்றலாம். அவற்றில் தான் கட்சிகளின் வேறுபாடுகளும் உள்ளன.

சில நிபந்தனைகள் நிறைவேற்றினால் கட்சி அரசாங்கமும் திருப்தி அளிப்பதாகத் தானிருக்கும். வாக்காளர்களின் நம்பிக்கையை அந்த அரசாங்கம் பெற்றிருக்க வேண்டும். அரசாங்கம் சிறுபான்மை யினரின் உணர்ச்சிகளையும் தேவைகளையும் மதிக்க வேண்டும். அதனால் கூடிய வரையில் மிதமான கொள்கைகளைப் பின்பற்றுதலே நல்லது. மக்களிடத்தில் கட்சி அரசாங்கம் வாக்குகளைப் பெறும் பொழுது, நியாயமான முறைகளில் தான் பிரச்சாரம் செய்து வாக்குகளைப் பெற வேண்டுமே தவிர, மக்களிடத்திலே பொறுப்புணர்ச்சிகளையும், கசப்புணர்ச்சிகளையும் பெருக்கச் செய்து வாக்குகளைப் பெறுதல் நல்லதல்ல. மேற்கூறிய நிபந்தனைகளை கட்சி அரசாங்கம் நிறைவேற் றினால் மக்கள் அந்தக் கட்சி அரசாங்கத்திற்கு ஆதரவு அளிப்பர். முதல் நிபந்தனையின்படி, மக்கள் கருத்துகள் மாறிவிட்டால், கட்சி அரசாங்கமும் மாற்றி அமைக்கப்படுகிறது. இரண்டாவது நிபந்தனை யின்படி, சிறுபான்மையினருக்கு சகிப்புத் தன்மை வேண்டுமென்ப தாகும். ஏனெனில் சில பொதுப்படையான சட்டங்கள் அவர்களுக்கு பிடிக்காமல் இருந்தால், அவற்றை ஏற்றுக்கொள்ள அவர்கள் பழகிக் கொள்ளவேண்டும். பின்னர், அரசியல் அமைப்பின்படி, அவற்றைத் திருத்திக் கொள்ளும் முயற்சிகளை சில அவர்கள் மேற்கொள்ள லாம். அப்போது பெரும்பான்மைக் கட்சி அவர்களோடு ஒத்துழைக்க வேண்டும். மூன்றாவது நிபந்தனை, மக்கள் வாக்களிக்கும் பொழுது,

கட்சி பிரச்சாரங்களால் உணர்ச்சி வசப்படக் கூடுமாதலால் அவர்களிடம் வெறுப்புணர்ச்சிகளைத் தூண்டக்கூடாது என்பதாகும். ஆனால் மக்கள் வாக்களிக்கும் பொழுது பெரும்பாலும் உணர்ச்சி வசப்படுவதில்லை. கட்சிகளின் பிரச்சாரங்களால் பாதிக்கப்படுவதுமில்லை; அல்லது சமயம், இனம், வட்டார விருப்பு வெறுப்புகள் ஆகிய காரணங்களால், அவர்களுடைய கருத்துகளை மாற்றமுடிவதில்லை. அதனால் தான் மக்கள் அவர்களுக்கு விருப்பமான அரசியல் கட்சி வேட்பாளர்களுக்கு வாக்களிக்கின்றனர்.

பிரிட்டனில் மேற்கூறிய மூன்று நிபந்தனைகளும் பொருந்து கின்றன, பிரிட்டனிலுள்ள அரசியல் கட்சிகளிடையே கருத்து வேறுபாடுகள் இருந்த போதிலும் பொறுப்புணர்ச்சி இல்லை. ஏனெனில் அங்குள்ள அரசியல் கட்சிகளே, சமய வெறி, இன வெறி, வட்டார வெறி, ஏழை பணக்காரன் என்ற வேறுபாடு ஆகிய உணர்ச்சி களுக்கு அப்பாற்பட்ட கட்சிகளாக வளர்ச்சி அடைந்துவிட்டன. அதனால் தேர்தல் சமயங்களில் இந்த உணர்ச்சிகளை, அக் கட்சிகள் பயன்படுத்தி மக்களை வெறியூட்டுவதில்லை. தவிர பிரிட்டனில் உள்ள பெரும்பான்மையான இரண்டு அரசியல் கட்சிகளுக்கும் மக்களிடையே சமமான ஆதரவு உள்ளது. எந்தக் கட்சியும் பதவியைப் பெறும் வாய்ப்பைப் பெற்றுள்ளது. அதனால் எந்தக் கட்சியும் பதவிக்கு வந்தால் நியாயமாகவே நடந்து கொள்கிறது. பிரிட்டனில் உள்ள இரு அரசியல் கட்சிகளும் ஏறக்குறைய சமமான வாக்குகளைப் பெறும் வாய்ப்புக்களைப் பெற்றிருப்பதால் புதிதாக வாக்காளர் பட்டியலில் சேர்த்துக் கொள்ளப்படும் இளைஞர்களின் வாக்குகளையும், எந்தக் கட்சியிலும் சாராத மதில்மேல் பூனை போன்றுள்ள மக்களின் வாக்குகளைப் பெறுவதிலும் அதிக கவனத்தைச் செலுத்துகின்றனர்.

ஆங்கிலேய அரசியலில், எந்த அரசியல் கட்சியும் தொடர்ந்து அரசாங்கத்தை அமைத்துக் கொண்டே இருப்பதில்லை. ஒருசமயம் தொழிற் கட்சி அரசாங்கம் என்றால், அதற்குப் பின்னர் கன்சர்வேடிவ் அரசாங்கம் என்று கட்சிகள் மாறி, மாறி அரசாங்கத்தை அமைத்து வருவதை கடந்த நூற்றாண்டுக் கால ஆங்கிலேய அரசியலில் காணலாம். 1959-ல் கன்சர்வேடிவ் அரசாங்கம் தொடர்ந்து மூன்றாவது முறையாக அரசாங்கத்தை அமைத்தது. ஆனால் கடந்த 90 ஆண்டுகளில் எந்த அரசியல் கட்சியும் தொடர்ந்து இரு முறைகளுக்கு மேல் அரசாங்கத்தை அமைக்கும் வாய்ப்பைப் பெறவில்லை. அதனால் தேர்தல்கள் நிகழ்ந் தால் பிரிட்டனில், எந்த அரசியல் கட்சி உறுதியாகப் பதவிக்கு வரும் என்று கூறுவதற்கில்லை. இந்த நிலை ஏற்படுவதற்குக் காரணம், ஆங்கிலேய மக்களில் பெரும்பான்மையோர் இன்னும் எந்த அரசியல்

கட்சியிலும் வேரூன்றிய பற்றுதலைக் கொண்டிருக்கவில்லை என்பது வேயாகும். சூழ்நிலைக்கு ஏற்ப, அவர்களும் அரசியல் கருத்துகளை மாற்றிக்கொள்வர். இவ்விதம் கருத்துகளை மாற்றிக்கொள்ளும் வாக்காளர்களைத் தான் அரசியல் கட்சிகள் கண்டுபிடித்து, வேட்பாளர்களுக்கு வாக்களிக்கும்படி அவர்கள் பிரச்சாரம் செய்கின்றனர். அவர்களுடைய வாக்குகளும், மற்றும் புதிதாக வாக்காளர் பட்டியலில் சேர்த்துக் கொள்ளப்படுகின்ற இளைஞர்களின் வாக்குகளும் தான் தேர்தல் முடிவுகளை நிர்ணயம் செய்கின்றன என்றும் இந்த வாக்குகளை 'நிலையற்ற வாக்கு' (Floating Vote) என்றும் கூறுகின்றனர்.

சென்ற தேர்தல்களில் வாக்களித்தவர்களில் சிலர் அவர்களுடைய ஆதரவை இந்த முறை வேறு அரசியல் கட்சிக்கு அளிக்கலாம். ஆனால் இவ்விதம் வாக்களிப்பவர்கள் எண்ணிக்கை மிகவும் குறைவாக இருப்பதாக அரசியல் கட்சிகள் மதிப்பிடுகின்றன. அதனால் இவர்களுடைய வாக்குகளைப் பெற இரண்டு கட்சிகளும் முயற்சி செய்யும் ஆனால் கட்சிகள் பெரும்பாலும் நம்பியிருப்பது அந்தந்தக் கட்சியின் ஆதரவாளர்களையேயாகும். அவர்களது வாக்குகள் உறுதியாக குறிப்பிட்ட கட்சிக்கே விழும். ஆங்கிலேய அரசியலில் இரண்டு கட்சிகளுக்கும் இவ்வித வாக்காளர்களின் எண்ணிக்கை சமமாகவே உள்ளது என்று மதிப்பிடுகிறார்கள். அதனால் தேர்தல் முடிவுகளை நிர்ணயம் செய்கிறவர்கள் எந்தக் கட்சியிலும் சாராமல் இருப்பவர்களேயாவர். அவர்களில் சிலர் லிபரல் கட்சியில் அனுதாபம் கொண்டவர்களாகவும் இருக்கலாம். ஆனால் இறுதியில் இரண்டு பெரிய கட்சிகளில் ஒரு கட்சிக்கு வாக்களிக்கக் கூடிய கட்டாயமான சூழ்நிலைக்கு அவர்கள் கொண்டு வரப்படலாம். லிபரல் கட்சியைச் சார்ந்த ஒரு வேட்பாளர் தேர்தலில் போட்டியிட்டால் பெரும்பான்மையான வாக்காளர்கள் யாருக்கு வாக்களிப்பது என்பதை நிர்ணயம் செய்வது கடினமாகும். இவ்விதம் நிலையற்ற தன்மையில் இருக்கும் வாக்காளர்களின் எண்ணிக்கை ஏறக்குறைய 30 இலட்சம் வாக்காளர்கள் இருக்கலாம் என்று மதிப்பிடப்படுகிறது. இந்த வாக்காளர்கள் யாரை தேர்ந்தெடுப்பது என்று முடிவு செய்யாமல் இருக்கலாம். அதற்குக் காரணம் எந்த அரசியல் கட்சியிலும் சரியான பற்றுதல் அவர்களுக்கு இல்லாததாகும்.

நிலையற்ற வாக்காளர்கள் பல காரணங்களுக்காக கட்சி மாறி வாக்களிக்கலாம். இரண்டு கட்சிகளிலும் உள்ள மிதவாதிகளிடையே கட்சிகளின் கொள்கைகளில் பெரிய வேறுபாடுகள் காணப்படுவதில்லை. இரு கட்சிகளின் குறிக்கோள்களைப் பெறும் விதம் ஏறக்குறைய ஒரே மாதிரியான கொள்கைகளைப் பின்பற்றுவதேயாகும். இரண்டு கட்சி

களிலும் உள்ள இடது சாரி, வலது சாரி கட்சியினரிடம் தான் கொள்கைகளில் அதிக வேறுபாடுகளைக் காண்கின்றனர். மிதவாத கொள்கைகளின் தன்மை, அக் கட்சிகளில் உள்ள தலைவர்களிடம் பிரதிபலிக்கின்றது. சில கன்சர்வேடிவ் கட்சி தலைவர்கள் அக் கட்சியிலே இடது சாரிகளாகவும், சில தொழிற்கட்சி தலைவர்கள் அக் கட்சியில் வலது சாரிகளாகவும் இருப்பதைக் காண்கிறோம். தவிர, வேறு ஓர் அரசியல் கட்சி அரசாங்கத்தை அமைத்தாலும், இதற்கு முன்னர், இருந்த வேறு அரசியல் கட்சி அரசாங்கம் கொண்டுவந்த சில நன்மைகளை மாற்றி அமைக்கப் போவதில்லை என்பதை வாக்காளர்கள் அனுபவ ரீதியாகத் தெரிந்து கொண்டுள்ளனர்; ஒரு சிலவற்றைத் தவிர, இதற்கு முன்னர் இருந்த அரசாங்கத்தின் கொள்கைகளைப் புதிதாக தருகின்ற அரசாங்கம் பொதுப்படையாக ஏற்றுக்கொள்கின்றது.

அதனால் வாக்காளர்கள் கட்சி மாறி வாக்களிக்கின்றார்கள் என்றால் அரசாங்கம் மாற வேண்டும் என்ற கருத்தின் பேரிலும் இருக்கலாம். அல்லது வேண்டுமென்றே வேறு கட்சிக்கு இந்த முறை வாக்களித்தால் என்ன என்ற மனப்பான்மையும் ஒரு காரணமாக இருக்கலாம். ஒரு கட்சி அரசாங்கத்தில் இருந்தால், அதன் அதிகாரம் காரணமாக மக்களிடையே ஓரளவிற்குச் செல்வாக்கை இழந்து விடுவதும் உண்டு. அரசாங்கத்தை அமைத்த கட்சி அதனுடைய முக்கியமான திட்டங்களை நிறைவேற்றிய பிறகு, மற்ற அதனுடைய ஆட்சி முறை மிகவும் சாதாரணமாகவே மதிப்பிடப்படும். அதிலே ஒரு விதப் புதுமையும் மக்கள் காண்பதில்லை. அதனால் அரசாங்கத்தை நடத்தும் கட்சி அடிக்கடி புதிய கருத்துகளையும், புதிய கொள்கைகளையும் கொண்டு வந்து மக்களுடைய நம்பிக்கையைப் பெற வேண்டியுள்ளது. இல்லையெனில் எதிர்கட்சியினர் எப்பொழுதும் அரசாங்கத்தின் கொள்கைகளை மக்களிடத்தில் குறை கூறிக்கொண்டிருப்பர். அவர்களுக்கு ஒரு வாய்ப்பு அளிக்கப்படுமெனில், அவர்கள் திறமையான அரசாங்கத்தைக் கொண்டு வருவதாக அடிக்கடி மக்களிடம் பிரச்சாரம் செய்து கொண்டிருப்பர். அதனால் ஆங்கிலேய மக்கள் உண்மையில் வேறு ஒரு கட்சிக்குத் தான் அரசாங்கத்தை அமைப்பதற்கு ஒரு வாய்ப்பு அளித்தால் என்னவென்று கருதுகின்றனர். ஆங்கிலேய மக்கள் இப்படி நினைப்பது அவர்களுக்கு ஒரு பழக்கமாகிவிட்டது. தவிர தனிப்பட்டவர்களின் திறமையின் காரணமாகவும், கட்சி அடிப்படையில் வாக்களிக்காமல் தனிப்பட்டவருக்காக வாக்களிப்பதும் உண்டு.

வாக்காளர்கள் தேர்தல் சமயங்களில் இரண்டு கட்சிகளைப் பற்றியும் தான் சிந்திக்கின்றனர். இரண்டு கட்சிகளுக்கும் நடுத்தர வகுப்பிலிருந்தும், தொழிலாளர் வகுப்பிலிருந்தும் வாக்குகள் கிடைக்கின்றன.

1964-ல் நிகழ்ந்தபொதுத் தேர்தல்களில், தொழிற்கட்சி 9%;22%, மேல் நடுத்தரவகுப்பிலிருந்தும், சாதாரணநடுத்தர வகுப்பிலிருந்தும் முறையே வாக்குகளைப் பெற்றது. கன்சர்வேடிவ் கட்சி 33%, 34% தொழிலாளர்களிடமிருந்தும், பரம ஏழைகளிடமிருந்தும் முறையே வாக்குகளைப் பெற்றது. அதனால் வாக்காளர்கள் எந்த அடிப்படையில் இரு கட்சிகளுக்கும் வாக்களித்தனர் என்று நிர்ணயம் செய்வது கடினமாகும். அதனால் தொழிலாளர்கள் தொழிற் கட்சிக்கே வாக்களிக்க வேண்டுமென்றோ, அல்லது நடுத்தர வகுப்பினரும், மேல் நடுத்தர வகுப்பினரும் கன்சர்வேடிவ் கட்சியினருக்கே வாக்களிக்க வேண்டுமென்றோ நிபந்தனை எதுவும் இருப்பதாகத் தெரியவில்லை. அவ்வித வகுப்பு அடிப்படையில் தான் வாக்குகளைப் பெரும்பாலும் வேட்பாளர்கள் பெறுகின்றனர். என்றாலும், நிலையற்ற வாக்காளர்கள் எவ்விதம் வாக்களிப்பதை நிர்ணயம் செய்கிறார்கள் என்பதை உறுதியாகக் கூறமுடியாது. 1945-ல் நடுத்தர வகுப்பில் உள்ள நிலையற்ற வாக்காளர்கள் தொழிற் கட்சியின் பொதுநல நாட்டுக் கொள்கைகளில் மயங்கி வாக்களித்தனர். அதன் விளைவாக அவர்கள் தொழிற் கட்சியின் அதிகப்படியான வரிகளை செலுத்த நேரிட்டது. நடுத்தர மக்களுக்கு அதனால் அதிருப்தி ஏற்பட்டது. நிலையற்ற தொழிலாளர் வாக்காளர்கள் அதே தேர்தலில் தொழிற் கட்சியின் முழு வேலை வாய்ப்புக் கொள்கைக்காக அக்கட்சிக்கு வாக்களித்தனர். ஆனால் பின்னர் அக் கட்சி பின்பற்றிய அரசுடமையாக்கும் கொள்கையைக் கண்டு அதிருப்தியுற்றனர். தொழிற் கட்சிக்காக இத் தேர்தல்களில் வாக்களித்த, சிறிய வியாபாரிகள், அதிகாரிகள், தொழிற் செய்கிறவர்கள் ஆகியோர் அதிக தொல்லைகளுக்குள்ளாயினர். இருந்த போதிலும் 1945, 1951-ல் கட்சி மாறி வாக்களித்தவர்களின் எண்ணிக்கை ஐந்து லட்சம் பேர்தானிருக்கும் என்று மதிப்பிட்டனர். ஆனால் அதே காலத்தில் கன்சர்வேடிவ் கட்சியினர் 20 லட்சம் தொழிலாளர் வாக்குகளைக் கைப்பற்றியுள்ளனர். அதனால் ஒவ்வொரு வகுப்பிலும் நிலையற்ற வாக்காளர்கள் இருக்கத்தான் செய்கிறார்கள். ஏதாவது ஒரு குறிப்பிட்ட வகுப்பினருக்கு மட்டும் அரசாங்கம் அதிக நன்மை செய்கிறது என்று உணர்ந்தால் அந்த வகுப்பினர்களது வாக்குகள் அக் கட்சிக்கு விழும் என்று கூறமுடியும். நிலையற்ற வாக்காளர்களின் வாக்குகளைப் பற்றி அதிகம் கவலைப்படக் கூடாது என்ற எண்ணமும் உள்ளது. ஒவ்வொரு தேர்தலிலும் இவ்வித மாறுதல் ஏற்பட்டுக்கொண்டே இருந்தால், அரசாங்கங்களிலும் மாறுதல்கள் ஏற்படத்தான் செய்யும். அடிக்கடி வெவ்வேறு அரசாங்கங்கள் அமைக்கப்பெற்றால் நீண்டகாலத் திட்டங்களை உருவாக்குவதில் இடையூறுகள் ஏற்படுகின்றன என்று கருதப்படுகிறது. இரண்டு கட்சிகளுக்கிடையே சமமான வாய்ப்புகள் அரசாங்கத்தை அமைக்க இருக்கின்ற காரணத்தால் இரு கட்சிகள் முறை வெற்றிகரமாக

செயலாற்றப்படுகின்றது என்று கூறமுடியும். அடுத்த தேர்தலில் ஒரு கட்சியின் வெற்றி வாய்ப்பு சந்தேகத்திற்குரியது என்று கருதும் பொழுது, அக் கட்சி அரசாங்கம் மக்களைத் தம் பக்கம் இழுக்க நல்ல திட்டங்களை உருவாக்கிக் கொண்டிருக்கும் எதிர்க்கட்சிக்கும் அடுத்த தேர்தல்களில் வெற்றி பெறும் வாய்ப்புகள் இருக்கின்றன என்று நினைக்கும்பொழுது, நல்ல எதிர்கட்சியாக அமைகிறது.

**கட்சிகளின் வளர்ச்சி**

முதலில், கட்சிகளுக்கும், கட்சி முறைக்கும் உள்ள வேறுபாட்டை பார்ப்போம். ஒரு கட்சியின் கொள்கைகளை ஆதரிக்கும் முழு கூட்டத்தினரையும் கட்சி என்ற பெயரில் அழைக்கலாம். ஆனால் கட்சி முறை பாராளுமன்ற அரசாங்கத்திற்கே அடிப்படை காரணமாக உள்ளது. அதனால் 'கட்சி முறை' என்ற சொற்றொடருக்கு கட்சியைக்காட்டிலும் சிறிது அதிகமான பொருள் கூற வேண்டியுள்ளது. கட்சிமுறை பாராளுமன்றத்துடன் இணைந்ததாகும். ஏறக்குறைய இந்தக் கட்சி முறை 1832-க்குப் பின்னர் பின்பற்றப்பட்டது. என்று கூறலாம். ஆனால் கட்சிகளுக்கு நீண்டதொரு வரலாறே காணப்படுகிறது. கட்சி முறை வருவதற்கு முன்னரே கட்சிகள் தோன்றின.

அரசியலில், மக்களை இரண்டு பிரிவுகளாகப் பிரிக்கலாம்; ஒன்று மாற்றங்களை விரும்பும் மக்கள்; மற்றொன்று, பழமையைத் தொடர்ந்து பின் செல்லும் மக்கள். இந்த வகையில் மக்களின் அரசியல் கருத்துகளைப் பிரித்தாலும் 19-வது நூற்றாண்டில் தான் மக்கள் இவ்வித கருத்துகளின் அடிப்படையில் கட்சி சார்புடையவர்களானார்கள். அதற்கு முன்னர் வரலாற்றுக் காரணங்களால் தான் கட்சிகள் தோன்றின. இங்கிலாந்தில் அரசியல் கட்சிகள் இரண்டாம் சார்லஸ் அரசர் காலத்தில் தோன்றின. அதற்கு முன்னர் பாராளுமன்றத்தில் இருந்த கட்சிகள் பெரும்பாலும் சமய அடிப்படையில் தோன்றியவையாகவே இருந்தன. ஆங்கிலிக்கன் திருச்சபையை ச் சார்ந்தவர்களும், மற்ற திருச்சபையைச் சார்ந்தவர்களுக்குமிடையே நிறைய கருத்து வேறுபாடுகள் இருந்தன. ரோமன் கத்தோலிக்க திருச்சபையைச் சார்ந்தவர்கள் மீது பொதுவாகவே அதிருப்தி நிலவி இருந்தது. அப்பொழுதிருந்த கட்சிகள் அரசரின் தெய்வீகக் கொள்கைகளைக் கண்டித்தன. பாராளுமன்றத்தின் உரிமைகளை நிலைநிறுத்தப் பாடுபட்டன. திருச்சபையைச் சார்ந்த கட்சியினர் உள்நாட்டுப் போரின்பொழுது, அரசர் பக்கம் சேர்ந்திருந்தனர். அவர்கள் அதனால் அரசர் கட்சியைச் சார்ந்தவர்களானார்கள். அந்தக் கட்சியின் தலைவராக இருந்தவர், எட்வர்ட் ஹைட் (Edward Hyde)பின்னர், (கிளாரண்டன்

பிரபு) என்பவராவர். காமன்வெல்த் ஆட்சியிலிருந்த பொழுது அவர் நாடு கடத்தப்பட்டிருந்தார்.

முன்னிலை மீட்சி 1660-ல் ஏற்பட்டது. மீண்டும் அரசருடைய ஆட்சி கொண்டுவரப்பட்டது. ஆனால் பாராளுமன்றம் அதனுடைய ஆதிக்கத்தை நிலை நிறுத்திக் கொண்டது. பாராளுமன்றத்தின் ஆதிக்கம் நிலை நிறுத்தப் பெற்ற பிறகு, பாராளுமன்றத்தில் வேறு பல காரணங்களுக்காக கட்சிகளை அமைத்துக் கொண்டனர். அரசரின் கட்சியில் சேர்ந்து பணியாற்றிய திருச்சபையினர் ஒரு கட்சியை தோற்றுவித்துக் கொண்டனர்; நிலப் பண்ணையாளர் மற்றொரு கட்சியை தோற்றுவித்துக் கொண்டனர். இந்த நிலப்பண்ணையாளர்கள், பாராளுமன்றத்தின் உரிமைகளைப் பாதுகாக்க வேண்டுமென்ற எண்ணம் கொண்டவர்களாவர். மற்றும், முதலாம் சார்லஸ் அரசரின் வீழ்ச்சிக்கு காரணமானவர்களும், மற்றும் தேசிய மதத்திற்கு இணங்காதவர்களும், நடுத்தர வகுப்பினரும், பொதுவாக வியாபாரிகளும், குறிப்பாக லண்டன் நகர வியாபாரிகளும் ஒரு கட்சியை அமைத்துக் கொண்டனர். அவர்களிடையே பல பிரச்சினைகள் தோன்றின. அவ்வளவு பிரச்சினைகளிலும் கருத்து வேறுபாடுகள் காணப்பெற்றன. 1678-ல் சிலர் இரண்டாவது ஜேம்ஸ் அரசர் கத்தோலிக்கராக இருந்ததால், இரண்டாம் சார்லசுக்குப் பின் அவர் இங்கிலாந்து நாட்டின் அரசராக ஆகக் கூடாதென்று ஒரு விலக்கு மசோதாவைப் பாராளுமன்றத்தில் கொண்டு வந்தனர். இந்த மசோதாவை ஆதரிக்காதவர்கள் 'டோரிகள்' என்று கேலியாக அழைக்கப் பெற்றனர். அவர்கள் ரோமன் கத்தோலிக்கர்களுடன் சேர்ந்து கொண்டு சதித் திட்டம் தீட்டுகின்றனர் என்று குறை கூறப்பட்டனர். 'டோரிகள்' என்ற பெயர் அயர்லாந்தில் நாடு கடத்தப் பெற்ற, குறிப்பாக ரோமன் கத்தோலிக்க குற்றவாளிகளைக் குறிக்கும் சொல்லாக இருந்தது. அதனால் 'விலக்கு' மசோதாவை எதிர்த்தவர்கள் மிகவும் மட்டமான சொல்லாகிய 'டோரிகள்' என்ற பெயரால் அழைக்கப்பட்டனர். 'விலக்கு மசோதாவை ஆதரித்தவர்களை, அதைப் போன்றே மிகவும் மட்டமான பெயராகிய 'விக்குகள்' (Whigs) என்று அவர்களின் எதிரிகள் அழைத்தனர். ஸ்காட்லாந்தில் உள்ள சிலர் பாராளுமன்றத்துடன் சேர்ந்து கொண்டு அரசருக்கு விரோதமாகச் செயல்பட்டனர். மக்கள் உரிமைகளை நிலை நிறுத்தப் போவதாகக் கூறியவர்களும், ரோமன் கத்தோலிக்கர்களைத் தவிர மற்ற எல்லா திருச்சபையைச் சார்ந்தவர்களுக்கும் சமய பொறை அளிப்பதாகக் கூறியவர்களும் 'விக்குகள்' என்று கேலியாக அவர்களது எதிரிகளால் அழைக்கப்பட்டனர்.

உள்நாட்டுப் போருக்குப் பின்னர், அரசியல் கட்சிகளிடையே புதிய வளர்ச்சி காணப்பெற்றது. இரண்டாம் சார்லஸ் அரசன்,

அவருக்கு வேண்டிய நண்பர்களைப் பல்வேறு கட்சிகளிலுமிருந்து தேர்ந்தெடுத்து ஒரு சிறிய அமைச்சர் குழுவை அமைத்துக் கொண்டார். அமைச்சர்கள் அடங்கிய அந்தக் குழுவிற்கு 'கெபால்' (Cabal) அமைச்சவை என்று அழைக்கப்பெற்றது. 'கெபால்' அமைச்சவையில் உள்ள எல்லா அமைச்சர்களும் வெவ்வேறு கருத்துகளைக் கொண்டவர்களாவர். இதைப் போன்ற ஓர் அமைச்சவையை வில்லியம் அரசர் காலத்திலும், ஆன் அரசியார் காலத்திலும் ஏற்படுத்த முயற்சிகள் மேற்கொள்ளப்பெற்றன. ஆனால் அந்த முயற்சிகள் வெற்றிபெறவில்லை. 1695–ல் வில்லியம் 'டோரிகளை' அவருடைய அமைச்சவையில் இருந்து விலக்கி 'விக்' கட்சியினரைச் சார்ந்த ஓர் அமைச்சவையை நிறுவினார். ஏனெனில் அவர்கள்தான் ஐரோப்பியப் போரைத் திறம்பட நடத்த முன் வந்தனர். ஆன் அரசியார் காலத்தில் டோரி கட்சி பாராளுமன்றத்தில் பெரும்பான்மையான கட்சியாக அமைந்திருந்தது. இங்கிலாந்திற்கும் ஃபிரான்சிற்கும் அப்பொழுது போர் நிகழ்ந்து கொண்டிருந்தது. இந்தப் போரை முடிப்பதற்கு ஆன் அரசியார் டோரிகளின் ஆதரவைப் பெறவேண்டிய அவசியம் ஏற்பட்டது. அதனால் விக் அமைச்சர்களான மார்ல்பரோ, கொடால்பின் ஆகிய இருவரையும் பதவியிலிருந்து விலக்கினார். அதற்குப் பின்னர், டோரி கட்சியின் அமைச்சர்களையே நியமனம் செய்தார். ஆனால் வில்லியம், ஆன் அரசியார் ஆகிய இருவருமே, இரண்டு கட்சிகளிலிருந்தும் அமைச்சர்களை நியமனம் செய்வது பயனளிக்கவில்லை என்பதை உணர்ந்தனர். அப்பொழுதிருந்து, டோரிக் கட்சியினர் என்றும், விக் கட்சியினர் என்றும் இரண்டு அரசியல் கட்சிகள் திட்டவட்டமாக உருவாகின. இரண்டு கட்சிகளிலும் பிரச்சாரம் செய்யப்பெற்றது. விக் கட்சியின் சார்பாக எழுதி வந்த, அடிசன், டிஃபோ (Defoe) ஸ்டீல் (Steele) லாக் (Locke) ஆகியோர் முக்கியமானவர்களாவர். டோரிக் கட்சியின் சார்பாக எழுதி வந்த, ஸ்விஃப்ட் (Swift) போலிங்புரோக் (Bolingbroke) ஆகியோர் முக்கியமானவர்களாவர். இவர்கள் எழுத்துக்கள் மூலமாக, ஒவ்வொரு கட்சியின் கொள்கைகளும் ஒரு வடிவம் பெற்றது. விக் கட்சியினர், அரசரின் பிரத்தியேக அதிகாரங்களை மேலும் வரையறுப்பர் என்றும் எல்லா பிராடஸ்டண்ட் சமயத்தினருக்கும் சமயப் பொறையை வழங்குவர் என்றும், நிலப் பண்ணையாளர்களுக்கு எதிராக வியாபாரிகளின் நலன்களைப் பாதுகாப்பர் என்றும் 'விக்' கட்சி சார்பாகப் பல கட்டுரைகள் எழுதப்பெற்றன. டோரிக் கட்சியினர், 1688-ல் ஏற்பட்ட புரட்சி ஏற்பாட்டில் மேலும் திருத்தங்களைக் கொண்டுவரப் போவதாகவும், தேசிய மதத்தில் இணங்காதார்களுக்கு மேலும் பல தடைகளைக் கொண்டுவரப் போவதாகவும், நிலப் பண்ணையாளர்களை ஆதரிக்கும் திட்டத்தையும் ஐரோப்பிய விவகாரங்களில்

தலையிடாமல் இருக்கும் கொள்கையையும் பற்றி எழுதி வந்தனர்.

17-வது நூற்றாண்டின் கடைசியில் இந்த இரண்டு அரசியல் கட்சிகள் தோன்றினாலும், இவற்றின் கொள்கைகள், மரபுகள், வெறுப்புணர்ச்சிகள், சமுதாயப் பின்னணி ஆகியவையெல்லாம் படிப் படியாக இந்த இருநூறு ஆண்டுகளில் வளர்ச்சியுற்றுள்ளன. அதற்கு முன்னர், இந்த இரண்டு கட்சிகளைப் போன்று வேறு கட்சிகள் அமையவில்லை. முதலில், கட்சி சார்பாக மக்களைப் பிரித்துப் பேசினால் அவர்கள் கோபமுற்றனர். அவர்களுக்குப் பிரிவுகளுக்கும், கட்சிகளுக்கும் உள்ள வேறுபாட்டைத் தெரிந்து கொள்ள முடியவில்லை. ஆனால் ஒன்று மட்டும் அவர்கள் உணர்ந்திருந்தனர். அதாவது இவ்விதம் கட்சி சேர்ந்து கொண்டதால்தான் முன்னர் அவர்கள் பல தொல்லைகளுக்குள்ளாகினர் என்பது தவிர, இந்த இரண்டு கட்சிகளும் ஏற்பட்ட கொள்கை வேறுபாடுகளால் இவ் விரண்டு கட்சிகளையும் அவர்கள் பிரிக்கவில்லை. அரசியலில் மாறுபட்ட கொள்கைகளை அவை அமைத்துக் கொண்டிருந்தாலும், அவை மக்கள் கண் முன்னர் பெரிதாகத் தெரியவில்லை. வரலாற்று அடிப்படை, உள்ளூர் பற்றுதல் குடும்பப் பற்றுதல் ஆகிய காரணங்களுக்காகத்தான் அக் கட்சிகள் மாறுபட்டவையாகத் தோன்றின. இப்பொழுது அரசியல் கட்சிகள், அரசாங்கப் பிரச்சினைகள், திட்டங்கள் ஆகியவற்றை நிறைவேற்று வதில் உள்ள வேறுபாடுகளை வைத்து பிரிக்கப்படுகின்றன. ஹனோவிரிய அரச பரம்பரையை நிலைநிறுத்த மேற்கொண்ட முயற்சிகள் காரணமாக விக் கட்சி முக்கியத்துவம் பெற்றது அதுவே அக் கட்சியின் முக்கிய கொள்கையாகவும் இருந்தது. தவிர, அப்பொழுது கட்சிகளுக்குள் பல தொல்லைகள் இருந்தன. கட்சிக் கட்டுப்பாடு அப்பொழுது வளர்ச்சியுறவில்லை. ஒரு கட்சிக்குள் குடும்பப் பற்றுதல்கள் அதிகமாகக் காணப்பெற்றன. தனிப்பட்டவர்களின் சுயநலங்கள் அதிகமாகக் காணப்பெற்றன. அரசர்களின் ஆதரவை அவர்கள் அதிகமாக எதிர்பார்த்தனர். எதிர் கட்சியை மடக்கவோ, அல்லது எதிர்த்துப் போரிடவோ அவர்கள் கற்றுக் கொள்ளவில்லை. அவர்கள் ஒரு கொள்கையின் அடிப்படையில் ஒன்றுபடவில்லை. விக் கட்சியினரும், டோரிக் கட்சியினரும் தேர்தல் சமயங்களில் அவர் களுடைய கொள்கைகளை எடுத்துக் கூறவில்லை; அவர்கள் என்ன திட்டங்களை நிறைவேற்றப் போகின்றார்கள் என்பதை மக்களிடத்தில் எடுத்துக் கூறவில்லை. அதற்கு மாறாக, அவர்கள் பதவி வகிக்க ஒரு வாய்ப்பு கிடைத்ததென்றால், எவ்வளவு லாபத்தைப் பெற முடியும் என்பதைப் பற்றித்தான் அதிக கவலை கொண்டனர். மற்றும், அப்பொழுது காணப்பெற்ற பெரும் வேறுபாடு என்னவென்றால்,

கட்சிகள் பாராளுமன்றத்திலே தான் இயங்கி வந்தன அதற்கு வெளியில் அக் கட்சிகள் இயங்கவில்லை. பொது மக்களிடையே கட்சிகள் தொடர்பு கொள்ள வேண்டுமென்ற பழக்கம் ஏற்படவில்லை. அப்பொழுது வாக்காளர்களிடம் கட்சிகள் அவைகளின் கொள்கைகளைக் கூறி வாக்குகளைப் பெறுவதில்லை. வாக்காளர்களை எப்படி விலை கொடுத்து வாங்குவது என்பதுதான் அக் கட்சிகளின் கவலையாக இருந்தது. பல தொகுதிகளில் போட்டியேயின்றி வேட்பாளர்கள் தேர்ந்தெடுக்கப்படுவர். இப்பொழுதுள்ள தேர்தல்களைப் போன்று அப்பொழுது நிகழவில்லை. 19-வது நூற்றுண்டின் முற்பகுதியில் விக் கட்சியினர் தேர்தல் பிரச்சாரம் செய்வதற்கு நிதி திரட்டினர். வாக்காளர்களுக்கு லஞ்சம் கொடுக்கவே இந் நிதி பயன்படுத்தப் பெற்றது.

இந்த முறை பல காரணங்களால் கைவிடப்பெற்றது. பாராளுமன்றத்தில் கட்சிக்குள் நெருக்கமான தொடர்பு அவசியம் என்று உணர்ந்ததே பழைய முறையைக் கைவிடுவதற்குக் காரணமாக அமைந்தது. மூன்ரும் ஜார்ஜ் காலத்தில், விக் கட்சியினருக்கு எதிராக அரசாங்கம் பலருக்கு ஆதரவு அளித்து விக் கட்சியினரைப் பலவீனப் படுத்தினர். பாராளுமன்ற ஆட்சி முறையில் சீர்திருத்தங்கள் வேண்டுமென்று கோரினர். கட்சிகள் என்ருல் என்ன என்று விளக்கம் அளிக்க முற்பட்டனர். கட்சியிலே ஒழுக்கம், கட்டுப்பாடு ஆகிய கொள்கைகளை வலியுறுத்த முற்பட்டனர். பாராளுமன்றத்தில் ஒரு கட்சியின் முக்கியத்துவத்தைப் பற்றி உணர்ந்தனர். ஆனல் கட்சிகளின் ஆதிக்கம் பாராளுமன்றத்தில் மிகவும் குறைவாகத்தான் இருந்தது இந்த நூற்றுண்டின் முற்பகுதி வரையிலும், மக்கள் சபையில் ஒரு கட்சியின் பெரும்பான்மை ஆதரவு பெரும்பாலும் 'சுயேச்சையாளர் களைப் பொறுத்தே அமைந்திருந்தது. சுயேச்சையாளர்கள் மீது எவ்விதம் கட்சியின் கொள்கைகளைத் திணிக்க முடியும்? எந்த அமைச்சராலும் (பிட், உட்பட) இக் காரியத்தை செய்ய முடியவில்லை, சுயேச்சையாளர்கள் ஒரு சமயம் ஒரு கட்சியை ஆதரிப்பார்கள். அதில் லாபம் இல்லையெனில் வேருெரு கட்சியை ஆதரிப்பார்கள்.

முன்னர், அரசியல் கட்சிகள், மக்களுடன் தொடர்பு கொள்ள முன் வரவில்லை. ஆனல் நாட்டில் அப்பொழுது பலவித சங்கங்கள் அமைக்கப்பெற்றிருந்தன. அச் சங்கங்கள் ஒவ்வொரு குறிப்பிட்ட நோக்கத்திற்காக ஏற்படுத்தப்பட்டவையாகும். உரிமைகள் மசோதாவை ஆதரிக்கும் சங்கம், யார்க்ஷையர் சங்கம், சீர்திருத்தங்களைப் பாராளுமன்றத்தில் கொண்டுவருவதற்காகச் சங்கங்கள், என்று பல சங்கங்கள் மக்களிடத்தில் தொடர்பை ஏற்படுத்துவதற்காக நிறுவப்

பெற்றன. ஒவ்வொரு சங்கத்திற்கும், ஒரு குறிப்பிட்ட நோக்கம் மட்டுமே இருந்தது. மற்ற விவகாரங்களில் ஒரு சங்கம் தலையிடாது. அந்தக் குறிப்பிட்ட நோக்கம் நிறைவேற்றப்பட்டதற்குப் பின்னர், அச் சங்கத்திற்கு வேலை இல்லை. நாட்டில் மக்களுடன் தொடர்பு கொண்டுள்ள இச் சங்கங்களுக்கும், பாராளுமன்றத்திலுள்ள கட்சிகளுக்கும் தொடர்பே கிடையாது. அதற்குப் பின்னர் தான் மக்களிடையே தொடர்பு கொள்ள வெவ்வேறு கட்சி நிறுவனங்களை அமைக்க கட்சிகள் முயற்சி எடுத்துக்கொண்டன. 1832-ல் டோரிக் கட்சி 'கார்ல்டன் சங்கம்' என்ற பெயரில் ஒரு நிறுவனத்தை அமைத்தது. 1836-ல் அதைப் போன்று விக் கட்சியும் 'சீர்திருத்தச் சங்கம்' என்ற ஒரு நிறுவனத்தை அமைத்தது. பின்னர் பத்திரிகைகள் வெளியிடப்பட்டதாலும், போக்குவரத்துகளில் சீர்திருத்தங்கள் ஏற்பட்டதாலும், பாராளுமன்றத்தில், பீல் (Peele) டிஸ்ரேலி (Disraeli) கிளாட்ஸ்டன் (Gladstone) ஆகிய நல்ல தலைவர்கள் தோன்றியதாலும், கட்சிகள் மக்களுடன் தொடர்பு வைத்துக்கொள்ள முற்பட்டன. ஆனால் உண்மையான ஆர்வம், 1832-ல் பாராளுமன்ற சீர்திருத்த மசோதா நிறைவேற்றப்படும் பொழுதுதான் மக்களிடையே தோன்றியது. வாக்காளர்களை லஞ்சம் கொடுத்து விலைக்கு வாங்கும் பழக்கம் முற்றிலும் நிற்கவில்லை. ஆனால் வாக்காளர்கள் அதிகமாகி விட்டதால், அந்தப் பழக்கத்தையும் அவர்கள் விட நேரிட்டது. அதனால் வேறு முறைகளைப் பின்பற்றி அவர்களுடைய வாக்குகளைப் பெற வேண்டியிருந்தது. அதுவும் பாராளுமன்றத்தில் அக் கட்சியினர் பெரும்பான்மையைப் பெறும் அளவில் வாக்காளர்களுக்கு லஞ்சம் கொடுத்து வாக்குகளைப் பெறுவது மிகவும் கடினமாகிவிட்டது. முதல் பாராளுமன்றச் சீர்திருத்தச் சட்டப்படி, வாக்காளரின் பெயர், வாக்காளர் பட்டியலில் இருந்தால்தான் அவர் வாக்களிக்க முடியும் என்ற மாற்றம் கொண்டுவரப்பட்டது. இவ்விதம் வாக்காளர் பட்டியலில் வாக்காளர்களின் தகுதிகளை எடுத்துக் கூறி, அவர்கள் பெயர்களைக் கொண்டுவருவது மிகவும் கடினமாக இருந்தது. அதுவும் வாக்காளர்கள், தற்குறிகளாக இருந்தால், இன்னும் கடினமாக இருந்தது. அதனால் அரசியல் கட்சிகள் அவைகளின் சங்கங்களின் மூலமாக வாக்காளர்களைப் பதிவு செய்யும் சங்கங்களை நிறுவி, வாக்காளர் பட்டியல்களைத் தயாரிக்க உதவிபுரிந்தனர். ஆனால் வாக்காளர்களைப்பதிவு செய்யும் சங்கங்கள், வேட்பாளர்களை நியமனம் செய்வதற்கோ அல்லது தேர்தல் பிரச்சாரங்களைச் செய்யும் பணிகளுக்கோ அப்பொழுது இறங்கவில்லை. மத்திய அரசியல் கட்சிகளுக்கும், மற்ற பல இடங்களிலும் நிறுவப்பெற்றுள்ள கட்சிகளின் சங்கங்களுக்கும் ஏற்பட்டிருந்த தொடர்பும் உறவும் சரியாக அமையவில்லை. 1867-ல் இயற்றப்பெற்றப் பாராளுமன்றச் சட்டம் இந்த நிலையை மாற்றியது.

அச் சட்டத்திற்குப் பின்னர், பர்மிங்காம், மான்செஸ்டர், லிவர்பூல் லீட்ஸ் ஆகிய சில நகரங்களுக்கு மூன்று பாராளுமன்ற உறுப்பினர்களை தேர்ந்தெடுத்தனுப்ப அனுமதித்தது. அத்துடன் அங்குள்ள வாக்காளர் களுக்கு இரண்டு வாக்குகள் அளிக்கப்பெற்றன. அதனால் இரண்டு மூன்று உறுப்பினர்களைத் தேர்ந்தெடுக்கும் பொழுது, ஒருவருக்கே அதிகப்படியான வாக்குகளைப் பதிவு செய்யாதவாறு பார்த்துக்கொள்ள வேண்டிய பொறுப்பு அரசியல் கட்சிகளுக்கு ஏற்பட்டது. அளவிற்கு மீறிய வாக்குகள் ஒருவருக்கே கிடைத்தால், அந்த வாக்குகள் வீணாக்கப் பெற்றன என்று கருதப்பெற்றது. அதனால் அந்த வாக்குகளைச் சரியாகப் பிரித்து வாக்களிக்கும்படி, வாக்காளர்களுக்கு எடுத்துக் கூற வேண்டிய பொறுப்பு, அக் கட்சிகளுக்கு ஏற்பட்டது. டோரிக் கட்சி யினர் முதலில் பிரச்சாரம் செய்ய முற்பட்டனர். அதைப் பின்பற்றி விக்குக் கட்சியினரும் பிரச்சாரம் செய்ய முற்பட்டனர். 1868-ல் நிகழ்ந்த பொதுத் தேர்தல்களில், பர்மிங்காம் நகரத்திலிருந்து போட்டியிட்ட தீவிரவாதிகள், மூன்று இடங்களையும் கைப்பற்றினர். இந்தப் பிரச்சாரம் கிராமங்களுக்கும் பரவியது. உள்ளாட்சி அரசாங் கத்தையும் கைப்பற்ற அரசியல் கட்சிகள் அதிக முயற்சிகளை மேற் கொண்டன. அதனால் அரசியல் கட்சிகளின் பிரச்சாரம் கிராமங்களுக் கும் பரவியது.

இதன் விளைவாக, வாக்காளர்களைப் பதிவு செய்யும் கழகங்களும், மற்ற நிறுவனங்களும் உள்ளூர்களில் கட்சிகளின் கிளை நிறுவனங்களாக மாறின. அந்தக் கிளை நிறுவனங்கள் மத்திய அரசியல் கட்சி நிறுவனங் களுடன் நெருங்கிய தொடர்பை ஏற்படுத்திக் கொண்டன. அப்பொழு திருந்து தேர்தல்களில் போட்டியிடுகிறவர்கள், அவர்களுடைய திறமைக்காகவோ, அல்லது வேறு எந்தக் காரணத்திற்காகவோ வெற்றி பெறும் வாய்ப்புகள் மிகவும் குறைந்து விட்டன. அவர்கள் வாக்காளர் களிடத்தில் கட்சிகளின் கொள்கைகளையும், திட்டங்களையும் எடுத்துக் கூறி வாக்குகளைப் பெற வேண்டிய அவசியம் ஏற்பட்டது. கிளாட்ஸ்டன், அல்லது டிஸ்ரேலி (Disraeli) போன்ற தலைவர்கள் பெரிய சொற்பொழிவுகளை ஆற்றி மட்டும் வாக்குகளைப் பெறும் காலம் மாறிவிட்டது. அவர்களுடைய கொள்கைகளை மக்களிடம் எடுத்துக் கூறி அவர்களுடைய வாக்குகளைப் பெற வேண்டிய அவசியம் ஏற்பட்டுவிட்டது.

தொழிற்கட்சி 1906-ல் தான் தோன்றியது. இதற்கு முன்னர் பல தொழிற் சங்கங்கள் அமைக்கப்பெற்றிருந்தன. தொழிற்சங்கங்கள் பிரதிநிதிகளைத் தேர்ந்தெடுத்து அனுப்பி வந்தனர். தவிர, அப்பொழுது மூன்று சோஷியலிஸ்டு இயக்கங்கள் இருந்தன. அவை சோஷியல் டெமொக்ரேடிக் ஃபெடரேஷன் 1881. (Social Democ-

ratic Federation) ஃபேபியன் சங்கம் (The Fabian Society) *1883;* சுதந்திர தொழிற்கட்சி (Independent Labour Party) *1893.* இவைகளுடன் 64 தொழிற்சங்கப் பிரதிநிதிகளும், சேர்ந்து தொழில் பிரதிநிதித்துவக் குழுவை (Labour Representation Committee) அமைத்தனர். இக் குழு தான் 1906-ல் தொழிற் கட்சி (The Labour Party) என்று பெயரிடப்பெற்றது. சோஷியலிஸ்டு சங்கங்கள் உற்பத்தி நிறுவனங்களைப்பொது உடைமையாக்க வேண்டுமென்ற கொள்கையை மேற்கொண்டிருந்தன. ஆனால் தொழிற்சங்கங்கள், தொழிற்சாலைகளில் பணியாற்றும் தொழிலாளர்கள் நலன்களை மட்டும் பாதுகாக்கப் பாராளுமன்றத்தில் அதிகப் பிரதிநிதித்துவம் பெற்றால் போதும் என்று கருதின. 1918-வரையிலும், பல உள்ளூர் தொழிற் கட்சிகளின் கிளை நிறுவனங்களின் முரண்பட்டக் கொள்கைகள் இருந்து வந்தன. தொழிற் கட்சியின் அங்கத்தினர்களும், பல கிளை நிறுவனங்கள் மூலமாகத்தான் சேர்த்துக் கொள்ளப்பட்டனர். 1918-ல் கூட்டப்பெற்ற தொழிற் கட்சி நிறுவனங்களின் மாநாடு ஒன்று கூட்டப் பட்டது. அப்பொழுது தொழிற் கட்சிக்கு என்று தனியாக ஓர் அமைப்பை ஏற்படுத்திக் கொள்ள ஆர்தர் ஹெண்டர்சன், சிட்னி வெப் ஆகிய தொழிற் கட்சித் தலைவர்கள் திட்டங்களைக்கொண்டு வந்தனர். இந்த மாநாட்டிற்குப் பின்னர், தொழிற் கட்சியில் தனிப்பட்டோரும் அங்கத்தினர்களாகச் சேர்த்துக்கொள்ளப்படுவர் என்று அறிவித்தனர். அதனால் பல தொழிற் நிறுவனங்களின் கூட்டமைப்பாக இருந்த தொழிற் கட்சி நாளடைவில் தேசிய கட்சியாகவும், அதற்கு பல கிளை நிறுவனங்களை அமைத்துக் கொள்ளவும் முற்பட்டது. இப்பொழுது ஒவ்வொரு தொகுதியிலும், தொழிற்கட்சியின் கிளை நிறுவனம் அமைக்கப் பட்டுள்ளது. ஆனால் தொழிற் கட்சியில், இன்னும் தொழிற் சங்கங்கள் தான் மிகவும் செல்வாக்கு பெற்ற சக்தியாக உள்ளன. ஏறக்குறைய 65 லட்சம் அங்கத்தினர்கள் கொண்ட தொழிற் கட்சியில் 52 லட்சம் அங்கத்தினர்கள் தொழிற் சங்கங்கள் மூலமாகத் தான் சேர்க்கப் பட்டுள்ளன.

### இரண்டு அரசியல் கட்சிகளின் அமைப்பு

அரசாங்கம் ஒரு குறிப்பிட்டக் கொள்கையைப் பின்பற்றி ஆட்சி செய்ய வேண்டும் என்று மக்கள் விரும்புகின்றனர். அக்குறிப்பிட்ட கொள்கையை நிர்ணயம் செய்வதற்காக அரசியல் கட்சிகள் இருக்க வேண்டிய அவசியம் ஏற்படுகின்றது. அக் கட்சிகளின் முக்கியமான குறிக்கோள் தேர்தல்களில் வெற்றி பெற வேண்டும் என்பதாகும். தேர்தல்களில் வெற்றிகளைப் பெற, அக் கட்சிகள் தேசிய மட்டத்திலும் மற்றும் பல உள்ளூர்களிலும் அக் கட்சிகளின் அமைப்பை நிறுவ வேண்டிய அவசியம் ஏற்பட்டது. கன்சர்வேடிவ் கட்சி பாராளுமன்றத்

தினுள் வளர்ச்சியுற்றது. ஆனால் தொழிற் கட்சி ஒரு தொழிலாளர் நலக் குழுவாக ஆரம்பிக்கப் பெற்று, பின்னர் பாராளுமன்றத்தில் தொழிலாளர் நலன்களைப் பாதுகாக்கப் பிரதிநிதிகளை அனுப்பும் ஒரு கட்சியாக மாறியது. அதன் தோற்றம் அதனால் பாராளுமன்றத்திற்கு வெளியே தான் ஏற்பட்டது. இரண்டு கட்சிகளும் திட்டமிட்ட கொள்கைகளின் அடிப்படையில் முதலில் தோன்றவில்லை. வரலாற்று காரணங்களாலும், மற்றும் தற்செயலாக உருவாகிய சில காரணங்களாலும் இக் கட்சிகள் உருவாகின வென்று கூற வேண்டும், பின்னர் தான் அக் கட்சிகளிடையே கொள்கைகள் நிர்ணயம் செய்யப் பெற்றது. அக் கொள்கைகளை மக்கள் முன்னனியில் வைத்து ஆதரவு திரட்டினர்,

ஒரு கட்சிக்கு மூன்று அங்கங்கள் உள்ளன:— அவையாவன தொகுதிகள், தலைமை நிறுவனம், பாராளுமன்றத்தில் கட்சி ஆகியவையாகும். பாராளுமன்றத்தில் தான் கட்சியின் முக்கியமான தலைவர்கள் உள்ளனர். பாராளுமன்றத்து நடவடிக்கைகள் மூலமாக கட்சிக்கு விளம்பரம் கிடைக்கிறது. கட்சித் தலைவர், இந்த மூன்று அங்கங்களையும் இணைத்தும், அவைகளுடன் நல்ல தொடர்புகளையும், உறவுகளையும் வைத்துக் கொள்ள வேண்டிய பொறுப்புகளைப் பெறுகிறார். ஆனால் அந்தக் கட்சித் தலைவர் இப் பணிகளையாற்ற அக் கட்சி அவருக்கு அனுமதி அளிக்க வேண்டும், அக் கட்சி பாராளுமன்றத் தேர்தல்களில் பெரும்பான்மையான இடங்களைப் பெற்றால், அரசாங்கத்தை அமைக்கும் பொறுப்பு, அக்கட்சியைச் சாரும். அப்பொழுது அக் கட்சியின் தலைவர் பிரதம அமைச்சராக நியமனம் செய்யப்படுவார். பிரதம அமைச்சராக ஆன பின்னரும் கட்சிப் பொறுப்புகளைக் அவர் ஏற்க நேரிடும். அவருடை பொறுப்புக்களை குறைக்க நேரிட்டால், கட்சிக்கும் கூட செல்வாக்கு குறைய நேரிடும், கன்சர்வேடிவ் கட்சித் தலைவருக்கு கட்சியின் கொள்கைகளையும் நடவடிக்கைகளையும் நிர்ணயம் செய்ய சில அதிகாரங்களை அதிகமாக தரப் பெற்றிருப்பதைப் போன்று தோன்றுகிறது. அவர் கட்சியின் முக்கியமான கொள்கைகளை நிர்ணயம் செய்கிறார். அவர் தேர்தல் அறிக்கைகளையும் தயாரித்து வெளியிடுகிறார். மத்திய கட்சி அலுவலகம், அவருடைய கண்காணிப்பில் இயங்கும். கட்சியின் தலைவரை அவரே நியமனம் செய்வார். அடிக்கடி மாநாடுகள் கூட்டப்பட்டு கட்சிகள் பொதுவான சில கொள்கைகளை நிர்ணயம் செய்வர். கட்சிப் பிரமுகர்களின் சம்மதத்தின் பேரில் தான், கட்சித் தலைவர் பிரதம அமைச்சராக இருக்கும் பொழுது, அவருடையக் கட்சிப் பணியாற்ற வேண்டும். கட்சிப் பிரமுகர்களிடையே பிரதம அமைச்சருக்கு நல்ல ஆதரவு கிடைக்கவில்லை யென்றால், அவர் பதவியில் தொடர்ந்து இருப்பது கடினமேயாகும். நெவில் சேம்பர்லேன் பதவியை விட்டு விரட்டப்

பட்டார்; சர் அலக் டக்ளஸ் ஹோம் (Sir Alec Douglas Home) என்பவர் கட்சி வற்புறுத்தலின் பேரில் பதவியை விட்டு விலக நேரிட்டது

ஆனால் தொழிற் கட்சித் தலைவரின் நிலை, சிறிது வேறுபட்டுள்ளது. கட்சித் தலைவரின் தலைமையையும், ஆளுமையையும் பொறுத்து தான் அக் கட்சித் தலைவரின் அந்தஸ்தையும் நிர்ணயம் செய்ய முடியும். பாராளுமன்றக் கட்சியில் முதலில் அவர் ஓராண்டுக் காலத்திற்குத் தேர்ந்தெடுக்கப்படுகிறார். அப்பொழுது அவர் பிரதம அமைச்சராகப் பணியாற்றுவார். ஆனால் அவர் கட்சியின் தலைமைப் பதவியை வகிப்பதில்லை. அப் பொறுப்புகளை, தேசிய நிர்வாகக் குழுவினர் (The National Executive Committee) பார்த்துக் கொள்வர். அக் குழுவில் இருபத்தைந்து உறுப்பினர்களும், ஒரு பொருளாளரும் இருப்பர். அவர்கள் ஆண்டு மாநாடுகளில் தேர்ந்தெடுக்கப்படுவர். அத்துடன், அக் குழுவின் தலைவரும், துணைத்தலைவரும் இம் மாநாட்டில் தேர்ந்தெடுக்கப்படுவர். இக் குழுவினர் தேர்ந்தெடுக்கும் தலைவர், ஓராண்டுக் காலத்திற்குப் பதவியில் இருப்பார். இக் குழுவினர், கட்சிக் கொள்கைகளை நிர்ணயம் செய்து, வருடாந்தர மாநாடுகளின் ஒப்புதலுக்கு அனுப்புவர். மாநாடுகளில் மூன்றில் இரண்டு பெரும்பான்மை வாக்குகளைப் பெற்றால் தான், புதிய கொள்கைகளையோ, அல்லது திட்டங்களையோ மாநாடு அனுமதிக்கும். இந்த மாநாடுகளில், தொழிற் சங்கங்களைச் சார்ந்தவர்கள் வாக்குகள் மொத்த வாக்குகளில் 80 சதவிகிதமும், அவற்றில் ஆறு பெரிய தொழிற் சங்கங்களுக்கு மட்டும் 50 சதவிகித வாக்குகள் உள்ளன. அதனால் தொழிற் சங்கங்களின் செல்வாக்கு மிகவும் அதிகமாக உள்ளது. மாநாடுகளில் எழும் நிரந்தர கொள்கையையும் தொழிற் சங்கங்கள் ரத்து செய்யக் கூடிய அளவில் செல்வாக்கு பெற்றுள்ளன.

இரண்டு கட்சிகளுக்கும் தலைமை அலுவலகங்கள் உள்ளன. அந்தத் தலைமை அலுவலகங்கங்களிலிருந்து மற்ற கிளை நிறுவனங்களுக்கு வேண்டிய உதவியையும், ஆலோசனையையும் அளிக்கும். கன்சர்வேடிவ் கட்சியின் தலைமை அலுவலகம், அக் கட்சித் தலைவரின் நேரிடையான கண்காணிப்பில் இயங்குகிறது. ஆனால் தொழிற்கட்சித் தலைமை அலுவலகம், அக்கட்சியின் பொதுச் செயலரால் நடத்தப்படுகிறது. பொதுச் செயலர் தேசிய நிர்வாகக் குழுவினரால் தேர்ந்தெடுக்கப்பட்டு, மாநாட்டின் சம்மதத்தைப் பெறவேண்டும். கிளை நிறுவனங்களில் முழு நேர தேர்தல் பிரதிநிதிகள் பணியாற்றுகின்றனர். கன்சர்வேடிவ் கட்சிக்கு, ஒவ்வொரு தொகுதியிலும் தேர்தல் பிரதிநிதி பணியாற்றி வருகிறார். ஆனால் தொழிற் கட்சிக்கு ஒவ்வொரு

தொகுதியிலும் தேர்தல் பிரதிநிதிகள் நியமனம் செய்யப்படுவதில்லை. அவர்களுக்குப் போதிய நிதி வசதிகள் இல்லாததே அதற்குக் காரண மாகும். கன்சர்வேடிவ் கட்சி தொழில் நிறுவனங்களிடமிருந்தும் வர்த்தக நிறுவனங்களிடமிருந்தும் நிதி வசதிகளைப் பெறுகின்றது. தவிர, கன்சர்வேடிவ் கழகங்கள் தாங்களாகவே தொகுதிகளுக்கு ஏற்ப அவர்களுடைய பங்கை அளிக்கின்றன. சில சமயங்களில் கன்சர் வேடிவ் கட்சியின் வேட்பாளர்களே, அவர்களுடைய தேர்தல் செல வினங்களை ஏற்றுக்கொள்வர். கட்சி நிதிக்கும் நிறைய நிதி உதவி அளிப்பர். இவ்விதம் செய்வதால், நிதி வசதியுள்ளவர்கள் மட்டுமே தேர்தல்களில் போட்டியிட முடியும். திறமையுள்ளவர்கள் போட்டியிட முடிவதில்லை. அதனால் 1948-ல் கூட்டப்பெற்ற கன்சர்வேடிவ் மாநாட் டில், தேர்தல் வேட்பாளர்களின் செலவினங்களை ஏற்றுக்கொள்ளும் பொறுப்பு அத் தொகுதியிலுள்ள கிளை நிறுவனத்தைச் சார்ந்ததேயாகும் என்று முடிவு செய்தனர். வேட்பாளர்கள் ஆண்டுக்கு 25 பவுன்களுக்கு மேல் நிதி உதவி அளிக்க வேண்டியதில்லை என்றும் கூறினர். பாராளு மன்ற உறுப்பினர்கள் 50 பவுன்களுக்கு மேல் அவர்களுக்குரிய கிளை நிறுவனங்களில் நிதி உதவியளிக்க வேண்டியதில்லை என்று முடிவு செய்தனர். தொழிற் கட்சியில இணைந்துள்ள தொழிற் சங்கங்கள்ஏறக் குறைய 5,600,000 அங்கத்தினர்களைப் பிரதிநிதிகளாக அனுப்பு கின்றன. ஒவ்வொரு அங்கத்தினரும் ஆண்டொன்றுக்கு ஒரு ஷில்லிங் வீதம் சந்தா செலுத்துகின்றனர். சில தொழிற்சங்கங்களில் சேர்ந் துள்ள அங்கத்தினர்கள் அவர்களுடைய சம்பளங்களிலிருந்து 3 ஷில்லிங் விகிதம் தொழிற்கட்சிக்கு அளிக்கின்றனர். இந்த நிதியை தொழிற் கட்சி தேர்தல்களுக்கும், மற்ற அவர்களின் கொள்கைகளை நிறைவேற் றவும் பயன்படுத்துகிறார்கள்.

### கட்சிகளில் கட்டுப்பாடு

இரண்டு அரசியல் கட்சிகள் முறையில் கட்சிக் கட்டுப்பாட்டிற்கு அதிக முக்கியத்துவம் கொடுக்கப்படுகிறது. தொகுதிவாரியாகவும்; பாராளுமன்ற அளவிலும் கட்டுப்பாடு நிறைவேற்றப்படுகிறது. ஒவ்வொரு தொகுதியிலும் உள்ள கிளை நிறுவனத்தில் கட்சி கட்டுப் பாடு இருந்தால்தான் தேர்தல்களில் வெற்றிபெற முடியும். பொதுத் தேர்தல்களில் வாக்காளர்கள் கட்சிகளின் கொள்கைகளைப் பரிசீலனை செய்து, எந்தக் கட்சியை ஆதரிப்பது என்று முடிவு செய்வர். எந்தக் கட்சிக்கு வாக்களிப்பது என்று முடிவு செய்யாத 'நிலையற்ற வாக்காளர்கள்', ஒரு கட்சியிடம் ஒற்றுமையில்லாது, முரண்பட்ட விதத்தில் வேட்பாளர்கள் பேசிக் கொண்டிருந்தார்களென்றால், சூழ்நிலையைப் பொறுத்து அவர்களுடைய விருப்பப்படி வாக்களிப்பர்.

அதனால்தான் தேர்தல்களின் வெற்றி இந்த வாக்காளர்களைப் பெரும் பாலும் பொறுத்திருக்கிறது. கட்சியினர் முரண்பட்ட கொள்கைகளைப் பிரச்சாரம் செய்யாமல் தடுப்பதும் அல்லது கட்சியிடையே பிளவு ஏற்படாமல் பாதுகாத்துக் கொள்வது கட்சித் தலைவரின் முக்கியமான பொறுப்பாகும். அதனால் கட்சி வேட்பாளர்கள், கட்சிக் கட்டுப் பாட்டிற்கு அடங்கி நடத்தல் மிகவும் அவசியமாகிறது. அதை போன்றே கட்சியும் முக்கியமான கொள்கைகளில் திட்டவட்டமான அபிப்பிரா யங்களைக் கொண்டிருத்தல் நல்லதாகும். ஒவ்வொரு தொகுதியிலும் காணப்படும் சூழ்நிலைக்கு ஏற்ப கட்சி வேட்பாளர்கள் பிரச்சாரம் செய்வது, அதனால் தவிர்க்கப்படும். கட்சியில் பிளவுகளை ஏற்படுத்தி யும், அல்லது கட்டுப்பாடற்ற விதத்தில் வேட்பாளர்களோ அல்லது கட்சிக்காரர்களோ நடந்து கொண்டும் வருகின்ற உறுப்பினர்கள் மீது ஒழுங்கு நடவடிக்கை எடுக்க வேண்டிய அவசியம் கட்சிகளுக்கு ஏற்பட்டுள்ளது. தொழிற் கட்சியில் இவ்வித முரண்பாடுகள் அதிக மாகக் காணப்படுகின்றன. வேட்பாளர்கள் தேர்ந்தெடுக்கப்பட்ட தற்குப் பின்னரும் கூட, தொகுதியில் உள்ள கிளை நிறுவனங்கள் அவ் வேட்பாளர்கள் மீது கட்டுப்பாட்டைக் கொண்டுவருவதில் தவறு வதில்லை. தவிர, பாராளுமன்றக் கட்சியுடன், கிளை நிறுவனங்கள் நல்ல தொடர்பு கொள்ள முயற்சி எடுத்துக் கொள்கின்றன. கட்சி முறையின் முக்கியத்துவம் அரசாங்கம் அதன் கட்சியின் முழு ஆதரவைப் பாராளுமன்றத்தில் பெறுவதைப் பொறுத்தே உள்ளது. எதிர்கட்சி பாராளுமன்றத்தில் அரசாங்கத்தின் கொள்கைகளுக்கு மாற்றுத் திட்டங்களை அளிப்பதில்தான் அதன் முக்கியத்துவம் அமைந் துள்ளது அதனால் ஆளும் கட்சியிடமும், எதிர் கட்சியிடமும் ஒழுங்கும் கட்டுப்பாடும் மிகவும் அவசியமாகக் காணப்படுகின்றன. சில சமயங் களில் பாராளுமன்றத்தில் கட்சி உறுப்பினர்கள், பொதுக் கொள்கை யிலிருந்து முரண்பட்டிருந்தால், அவர்கள் விருப்பம் போன்று வாக்களித்தால், கட்சி மிகவும் பலவீனம் அடைந்துவிடும். அவ்வித சூழ்நிலையில் அவர்கள் வாக்களிக்காமல் இருத்தலே நல்லதாகும். இவ்விதம் செய்வதும் கட்சிக் கட்டுப்பாட்டிற்கு விரோதமானதாகும் அவர்கள் மீது என்ன நடவடிக்கை எடுப்பது என்பது பற்றி தொகுதி களில் உள்ள கிளை நிறுவனங்கள் நிர்ணயம் செய்யும். அவர்களுடைய முடிவே, முடிவானதாக இருக்கும். கட்சிக் கட்டுப்பாட்டிற்கு அடங்காத ஓர் உறுப்பினரை பதவியை விட்டு விலக கட்சி வற்புறுத் தும். அதன் பின்னும் அந்த உறுப்பினர் பதவியை விட்டு விலக மறுத்தால் அடுத்த தேர்தலில் அவர் வேட்பாளராக நியமனம் செய்யப் படமாட்டார்.

பாராளுமன்றத்தில் உள்ள இரண்டு சபைகளிலும் உள்ள உறுப்பினர்கள், பாராளுமன்ற கட்சிகளுடன் நெருங்கிய தொடர்பு

கொள்வர். பாராளுமன்றக் கட்சி, கொள்கைகளை நிர்ணயம் செய்கிறது. எந்த முறைகளைப் பின்பற்றி கொள்கைகளை நிறைவேற்றுவது என்றும் முடிவு செய்கிறது. கட்சியின் கொள்கைகளைப் பாராளுமன்ற உறுப்பினர்கள் ஏற்றுக் கொள்ளச் செய்யும் பொறுப்புகளையும் பாராளுமன்றக் கட்சி தான் செய்யவேண்டும். அக் கட்சியின் 'கொறடா' உறுப்பினர்களுடன் தொடர்பு கொண்டு, கட்சியின் கொள்கைகளுக்கு முரண்பட்டு வாக்களிக்காமல் பாதுகாத்துக்கொள்வர். கன்சர்வேடிவ் கட்சியும், தொழிற் கட்சியும் இவ்வித அமைப்புகளையே ஏற்படுத்திக் கொண்டுள்ளன. பாராளுமன்றக் கட்சித் தலைவர் பிரதம அமைச்சராக இருப்பார். அக் கட்சி பதவியில் இல்லையென்றால் அவர் எதிர் கட்சித் தலைவராக இருப்பார். குறிப்பிட்ட பிரச்சினைகளையோ, அல்லது திட்டங்களையோ பரிசீலனை செய்ய குழுக்கள் நியமனம் செய்யப்பட்டிருக்கும். அக் குழுவினர்களுடன் கட்சித் தலைவர்கள் தொடர்பு கொள்வார்கள்.

பிரிட்டனில் உள்ள இரண்டு முக்கியமான அரசியல் கட்சிகள், கன்சர்வேடிவ் கட்சி, தொழிற் கட்சி ஆகியவற்றைத் தவிர, மற்றும் பல சிறிய அரசியல் கட்சிகளும் உள்ளன. லிபரல் கட்சி (Liberal Party) என்பதும் ஒரு முக்கியமான கட்சியாகும். லிபரல் கட்சிக்கும் ஏறக்குறைய ஏழு லட்சம் வாக்காளர்கள் தேர்தல்களில் வாக்களிக்கின்றனர். தொழிலதிபதிகள், நிலப் பண்ணையாளர், வியாபாரிகள், மற்றும் பல வசதியுள்ளவர்கள் கன்சர்வேடிவ் கட்சிக்கு வாக்களிக்கின்றனர். அதைப் போன்று தொழிற் கட்சிக்குத் தொழிலாளர்கள் பெரும்பான்மையாக வாக்களிக்கின்றனர். லிபரல் கட்சிக்கு நடுத்தர வகுப்பினர் அதிக அளவில் வாக்களிக்கின்றனர். சில சமயங்களில் லிபரல் கட்சி உறுப்பினர்களும் அதிக அளவில் தேர்ந்தெடுக்கப் பட்டால், அவர்கள் எந்தக் கட்சியுடனும் சேர்ந்து அமைச்சவையை அமைக்க முன் வருவார்கள். லிபரல் கட்சியின் செல்வாக்கு குறைந்து கொண்டே வருகிறது. கன்சர்வேடிவ் கட்சிக்கு உள்ள அமைப்பைப் போன்றே, லிபரல் கட்சிக்கும் உள்ளது. பிரிட்டனில் இன்னும் சில சிறிய கட்சிகள் உள்ளன. காமன்வெல்த் கட்சி என்பதும் அவற்றுள் ஒன்றாகும். இக் கட்சி 1942-ல் சர் ரிச்சார்ட் ஆக்லேண்ட் (Sir Richard Acland) என்ற லிபரல் கட்சி உறுப்பினரால் தோற்றுவிக்கப் பட்டதாகும். இக் கட்சியின் முக்கியமான கொள்கை, இடைத் தேர்தல்களில் போட்டியிடுவதாகும். குறிப்பாக இடைத் தேர்தல்களில் தொழிற் கட்சி அல்லது வேறு முன்னேற்றக் கொள்கையுடையவர் போட்டியிடவில்லையென்றால், அப்பொழுது காமன்வெல்த் கட்சி போட்டியிடும். ஒரு சில உறுப்பினர்கள் 1942-1945 வரையிலும் சில இடங்களைக் கைப்பற்றினர். காமன்வெல்த் கட்சியில்

தொழிற் கட்சி அங்கத்தினர்கள் தொடர்பு வைத்துக் கொள்ளக் கூடாதென்று 1943-ல் தொழிற் கட்சியினர் முடிவு செய்தனர். 1945-ல் நிகழ்ந்த பொதுத் தேர்தல்களில் காமன்வெல்த் கட்சி 23 வேட்பாளர்களை நிறுத்தியது. ஆனால் செம்ஸ்போர்ட் தொகுதியில் மட்டுமே காமன்வெல்த் கட்சி வெற்றி பெற்றது. அந்தத் தொகுதியில் தொழிற் கட்சி வேட்பாளர் நிறுத்தப்படாததால், காமன்வெல்த் கட்சி வெற்றி பெற்றது. இந்தத் தேர்தல்களுக்குப் பிறகு, காமன்வெல்த் கட்சியைத் தோற்றுவித்த சர் ரிச்சார்ட் ஆக்லேண்ட் தொழிற் கட்சியில் சேர்ந்து கொண்டார். காமன்வெல்த் இப்பொழுது கட்சியாக இல்லை; ஆனால் காமன்வெல்த் சங்கமாக இருக்கிறது. இப்பொழுது தேர்தல்களில் அக் கட்சி போட்டியிடுவதில்லை.

பிரிட்டனிலுள்ள கம்யூனிஸ்டுக் கட்சி ஜுலை 1920-ல் தோற்றுவிக்கப்பெற்றது. முதலில் தொழிற் கட்சியுடன் இணைய வேண்டுமென்று அது முயற்சி செய்தது. ஆனால் அந்த முயற்சிகள் வெற்றி அளிக்கவில்லை. 1935, 1943, 1946 ஆகிய ஆண்டுகளில் கம்யூனிஸ்டு கட்சி தொழிற் கட்சியுடன் இணைய மீண்டும் பல முயற்சிகளை செய்தது. இப்பொழுது கம்யூனிஸ்டுக் கட்சி ஒரு தனி அரசியல் கட்சியாகத் தானிருக்கிறது.

1917-ல் கூட்டுறவு காங்கிரஸ் ஓர் அரசியல் கட்சியை ஆரம்பிக்க முயற்சிகளை மேற்கொண்டது. 1918-ல் நிகழ்ந்த பொதுத் தேர்தல்களில் ஒரு கூட்டுறவு கட்சியைச் சார்ந்த வேட்பாளர் மட்டும் தேர்ந்தெடுக்கப்பட்டார். மக்கள் சபையில் அவர் தொழிற் கட்சியுடன் சேர்ந்து கொண்டார். தொழிற் கட்சி அங்கத்தினர்களும், கூட்டுறவு கட்சி அங்கத்தினர்களும் தேர்தல்களில் நேரிடையாக போட்டியிடுவதில்லையென்று முடிவு செய்தனர். 1926-க்குப் பின்னர், தொழிற் கட்சி நிறுவனங்களில், கூட்டுறவு கட்சியினர் சேர்ந்து கொள்ளலாம் என்று முடிவு செய்தனர். 1938-ல் கூட்டுறவு கட்சிக்கென்று ஒரு விதி முறைகள் அடங்கிய அமைப்பைத் தயாரித்துக் கொண்டது. 1941-ல் கூட்டுறவு கட்சியின் பிரதிநிதிகள் சரி சமமான அந்தஸ்தில் தேசிய தொழிற் சங்க கவுன்சிலின் கூட்டங்களில் கலந்து கொள்ள அனுமதிக்கப்பட்டனர். 1959-க்குப் பின்னர், கூட்டுறவு கட்சி 30 வேட்பாளர்களை மட்டும் நிறுத்தினால் போதும் என்று கட்டுப்படுத்தப்பட்டது. மற்றும் பிரிட்டனில் உள்ள சிறிய அரசியல் கட்சிகள் பெயரளவிற்குத் தான் கட்சிகளாக இருக்கின்றன. 'பிரிட்டிஷ் யூனியன் ஆப் ஃபேசிஸ்டுகள்' என்ற ஒரு ஃபேசிஸ்டுக் கட்சி (British Union of Fascists) முதல் உலகப் போருக்குப் பின்னர் தோன்றியது.

சர் ஆஸ்வால்ட் மோஸ்லி (Sir Oswald Mosley) என்ற சுயேச்சை பாராளுமன்ற உறுப்பினர் 1930-ல் தொழிற் கட்சி அரசாங்கத்திலிருந்து விலகினார். வேலையில்லாதவர்களுக்கு வேலை வாய்ப்புகளைத் தர வேண்டும் என்று அவர் தயாரித்தத் திட்டத்தைத் தொழிற் கட்சி அரசாங்கம் நிராகரித்து விட்டதால், அவர் மற்றும் சில பாராளுமன்ற உறுப்பினர்களைச் சேர்த்துக் கொண்டு ஓர் அரசியல் கட்சியை ஆரம்பிக்க முயற்சி எடுத்துக் கொண்டார். அவருடன், தொழிற் கட்சியைச் சார்ந்த ஆறு உறுப்பினர்களும் அக் கட்சியை விட்டு விலகினர். அப்பொழுது தான் அவர்கள் ஒரு ஃபேசிஸ்டுக் கட்சியைத் தொடங்கினர். 1931-ல் நிகழ்ந்த பொதுத் தேர்தல்களில் ஃபேசிஸ்டுக் கட்சி 24 இடங்களில் போட்டியிட்டது. எல்லா இடங்களிலும் இக் கட்சியினர் தோற்கடிக்கப்பட்டனர். 1932-ல் இந்தக் கட்சி, 'பிரிட்டிஷ் யூனியன் ஆப் ஃபேசிஸ்டுகள்' என்ற பெயரை வைத்துக் கொண்டனர். மோஸ்லி இத்தாலிக்குச் சென்று அங்குள்ள ஃபேசிஸ்டு இயக்கத்தைப் பற்றி தெரிந்து கொண்டு வந்தார். ஆனால் இக் கட்சி 1940-ல் அரசாங்கத்தால் தடை செய்யப்பட்டது. 1948-ல் சர் ஆஸ்வால்டு மோஸ்லி 'யூனியன் இயக்கம்' (Union Movement) என்ற ஓர் இயக்கத்தை ஆரம்பித்தார். அவர் 1959-ல் நிகழ்ந்த பொது தேர்தலில் வடக்கு கென்சிங்டன் தொகுதியில் நின்று வைப்புத் தொகையை (Deposit) இழந்தார். 1966-ல் சர் ஆஸ்வால்ட் மாஸ்லியும் மற்ற மூன்று வேட்பாளர்களும் பொதுத் தேர்தல்களில் போட்டியிட்டனர். அவர்கள் வெற்றி பெறவில்லை. அவர்கள் 3·7 சதவீதம் வாக்குகளை மட்டும் பெற்றனர்.

மற்றும் பிரிட்டனில் சில அரசயல் கட்சிகள் தோன்றி, சிறிது காலத்திற்குள் மறைந்து விட்டன. லிபரல் யூனியனிஸ்டு கட்சியானது (Liberal Unionist Party) 1886-ல் லிபரல் கட்சியில் ஐரிஸ் சுயாட்சி மசோதா கொண்டு வரப்பட்டதன் காரணமாக ஏற்பட்டது. இம் மசோதாவை எதிர்த்த ஒரு சிலர் அக் கட்சியை விட்டுப் பிரிந்து இந்தக் கட்சியை ஆரம்பிப்பதற்கு முக்கிய காரணமாக இருந்தவர்களுள் ஜே. சேம்பர்லேன், (J. Chamberlaine) என்பவர் முக்கியமானவர். கன்சர்வேடிவ் கட்சியிலிருந்து பிரிந்து போன சில உறுப்பினர்களால் 1917-ல் தேசியக் கட்சி (National Party) ஒன்று நிறுப்பெற்றது. 1921-ல் இந்தக் கட்சி முறிவடைந்தது, தேசிய ஜனநாயக கட்சி (National Democratic Party) 1918-ல் லாயிட் ஜார்ஜ் அரசாங்கத்திற்கு அதிக ஆதரவு அளிப்பதற்காக நிறுவப்பெற்றது. முதல் உலகப் போர் சமயத்தில் தொழிற் கட்சியிலிருந்து சிலர் விலகி இக் கட்சியை ஆரம்பித்தனர். தொழிற் கட்சியின் பிரமுகராகவும், போர் அமைச்சவையின் அமைச்சராகவும் இருந்த ஜி, பார்ன்ஸ் (G. Barnes)

என்பவர் தான் அக் கட்சியின் தலைவராக இருந்தார். 1923-ல் இக் கட்சி முறிவடைந்தது. 1931-ல் ராம்சே மேக்டொனல்டின் தேசிய அரசாங்கத்திற்கு ஆதரவு அளிக்கும் வகையில் சில தொழிற் கட்சி பாராளுமன்ற உறுப்பினர்கள் இக் கட்சியைத் தோற்றுவித்தனர். 1931-ல் நிகழ்ந்த பொதுத் தேர்தல்களில், 20 இடங்களில் போட்டியிட்டதற்கு, 13 வேட்பாளர்கள் வெற்றி பெற்றனர். 1945-ல் பொது தேர்தல்கள் நிகழ்வதற்கு முன்னர் இந்தக் கட்சி மூடப்பட்டது. ஸ்காட்லாந்து தேசியக் கட்சி ஒன்று 1928-ல் நிறுவப்பட்டது. இதைப் போன்று, வெல்ஷ் தேசியக் கட்சி (Welsh Nationolist Party) 1925-ல் நிறுவப்பட்டது. அப்பொழுதிருந்து பொதுத் தேர்தல்களில் சில தொகுதிகளில் போட்டியிட்டு தோற்றுக் கொண்டே வந்துள்ளது. 1966-ல் மட்டும் இக் கட்சியின் தலைவர் ஜி. ஈவான்ஸ் (G. Evans) கார்மார்தன் தொகுதியில் வெற்றி பெற்றார். முதல் உலகப் போர் துவங்குவதற்கு முன்னர், பார்ன்ஸ் காலத்திலிருந்தே, ஐரிஸ் தேசியவாதிகள் மக்கள் சபையில் வீற்றிருந்தனர். போர் காலத்திலும், ஈஸ்டர் கலகத்தின் பொழுதும் (Easter Rebellion) ஐரிஸ் தேசியவாதிகளிடையே கருத்து வேறுபாடுகள் தோன்றின. 1918-ல் ஐரிஸ் தேசிய கட்சி (Irish Nationalist Party) 58 இடங்களில் 7 இடங்களில் தான் வெற்றி பெற்றனர். ஆனல் சின்ஃபெய்ன் (Sinn Fein) கழகத்தைச் சார்ந்த வேட்பாளர்கள் 73 இடங்களைக் கைப்பற்றினர். ஐரிஸ் தேசியக் கட்சியினர் 1922-க்குப் பின்னர் வட அயர்லாந்திலுள்ள இரண்டு, மூன்று இடங்களில் மட்டுமே போட்டியிட்டு வந்தனர். சின்ஃபெய்ன் இயக்கம் மீண்டும் 1955, 1959; தேர்தல்களில் வட அயர்லாந்தில் 12 இடங்களில் போட்டியிட்டது. 1955-ல் சின்ஃபெய்ன் இயக்கத்தைச் சார்ந்தவர்கள் மிட்அல்ஸ்டர் (Midulster) ஃபெர்மனக் (Bermonagh) தெற்கு டைரோன் (South tyrone) ஆகிய தோகுதிகளில் வேற்றி பெற்றனர். ஆனல் சில துரோகக் குற்றங்களுக்காக அவர்கள் பாராளுமன்ற உறுப்பினர்களாக இருக்கத் தகுதியற்றவர்களென்று தடை செய்யப்பெற்றது. 1943-க்குப் பின்னர் ஐயர் தொழிற் கட்சி (Fire Labour) அல்லது குடியரசு தொழிற் கட்சி (Republican Labour) என்ற பெயரில் சில இடங்களில் அவர்கள் போட்டியிட்டு வருகின்றனர்.

### கட்சிகளின் பணிகள்

பிரிட்டனில் உள்ள இரண்டு முக்கியமான கட்சிகளான கன்சர்வேடிவ் கட்சியும் தொழிற் கட்சியும் மக்களிடத்தில் நேரடியான தொடர்பை ஏற்படுத்திக் கொள்ளவும் பராளுமன்றக் கட்சியுடன் தொடர்பை ஏற்படுத்திக் கொள்ளவும் பல கிளை நிறுவனங்களையும்,

அமைப்புகளையும் ஏற்படுத்தி கொண்டுள்ளன. கட்சி முறையில் மக்களை நேரடியாகப் பாராளுமன்றத்துடனும், அரசாங்கத்துடனும் தொடர்பு படுத்துவதே கட்சிகளின் முக்கியமான பணிகளாகும்.

(1) கட்சிகள் பொது மக்கள் அபிப்பிராயத்தைத் திரட்டுகின்றன மக்கள் பலதரப்பட்டவர்கள்; அதனால் அவர்கள் பலதரப்பட்ட அபிப்பிராயங்களைக் கொண்டவர்களாக உள்ளனர். அவர்களுடைய அபிப்பிராயங்கள் நியாயமானதாக இருக்கும்; சில சமயங்களில் அர்த்த மற்றவையாகவும் இருக்கும். ஒரே மாதிரியான கருத்துகளையும், அபிப்பிராயங்களையும் கொண்டவர்கள் சில சமயங்களில் அவர்களுடைய கருத்துகளைப் பிரதிபலிக்க சங்கங்களை நிறுவிக் கொள்கின்றனர். ஆனால் அரசியல் கட்சிகளின் முக்கியமான நோக்கம், தேர்தல்களில் வெற்றி பெறுவதேயாகும். அதனால்தான் அவர்கள் மக்களிடையே கட்சிகளின் கொள்கைகளைப் பிரச்சாரம் செய்து மக்களின் ஆதரவைப் பெறுகின்றன. மக்களின் ஆதரவை பெறும் கட்சிகளின் கொள்கைகளைப் பிரச்ச்ாரம் செய்வதால் மட்டுமே பெற்றுவிட முடியாது. மக்களுக்குப் பிடித்தமான கொள்கைகளாக இருந்தால் தான், மக்கள் ஏற்றுக்கொள்வர். அதனால் மக்களின் நலன்களை அடிப்படையாகக் கொண்டுதான் கட்சிகளின் கொள்கைகள் உருவாக்கப்படும். அவ்விதம் அக் கட்சிகள் பொது மக்களின் அபிப்பிராயங்களைத் திரட்டும் பொழுது, பலதரப்பட்ட கருத்துகளையும் பரிசீலனை செய்து பலர் நலன்களையும் பாதுகாக்கின்ற அளவில் கொள்கைகளையும் திட்டங்களையும் உருவாக்க வேண்டிய அவசியம் ஏற்படுகிறது கட்சிகளின் கொள்கைகளையும். திட்டங்களையும் மக்களிடத்தில் எடுத்துக் கூறுவதால், மக்கள் அவற்றைச் சிந்திக்கவும், விவாதிக்கவும் ஆர்வம் ஏற்படுகிறது. அதனால் அவர்கள் தேர்தல் சமயங்களில் எந்தக் கட்சிக்கு வாக்களிப்பது என்பதை முடிவு செய்கின்றனர்.

(2) பொதுமக்கள் அபிப்பிராயத்தைத் திரட்டுவது மட்டுமின்றி கட்சிகள் பொது மக்கள் அபிப்பிராயத்தை உருவாக்கும் அளவில், அவர்களுக்கு அரசியல் விழிப்புணர்ச்சியையும் அறிவையும் ஏற்படுத்த முடியும். மக்கள் முன்னிலையில் கட்சிகள் அவைகளின் கருத்துகளை கூறும் பொழுது, அவைகளின் முக்கியத்துவத்தையும் கூறுகின்றன. ஆனால் அதே சமயத்தில் மாறுபட்ட கொள்கையை உடைய கட்சி, வேறு கட்சி கூறிய கொள்கைகளைக் குறை கூறியும் அதனால் ஏற்படும் தீமைகளையும் எடுத்துக் கூறுவர். அதனால் மக்களுக்கு அரசியல் கட்சிகள் தங்கள் கொள்கைகளைக் கூறும்பொழுது, மக்களுக்கு அக் கொள்கைகளின் நன்மை தீமைகளைப் புரிந்து கொள்ளும் அளவில் அரசியல் அறிவு வளர்ச்சி ஏற்படுகிறது. அதற்கு அரசியல் கட்சிகளே

முக்கிய காரணமாக உள்ளன. மக்களிடத்திலே வேறுபட்ட கருத்துகளை எடுத்துக் கூறுவதால், மக்கள் மற்றவர்களின் அபிப்பிராயங்களைத் தெரிந்துகொள்ளவும், அவர்கள் விருப்பப்படி கருத்துகளை உருவாக்கிக் கொள்ளவும் மக்களுக்கு சுதந்திரம் கொடுக்கப்பட்டுள்ளது. எந்தக் கட்சியின் கொள்கையையும் மக்களிடத்தில் அந்தக் கட்சி எடுத்துக் கூற முடியுமே தவிர, திணிக்க முடியாது. அக் கட்சியின் கொள்கைகளை மக்கள் கட்டாயமாக ஏற்றுக்கொள்ள வேண்டுமென்ற அவசியமில்லை. ஆங்கிலேய அரசியலில் மக்கள் விருப்பப்படி கருத்துக்களைக் கூறவும், ஏற்றுக்கொள்ளவும் அவர்களுக்கு முழு சுதந்திரம் உள்ளது என்பது குறிப்பிடத் தக்கதாகும். அதனால் கட்சித் தலைவர்கள் மக்களிடத்திலே பொறுப்புடன் நடந்துகொள்ள வேண்டும், அவர்கள் மக்களை அலட்சியப் படுத்தக்கூடாது. கன்சர்வேடிவ் கட்சியினர் 1945–ல் மக்களிடத்தில் மிகவும் அலட்சியமாக 'சர்ச்சில் அவருடைய வேலையை முடிக்கட்டும்' என்று கூறி கன்சர்வேடிவ் கட்சிக்கு வாக்களிக்க வேண்டும் என்று வற்புறுத்தினர். இப்படி கன்சர்வேடிவ் கட்சியினர் சென்ற இடமெல்லாம் கூறிக்கொண்டு வந்ததால், கன்சர்வேடிவ் கட்சியினர் பல வாக்குகளை இழந்து விட்டனர்.

(3) பாராளுமன்றத்திற்கும், நாட்டிற்கும், அரசியல் கட்சிகள் அரசியல் தொடர்பை நிரந்தரமாக ஏற்படுத்துகின்றன. பாராளுமன்றத்திற்கு சட்டங்களை இயற்றும் 'சட்ட இறைமை'யுள்ளது. ஆனால் வாக்காளர்களிடத்திலே பாராளுமன்றத்தையும் சீர்குலைக்கவல்ல அரசியல் இறைமையுள்ளது. மக்களிடத்தில் அரசியல் இறைமையுள்ளது என்பதை 1832–க்குப் பின்னர் தான் பாராளுமன்றம் உணர்ந்தது. அப்பொழுதிலிருந்து, பாராளுமன்றத்திற்கும் வாக்காளர்களிடத்திற்கும் நல்ல தொடர்பை ஏற்படுத்திக் கொள்ள வேண்டும் என்ற நிலை உருவாகியது. அப்பணியை அரசியல் கட்சிகள்தான் செய்து வருகின்றன. கட்சிகளில் கட்டுப்பாடும், ஒழுங்கும் ஏற்பட்டதற்குப் பின்னர், கட்சிகளின் செல்வாக்கும் அதிகரித்தது. இப்பொழுது மக்களுக்குத் தனிப்பட்டவர்கள் மீது கவலையில்லை; ஒரு தனிப்பட்ட மனிதனுக்கு வாக்களிப்பதைக் காட்டிலும், ஒரு கட்சிக்குத்தான் வாக்களிக்க அவர்கள் முடிவு செய்கிறார்கள். வெற்றி பெற்ற கட்சிதான் அரசாங்கத்தை அமைக்கும் என்று மக்களுக்கு நன்றாகத் தெரியும். அதனால் மக்கள் குறைகளை அரசாங்கத்திடம் எடுத்துக் கூற, அவர்களுடைய தொகுதி பாராளுமன்ற உறுப்பினர்களோ, அல்லது அவர்களுடைய தொகுதிகளில் உள்ள கட்சிகளை நிறுவனத்தின் மூலமாகவோ, முயற்சி செய்கின்றனர். அதனால் அரசாங்கத்திற்கும் மக்களுக்கும் அரசியல் கட்சிகள் தொடர்பை ஏற்படுத்துகின்றன.

(4) அரசாங்கத்தில் அரசியல் கட்சிகள் ஒரு நிரந்தரத் தன்மையை ஏற்படுத்துகின்றன. பாராளுமன்றத்தில் நன்கு அமைக்கப்பட்ட அரசியல் கட்சிகள் இல்லாது, சுயேச்சையாளர்களும் அல்லது சிறிய, சிறிய அரசியல் கட்சிகளின் பிரதிநிதிகளும் இருந்தால், அரசாங்கத்தை எவ்வாறு அமைக்க முடியும்? அவ்விதம் இவர்களின் இணைப்பைக் கொண்டு ஓர் அரசாங்கத்தை ஏற்படுத்தினலும், அரசாங்கம் இவர்களுடைய ஆதரவை நீடித்துப் பெறுவது என்பது, சந்தேகமே யாகும். ஆனல் நன்கு அமைக்கப்பெற்ற அரசியல் கட்சி பெரும் பான்மை பெற்று, பாராளுமன்றத்தில் ஆளும் கட்சியாக வந்தால், அந்தக் கட்சியிடம் கட்டுப்பாடும், ஒழுங்கும், கட்சி உறுப்பினர் களிடையே, அக் கட்சியின் மீது பற்றுதலும் இருக்கும். அப்பொழுது அரசாங்கத்திற்கும் நிரந்தர தன்மை ஏற்படும். அதன் கொள்கைகளை நிறைவேற்ற முடியும். அரசாங்கம் நன்கு அமைக்கப்படுவதால், ஆளும் கட்சிக்கு அடுத்தபடியாக உள்ள பெரும் கட்சி எதிர் கட்சியாக அமைகிறது. அதனல் அரசாங்கத்தின் கொள்கைகளை அடிக்கடி குறை கூறி, அரசாங்கம் ஒழுங்காக ஆட்சி செய்ய வேண்டிய பொறுப்பை அது எடுத்துக் கொள்ளும். தவிர தேசியக் கொள்கை களும், திட்டங்களும், ஒரு சமநிலையில் வைத்து பரிசிலனை செய்யப் படும். பாராளுமன்ற உறுப்பினர்களுக்கு பல்வேறு விருப்பங்கள் இருக்கும். ஒரு சிலருக்கு வெளி விவகாரங்களில் விருப்பம் இருக்கும். ஒரு சிலருக்கு கல்வி சீர்திருத்தங்களில் விருப்பம் இருக்கும். அதனல் அவர்கள் அரசாங்கத்தின் குறிப்பிட்ட கொள்கைகளில் விருப்பம் உடையவர்களாக உள்ளனர். அதனல் அரசாங்கம், மக்களுக்கு வேண்டிய எல்லா நலன்களிலும் அக்கறை காட்ட முடியும்.

(5) அரசாங்கம் ஒரே மாதிரியான கொள்கையைப் பின்பற்ற கட்சிகள் உதவுகின்றன. அமைச்சவை முறை கட்சி முறையின் அடிப்படையில் அமைந்திருக்கிறது. பாராளுமன்றத்தில் பெரும் பான்மை ஆதரவு பெற்றிருக்கும் கட்சியின் தலைவர், பிரதம அமைச்சரா கிருர். அவர் மற்ற அமைச்சர்களைப் பாராளுமன்றக் கட்சியிலிருந்து தேர்ந்தெடுக்கிருர். அதனல் அரரசங்கம் ஒரே மாதிரியான கொள்கை யுடையவர்களால் நடத்தப்படுகின்றது. அதனல் அரசாங்கம் கொள்கை களை விரைவில் நிறைவேற்ற முடிகின்றது.

(6) அரசியல் கட்சிகள் ஒரே மாதிரியான கொள்கைகளைப் பின்பற்ற அரசாங்கத்திற்கு ஆதரவு அளிப்பது மட்டுமல்லாமல், 'கூட்டு பொறுப்பை'யும் ஏற்படுத்துகின்றன. அதாவது. ஒரு கொள்கையில் ஓர் அமைச்சர் வேறுபட்ட கருத்துகளைக் கொண்டிருந் தால் அந்த அமைக்சர் அமைச்சவையிலிருந்து விலகிக் கொள்ள

வேண்டும். அரசாங்கம் முழுமையாக நிற்கும்; அல்லது முழுமையாக வீழ்ச்சியுறும். ஆனால் கட்சிக் கட்டுப்பாடு இருக்கிற காரணத்தால் அரசாங்கம் நீடிக்கிறது. இரண்டு அரசியல் கட்சி முறையில், பெரும்பான்மை ஆதரவு பெற்ற கட்சி அரசாங்கம் பதவியில் நீடித்திருப்பது சாத்தியமாகின்றது. 18-ஆவது நூற்றாண்டில் அரசியல் கட்சிகளில் சரியான கட்டுப்பாடு இல்லாததால் அரசாங்கம் பதவியில் நீடித்திருப்பது மிகவும் கடினமாகிவிட்டது. அதனால் அரசாங்கத்திற்கு நிரந்தர தன்மை ஏற்படுவதில்லை, ஆனால் 20-ஆவது நூற்றாண்டில் கட்சிகளிடையே கட்டுப்பாடும் ஒழுங்கும் நன்கு வேரூன்றியிருப்பதால் அரசாங்கம் அதனுடைய பதவிக் காலம் முடியும் வரையிலும் நீடித்திருக்க முடிகிறது.

(7) அரசாங்கத்தைக் கட்டுப்படுத்துவது பாராளுமன்றத்தின் மிகவும் முக்கியமான பொறுப்பாகும். 19-ஆவது நூற்றாண்டில் கட்சிகள் சரியாக அமைக்கப்படாததால் அரசாங்கத்தைச் சரியாகக் கட்டுப்படுத்த முடியவில்லை. அவ்விதம் அரசாங்கத்தைச் கட்டுப்படுத்த வேண்டுமெனில், பாராளுமன்றம், அரசாங்கத்தின் சில கொள்கைகளை நிறைவேற்றாது தடைகளைச் செய்ய வேண்டும் அல்லது, அரசாங்கத்தின் செலவினங்களுக்கு அனுமதி வழங்காது இருக்கவேண்டும். அமைச்சர்கள் மீது நடவடிக்கை எடுக்க வேண்டுமென்றால், பாராளமன்றத்தில் அவர்களைப் பகிரங்கமாக விசாரணை செய்ய வேண்டும். ஆனால் அவ்விதம் செய்வதால் பாராளுமன்றத்திற்கு நன்மை ஏற்படுவதில்லை. வேறு கொள்கைகளை அரசாங்கம் பின்பற்ற வேண்டும் என்று அரசாங்கத்தை வற்புறுத்துமளவிற்கு அதற்கு பெரும்பான்மை ஆதரவு இருக்க வேண்டும். ஆனால் அரசியல் கட்சி அரசாங்கத்தை மாற்றி அமைக்கும் சக்தியைப் பெற்றுள்ளது. பாராளுமன்றத்தில் ஏற்படும் கருத்து வேறுபாடுகளை அடிப்படையாக வைத்துக் கொண்டு மக்களிடத்தில் வாக்குகளைப் பெரும்பான்மையில் பெற்று அரசாங்கத்தை மாற்றி அமைக்க முடியும்.

**அரசியல் கட்சி முறையினால் ஏற்படும் சில தீமைகள் :-**

ஜனநாயக அரசாங்கத்திற்கு கட்சி முறை மிகவும் அவசியமானதும், தவிர்க்க முடியாததுமாகும். ஆனால் கட்சிகளின் வளர்ச்சியினால் சில தீமைகள் ஏற்படாமல் இல்லை. கட்சி முறை நன்றாக வேரூன்றி விட்டதால், சுயேச்சையாளர்களுக்குப் பாராளுமன்றத்தில் இடமே இல்லாமல் போய்விட்டது. சுயேச்சையாளர் ஒரு கட்சியிலும் சேராதவராவர். அதனால் நல்ல கொள்கை எந்தக் கட்சியில் இருக்கிறதோ, அந்தக் கட்சிக்கு. ஆதரவு அளிப்பவராவர். சுயேச்சையாளர் போட்டியிட்டால்,

அவரே தான் தம் சொந்தப் பொறுப்பில் தேர்தல் செலவுகளை ஏற்றுக் கொள்ள வேண்டும். அவருக்கு கட்சி ஆதரவு இருக்காது. தவிர, சுயேச்சையாளர்களுக்கும் போட்டியாக அரசியல் கட்சிகளின் வேட்பாளர்கள் நிறுத்தப்படுவர்கள். அதனால் ஒரு சுயேச்சை வேட்பாளர் வெற்றி பெறுவது மிகவும் கடினமாகும். 1948-ல் பல்கலைக்கழகங் களின் தொகுதிகளை அகற்றிவிட்டதால், சுயேச்சையாளர்கள் பாராளு மன்றத்திற்கு தேர்ந்தெடுக்கப்படுவது முடியாத காரியமாகின்றது. தப்பித்தவறி ஒரு சுயேச்சையாளர் பாராளுமன்ற உறுப்பினராகத் தேர்ந்தெடுக்கப்பட்டுவிட்டால், பாராளமன்றத்திலும் அவருக்குப் பல தொல்லைகள் உள்ளன. ஏனெனில் அவருக்கு ஒரு கட்சி கொறடாவின் உதவி கிடைக்காமல் போய் விடுகின்றது. அதனால் பாராளுமன்றத்தில் என்ன முக்கியமான நடவடிக்கை நிகழப் போகின்றது என்பதைப் பற்றி அவருக்குச் சரியான தகவல் கிடைக்காமல் போகின்றது. அதைப் போன்று, அவர் ஒரு விவாதத்தில் பங்கெடுத்துக் கொள்ளும் பொழுதும் அவருக்குப் பாரளுமன்றத்தில் ஆதரவு இல்லாமல் போய் விடுகிறது. தனியார் மசோதாவில் அவர் கலந்து கொள்ளும் வாய்ப்பு கிடைத்தால் அவரே மசோதாவைத் தயாரிக்கவும், அம் மசோதாவிற்கு பாராளுமன்ற உறுப்பினர்களின் ஆதரவைத் திரட்டவும், கோரத்தைஏற்படுத்தவும் வேண்டியுள்ளது. அதனால் ஓர் அரசியல்வாதி சுயேச்சையாக பாராளு மன்றத்தில் வீற்றிருக்க முடியாது. பாராளுமன்ற உறுப்பினராக இருந்து சம்பளத்தை நம்பி வாழ வேண்டுமென்றால், அவர் ஏதாவது ஒரு கட்சியை ஆதரித்தே ஆக வேண்டிய நிலையில் உள்ளார். 19-வது நூற்றாண்டில் பல பாராளுமன்ற உறுப்பினர் சுயேச்சையாளர்களாக இருந்தற்கு காரணம், அவர்கள் முழு நேர அரசியல்வாதிகளாக இல்லாததேயாகும். தவிர, அமைச்சர் பதவி போன்ற முக்கியமான பதவிகளைப் பெற வேண்டுமெனில், ஒருவர் கட்சியில் இருந்தாக வேண்டும். இல்லையெனில் அவருக்கு அரசியலில் எதிர்காலம் இல்லை யென்று கூறிவிடலாம்.

ஆனால் சுயேச்சையாளர்களை முற்றிலும் அரசியலிலிருந்து ஒதுக்கி விடுவது மிகவும் வருந்தத்தக்கதாகும். ஏனெனில், ஒரு சுயேச் சையாளர் மற்ற ஒருகட்சி வேட்பாளரைக் காட்டிலும் திறமையானவராக இருந்தால் தான், அவருடைய திறமைக்காக மட்டும் வாக்குகளைப் பெற முடியும். வாக்காளர்களும் திறமையான ஒருவருக்கும் வாக்களிக்கும் வாய்ப்புகளைப் பெற முடியும். பாரளுமன்றத்தில் சுயேச்சையாளர் கட்சிக் கட்டுப்பாடின்றி, அவருடைய மனதிற்கேற்ப மசோதாக்களின் மீது வாக்களிக்க முடியும். தவிர, அவர் பாராளுமன்றத்தில் பேசும் பொழுது, ஒரு கட்சியின் கொள்கைகளைத் திரும்பத் திரும்பக் கூறுவ தில்லை. அவர் பேசுவது மற்றவர்கள் பேசுவதற்கு மாறுபட்டதாக

இருக்கும். ஒரு சுயேச்சையாளர் தனியார் மசோதாவைக் கொண்டுவரும் பொழுது, அவர் எந்தக்கட்சியிலிருந்து வேண்டுமென்றாலும் ஆதரவைப் பெறலாம். ஆனால் எதிர்கட்சிக்காரர் ஒருவர் ஒரு தனியார் மசோதாவைக் கொண்டு வந்தால் அதற்கு உறுதியாகக் எதிர்ப்பு இருக்கும். அதனால் கட்சி சார்பற்ற மசோதாக்களை சுயேச்சையாளர்களால் தான் கொண்டு வர முடியும். சில சமயங்களில் முக்கியமான தனியார் மசோதாக்களைச் சுயேச்சையாளர்கள் கொண்டு வந்துள்ளனர். சர் ஆலன் ஹெர்பட் என்ற சுயேட்சையாளர் விவாகரத்து சீர்திருத்த மசோதாவையும், டபிள்யூ. ஜே. பிரவுன் என்பவர் பொதுத்துறை அலுவல் ஊழியர் களுக்கு உதவிப் பணம் அளிக்கப்படுவதில் சில மாற்றங்களை ஏற்படுத் தும் மசோதாவையும் கொண்டு வந்தனர்.

'சுயேச்சைகள்' கட்சி முறையில் சாராதவர்களாகி விட்டதால் அவர்கள் இனம் இப்பொழுது மறைந்து விட்டது. ஒரு 'சுயேச்சை'யை எந்தக் கட்சியும் பாராளுமன்றத்தில் நம்புவதில்லை. ஆளும் கட்சியிலும், எதிர்கட்சியிலும் கட்டுப்பாடு உள்ளது. ஆனால் 'சுயேச்சை'யிடம் கட்டுப்பாடு இல்லை. தவிர, பாராளுமன்றத்தில் ஏற்படும் பெரிய விவாதங்களில் 'சுயேச்சைகள்' ஆற்றும் பங்கும் ஒன்று மில்லாததால், அவர்கள் வெறும் பார்வையாளர்களாகத் தான் இருக்க முடியும். அவர்களுக்கும், கட்சிக் கொள்கைகளுக்கும் எவ்வித தொடர்பும் இல்லை. ஏனெனில் பாராளுமன்றக் கூட்டங்களிலும், மற்றும் கட்சி மாநாடுகளிலும் சுயேச்சைகள் பங்கெடுத்துக் கொள் வதில்லை. அதனால் 'சுயேச்சைகள்' மறைவு அரசியல் கட்சிகளுக்கு நன்மையை அளிக்கிறது. அரசாங்கக் கொள்கைகளை எதிர்கட்சி குறை கூறுவது மிகவும் பொருத்தமாகவும், வலிமையுடையதாகவும் இருக்கும் தொடர்பற்ற சுயேச்சைகள், அரசாங்கக் கொள்கைகளைக் கண்டிப்பதும் குறை கூறுவதும் வலிமையுடையதாக இருக்காது. கட்சியில் ஒருவர் இருந்தால், பாராளுமன்றக் கட்சிக் கூட்டங்களில் கலந்து கொள்ளவும், பல குழுக்களில் கலந்து கொள்ளவும், வாய்ப்புகள் அதிகமாக உள்ளன. 'சுயேச்சை'களுக்கு அந்த வாய்ப்புகள் இல்லை.

அரசியல் கட்சிகள் பாராளுமன்ற உறுப்பினர்களின் தனித் தன்மையைப் பாதிக்கின்றன. தனிப்பட்ட விதத்தில் கட்சி உறுப்பி னர்கள் வாக்களிக்க முடியாது. அப்படிச் செய்வது கட்சிக் கட்டுப் பாட்டிற்கு விரோதமானதாகும். தொகுதியில் உள்ள வாக்காளர்கள் விருப்பம் எப்படியிருப்பினும், ஒரு கட்சியைச் சார்ந்த பாராளுமன்ற உறுப்பினர் கட்சியின் கொள்கைகளின்படியே தான் வாக்களிக்க வேண்டும். அவருடைய தொகுதியில் உள்ள வாக்காளர்கள் வேறு விதமாக அபிப்பிராயப்பட்டால், அந்த உறுப்பினர் கட்சியின் கொறடா

விடம் முறையிட வேண்டும். அக் கட்சியின் கொறடா, அவ்வுறுப்பி னரின் விருப்பத்தை கட்சித் தலைவர்களிடம் கூறுவர்.

ஒரு சில முக்கியமான விவகாரங்களில் அரசியல் கட்சிகள் அதிக அக்கரை காட்டுவதில்லை. கிராம அரசாங்கத்தில் சீர்திருத்தங்கள், அல்லது கிராமப் புற மக்களின் சில பிரச்சினைகள், அல்லது திருமண சீர்திருத்தங்கள், அல்லது ஞாயிற்றுக் கிழமையை விடுமுறை நாளாகப் பாவித்தல் ஆகிய பல விவகாரங்களில் அரசியல் கட்சிகள் அதிக அக்கரை எடுத்துக் கொள்வதில்லை. சுயேச்சையாளர்கள் இருந்தால், இவ்வித விவகாரங்களையெல்லாம் கவனித்துக் கொள்ள முடியும்.

கட்சி அரசாங்கம் அமைக்கப்படுவதால், கட்சிகளுக்கும் அதிக முக்கியத்துவம் ஏற்படுகிறது. கட்சிகளுக்கு அதிக முக்கியத்துவம் ஏற்படுவதால் சில சமயங்களில் அபாயங்களும் ஏற்படுவதுண்டு. கட்சிகள் ஆணவத்துடனும், அதிகாரத்துடனும் நடந்து கொள்ளும் வாய்ப்புகள் உள்ளன. சில தொகுதிகளில் உள்ள கிளை நிறுவனங் களில் கட்சிகள் இவ்விதம் நடந்து கொள்வதாகக் கூறப்படுகிறது. பாராளுமன்றத்திற்கு வெளியே இந்தக் கட்சிகளின் செல்வாக்கு நன்றாக வேரூன்றிப் படர்ந்து விடுவதால் மக்களிடத்திலே நல்ல செல்வாக்கைப் பெற்றுவிடுகின்றன. மக்களிடத்திலே கட்சிகளுக்கு நல்ல தொடர்பும், அதிக செல்வாக்கும் ஏற்படும் பொழுது, பாராளு மன்ற உறுப்பினர்களுக்கும் கூட, கட்சித் தலைவர்கள் எவ்விதக் கொள்கைகளைப் பின்பற்ற வேண்டும் என்று ஆணையிட்டு அதிகாரம் செய்கின்றனர். ஆனால் பிரிட்டனில் அந்த அளவிற்குக் கட்சித் தலைவர்கள், பாராளுமன்ற உறுப்பினர்களை அதிகாரம் செய்யும் பழக்கத்தை ஏற்படுத்திக் கொள்ளவில்லை. ஆனால் மற்ற நாடுகளில் இந்த அபாயம் ஏற்பட்டிருப்பதைக் காணலாம். 1945-ல் தொழிற் கட்சியின் தேசிய நிர்வாகக் குழுவின் தலைவரான ஹெரால்டு லாஸ்கி **(Herold Laski)** அப்பொழுது பிரதம அமைச்சராக இருந்த அட்லி யிடம் சில ஆலோசனைகளைக் கூறியபொழுது, அட்லி அவ்வாலோசனை களை ஏற்றுக்கொள்ள மறுத்துவிட்டார். ஆஸ்திரேலியாவில், தொழிற் கட்சி அரசாங்கம் அமைக்கப்பட்டால், அக் கட்சி அமைச்சவையில் யார் யார் நியமனம் செய்யப்பட வேண்டும் என்று ஆலோசனை கூறும் தவிர, யாருக்கு எந்த இலாக்காக்கள் ஒதுக்கப்பட வேண்டுமென்றும் யோசனை கூறும். கட்சியின் முக்கியத்துவம் அளவு கடந்து வளர்ந்து விட்டால், அக் கட்சி மற்றவர்களின் கொள்கைகளையும், உணர்ச்சிகளை யும் மதிக்காமல் போவதற்கு வாய்ப்புகள் உண்டு. அவ்வித நிலை ஏற்பட்டால், பாராளுமன்ற ஆட்சியின் அடிப்படைக் கொள்கைக்கே அது முரணானதாகும். பெரும்பான்மைப் பெற்றுள்ள ஆளும் கட்சி

விதமான கொள்கைகளைப் பின்பற்றுவதோடு நிற்காது, மற்றவர்களுடைய கொள்கைகளுக்கும், உணர்ச்சிகளுக்கும் மதிப்பளிக்க வேண்டும். ஏனெனில் பாராளுமன்றத்தில் கட்சிக் கொள்கைகளை மட்டுமல்ல, நாட்டின் எல்லா பிரச்சினைகளையும் பரிசிலனை செய்யவும் விவாதிக்கவும் வேண்டியுள்ளது. உறுப்பினர்கள், மக்களின் பிரதிநிதிகளாக அங்கு வந்து வீற்றிருக்கிறார்கள். ஒரு குறிப்பிட்டத் திட்டத்தை மட்டும் நிறைவேற்ற அவர்கள் நியமனம் செய்யப் பெற்று அங்கு வரவில்லை. தேசிய அளவில் எல்லா பிரச்சனைகளையும் அவர்கள் பரிசிலனை செய்யவே மக்கள் பிரதிநிதிகளாகத் தேர்ந்தெடுக்கப்பட்டு அங்கு வந்துள்ளனர். கட்சிகளின் கொள்கையை நிர்ணயம் செய்யும் பொழுது, தனிப்பட்டக் கட்சி கூட்டங்களைக் கூட்டி விவாதிக்கின்றனர் சில தீவிர வாதிகள், அக் கூட்டங்களில் குறுகிய ஆதரவு பெற்று சிலக் கொள்கைகளை நிர்ணயம் செய்து கொள்கின்றனர். அக் கொள்கைகளையே பாராளுமன்றத்தில் கொண்டு வரும் பொழுது, எவ்வித மாற்றமும் அல்லது திருத்தமும் இல்லாது நிறைவேற்றுகின்றனர். கட்சித் தலைவர்களின் உத்திரவுபடி, பாராளுமன்ற உறுப்பினர்கள் நடந்து கொள்ள வேண்டிய அவசியம் ஏற்படுவதால், எவ்வித திருத்தத்தையும் செய்ய வாய்ப்பு அவர்களுக்கு இருப்பதில்லை.

1960-ல் எதிர் கட்சித் தலைவராக இருந்த கெயிட்ஸ்கில் **(Gaitskell)** இவ்வித நிலைக்கு ஒரு சமயம் ஆளானார். அப்பொழுது நிகழ்ந்த தொழிற் கட்சி மாநாட்டில், ஹைட்ரஜன் வெடிகுண்டு தயாரிப்பதை ஆதாரிக்கக் கூடாது என்று கெயிட்ஸ்கில்லுக்குக் கட்சி ஆலோசனை கூறியது. மத்திய தொழிற் கட்சி இந்தக் கொள்கையை ஆதரிக்கவில்லை. இந்த முடிவை ஏற்றுக் கொள்வதற்கில்லையென்று கெயிட்ஸ்கில் கூறினார். ஆனால் அடுத்த ஆண்டில் நிகழ்ந்த தொழிற் கட்சி மாநாட்டில் கெயிட்ஸ்கில்லின் கருத்தை ஏற்றுக்கொண்டு, முன்னர் செய்த தீர்மானத்தை ரத்து செய்தனர்.

### பிரிட்டனில் இரண்டு கட்சி முறை

கடந்த நூறு ஆண்டுக் காலமாகவே, பிரிட்டனில் இரண்டே அரசியல் கட்சிகள் மட்டும் முக்கியமான அரசியல் கட்சிகளாக விளங்கி வருகின்றன. அவ்வப்பொழுது கட்சிகளில் பிளவு ஏற்படும் பொழுது, பிரிந்து போன சில பாராளுமன்ற உறுப்பினர்களும், அரசியல் கட்சித் தலைவர்களும் ஒரு சில சமயங்களில் புதிய கட்சிகளைத் தோற்றுவித்தனர். தானியச் சட்டங்களை ரத்து செய்யும் பொழுதும், அயர்லாந்து சுயாட்சி மசோதா கொண்டு வந்த பொழுதும் அரசியல் கட்சிகளில் பிளவு ஏற்பட்டு, அதன் விளைவாக சிறிய அரசியல் கட்சி

கள் தோன்றின. ஆனால் அக் கட்சிகள் விரைவில் மறைந்து விட்டன. 1923, 1929 ஆகிய ஆண்டுகளில் தொழிற் கட்சி, லிபரல் கட்சியின் உதவியைப் பொறுத்து தான் அரசாங்கத்தை அமைக்க வேண்டிய நிலை ஏற்பட்டது. பிரிட்டனில் இது வரையிலும் இரண்டு அரசியல் கட்சிகளே முக்கியத்துவம் பெற்று விளங்குகின்றன.

ஆனால் பல ஜனநாயக நாடுகளில் பல்வேறு அரசியல் கட்சிகள் இருப்பதைக் காணலாம். ஃபிரான்ஸ், இத்தாலி, டென்மார்க், இஸ்ரேல் இந்தியா ஆகிய நாடுகளில் பல அரசியல் கட்சிகள் முக்கியத்துவம் பெற்றிருப்பதைக் காணலாம். அமெரிக்க ஐக்கிய நாட்டிலும் கூட, பல காரணங்களின் விளைவாக, இரண்டு அரசியல் கட்சிகளே உள்ளன. பிரிட்டனில் இரண்டு அரசியல் கட்சிகள் மட்டுமே முக்கியத்துவம் பெற்றிருப்பதற்கு சில காரணங்கள் கூறப்படுகின்றன.

பொதுவாகவே மக்களை இரண்டு பிரிவுகளாகப் பிரிக்கலாம். மிகவும் விரைவாக சமுதாயத்தில் மாற்றங்களைக் கொண்டுவர வேண்டும் என்று விரும்பும் தீவிரவாதிகள்; மிகவும் படிப்படியாக மாற்றங்களைக் கொண்டுவர வேண்டும் என்று விரும்புகிற பழமை விரும்பிகள் அல்லது கன்சர்வேடிவ்கள். சமய, தேசிய அல்லது புவியியல் வேறுபாடுகள் மட்டும் பிரிட்டனில் பெரும் அரசியல் கட்சிகளில் பிளவுகளை ஏற்படுத்தவில்லை. ஆங்கிலேய மக்களில் பெரும்பாலர் பிராடஸ்டன்ட் சமயத்தைப் பின்பற்றுகிறவர்களாக இருந்த போதிலும், சமயப் பொறையுடன் உள்ள காரணத்தால், சமயத்தின் அடிப்படையில் அங்கு கட்சிகள் தோன்றவில்லை. பிரிட்டன் மிகவும் சிறிய நாடாக இருக்கின்ற காரணத்தால் தேசிய அடிப்படையிலோ, அல்லது வட்டார அடிப்படையிலோ அரசியல் கட்சிகளை அமைத்துக்கொள்ளும் அவசியம் ஏற்படாமல் போய்விட்டது. சமீப காலம் வரையிலும், ஐரிஷ் தேசிய கட்சி ஒன்றுதான் ஒரு சிறிய வட்டார அரசியல் கட்சியாக விளங்கி வந்தது.

ஒரு புதிய அரசியல் கட்சி பிரிட்டனில் அமைக்கப்படுவது மிகவும் கடினமாகும். ஆங்கிலேய அரசியல் கட்சிகள், வேறுபாடுகளை உணர்ந்து அவற்றை அணைத்துக் கொள்ளும் திறமை பெற்றவர்களாக உள்ளனர். நிலையற்ற வாக்காளர்களுக்கும் கூட சில சலுகைகளைக் காட்ட அரசியல் கட்சிகள் முன்வந்துள்ளன. இரண்டு அரசியல் கட்சிகளும் மக்களைப் பிரித்துக்கொண்டு ஏதோ ஒவ்வொரு பிரிவிற்கு மட்டும் பிரச்சாரம் செய்து வாக்குகளைச் சேகரிப்பதில்லை. எல்லா மக்களுக்கும் பிடித்தமான வகையில் தான் கட்சிகள் கொள்கைகளை உருவாக்கி வருவதால், இரண்டு கட்சிகளும் எல்லா மக்களின் வாக்குகளையும் தேர்தல்களில் எதிர் பார்க்கின்றனர். மூன்றாவது அரசியல்

கட்சி, மற்ற இரண்டு அரசியல் கட்சிகளைப் போன்று நிறுவப்பட வேண்டுமென்றால் நிறைய நிதி தேவைப்படுகின்றது. நிதி வசதிகள் இல்லாததும், மற்ற கட்சிகள் வளர்ச்சியுறாது போவதற்கு ஒரு காரணமாகும். செல்வாக்கற்ற அரசியல் கட்சிக்குத் தொண்டர்கள் பணியாற்ற முன் வருவதில்லை. ஏனெனில் தோற்றுப் போகும் ஒரு கட்சிக்கு, வெற்றி வாய்ப்பே இல்லாத கட்சிக்குத் தொண்டர்கள் பணியாற்ற நம்பிக்கையும் ஊக்கமும் அற்றவர்களாக உள்ளனர். ஒரு கட்சி செல்வாக்கற்றதாகவோ, அல்லது சீர்குலையும் நிலையில் உள்ள போதோ, மக்கள் அந்தக் கட்சியில் அதிகமாக நம்பிக்கை வைப்பதில்லை. அதனால் அவர்கள் அக் கட்சிக்கு வாக்களிப்பதும் இல்லை. ஒரு கட்சியில் சீர்குலைவு ஆரம்பித்துவிட்டால், அதைத் தடுத்து நிறுத்துவது மிகவும் கடினமாகும். லிபரல் கட்சிக்கு (Liberal Party) இவ்வித நிலை ஏற்பட்டுள்ளது.

இரண்டு கட்சிகள் முறை இருப்பதால், ஒவ்வொரு கட்சியிலும் பிளவு ஏற்படாதபடி அக் கட்சித் தலைவர்கள் பாதுகாத்துக் கொள்கின்றனர். பிளவை ஏற்படுத்துகிறவர்களையும், கட்சியிலிருந்து பிரிந்து செல்லாதபடி பார்த்துக் கொள்கின்றனர். அவர்களிடையே சமரச முயற்சிகளைச் செய்து கட்சியில் தொடர்ந்து இருக்கும் முயற்சிகளை மேற்கொள்வர். கட்சியில், எந்த முயற்சியும் பயன் அளிக்கவில்லையெனில் அரசியல் எதிர்காலமே அவர்களுக்கு இல்லாத படி செய்து விடுவர். தொழிற் கட்சி இவ்வித நடவடிக்கைகளை எடுத்துக் கொள்கிறது. அண்மையில் சூயஸ்கால்வாய் பிரச்சினை காரணமாக கன்சர்வேடிவ் கட்சியில் பிளவு ஏற்பட்டது. ஆனால் அக் கட்சி மீண்டும் பிரிந்து போனவர்களைச் சேர்த்துக் கொண்டது.

ஆனால் இரண்டு கட்சி முறையின் முக்கியத்துவம் ஒன்று மக்களுக்குப் பிடிக்காத அரசாங்கத்தை அகற்றுவது; அல்லது, அந்த அரசாங்கத்தை நீடிக்க வைப்பது என்பதில் தான் அடங்கியுள்ளது. ஐந்து ஆண்டுகளுக்கு ஒரு முறை மக்கள் அவர்களுடைய அரசியல் இறைமையைப் பயன்படுத்த ஆர்வமுடையவர்களாக உள்ளனர். அதனால் ஒவ்வொரு பொதுத் தேர்தலிலும், இரண்டு பெரிய கட்சிகள் உள்ளன; அவற்றில் எந்தக் கட்சியைத் தேர்ந்தெடுப்பது என்ற எண்ணத்தை அவர்கள் நினைவுறுத்திக் கொண்டேயுள்ளனர். அதனால் இரண்டு கட்சிகளிடையே நல்ல போட்டி ஏற்படுகின்றது. இந்தப் போட்டி பாராளுமன்றத்திலும் தொடர்ந்து நடக்கிறது. ஆளும் கட்சி எதிர் கட்சி என்று பாராளுமன்றத்தில் ஒவ்வொரு மசோதாவை நிறைவேற்றும் பொழுதும் போட்டியிருப்பதைக் காண்கிறோம். மூன்றாவது கட்சிக்கு அதிக வேலையே இல்லை என்று மக்கள்

உணர்கின்றனர். மூன்ருவது கட்சி ஆளும் கட்சியுடனுவது, அல்லது எதிர் கட்சியுடனுவது சேர்ந்து கொள்ள வேண்டிய அவசியம் ஏற்படு வதால், மக்கள் அந்தக் கட்சிக்கு வாக்களிக்க விரும்புவதில்லை. அதை ஒரு தனிக் கட்சியென்றும் மக்கள் கருதுவதில்லை. அதனுல் அக் கட்சி ஏதாவது ஒரு பெரிய அரசியல் கட்சியுடன் இணைந்து கொள்கிறது. ஒரு சிறிய கட்சி அடிக்கடி அதனுடைய ஆதரவை மாற்றிக் கொண்டிருந்ததென்ருல், அக் கட்சியைச் சார்ந்தவர்களை 'சந்தர்ப்ப வாதிகள்' என்று மக்கள் குறை கூறுவர். அவ்வித கட்சி எந்தப் பெரிய கட்சியுடனும் இணைந்து கொள்ளாமல் இருக்கவேண்டும்; அல்லது வேறு கட்சியுடன் சேர்ந்து கொள்ள வேண்டும் என்கிற பொழுது அக் கட்சியில் பிளவு ஏற்படும். எப்படியும் இவ்விதக் கட்சிகளுக்கு தனிக் கொள்கைகள் இல்லையென்பதை மக்கள் நன்ருகவே உணர்ந்து கொள்வர். கட்சிகளிலிருந்து பிரிந்து சென்ற ஒரு சில பிரிவினர், சான்ருக, பீலிட்டுகள் (Peelites), லிபரல் யூனியனிஸ்டுகள் (Liberal Unionists) நேஷனல் லிபரல்கள் (National Liberals) தனியாக இயங்க முடியாத காரணத்தால் விரைவில் வெவ்வேறு அரசியல் கட்சிகளில் சேர்ந்து கொண்டனர். அதனுல் பல்வேறு அரசியல் கட்சிகளை ஏற்படுத்துவதைவிட, இரண்டு அரசியல் கட்சி முறையைப் பலப்படுத்தவே ஆங்கிலேய மக்கள் அதிகமாக விரும்பு கின்றனர். ஒரு கட்சி ஆளும் கட்சியாகத் தேர்ந்தெடுக்கப்பட வேண்டும்; மற்றொரு கட்சி பாராளுமன்றத்தில் எதிர் கட்சியாக விளங்க வேண்டு மென்பதே மக்களின் விருப்பமாகும்.

இரண்டு அரசியல் கட்சி முறைக்கு முரண்பட்ட விதத்தில் சூழ்நிலை அமையுமானுல் ஆங்கிலேய அரசியல் அமைப்பும் சரியாகப் பொருந்தாமல் போகலாம். குறுகிய பெரும்பான்மை, நேரடியான வாக்களிக்கும் முறை, பாராளுமன்றத்தில் கட்சி உறுப்பினர்கள் வீற்றிருக்கும் ஏற்பாடுகள் ஆகியவை எல்லாம், வேறு அரசியல் கட்சி உறுப்பினர்களை உடனடியாக, ஆளும் கட்சியிலாவது, அல்லது எதிர் கட்சியிலாவது கட்டாயமாக சேர்ந்து கொள்ளச் செய்யும்.

### இரண்டு கட்சிமுறையில் காணப்படும் சில நன்மைகள்

பழைய கிரேக்க காலத்திலிருந்த ஜனநாயக ஆட்சியில் கட்சி முறை பின்பற்றப்படவில்லை. தேர்தல்களில் மக்கள் அளித்த வாக்கு களின் அடிப்படையில் வெற்றி பெற்றவர்கள் ஆட்சி செய்ய வேண்டும். பிரதிநிதிகள் அரசாங்கத்தை நேரிடையாகக் கட்டுப் படுத்தினர். அப்பொழுது நேரிடையான ஜனநாயக ஆட்சி இருந்தது. ஒரு சிறிய நகரத்திற்கு அம் முறை சாத்தியமாகும். ஏனெனில்

வாக்களிப்பவர்கள் மிகவும் குறைவாகவே இருப்பார்கள். அதனால் அவர்களுக்கு ஓர் அரசாங்கம், அல்லது ஒரு மாற்று அரசாங்கத்தை அமைக்க வேண்டுமென்ற எண்ணமே எழவில்லை. அவர்களைப் பொறுத்த வரையிலும் அது வேண்டாத ஒரு விவகாரமுமாகும். பிரிட்டனிலுள்ள இரண்டு அரசியல் கட்சி முறையிலும் குறைபாடுகள் உள்ளன. பிரிட்டனில் முற்போக்கான கருத்துகளைக் கொண்ட மக்களுக்கு ஏற்ப ஓர் அரசியல் கட்சி அமையவில்லை. சர் ரிச்சர்ட் ஆக்லாந்தின் காமன்வெல்த் கட்சி இரண்டாவது உலகப் போருக்குப் பின்னர் சில ஆண்டுகள் மட்டுமே நீடித்திருந்தது. பிரிட்டனில் உள்ள இரண்டு பெரிய அரசியல் கட்சிகளுக்கும் சொந்த நலன்கள் அதிகமாக உள்ளன. முன்னேற்றக் கருத்துகள் கொண்டவர்கள் இந்த இரண்டு கட்சியிலும் வரமுடியாதவர்களாவர். அதனால் முன்னேற்றக் கருத்துகளைக் கொண்டவர்கள் அவர்களுக்கென்று ஓர் அரசியல் கட்சி இல்லாத காரணத்தால் அரசியல் எதிர்காலமே இல்லாதவர்களாகின்றனர். அதனால் இரு கட்சி முறை 'பழைய கொள்கைகளுக்கு' ஆதரவு அளிக்கிறது. இரண்டு கட்சிகளிலும் பொதுப்படையான அடிப்படையில் கொள்கைகளை நிர்ணயம் செய்வதால், எந்தக் கொள்கையைப் பின்பற்றுவது என்பதில் குழப்பம் அடைகின்றனர்.

அரசியல் நிறுவனங்கள் முழுமைப் பெற்றிருக்க முடியாது. அரசாங்கம் பொதுப்படையாகத் தான் பிரச்சினைகளைத் தீர்க்க முடியும். அரசியல் அமைப்பில் இந்த இரண்டு கட்சி முறை சரியாகப் பொருந்துகிறதா? சரியாக இயங்கி வருகிறதா? என்னும் கேள்விகள் எழுகின்றன. சரியாக இயங்கி வந்தால், அதற்கு மேல் ஆங்கிலேய மக்கள் கவலைப் படுவதில்லை. உள்ளுணர்வும், அனுபவமும் தான், கோட்பாடுகளைக் காட்டிலும் ஆங்கிலேய அரசியல் அமைப்பு வளர்ச்சியுறுவதற்கு முக்கிய காரணமாக அமைந்திருந்தன. அதனால் தான் ஆங்கிலேய மக்கள் இரண்டு கட்சி முறையை விரும்புகின்றனர். அதனால் தான் அவர்கள் விகிதாச்சார பிரதிநிதித்துவ முறையைக்(Proportional Representation) கூட வேண்டாம் என்று ஒதுக்கி விட்டனர். பல அரசியல் கட்சிகள் உள்ள நாடுகளுக்கு மட்டுமே விகிதாச்சார பிரதிநிதித்துவ முறை பயனுள்ளதாக இருக்கிறது. சான்றாக, ஃபிரான்சில் நான்காவது குடியரசு இருந்த பொழுது இந்த முறை நன்றாகப் பொருந்தியிருந்தது.

இரண்டு கட்சி முறையில் முக்கியமாகக் காணப்படும் சில நன்மைகளாவன:– முதலில், இக் கட்சி முறை ஜனநாயக அரசாங்கத்திற்கு நிரந்தரத் தன்மையை அளிக்கிறது. ஒரு நாட்டில் அதிகக் கட்சிகள்

இருப்பதால் அரசாங்கத்தில் நிரந்தரத் தன்மை எப்பொழுதும் இருக்காது என்று கூறுவதற்கில்லை. அப்படியிருந்தாலும், அரசாங்கம் அமைப்பதற்கு பல சிறிய கட்சிகளின் ஆதரவைப் பெற வேண்டிய அவசியம் ஏற்படுகிறது. அதனால் அரசாங்கம் எப்பொழுது கவிழ்கிறது என்று எதிர்பார்த்துக் கொண்டே இருக்கவேண்டிய நிலை ஏற்படுகிறது. ஏனெனில் சிறிய கட்சி அதனுடைய ஆதரவை வேறு கட்சிக்கு மாற்றி கொண்டால் அரசாங்கம் கவிழ்வது உறுதியாகி விடும். தவிர, அரசாங்கத்தின் கொள்கைகளுக்கு இச் சிறிய கட்சிகள் ஆதரவு அளிக்கும் என்று உறுதியாக கூறுவதற்கில்லை. அதனால் உண்மையான அரசாங்கம் இரு கட்சி முறையில் தான் நன்கு அமைக்கப்படும். அரசாங்கத்தை அமைக்கும் கட்சிக்குப் பாராளுமன்றத்தில் பெரும்பான் மையான ஆதரவும் இருக்கும். இரண்டாவது நன்மை என்னவெனில் அரசியல் பொறுப்பு எங்குள்ளது என்பதை நன்கு புரிந்து கொள்ள முடியும். ஒரு கட்சி ஆளும் கட்சியாகவும், மற்றொரு கட்சி எதிர்கட்சி யுமாக இருந்தால், அரசியல் பொறுப்பு ஆளும் கட்சியில் தான் இருக்கிறது. அப் பொறுப்பை ஆளும் கட்சி தட்டிக் கழிக்க முடியாது. அதைப் போன்று, எதிர்கட்சி அரசாங்கத்தின் கொள்கை களை நல்ல முறையில் கண்டிக்கின்ற சக்தி பெறுகின்றது. ஆளும் கட்சி கவிழ்ந்தால், அடுத்து, எதிர்கட்சி தான் அப் பொறுப்பை ஏற்றுக் கொள்ள வேண்டும். மூன்றாவதாக, இரு கட்சி முறையில் வாக்காளர் கள் எந்தக் கட்சிக்கு வாக்களிப்பது என்பதை எளிதாக, அவர்கள் கொள்கைகளைப் பரிசீலனை செய்து நிர்ணயம் செய்ய முடியும். ஜனநாயக முறையில் அவர்கள் அரசாங்கத்தை அமைக்க உதவ முடியும். பல அரசியல் கட்சிகள் இருந்தால், தேர்தல் முடிவுகள் தெரிந்த பின்னர், பல கட்சிகளுடன் கூட்டணி சேர்த்துக் கொள்ள வேண்டிய அவசியம் ஏற்படும். அதனால் பல கட்சிகளின் அபிப்பிராயங்களுக்கேற்ப ஒரு பெரிய கட்சியின் கொள்கைகளையும் மாற்றிக் கொள்ள வேண்டிய அவசியம் ஏற்படும். பிரிட்டனில் வாக்காளர்கள் அவர்களுக்கு வேண்டிய அரசாங்கத்தை அமைத்துக் கொள்வது மட்டுமன்றி, அவ் வரசாங்கம் பின்பற்ற வேண்டிய கொள்கைகளையும் நிர்ணயம் செய்கிறது. அதனால் மற்ற நாடுகளைக் காட்டிலும் ஆங்கிலேய மக்கள் நேரிடையாகவே அவர்களுடைய பங்கை, சட்டங்கள் இயற்ற பயன் படுத்துகின்றனர். அதனால் அவர்கள் பொதுமக்களின் அபிப்பிரா யத்தை நன்கு பிரதிபலிக்கிறார்கள். ஆகவே இரண்டு அரசியல் கட்சி முறையை ஆங்கிலேய மக்கள் விரும்புகின்றனர். இரண்டு அரசியல் கட்சி முறை உடனடியாக புரட்சிகரமான மாறுதல்களைச் செய்ய முடியாவிடினும், ஆங்கிலேய மக்களுக்கே உரித்தான, படிப்படியான மாறுதல்களைக் கொண்டு வரும் இயல்புகளுக்கு இக் கட்சி முறை ஏற்றதாக உள்ளது.

## நலன் நாடும் கழகங்கள் (Pressure Groups or Interest Groups)

மக்கள் சபையில் உள்ள பெரும்பான்மையான உறுப்பினர்கள் அவர்களுடைய தொகுதி நலன்களைப் பாதுகாக்கத் தேர்ந்தெடுக்கப் படுகிறார்கள். பொதுப்படையான தேசியக் கொள்கைகளுக்கு கட்சி அதிக முக்கியத்துவம் கொடுப்பதைப் போன்று, தேசியக் கொள்கை களுக்குட்பட்ட அளவில் தொகுதிகளிலிருந்து தேர்ந்தெடுக்கப்பெற்ற பிரதிநிதிகள், அத் தொகுதி நலன்களைப் பாதுகாக்க முதலில் கடமைப் பட்டுள்ளனர். தொழிற் கட்சி உறுப்பினர்கள், தொழிற் சங்கங்களில் அங்கத்தினர்களாகவும் உள்ளனர்; கூட்டுறவு சங்கங்களிலும் அங்கத் தினர்களாகவும் உள்ளனர்; இன்னும் பல நிறுவனங்களில் தொடர்பை வைத்துக் கொண்டும் உள்ளனர். அவர்கள் அங்கம் வகிக்கின்ற தொழிற் சங்கங்களின் நலன்களையும் பாதுகாக்க வேண்டிய பொறுப்பு அவர்களுக்கு ஏற்படுகிறது. அரசாங்கம் வரிகளை விதிக்கின்ற பொழுது, அவர்களுடைய நிறுவனங்களுக்கு சில சலுகைகளைப் பெற்று தர வேண்டியவர்களாகவும் உள்ளனர். அவர்களுடைய தொழிற் சங்கங்களுக்கு நெருக்கடியான நிலை ஏற்பட்டால் அவர்கள் சம்மந்தப் பட்ட அமைச்சரைத் தனியாக சந்தித்து அவர்களுடைய குறைகளை எடுத்துக் கூறுவர். அந் நிறுவனங்களைப் பாதிக்கின்ற மசோதாக்கள் பாராளுமன்றத்தில் வருகின்ற பொழுது, அந்த அமைச்சரின் கவனத்தை ஈர்த்து சில சலுகைகளைப் பெற்றுக் கொடுப்பார்களெனில், அவ் வுறுப் பினர்களின் மதிப்பும் செல்வாக்கும் உயர்கிறது. அத்துடன், அடுத்த தேர்தல்களில், அவர்களுக்கு அதிகமான வாக்குகள் கிடைக்கும் வாய்ப்பையும் உருவாக்கிக் கொள்கின்றனர்.

அரசாங்கம் தான் இந்தச் சலுகைகளை அளிக்கின்ற போதிலும், இச் சலுகைகளைப் பெற்றுத்தர முயற்சி செய்த உறுப்பினர்களுக்குத் தான் அந்தப் பெருமை சார்கின்றது. இவ்விதம், பல வியாபார நிறுவனங்கள், தொழிற் நிறுவனங்கள், தொழிற் சங்கங்கள் ஆகிய பல நிறுவனங்களின் நலன்களைப் பாதுகாக்க பாராளுமன்ற உறுப்பினர் களைப் பயன்படுத்திக் கொள்வது, சுயநலக் கும்பலின் செல்வாக்கே காரணமாகும்.

அமெரிக்க ஐக்கிய நாட்டில் இவ்வித நலன் நாடும் கழகங்களின் செல்வாக்கு சட்டமியற்றுதலிலும் நிர்வாகத்திலும் அதிகமாகப் பரவியுள்ளது. ஆங்கிலேய நாட்டிலும் அப்பேர்பட்ட கும்பலின் செல் வாக்கு அதிகரித்து வருகிறது. அவர்களை சுய நலக் கும்பல் என்று குறு கிய அளவில் அழைப்பதைக் காட்டிலும் பல நிறுவனங்களின் நலன் களைப் பாதுகாக்கின்ற பிரதிநிதிகள் அல்லது கழகங்கள் என்று அழைக்கப்படுவதே சிறப்பானதாகும்.

இப்பொழுது ஆங்கிலேய அரசியல் கட்சிகள் பல நிறுவனங்களின் லன்களைப் பாதுகாக்கும் அளவில், ஆர்வம் காட்டுவதைப் பார்க்கின்ற பொழுது, ஆங்கிலேய அரசியலில் ஏற்பட்டு வரும் மாற்றத்தையும் நாம் கவனிக்க வேண்டும். இவ்வித மாற்றம் இரண்டாவது உலகப் போர் முடிந்ததற்குப் பின்னர் ஏற்பட்டதாகும். இரண்டாவது உலகப் போருக்கு முன்னரும் இவ்வித மாற்றங்களை சிறிய அளவில் ஏற்படாமல் இல்லை. 1914-க்கு முன்னரே, தொழிற்சங்கங்கள் ஆங்கிலேய நாட்டில் நன்ருக வேரூன்றிவிட்டன. அவை சக்தி வாய்ந்த சங்கங்களாகவும், தொழிலாளர் நலன்களைப் பாதுகாக்கின்ற நிறுவனங்களாகவும், நாளடைவில், தொழிலாளர்களுக்காகப் பிரிதிநிதித்துவம் பெற்றிருப் பதையும் அறிவோம். அவற்றைப் போன்று, மற்ற பல தொழிற் புரிவோர்களும் சங்கங்களை அமைத்துக் கொண்டுள்ளனர். வியாபாரிகளும் சங்கங்களை அமைத்துக் கொண்டுள்ளனர். இரண்டாவது உலகப் போர் ஏற்படுவதற்கு முன்னர், இந்தச் சங்கங்களுக்கு அதிக முக்கியத்துவம் கொடுக்கப்படவில்லை. ஏனெனில், அச் சங்கங்கள் அப்பொழுது ஆரம்ப நிலையில் தான் இருந்தன. தவிர, அச் சங்கங்களில் உள்ள அங்கத்தினர் எண்ணிக்கையும் மிகவும் குறைவாகவே இருந்து. நிறைய சங்கங்களை அமைத்துக் கொண்டதால் மட்டும் பாராளுமன்றத்தில் அவர்களுக்குப் பிரிதிநிதித்துவம் கொடுக்கப்படவில்லை. இரண்டு அரசியல் கட்சி முறையில் அவ்வித வாய்ப்பு அச் சங்கங்களுச்கு இல்லை. பழைய பிரதிநிதித்துவ முறையைத் தான் ஆங்கிலேயர் பின்பற்றி வந்தனர். அதில் எவ்வித மாற்றத்தையும் கொண்டு வர அவர்கள் விரும்பவில்லை அமெரிக்க ஐக்கிய நாட்டின் அரசியலில் வளர்ச்சியடைந்துள்ள இந்த நலன் நாடும் கழகங்களை அமெரிக்கர்கள் குறை கூறுவதில்லை. அதற்குப் பதிலாக அக் கழகங்கள் அரசியலுக்கு அவசியமானவை என்று ஒப்புக் கொள்கின்ற நிலை தோன்றியுள்ளது. அவர்களுடைய பிரிதிநிதித்துவ முறையில் இக் கழகங்களையும் சேர்த்துக் கொண்டனர். அதனால் இப்பொழுதுள்ள அரசியலில், அரசியல் கட்சிகள் ஒரு பக்கமும், நலன் நாடும் கழகங்கள் மற்றொரு பக்கமும் இருப்பதைக் காண்கிறோம்.

அரசியலில் கட்சிகளின் முக்கியமான நோக்கம் பிரதிநிதித்துவம் பெறுவதாகும். இப்பொழுதுள்ள பிரதிநிதித்துவ முறை மிகவும் பொதுவாக உள்ளது. சாதாரணமாக, மக்கள் நலன்களைக் கருதுவதிலும் அவர்களுடைய வாக்குகளைப் பெறுவதிலும் தான் அதிக அக்கரை காட்டுகின்றன. ஆனால் நலன் நாடும் கழகங்கள், அவைகளின் சம்பந்தப்பட்ட நிறுவனங்களைப் பாதுக்காக்கவும் வளர்ச்சியுறச் செய்யவும் முயற்சி எடுத்துக்கொள்கின்றன. பல நிறுவனங்களின் நலன்களையும் அரசாங்கம் புறக்கணிப்பதற்கில்லை. அரசியல் கட்சிகளில் அங்கத்தினர்கள் எண்ணிக்கை மிகவும் அதிகமாக உள்ளது. ஆனால்

பல்வேறு நிறுவனங்களையும் தனித்தனியாக எடுத்துக் கொண்டால் அச் சங்கங்களின் அங்கத்தினர்கள் எண்ணிக்கை மிகவும் குறைவாகவே உள்ளது. சமுதாயத்திலுள்ள ஒரு குறிப்பிட்ட பிரிவை மட்டும் அவர்கள் பிரதிநிதித்துவம் செய்கின்றனர்.

நலன் நாடும் கழகங்களின் குறிக்கோள்கள் பல தரப்பட்டவையாகும். அவைகளின் முதல் குறிக்கோள், அந்த நிறுவனத்திற்குத் தேவையான பாதுகாப்பைத் தேடிக் கொள்வதாகும். வேறு விதமாக கூறினால் சமுதாயத்தில் உள்ள ஒரு குறிப்பிட்ட பிரிவை அவர்கள் பாதுகாக்கின்றனர். தொழிற் சங்கங்கள், அவைகளின் அங்கத்தினர்களின் நலன்களைப் பாதுகாக்கின்றன. பல்வேறு தொழிற் புரிவோர், அவர்களுடைய நலன்களைப் பாதுகாத்துக் கொள்ள சங்கங்களை அமைத்துக் கொள்கின்றனர். மற்றும் வர்த்தகச் சங்கம் (Chambers of Commerce) வணிகச் சங்கம் (Chambers of Trade) உற்பத்தி செய்வோர் சங்கம் (The National Union of Manufacturers) ஆங்கிலேய தொழிற்சாலைகளின் கூட்டு நிறுவனம் (The National Union of Manufacturers) ஆகிய பல நிறுவனங்கள் அமைக்கப்பட்டுள்ளன. இன்னும் தொகுதி வாரியாக பல நிறுவனங்கள் இயங்கி வருகின்றன. அந்தச் சங்கங்களின் நலன்களைப் பாதுகாத்துக் கொள்ள வேண்டியது அவர்களுடைய கடமையாகி விட்டது. இந்தக் கழகங்களின் நோக்கம் அவர்களது பாதுகாப்பைத் தேடிக் கொள்வது மட்டுமின்றி, அவைகளின் வளர்ச்சிக்காகவும், பொது மக்களின் தொடர்பைப் பெறுவதற்காகவும் அமைந்துள்ளது. சான்றாக, அழிவு வேலைகளுக்கு அணுசக்தி பயன்படுத்தக்கூடாது என்ற இயக்கம் (The Campaign for Nuclear Disarmament) ஜீவகாருண்ய சங்கம் (The Loyal Society for Prevention of Cruelty to Animals) இங்கிலாந்தில் கிராமப்புறங்களைப் பாதுகாக்கும் சங்கம் (The Council for The Preservation of Rural England) ஆகியவற்றைப் போன்றதாகும். மேற்கூறிய தொழிற் சங்கங்கள், ஜீவகாருண்யச் சங்கங்கள் போன்றவை, அரசாங்கத்திடம் அவைகளின் குறைகளைக் கூறமுடியும். அச் சங்கங்களின் வளர்ச்சிக்காகவும், அவைகள் அரசாங்கத்திடம் சில சலுகைகளைக் கோருகின்றனர். அரசியல் கட்சிகள் தேசிய அளவில் எல்லா பிரச்சினைகளையும் கவனிக்கின்றன. ஆனால் மேற்கூறிய சில சங்கங்கள் ஒரு குறிப்பிட்ட நோக்கத்தின் வளர்ச்சிக்காக அரசாங்கத்திடம் சில நலன்களையும், சலுகைகளையும் பெற விரும்புகின்றன. அதனால் குறுகிய அளவில், அரசியல் கட்சிகளைப் போன்றே இவைகளும் பணியாற்றுகின்றன. அரசியல் கட்சிகள் தேர்தல் சமயங்களில், இச் சங்கங்களின் ஒத்துழைப்பைப் பெறவும், சில சமயங்களில் அரசியல் கட்சிகளுடன்

இணைத்துக் கொள்ளவும் ஆர்வமுடையவனாக இருக்கின்றன. ஆங்கிலேய நாட்டில் இரண்டு அரசியல் கட்சிகள் மட்டுமிருப்பதால், இச் சங்கங்கள் தனித் தனியாகக் கட்சிகளை அமைத்துக் கொள்ள முடியாது. அவை ஏதாவது ஓர் அரசியல் கட்சியின் நிழலில் தான் வளர்ச்சியடைய வேண்டும்; அல்லது எந்தக் கட்சியிலும் சாராது இருக்கவேண்டும். தொழிலாளர்கள் தொழிற் சங்கங்களில் அங்கத்தினர்களாக இருப்பதால், தொழிற் கட்சியுடன் இணைந்து கொள்கின்றனர். அதைப் போன்று வியாபாரச் சங்கங்கள், வர்த்தகச் சங்கங்கள், தொழிற்சாலைகளை நடத்துவோர் சங்கங்கள் கன்சர்வேடிவ் கட்சியின் ஆதரவைப் பெறுகின்றன.

# 12. நீதித் துறை

## ( JUDICIARY )

மக்களாட்சி பயனுள்ளதாகவும், நீடித்துயிருக்க வேண்டுமென்றால் மக்கள் பிரதிநிதிகள் சட்டசபையில் இயற்றுகின்ற சட்டங்கள் புறக்கணிக்கப்படாமலும் மீறப்படாமலும் பாதுகாக்கப்பட வேண்டும். அவ்விதம் சட்டங்களைப் பாதுகாக்க நீதி மன்றங்கள் அவசியம் தேவைப் படுகின்றன. நியாயமாகவும், விரைவாகவும் வழக்குகளைப் பரிசீலனை செய்து, தீர்ப்புகளைக் கூறும்பொழுது மக்களின் நம்பிக்கையையும், மதிப்பையும் பெற்றதாக அவை செயலாற்ற வேண்டும். ஒழுங்கும், நீதியும் நாட்டில் இல்லையெனில் சட்டங்களும் கேலிக்குரியதாகிவிடும். அப்பொழுது நாட்டில் அமைதிக்குப் பதிலாக குழப்பம்தான் ஏற்படும்.

நீதி மன்றங்களின் பணிகளாவன :-

(1) பாராளுமன்றச் சட்டங்கள் திட்டவட்டமாக இல்லையெனில், அவற்றை நிர்ணயம் செய்யும் பொறுப்பு நீதி மன்றங்களுடையதாகும்.

(2) அரசாங்கம் எதேச்சதிகாரம் செலுத்தாது பாதுகாக்கும் பொறுப்பு நீதி மன்றங்களைச் சார்ந்ததாகும். சட்டங்களைச் சரியாகப் பயன்படுத்தி குடிமக்களுக்கும், அரசாங்க அதிகாரிகளுக்கும் மோதல் ஏற்படும் பொழுது, முறையாகத் தீர்ப்புகளைக் கூறுவது நீதி மன்றங்களேயாகும்.

(3) சட்டங்களை மீறுகிறவர்களுக்கு உரிய தண்டனைகளை அளித்தல்.

(4) மக்களிடையே ஏற்படும் சிவில், கிரிமினல் தகராறுகளையும், வழக்குகளையும் விசாரித்து தீர்ப்புக் கூறல்.

(5) மக்களின் உரிமைகளில் மற்றவர்கள் தலையிடாது பாதுகாத்தல்.

(6) பாதிக்கப்பட்ட மக்களின் குறைகளை விசாரித்து, அவர்களுடைய குறைகளைத் தீர்த்து வைத்தல்.

பெரும்பான்மையான ஆங்கிலேய நிறுவனங்கள் சாக்ஸன் (Saxon) ஆட்சி காலத்திலேயே தோற்றுவிக்கப்பெற்று வளர்ச்சி அடைந்துள்ளன. அவற்றைப் போன்றே ஆங்கிலேய நீதி மன்றங்களின் தொடக்கமும் சாக்ஸன் ஆட்சி காலத்திலேயே காணப்படுகின்றது. நீதி மன்றங்களின் வளர்ச்சி பெரும்பாலும் இரண்டு அடிப்படைகளைக் கொண்டுள்ளது. (1) நீதித்துறை, அரசாங்கத்தின் ஓர் அங்கமாகக் கருதப் பெற்று, நீதி வழங்கி வருகின்றது. (2) நீதி மன்றங்களின் தீர்ப்புகள் முடிவானவையாக இருக்க வேண்டுமென்ற கருத்து வலியுறுத்தப்படுகிறது. தவிர, நீதித்துறை, மற்ற சட்டமியற்றும் துறை, நிர்வாகத் துறை ஆகிய அரசாங்க அங்கங்களுக்குக் கட்டுப்படாது, சுதந்திரமான அரசாங்க அங்கமாக இயங்கவேண்டும் என்ற கருத்து பின்பற்றப்பட்டு வருகிறது.

இந்த இரண்டு கருத்துகளையும் பொதுப்படையாக ஏற்றுக் கொண்டபோதிலும், நீதி மன்றங்களின் துவக்க கால வளர்ச்சியில் இவ்விரண்டு கருத்துகளும் சரியாகப் பின்பற்றப்படவில்லை. நீதி மன்றங்கள் அரசாங்கத்தின் ஒரு துறையாக இருந்து பணியாற்ற வேண்டுமென்ற கருத்து, நார்மானியர்கள் ஆட்சி செய்தபொழுது முக்கியத்துவம் பெற்றது, ஏனெனில் நார்மானியர் வலிமை மிக்க மத்திய அரசாங்கத்தை ஏற்படுத்தி நிலமானிய பிரபுக்களின் ஆதிக்கத்தைக் குறைத்தனர். அப்பொழுது நிலமானிய பிரபுக்களும் தனிப்பட்ட வகையில் நீதி மன்றங்களை நடத்தி வந்தனர். அக் காலத்தே போக்குவரத்துகள் சரியானபடி அமையாத காலமாக இருந்ததால், நிறைய ஊராட்சி நீதி மன்றங்கள் நிறுவப் பெற்றிருந்தன. நார்மானியர் ஆட்சி காலத்தில் இந்த ஊராட்சி நீதி மன்றங்கள் (Local Courts) நிலமானிய முறையில் சேர்த்துக் கொள்ளப் பெற்றன. அதனால் 12-வது நூற்றாண்டில் இங்கிலாந்திலும், வேல்ஸிலும் (Wales) மத்திய அதிகாரத்திற்குட்பட்ட நீதித் துறை வளர்ச்சியுற்றது. கிராமப்புறங்களில் பிரபுக்களால் நடத்தப்பெற்ற மேனர் நீதி மன்றங்கள் (Manorial Courts) அப் பகுதிகளில் உள்ள பிரபுக்களுக்கு கட்டுப்பட்ட குடியானவர்கள் சம்பந்தப்பட்ட வழக்குகளை மட்டும் விசாரணை செய்யும் அதிகாரங்களைப் பெற்றிருந்தன. ஆனால் அரசனின் நீதி மன்றங்களுக்கு நிறைய அதிகாரங்கள் வழங்கப்பட்டிருந்தன. சில சமயங்களில் ஊராட்சி நீதி மன்றங்களில் திருப்தியுறாமல், தனியாக

நிலம் வைத்திருக்கும் உரிமையாளர்கள் அரசருடைய நீதி மன்றங்களி லும் மேல் முறையீடு செய்து கொள்ளலாம்.

நீதி மன்றங்கள் மத்திய அரசாங்கத்தின் கட்டுப்பாட்டிற்குள் வர வெவ்வேறு நிகழ்ச்சிகள் காரணமாக இருந்தன. நாட்டில் ஏற்படுகின்ற சில பெரிய குற்றங்கள் திருட்டு, சட்டத்தின் பிடியிலிருந்து தப்பித்த வர்களுக்குப் புகலிடம் அளித்தல், மக்களைத் தாக்கிப் பணம் பறித்தல், இராணுவ 'கட்டளைகளை மீறுதல் ஆகிய குற்றங்கள் நாட்டின் அமைதியைக் குலைக்கும் காரணத்தால், அக் குற்றங்களை விசாரணை செய்யும் அதிகாரங்கள் அரசனின் நீதி மன்றங்களைச் சாருகின்றன. இவ்வித குற்றங்களை ஊராட்சி நீதி மன்றங்கள் விசாரணைக்கு எடுத்துக் கொள்ளக் கூடாதென்று இரண்டாம் ஹென்றி (Henry II) உத்தர விட்டார். அரசனின் நீதி மன்றங்களே இத்தகைய குற்றங்களை விசாரணை செய்ய முன் வந்ததால், நல்லபடி நியாயம் மக்களுக்குக் கிடைக்கும் என்ற நம்பிக்கை மக்களிடம் ஏற்பட்டது. அதனால் ஊராட்சி நீதி மன்றங்களிலும் வழக்குகள் வருவது மிகவும் குறைந்து விட்டது. ஓரிடத்தில் அமையப் பெற்றிருந்த அரசரின் நீதி மன்றங் களில் வழக்குகளைத் தொடருவது மிகவும் தொல்லையாக இருந்ததால், 'சுற்றிவரும் நீதிபதிகளை' இரண்டாம் ஹென்றி நியமனம் செய்தார். அதனால் இந்த நீதி மன்றங்களில் வழக்கு தொடருவோர் வெஸ்ட் மினிஸ்டருக்கு வரவேண்டிய அவசியம் இல்லாமல் போய்விட்டது. வெஸ்ட் மினிஸ்டரில் உள்ள அரசரின் நீதி மன்றங்களில் பின்பற்றப் பட்ட விதிமுறைகளே நாட்டின் எல்லா பகுதிகளிலும் பின்பற்றப்பட்டு வந்ததால், நீதி பரிபாலனத்தில் ஒரே மாதிரியான முறைகளும், அதைவிட மேலாக தேசியத் தன்மையும் வளர்ச்சியுற்றன. இவ்வித வளர்ச்சி ஏற்பட்டவுடன், ஷையர் (Shire) ஹன்ட்ரட் (Hundred) நீதி மன்றங்கள் முக்கியத்துவத்தை இழந்து விட்டன. நிலமானிய முறையும் சீர்குலைந்து விட்டதால், 'மேனர் நீதி மன்றங்களும்' கலைக்கப் பட்டன.

நீதித் துறையானது அரசாங்கத்தின் தனித் துறையாக இருந்து செயலாற்ற வேண்டுமென்ற கருத்து பிற்காலத்தில் தோன்றியதாகும். சாக்ஸன் அரசர்களும், நார்மன் அரசர்களும், தாங்களே நீதியை வழங்கி வந்தனர். இப்பொழுதுங்கூட, அரசியாரின் நீதிபதிகள் (Queen's Judges) அரசியாரின் நீதி மன்றங்கள் (Queen's Courts) மேன்மை தங்கிய அரசியாரின் சிறைச் சாலைகள் (Her Majesty's Prisons) என்றுதான் வழக்கமாக அழைக்கின்றனர்.

நீண்ட காலமாகவே, நீதித் துறைப் பணிகளும், ஆட்சித் துறைப் பணிகளும் மோதிக் கொண்டிருந்தன. விண்மீன் மண்டப நீதி மன்றம்

(Star Chamber Court) இதற்கு ஒரு நல்ல சான்றாகும். இந்த நீதி மன்றம் அரசர்களின் சிறப்புரிமைகளைப் பாதுகாக்க ஏற்படுத்தப் பட்டதாகும். இந்த நீதி மன்றம் அரசருக்கு விரோதமாக வரும் சில வழக்குகளை விசாரித்து தீர்ப்பு அளித்து வந்தது. இந்த நீதி மன்றத்தில் பணியாற்றும் நீதிபதிகள் வழக்கமாக அரசரின் விருப்பத்திற்கு முரணாகச் செல்வதில்லை. அரசரின் விருப்பத்திற்கு முரணாகத் தீர்ப்பு கூறும் நீதிபதிகள் தொடர்ந்து பதவியில் இருக்க முடியாது. தவிர. இந்த நீதி மன்றம் பிரிவி கவுன்சிலின் ஒரு பகுதியாகவும் இருந்து ஆட்சிப் பணிகளைப் புரிந்து வந்ததால், நாளடைவில் அது தன் மதிப்பை இழந்து விட்டது. ஸ்டூவர்ட் அரசார்கள் காலத்தில் முதலாம் ஜேம்ஸ், (James I) முதலாம் சார்லஸ் ஆகியோர் (Charlas I) தங்கள் விருப்பப்படி எதேச்சாதிகாரத்தை நிறுவ இந்த நீதி மன்றத்தை பயன்படுத்திக் கொண்டதால், நீடித்த பாராளுமன்றம் (Long Parliament) இந்த நீதி மன்றத்தையும், அரசர்களின் மற்ற சிறப்பு நீதி மன்றங்களையும் கலைத்து விடும்படி ஆணை விட்டது. 1901-ல் பாராளுமன்றத்தில் இயற்றப் பெற்ற வாக்குரிமை நிர்ணயச் சட்டத்திற்குப் பின்னர், (Act of Settlement) நீதிபதிகளை அரசர்கள் விருப்பம் போல பதவியிலிருந்து விலக்க கூடாது என்றும், அவ்விதம் நீதிபதிகளைப் பதவியிலிருந்து விலக்க வேண்டுமென்றால் பாராளுமன்றத்தின் இரண்டு சபைகளின் சம்மதத்தையும் பெற வேண்டுமென்றும் சட்டம் இயற்றப் பெற்றது.

## இடைக் காலத்தில் இருந்த நீதித் துறை

நார்மன் அரசர்கள் ஆட்சி செய்த பொழுது ஒழுங்கான நீதித் துறை அமையவில்லை. நீதி வழங்குவது என்பது அரசரின் தனிப் பொறுப்பாக இருந்தது. அரசரின் மாபெரும் குழுவில் (The Grand Council or Magnum Concilium) வீற்றிருந்தவாறு அரசர் வழக்குகளை விசாரிப்பார். ஆனால் நாளடைவில் அரசருக்குப் பதிலாக நிரந்தரமாக நியமிக்கப்பட்ட அதிகாரிகளால் தான் வழக்குகள் விசாரிக்கப் பட்டு வந்தன. அந்த அதிகாரிகள் கியூரியா ரெஜிஸ் (Curia Regis) என்ற பெயரில் அழைக்கப்பெற்ற குழுவில் உறுப்பினர்களாக இருந்தனர். ஆனால் இந்த நீதிபதிகள் வழக்குகளை விசாரணை செய்ய பல இடங்களுக்கும் சுற்றுப் பிரயாணம் செய்ய நேரிட்டதால் அரசரின் நீதி மன்றம் சரியாகச் செயலாற்ற முடியவில்லை. தவிர, வழக்குகளும் மிகவும் அதிகமாகக் குவிந்து வந்ததால் அரசரின் நீதி மன்றம் நிலைமையைச் சமாளிக்க முடியவில்லை. அதனால் வழக்குகளைப் பிரித்து, அவற்றின் தன்மைகளுக்கேற்ப மூன்று பொதுச் சட்ட நீதி மன்றங்களுக்கு (Common Law Courts) அவற்றை அனுப்பி வைத்தனர்.

## நிதித்துறை நீதி மன்றம் (The Court Exchequer)

இந்த நீதி மன்றம் தான் முதலில் வளர்ச்சி அடைந்தது. கியூரியா ரெஜிஸ் (Curia Regis) என்ற அரசரின் குழுவில் உள்ள ஒரு பகுதியே நிதித் துறையாகும். (Exchequer) அப்பொழுதிருந்த நிதித்துறை அரச குடும்பத்தின் கணக்கு வழக்குகளைப் பார்த்துக் கொண்டிருந்தது. வரி வசூல்களிலாவது, அல்லது நிதிந்துறை அதிகாரிகளின் நடத்தையிலாவது ஊழல்களோ, அல்லது சந்தேகங்களோ, ஏற்படுமெனின், இந்த நீதி மன்றம் அவ்வித வழக்குகளை விசாரித்து, உடனுக்கு உடன் தீர்ப்புகளைக் கூறும். இந்த நீதி மன்றங்களின் அதிகாரங்கள் படிப்படியாகவும், மறைமுகமாகவும் வருவாய் துறையில் எழுந்த சில வழக்குகளை விசாரணை செய்யும் அளவுக்கு வளர்ந்தன. வருவாய் துறையில் எழுந்த வழக்குகளை விசாரணை செய்ய நிதித் துறை பிரபுக்கள் (Barons of the Exchequer) என்ற சில அதிகாரிகள் நியமனம் செய்யப்பட்டனர். இவ்விதம் வளர்ச்சியுற்ற நிதித் துறை நீதி மன்றம் 1873-வரையிலும் நீடித்தது.

## பொதுமக்கள் வழக்குகளை விசாரணை செய்யும் நீதி மன்றம் (The Court of Common Pleas)

பொது மக்களின் வழக்குகள் நாளடைவில் மிகவும் அதிகரித்தன. அந்த வழக்குகளை விசாரணை செய்ய, இரண்டாம் ஹென்றி 1178-ல் ஐந்து நீதிபதிகளை நிரந்தரமாக 'கியூரியா ரெஜிஸ்' குழுவில் வீற்றிருந்து விசாரணை செய்யவும் நியமித்தார். அவர்களால் விசாரிக்க முடியாத வழக்குகளை மட்டும் அரசரின் முழு நீதி மன்ற விசாரணைக்கு (Kings Full Court) அனுப்ப வேண்டுமென்றும் இரண்டாம் ஹென்றி ஆணையிட்டார். அப்போழுதிருந்து பொதுமக்கள் வழக்குகளை விசாரணை செய்யும் தனி நீதி மன்றமே உருவாகியது. மாபெரும் பட்டயத்தில் (Magna Carta) பிரபுக்களால் குறிக்கப்பட்டுள்ள ஒரு குறைபாடு என்னவென்றால், இந்த வழக்குகளை விசாரணை செய்யும் நீதிபதிகள் அரசருடன் அடிக்கடி சுற்றுப்பபணத்தை மேற்கொள்வதால், வழக்குகள் சரியாக விசாரிக்கப் படுவதில்லையென்பதாகும். அதனால் ஜான் அரசன், இந்த நீதி மன்றம் நிரந்தரமாக வெஸ்ட் மினிஸ்டரிலேயே நிறுவப்பட ஒப்புக்கொண்டார்.

## அரசரின் நீதி மன்றம் (The Court of King's Bench)

மிகவும் பிரத்தியேகமான வழக்குகளை மட்டும் அரசன் விசாரணை செய்ய நேரிட்டதால், அரசரின் நீதி மன்றம் வளர்ச்சியுற்றது. மிகவும் சலுகைகள் பெற்ற பிரபுக்கள், மற்றும் பெரிய சீமான்கள் பற்றிய

வழக்குகளையும் அரசரின்' சில முக்கிய பிரச்சினைகளையும் அரசரே விசாரணை செய்ய வேண்டிய அவசியம் ஏற்பட்டது. தவிர, பொதுச் சட்ட நீதி மன்றங்களிலிருந்து மேல் முறையீட்டு விண்ணப்பங்களும், வழக்குகளும் அரசரின் நீதி மன்றத்திற்கு அனுப்பப் பெற்றன. அதனால் நாளடைவில் இந்த வழக்குகளை விசாரிக்கின்ற நீதிபதிகள் 'கியூரியா ரெஜிஸ்' குழுவிலிருந்து பிரிக்கப் பெற்று முறையாக வெஸ்ட் மினிஸ்டரிலேயே இருந்து பணியாற்ற நியமனம் செய்யப்பட்டனர்.

## வழக்கு நீதி மன்றங்கள் (Assize Courts)

தொடக்கத்தில் 'அசைஸ்' என்ற சொல் அரசரின் குழு (King's Council) விற்றிருந்து விசாரணை செய்வதைக் குறித்தது. ஆனால் 12-வது நூற்றாண்டில் அந்தச் சொல் அரசக் குழுவின் ஆணைகளைக் குறிப்பிட்டது. பெரும்பாலும் இக் குழுவால் வெளியிடப்பெற்ற ஆணைகள் நிலத் தகராறுகளைத் தீர்க்க விடுக்கப்பெற்ற ஆணைகளாகும். நிலத் தகராறுகளைத் தீர்க்க, இந்த ஆணைகளை அடிப்படையாக வைத்து வழக்குகளை விசாரித்து வந்தனர். 1176-ல் நார்த்ஹாம்டனில் (North-amton) அரச குழுவின் ஆணைகள் அறிவிக்கப் பெற்றன. அந்த ஆணைகளை அடிப்படையாக வைத்துக் கொண்டு நிலத் தகராறுகள் சம்மந்தமான வழக்குகள் விசாரிக்கப்பட்டு வந்தன. இந்த வழக்குகளை விசாரித்த நீதிபதிகள் நாளடைவில் 'அசைஸ் நீதிபதிகள்' (Justices of-Assize) என்று அழைக்கப்பெற்றனர். பின்னர் இந்த நீதிபதிகள் வேறு வழக்குகளையும் விசாரிக்கத் தொடங்கினர். 13-வது நூற்றாண்டில் இந்த நீதிபதிகள் அவ்வப்பகுதிகளில் எழுந்த சிவில், கிரிமினல் வழக்குகளையும் விசாரணை செய்தனர். அதனால் வழக்குகளைத் தொடர கட்சிக்காரர்கள் வெஸ்ட் மினிஸ்டருக்குப் போக வேண்டிய அவசியம் இல்லாமல் போய்விட்டது. அவர்களின் நேரமும், பணமும் அதிகமாக செலவிடப் படவில்லை. இந்த நீதி மன்றங்களின் வழக்குகள் அதிகமாக வர நேரிட்டதால், வெஸ்ட் மினிஸ்டரில் உள்ள பொதுச் சட்ட நீதி மன்றங்களில் (Common Law Courts) பணியாற்றி வந்த நீதிபதிகளையும் 'அரசாங்க நீதி மன்றங்களில்' பணியாற்ற நியமித்தால் இந்த நீதி மன்றங்கள் இன்னும் முக்கியத்துவம் பெற்றன. அதனால் நாடு முழுவதும் ஒரே விதமான பொதுச் சட்டத்தைப் பின்பற்ற வேண்டிய அவசியம் ஏற்பட்டது. அவ்விதம் பொதுச் சட்டம் நாட்டில் வளர்ச்சியுற்றது.

## 3. சான்சரி நீதி மன்றம் (The Court of Chancery)

நாளடைவில் நாட்டில் வாணிகம் மற்றும் தொழில் உற்பத்தி வளர்ச்சியுற்றன. அதனால் வாணிகத்தைப் பற்றிய புதிய வழக்குகள்

வர முற்பட்டன. இந்த வழக்குகளையும் பொதுச் சட்ட நீதிமன்றங்களில் தான் விசாரித்து வந்தனர். இங்கு பணியாற்றிய பெரும்பாலான நீதிபதிகளுக்கு இப் புதிய வழக்குகள் அவர்களுடைய அனுபவங்களுக்கு மாறாக இருந்ததால், இவ்வழக்குகளை விசாரிப்பதில் அவர்களுக்கு சில சிக்கல்கள் ஏற்பட்டன. மிகவும் பழமையான கொள்கைகளையே இந்த நீதிபதிகள் பின்பற்றி வந்ததால், இப் புதிய வழக்குகளில் அவர்கள் அளித்த தீர்ப்புகள் கட்சிக்காரர்களுக்கு திருப்தி அளிக்கும் வகையில் இல்லை. அதனால் அவர்கள் இவ் வழக்குகளை அரசரிடத்தில் முறையிட்டனர். அரசரின் குழு (King's Council) எல்லா முறையீடுகளையும் விசாரிக்க முடியவில்லை. அதனால் அரசரின் முக்கிய ஆலோசகரான சான்சலர் பிரபுக்கு அனுப்பி, அவருடைய ஆலோசனைகளைக் கேட்டு தீர்ப்பு அளித்து வந்தனர். 15-ஆவது நூற்றாண்டில் இந்த முறையீடுகளை நேராகவே சான்சலர் பிரபுக்கு அனுப்பியதால், சான்சலர் பிரபுவே இந்த வழக்குகளை விசாரித்து தீர்ப்பு அளித்தார். இவ்விதம் சான்சரி நீதி மன்றம் வளர்ச்சியுற்றது. இந்த நீதி மன்றம் பொதுச் சட்ட நீதி மன்றங்களுக்கு துணையாகப் பணியாற்றி வந்தது. பின்னர் இந்த நீதி மன்றம் மற்ற நீதி மன்றங்களுடன் மோத வேண்டிய சூழ்நிலை ஏற்பட்டது. 17-வது நூற்றாண்டில் தலைமை நீதிபதி கோக் (Coke) என்பவருக்கும் சான்சலர் பிபுரவான எல்லஸ்மியர் பிரபுவுக்கும் (Lord Ellesmere) ஏற்பட்ட மோதலில் முதலாம் ஜேம்ஸ் தலையிட்டு, இவ்விரண்டு நீதிபதிகளிடையே தகராறு ஏற்பட்டதென்றால், அல்லது கருத்து வேறுபாடுகள் தோன்றியதென்றால் சான்சலர் பிரிபுவின் தீர்ப்பே முடிவானது என்று அறிவித்தார்.

### 4. மற்றும் சில உயர்தர நீதி மன்றங்கள்

கடற் படை நீதி மன்றம் (The Court of Admiralty) 14-வது நூற்றாண்டில் நிறுவப் பெற்றது. இங்கிலாந்தின் கப்பற் படை வளர்ச்சியுற்றதற்குப் பின்னர், கடற் படை சம்பந்தமாக எழுந்த சில வழக்குகளை கடற் படை தளபதியே விசாரிக்க வேண்டிய அவசியம் ஏற்பட்டது. கடற் கொள்ளைக்காரர்கள், கடற் கொள்ளை, மற்றும் கடற் படை அதிகாரிகளிடையே ஏற்படும் வழக்குகளை இந்த நீதி மன்றம் விசாரித்து தீர்ப்பளித்தது.

விவாக ரத்துகள், உயில்கள், மற்றும் சமய குருமார்களின் ஒழுக்கம் ஆகியவற்றை விசாரணை செய்ய சமய நீதி மன்றங்கள் நிறுவப்பெற்றன. (Ecclesiastical Courts). உயில்கள் சமய குருமாரான பிஷப் முன்னிலையில் நிரூபிக்கப்பட வேண்டும். திருச்சபை கோட்பாட்டின் படி தம்பதிகளுக்கு விவாக ரத்து அளிக்கும் உரிமை இல்லை. ஆனால்

திருச்சபையின் ஆணையின் மூலமாக ஏறக்குறைய விவாகரத்தைப் போன்ற, தம்பதிகள் பிரிந்து வாழலாம் என்ற அனுமதியை திருச்சபை அளித்து வந்தது. 19-வது நூற்றாண்டின் துவக்கம் வரையிலும், விவாக ரத்து வேண்டுமென்றால், அதைப் பாராளுமன்றச் சட்டத்தின் மூலமாகத் தான் பெற வேண்டும். சமய நீதி மன்றங்கள், திருச்சபை பற்றிய விவகாரங்களை மட்டும் கவனித்தால் போதும் என்று கருதினர். 1857-ல் இரண்டு புதிய நீதி மன்றங்கள், விவாக ரத்து மற்றும் தாம்பத்ய வழக்குகளை விசாரணை செய்ய நிறுவப்பெற்றன. (The Court of Probate; The Court for Divorce and Matrimonial Causes)

### 5. உள்ளூர் நீதி மன்றங்கள் (Local Courts)

உள்ளூர் நீதி மன்றங்களின் முக்கியத்துவம் நாளடைவில் மிகவும் குறைந்து விட்டது. பல இடங்களில் அந்த நீதி மன்றங்கள் செயலாற்றவில்லை. உள்ளூர்களில் எழுந்த பல சிறிய கிரிமினல் வழக்குகளை விசாரணை செய்ய அரச நீதி மன்றத்திற்கும், வழக்கு நீதி மன்றங்களுக்கும் (Assile Courts) போதிய அவகாசம் கிடைக்காததால் உள்ளூர் நீதி மன்றங்களைப் புதுப்பிக்க வேண்டிய அவசியம் ஏற்பட்டது. 1215-வரையிலும் ஷெரிப்புகள் (Sheriffs) பொது வழக்குகளை விசாரித்து வந்தனர். ஆனால் மாபெரும் பட்டயத்தில் (Magna Carta) பிரபுக்கள் இந்த முறையை ரத்து செய்ய வேண்டு மென்று அரசிடத்தில் முறையிட்டனர். அதனால் ஷெரிப்புகள் பொது வழக்குகளை விசாரிப்பது நிறுத்தப் பெற்றது. ஆனால் 1327-ல் மூன்றும் எட்வர்ட் உள்ளூர்களில் நீதியையும் அமைதியையும் நிலை நிறுத்துவதற்காக அமைதி காண் நீதிபதிகளை, (Justices of the Peace) ஒவ்வொரு கவுண்டிலும் நியமித்தார். குற்றவாளிகளை, வழக்கு மன்ற நீதிபதிகள் விசாரணை செய்யும் வரையிலும், அவர்களைச் சிறையில் வைத்திருக்க வேண்டியது, அமைதி காண் நீதிபதியின் முக்கிய பணியாகும். 1360-க்குப் பின்னர், சிறு வழக்குகளை விசாரிக்கும் அதிகாரங்கள் அவர்களுக்குத் தரப் பெற்றன. டியூடர் அரசர்கள் ஆட்சி செய்த பொழுது அவர்கள் ஆட்சித் துறைப் பணிகளையும் செய்து வந்தனர். சிவில் வழக்குகளைப் பொறுத்த வரையிலும் உள்ளூர் நீதி மன்றங்கள் செய்து வந்த பணிகளுக்குப் பதிலாக மாற்று நீதி மன்றங்களை அப்பொழுது நிறுவவில்லை. ஒவ்வொரு நகரத்திற்கும் அங்குள்ள மக்கள் விரும்பினால் நீதி மன்றம் அமைத்துக் கொள்வதற்கு அனுமதி வழங்கப்பெற்றது. டியூடர் அரசர்கள் காலத்தில் நகரங் களுக்கு சாசனங்கள் வழங்கிய பொழுது இவ்வித நீதி மன்றங்களை நிறுவவும் அனுமதி வழங்கினர். அந்த நீதி மன்றங்கள் சிறிய

வழக்குகளை விசாரித்து வந்தன. அப்பொழுது நிறுவப்பெற்ற இந்த நீதி மன்றங்கள் ஒரு நூற்றாண்டுக் காலம் மட்டுமே நீடித்தது. மீண்டும் நீதி மன்றங்கள் நகரங்களில் இல்லாமல் தொல்லையாகி விட்டது. 1846-க்குப் பின்னர் தான் கவுண்டி நீதி மன்றதங்கள் நிறுவப் பெற்றன.

### நீதித் துறையின் சீரமைப்பு




பல நீதி மன்றங்கள் இருப்பதால், ஒன்றுக்கு ஒன்று மோதவும், முரண்பட்ட திர்ப்புகளைக் கூறவும் வாய்ப்பு இருந்தது. அதனால் நீதித் துறை சீரமைப்பு மிகவும் அவசியமாகக் காணப்பெற்றது. 1873-75-ல் பாராளுமன்றத்தில் இயற்றப்பெற்ற நீதிச் சட்டங்கள் (Judicature Acts) நீதித் துறையில் சீரமைப்பு ஏற்படுத்தின. ஏற்கனவே இருந்த பல நீதி மன்றங்களும் கலைக்கப்பட்டு, பிரதம உயர் நீதி மன்றம், மேல் முறையீட்டு நீதிம ன்றம், உயர் நீதி மன்றம் ஆகிய மூன்று முக்கியமான நீதி மன்றங்கள் ஏற்படுத்தப்பட்டன. உயர் நீதி மன்றத்தில் மூன்று பிரிவுகளை மட்டும் அரசியார் நீதி மன்றம், சான்சரி நீதி மன்றம், விவாகரத்து, தாம்பத்திய வழக்குகளை விசாரணை செய்யும் நீதிமன்றம், கடற் படை நீதிமன்றம் என்று ஏற்படுத்தினர். இந்த நீதி மன்றங்களில் பணியாற்ற நீதிபதிகள் நியமனம் செய்யப்படுகின்றனர். அவர்கள் எந்த நீதி மன்றத்தில் வேண்டுமென்றாலும் நியமனம் செய்யப்படலாம். ஒவ்வொரு நீதி மன்றத்தில் நியமனம் செய்யப்படும் நீதிபதிகள் குறைந்த அளவிற்குப் பத்து ஆண்டுகளாவது வழக்கறிஞர்களாக பணியாற்றி

அனுபவம் பெற்றிருக்க வேண்டும். இந்த நீதிபதிகள் அரசியாரால் நியமனம் செய்யப்படுவர். நீதி மன்றங்களில் தலைமை நீதிபதி, அல்லது தலைவர் நியமனம் பிரதம அமைச்சரால் செய்யப்படும். தலைமை நீதிபதி நியமனம் செய்யப்படுவதற்கு முன்னர், சான்சலர் பிரபுவை பிரதம அமைச்சர் கலந்தாலோசனை செய்வார். மற்ற உயர் நீதி மன்ற நீதிபதிகளை சான்சலர் பிரபுவே நியமனம் செய்வார். எல்லா நீதிபதிகளின் சுதந்திரமும் பாதுகாக்கப்பட்டுள்ளது. அவர்களைப் பதவியிலிருந்து சாதாரணமாக விலக்க முடியாது. அவர்களுடைய சம்பளங்களும் தனிப்பட்ட பொது நிதியிலிருந்து கொடுக்கப்படுகின்றது. 1967-ல் 63 உயர் நீதி மன்ற நீதிபதிகள் (Puisne Judges) மூன்று பிரிவுகளிலும் பணியாற்றி வந்தனர்.

மேல்முறையீட்டு நீதி மன்றம் சிவில் வழக்குகளை மட்டும் எடுத்து கொள்கின்றது. அந்த நீதி மன்றத்தில் பணியாற்றும் முழு நேர நீதிபதிகள் உயர்நீதிமன்றத்தில் பணியாற்றி அனுபவம் பெற்றிருக்க வேண்டும். அல்லது பதினைந்து ஆண்டுகள் வழக்கறிஞராகப் பணியாற்றியிருக்க வேண்டும். பிரபுக்கள் சபை தான் தலைமை முறையீட்டு நீதி மன்றமாகச் செயலாற்றி வருகிறது.

### நீதிமன்றங்களில் பயன்படுத்தப்படும் சட்டம்

நீதி மன்றங்களின் வளர்ச்சி ஏற்பட்டபொழுது சட்டமும் உருவாக்கப் பெற்றது. ஆங்கிலேயச் சட்டம் உருவாக்கப்படுவதற்குக் காரணமாக இருந்த மூலங்களாவன:—

### 1. பொதுச் சட்டம் (Common Law)

1500 ஆண்டுகளுக்கு முன்னர் குடியேறிய பழங்கால மக்கள் பரம்பரை பரம்பரையாக சில மரபுகளையும், பழக்க வழக்கங்களையும் பின்பற்றி வந்தனர். ஆங்கிலேய நாட்டில் இந்த பரம்பரை மரபுகள் எழுதி வைக்கப்படவில்லை. அதனால் அதிகாரபூர்வமான பழைய மக்கள் பின்பற்றி வந்த மரபுகளைப்பற்றி எந்தச் சட்ட நூலும் எழுதி வைக்கப்படவில்லை. ஆனால் பொதுவாக மக்கள் இந்த மரபுகளை மதிக்கின்றபொழுது பொது நீதி மன்றங்களும் மக்களின் பழக்க வழக்கங்களை அடிப்படையாக வைத்துக்கொண்டுதான் தீர்ப்புகளை அளித்து வந்தன.

இங்கிலாந்தின் பல பகுதிகளிலும் பழக்கத்தில் இருந்த இந்தச் சட்டங்களை ஒரே மாதிரியாகத் தொகுத்து நாடு முழுவதற்கும் பயன்படுத்த வேண்டும் என்ற எண்ணம் இரண்டாம் ஹென்றி என்ற

அரசருக்குத் தோன்றியது. ஏனெனில் அவருடைய ஆட்சிக் காலத்தில் நீதிபதிகள் பல இடங்களுக்கும் சுற்றுப்பிரயாணம் செய்து வழக்குகளை தீர்க்க நேரிட்டதால், ஒரே மாதிரியான பொதுச் சட்டத்தைப் பயன் படுத்துவது நல்லது என்று அரசருக்குத் தோன்றியது. அப்பொழுது பொதுச் சட்டம் தொகுக்கப்பெற்றது பொதுச் சட்டத்தின் அடிப்படையில் நீதிபதிகளின் தீர்ப்புகளும் கூறப்பட்டு வந்தன. அந்தத் தீர்ப்புகளும் பொதுத் சட்டம் வளர்ச்சியுற உதவி செய்தன. இப்பொழுது பொதுச் சட்டம், சட்ட அறிஞர்கள், கிளான்வில், (Glanville) பிளாக்ஸ்டோன் (Blackstone) போன்றோர் எழுதிய சட்ட நூல்களிலும், பரம்பரையாக நீதிமன்றங்களில் வழங்கப் பெற்ற தீர்ப்புகளிலும் காணப்படுகிறது.

## 2. வழக்குச் சட்டம் (Case Law)

உயர் நீதிமன்றங்களில் வழங்கப்பெற்றத் தீர்ப்புகள், நாளடைவில் அதே மாதிரியான வழக்குகளை விசாரணை செய்யப்படுகின்ற பொழுது அடிப்படைச் சான்றுகளாக விளங்குகின்றன. அந்தத் தீர்ப்புகள் சட்டத்தின் தன்மையைப் பெறுகின்றன. வழக்கமாக, ஒரே விதமான வழக்குகள் எழும்பொழுது பழைய தீர்ப்புகளைப் பின்பற்றினாலும் அவையே முற்றிலும் ஆதாரமான சட்டங்களாகக் கருதுவதற்கில்லை. பழையத் தீர்ப்புகளை அடிப்படைச் சான்றுகளாகப் பின்பற்றினால் ஒரேமாதிரியான முடிவுகளும், தொடர்ச்சியும் இருக்கும் என்பது உண்மையே யென்றாலும், புதிய மாறுதல்களுக்கும், புதிய சூழ்நிலைக்கு ஏற்றவாறும் சட்டத்தைப் பயன்படுத்தப் பட வேண்டுமென்பது சில அறிஞர்களின் கருத்தாக உள்ளது.

## 3. ஒப்புரவு இயற்கை விதிகள் (Rules of Equity)

சில சமயங்களில் பொது சட்ட நீதி மன்றங்களின் வரம்பிற்கு உட்படாத வழக்குகள் வரும் பொழுதும், அல்லது பொதுச் சட்டத்தை பயன்படுத்தியும் உண்மையான நியாயத்தை வழங்க முடியாத சூழ்நிலையிலும், வழக்குந் தொடருகின்றவர்கள் சான்சலர் பிரபுவிடம் முறையிடுகின்றனர். சான்சலர் பிரபுக்களும் பொது அறிவையும் இயற்கை நீதியையும் பின்பற்றி வழக்குகளை விசாரித்து முடிவு கூறுகின்றனர். அவ்வித முடிவுகளை மற்ற சான்சலர் பிரபுக்கள், வழக்குகளை விசாரிக்கின்றபொழுது அடிப்படை சான்றுகளாக எடுத்துக் கொள்கின்றனர். அவ்விதம் இயற்கை நீதியின் அடிப்படையில் சில சட்ட விதி முறைகள் வளர்ச்சியடைந்துள்ளன. இவ்வித சட்ட விதிகள் வளர்ச்சியடைந்துள்ள போதிலும் அவை நெகிழாத் தன்மையுடையனவாக இருப்பதைக் காண்கிறோம்.

**பாராளுமன்றச் சட்டங்கள் (Statutes)**

சில வழக்குகளில் தீர்ப்பளிப்பதற்கு, பொதுச் சட்டமும், இயற்கை நீதிச் சட்டமும் பொருந்தாமல் போய் விட்டதென்றால், புதிய சட்டங்களை உருவாக்க வேண்டிய அவசியம் ஏற்படுகிறது. அப்பொழுது பாராளுமன்றத்தின் வேண்டுகோளுக்கிணங்க, சில சட்டங்களை அரசர் அறிவிக்க வேண்டிய அவசியம் ஏற்படுகிறது. ஆனால், இறுதியில் சட்டங்களை இயற்றும் முக்கியமான அதிகாரம் பாராளுமன்றத்திடம்தான் உள்ளது. பாராளுமன்றச் சட்டங்கள், மற்ற எல்லா சட்டங்களைக் காட்டிலும் முடிவானதும், முக்கியமானது மாகும் இப்பொழுதெல்லாம் நாட்டில் பயன்படுத்தப்படும் பெரும்பான் மையான சட்டங்கள் பாராளுமன்றச் சட்டங்களே யாகும். ஏனெனில், மக்களின் சமுதாய, பொருளாதார வாழ்க்கைத் துறைகளில் அரசாங்கத் தின் பொறுப்பும், அக்கறையும் அதிகமாகிக் கொண்டு வருகின்றன.

**5. மற்ற சட்டங்கள் :-**

பாராளுமன்ற உரிமைகள், சட்டம், மரபு ஆகியவை மீறப்படுகின்ற பொழுது, சம்மந்தப்பட்ட சபைகளே இவ் வுரிமைகளை முடிவு செய்யும் அதிகாரத்தைப் பெற்றுள்ளன. நீதி மன்றங்களுக்கு அவ் வுரிமை பிரச்சினைகள் எடுத்துச் சொல்லப்பட்டால், நீதி மன்றங்கள் அவ் வுரிமை களை வரையறுக்கும். அதைப் போன்றே சர்வதேச சட்டம் புறக் கணிக்கப்படும் பொழுது, அதற்கேற்ப பாராளுமன்றச் சட்டத்தின் அடிப்படையில், நீதி மன்றங்கள் அவ் வழக்குகளை விசாரித்து முடிவு செய்யும்.

சிவில் கிரிமினல் சட்டம்

சிவில், கிரிமினல் சட்டங்களுக்கிடையே உள்ள சிறிய வேறுபாடு எவ்வித சட்ட நடவடிக்கையை மேற்கொள்வதுஎன்பதைப் பொறுத்தே இருக்கிறது. ஒரு வழக்கில், வழக்குத் தொடருகிறவர் இழப்பீடு பெற விரும்பினால், அவ் வழக்கு சிவில் வழக்காகக் கருதப்படுகிறது. குற்றவாளிக்குத் தண்டனை வாங்கிக் கொடுக்க வேண்டுமென்று அவர் விரும்பினால், அவ் வழக்கு கிரிமினல் வழக்காக கருதப்படுகிறது. முதலில் கிரிமினல் வழக்குகள் அரச வழக்கு நீதி மன்றங்களால் தான் விசாரிக்கப் பட்டு வந்தன. சமுதாயத்திற்கு விரோதமான நடவடிக்கை களை ஒருவர் செய்தால், அது கிரிமினல் குற்றமாகக் கருதப்படும். சமுதாயத்தில் உள்ள தனிப்பட்ட மனிதனும் அதனால் பாதிக்கப்பட லாம். சான்றாக, திருட்டு, பயங்கரமான வாகனங்களை ஓட்டுதல், தெரு நடைமுறை விதிகளை மீறுதல் ஆகிய குற்றங்கள் எல்லாரையும் பாதிக்

கின்றன. அதனால் இக் குற்றங்களைப் புரிந்தவர்கள் மீது அரசாங்கம் வழக்குத் தொடருகின்றது. அவர்களுக்குத் தண்டனையோ அல்லது அபராதமோ விதிக்கப்படுகிறது. அவ்விதம் வசூலிக்கப்படுகின்ற அபராதத் தொகை அரசாங்கம் பொது நிதியில் சேர்கிறது. சிவில் வழக்கில், வழக்குத் தொடருகிறவர் அவருக்கு, மான இழப்போ அல்லது அவர் சொத்துக்களுக்கு இழப்போ, அல்லது அவருடைய உடலுக்குத் திங்கோ ஏற்பட்டு விட்டது என்று ஒரு காரணத்தைக் காட்டி இழப்பீடு பெறலாம். அந்த இழப்பீட்டுப் பணம் நீதி மன்றத் தால் ஏற்றுக்கொள்ளப்பட்டதென்றால், அப் பணம் அவ் வழக்கு தொடர்ந்தவரைச் சாரும். ஆனால் வழக்குத் தொடருகிறவர் ஒருவர் அதே காரணத்திற்காக, சிவில் அல்லது கிரிமினல் வழக்கைத் தொடர லாம். அது அவருடைய விருப்பத்தைப் பொறுத்தது. சிவில் வழக்கு களாக இருந்தாலும் சரி, கிரிமினல் வழக்குகளாக இருந்தாலும் சரி, அவைகளின் முக்கியத்துவத்தைப் பொறுத்து அவை பிரிக்கப் படுகின்றன. அதிக முக்கியத்துவம் பெற்ற வழக்குகள் உயர்நீதி மன்றங்களுக்கும், முக்கியத்துவம் குறைந்த வழக்குகள் கீழ் நீதி மன்றங் களுக்கும் அனுப்பப்படும்.

## சிவில் நீதி மன்றங்கள் அல்லது பொருள் துறை நீதிமன்றங்கள்

இரண்டு விதிவிலக்குகளைத் தவிர, சிவில் வழக்குகள் கவுண்டி நீதி மன்றத்திற்காவது அல்லது உயர் நீதி மன்றத்திற்காவது செல்லும். ஒரு விதிவிலக்கு என்னவென்றால், சில சமயங்களில் இருபத்தோருவயது நிரம்பப் பெறாத ஒருவன் திருமணம் செய்து கொள்ள விரும்பினால், அவனுடைய பெற்றோர்களும் இத் திருமணத்திற்கு சம்மதிக்காமல் இருந்தால் அவன் வழக்கை உடனடியாகத் தீர்க்கும் நீதி மன்றத்திடம் (The Court of Summary Jurisdiction) தொடருவான். அவ்வித வழக்குகளை இந்த நிதி மன்றமே விசாரணை செய்யும்; உடனடியான தீர்ப்பையும் அளிக்கும். மற்றொரு விதி விலக்கு என்னவென்றால் 1846 வரையிலும் சில உள்ளூர் நீதி மன்றங்களில் விசாரிக்கப்படும் வழக்குகளாகும். 1846-க்குப் பின்னர் இந்த நீதி மன்றங்கள் எல்லாம் கலைக்கப்பட்டதற்குப் பின்னரும் ஒரு சில உள்ளூர் நீதி மன்றங்கள் (Local Courts) தொடர்ந்து இயங்கி வருகின்றன. சான்றாக, பிரிஸ்டல் டாய்ஸி நீதிமன்றம் (Bristol Tolzey Court), லிவர்பூல் நீதி மன்றம் (Liverpool Court of Passage) சால் போர்ட் ஹண்ட்ரட் நீதிமன்றம் (The Salford Hundred Court) நார்விச் கில்டால் நீதிமன்றம் (The Norwich Guildhall நீதிமன்றம்) மேயர், லண்டன் நகர நீதிமன்றம் (The Mayor's and City of London Court) ஆகிய நீதிமன்றங்கள் இன்னும் இயங்கி வருகின்றன.

அந்தந்த உள்ளூர் பகுதிகளில் உள்ளவர்கள், வழக்குத் தொடரும் செலவினங்களைக் குறைக்க வேண்டி இந்த உள்ளூர் நீதிமன்றங்களிலேயே தங்கள் வழக்குகளைத் தொடருகின்றனர். இந்த இரண்டு விதி விலக்குகளைத் தவிர, மற்ற சிவில் வழக்குகள் கவுண்டி நீதி மன்றங்களுக்காவது அல்லது உயர்நீதி மன்றங்களுக்காவது அனுப்பப் படுகின்றன.

## கவுண்டி நீதிமன்றங்கள்.

இப்பொழுது ஏறக்குறைய 400 கவுண்டி நீதி மன்றங்கள் இயங்கி வருகின்றன. இந்த நீதி மன்றங்கள் எல்லாம் 1846-ல் உருவாகின. இந்த நீதி மன்றங்களுக்கும் கவுண்டிகளுக்கும் சம்பந்தமில்லை. ஆனால் அவ்வித பெயர் மட்டும் பழக்கத்தில் இருந்து வருகிறது. இங்கிலாந்திலும், வேல்ஸிலும் (Wales) உள்ள மக்கள் வசதியாக இந்த நீதிமன்றங்களைப் பயன்படுத்த இவ்வித நீதி மன்றங்களை அமைத்திருக்கின்றனர். இந்த நீதி மன்றப் பணிகளை. கவுண்டி நீதிமன்ற நீதிபதிகளும், அவர்களுக்கு உதவி செய்ய பதிவாளர்களும் (Registrars) செய்து வருகின்றனர். ஏறக்குறைய 85 நீதிபதிகளில் இந்த நீதி மன்றங்களில் பணியாற்றுகின்றனர். அவர்கள் சான்சலர் பிரபுவால் நியமனம் செய்யப்படுகின்றனர். அவர்கள் 72-வயதில் ஓய்வு பெறுகின்றனர்; முடிந்தால் 75-வயது வரையிலும் அவர்கள் பணியாற்ற அனுமதிக்கப் படுகின்றனர். ஒன்பது மாவட்டங்களிலுள்ள ஒவ்வொரு பகுதியிலும் (Metropolitan Districts) ஒரு நீதி மன்றம் அமைக்கப்பட்டுள்ளது, அப் பகுதியிலுள்ள மற்ற சில இடங்களிலும் இந் நீதிபதிகளின் சேவை தேவைப்படுவதால், அப் பகுதிகளுக்கும் அவர்கள் சுற்றுப் பிரயாணம் செய்து வழக்குகளை விசாரிப்பர். ஒவ்வொரு கவுண்டியிலும் மாதம் ஒரு முறையாவது நீதிமன்ற நடவடிக்கைகள் மேற்கொள்ளப் படும். சில சிறிய பகுதிகளில் மாதம் இரண்டு நாட்களுக்காவது இந்த நீதி மன்றம் கூடும். ஒவ்வொரு நீதி மன்றத்திற்கும் ஒரு பதிவாளர் (Registrar) நியமனம் செய்யப்பட்டிருக்கிறார். சில சமயங்களில், அவர் ஓரிரண்டு நீதி மன்றங்களிலும் பணியாற்றக் கூடும். அவரும் ஒரு வழக்கறிஞரேயாவர். அவர் தனிப்பட்ட வழக்குகளை வாதாட எடுத்து கொள்ளவும், சில சமயங்களில் சான்சலர் பிரபுவால் அனுமதிக்கப் படுவார். நீதி மன்றத்தின் நிர்வாக அலுவல்களை அவர் கவனித்துக் கொள்வதோடு, 30 பவுன்களுக்கும் குறைவான மதிப்புடைய சில வழக்குகளை அவரே விசாரித்து முடிவு கூறவும் அனுமதிக்கப்பட்டிருக்கிறார். சில சமயங்களில் இரு கட்சியினரும் ஒப்புக் கொண்டால், 30 பவுன்களுக்கு மேற்பட்ட வழக்குகளையும் அவர் விசாரிக்கலாம். இவர் தரும் தீர்ப்புகளுக்கு நீதிபதிகள் சம்மதம் தெரிவிக்க வேண்டும்.

இந்த நீதி மன்றங்களில் வரும் வழக்குகளில் மூன்றில் ஒரு பாக வழக்குகளை, இவர்களே விசாரணை செய்கிறார்கள்.

இந்த கவுண்டி நீதி மன்றங்களின் வரம்பு மிகவும் குறுகியது. சிவில் வழக்குகளில் 500 பவுன்கள் மதிப்பிற்கு மேல்படாத தொகையைப் பொறுத்த வழக்குகளில் இந்த நீதி மன்றங்களே தீர்ப் பளிக்கின்றன. அடமானங்கள், பங்காளிகள் கலைப்பு, சில பொது நீதி நிலையங்கள் பற்றியனவும் இயற்கை நீதிச் சட்டத்தின் வரம்பிற்குட் பட்டனவும் 500 பவுன்களுக்கு மேற்படாத தொகையைப் பற்றியவையு மான வழக்குகளையும், கடற் படை சம்பந்தப்பட்ட 1000 பவுன்கள் முதற்கொண்டு 3500 பவுன்கள் வரையிலும் உள்ள சொத்துக்களைப் பற்றிய வழக்குகளையும், உயர் நீதி மன்றத்திலிருந்து அனுப்பப் பெற்ற 500 பவுன்களுக்கு மேற்படாத சொத்துடைமைகள் பற்றிய வழக்கு களையும், சமுதாய நலச் சட்டங்களை இயற்றும் பொழுது எழுகின்ற சில வழக்குகளையும், குழந்தைகளைப் பாதுகாத்தல், வாடகைச் சட்டங் கள், குடியிருப்புச் சட்டங்கள் ஆகியவைப் பற்றிய பல வழக்குகளையும் கவுண்டி நீதி மன்றங்கள் விசாரிக்கின்றன. இந்த நீதி மன்றங்களில் கட்சிக்காரர்களுக்காக வழக்கறிஞர்கள் வாதாட அனுமதிக்கப் பட்டுள்ள னர். இந்த நீதி மன்றங்கள் நன்றாகச் செயலாற்றி வருகின்றன. மக்கள் இந்த நீதி மன்றங்களில் அதிக நம்பிக்கை வைத்திருக்கின்றனர்.

## உயர் நீதி மன்றம் (The High Court)

வழக்கமாக, சிறிய வழக்குகள் கவுண்டி நீதி மன்றங்களிலும், பெரிய வழக்குகள் உயர் நீதி மன்றத்திலும் தொடரப்படுகின்றன. ஆனால், வழக்குத் தொடருபவர்களின் முடிவும் இதில் உள்ளது. ஏனெனில், சில சமயங்களில், கவுண்டி நீதி மன்றத்தின் வரம்பிற்குட் பட்ட வழக்காக இருந்த போதிலும், வழக்குத் தொடருகிறவர் முதலிலேயே வழக்கை உயர் நீதி மன்றத்தில் தொடங்குவார். கவுண்டி நீதி மன்றங்களில் அவ்வித வழக்குகளைத் தொடர முடியும் பொழுது, உயர் நீதி மன்றங்களில் வழக்குத் தொடர்வதை உயர் நீதி மன்றம் வழக்கமாக ஆதரிப்பதில்லை.

உயர் நீதிமன்றத்திற்குச் செல்லும் வழக்குகள், அரசியாரின் நீதி மன்றம், (The Queen's Bench Divison) அல்லது சான்சரி நீதிமன்றம் (The Chancery Divison) அல்லது விவாகரத்து. கடற்படை வழக்கு நீதிமன்றம் ஆகிய மூன்று நீதி மன்றங்களில் ஏதாவது ஒரு நீதி மன்றத் திற்குச் செல்லும். மூன்று வகையான பழைய பொதுச்சட்ட நீதி மன்றங்கள் கலைக்கப்பட்டதற்குப் பின்னர், ஒரே நீதி மன்றமாக அரசியாரின் நீதிமன்றம் நிறுவப்பெற்றது. அந்த நீதிமன்றம் சிவில்,

கிரிமினல் ஆகிய இரண்டு வழக்குகளையும் விசாரணைக்கு எடுத்துக் கொள்ளும். இந்த நீதி மன்றத்தின் தலைவர், பிரதம நீதிபதியாவர். (Lord Chief Justice) மற்றும் 36 நீதிபதிகள் இந்த நீதிமன்றத்தில் பணியாற்றுகின்றனர். சிவில் வழக்குகளில், ஒப்பந்தம் (Contract) பொருள்துறை தவறுகள் (Tort) ஆகியவற்றை இந்த நீதி மன்றம் விசாரிக்கும், சில சமயங்களில் இந்த வழக்குகளை ஸ்டிராண்ட் (Strand) நீதிமன்றத்திலாவது, அல்லது அரசாணை வழக்கு நீதி மன்றத்திலாவது (Assize Courts) நீதிபதிகள் விசாரணை செய்யலாம். ஆனால் பெரும்பான்மையான வழக்குகளை லண்டன் நகரில் விசாரணை செய்வதைத் தான் நீதிபதிகளும், வழக்கறிஞர்களும் விரும்புகின்றனர். தவிர, சில தனிப்பட்ட வழக்குகளை விசாரணை செய்யும் நீதிபதிகள் லண்டனில் தான் இருப்பர். ஜூரி விசாரணையை எதாவது ஒரு கட்சிக் காரர் வேண்டுமென்றால், நீதிமன்றம் அதற்கு வழி செய்து கொடுக்கும். ஜூரி விசாரணை முறை இப்பொழுது மிகவும் குறைந்து வருகிறது.

சான்சரி நீதி மன்றம் பெரும்பாலும் மேல் முறையீட்டு வழக்கு களை விசாரணைக்கு எடுத்துக் கொள்கின்றது. இந்த நீதி மன்றத்திற்கு சன்சலர் பிரபு (Lord Chancellor) தலைமை வகிப்பார். அவருக்கு நிறைய வேலை இருப்பதால், அவருக்குப் பதிலாக, அவருடைய உதவி யாளரும் (Master of the Rolls) மற்றும் உயர்நீதி மன்ற நீதிபதிகளும் வழக்குகளை விசாரணை செய்யும் பணிகளை மேற்கொள்கின்றனர். உயில்களையும் விவாகரத்தை விரும்பும் மனைவிகளையும், கப்பல் வழக்கு களையும் விசாரணை செய்ய, உயில்கள், விவாகரத்து, கடற்படை நீதி மன்றம் (Court of Probote, and the Court of Divorce, and Matrimonial Causes) என்ற ஒரு பிரிவு அமைக்கப்பட்டுள்ளது. இந்த மூன்று நீதி மன்றங்களையும் ஒன்றாக இணைத்திருப்பது ஆச்சர் யமே. வியாபார ஒப்பந்தம் சம்பந்தமாக வழக்குகள் எழுந்தால் அவற்றை விசாரணை செய்ய தனி நீதி மன்ற பிரிவு ஒன்று அமைக்கப் பட்டுள்ளது. அதற்கு வியாபார ஒப்பந்த நீதி மன்றம் (Restrictive Practices Court) ஒன்று 1956-ல் அமைக்கப்பட்டுள்ளது. மேற் கூறிய நீதிமன்றங்களிலிருந்து எழுகின்ற மேல் முறையீட்டு வழக்குகள் (Appeals) மேல் முறையீட்டு நீதி மன்றத்திற்குச் செல்கின்றன. மேல் முறையீட்டு நீதி மன்றத்திற்குச் செல்லும் சிவில் வழக்குகள், சான்சலர் பிரபுவின் உதவியாளரான மாஸ்டர் ஆஃப் ரோல்ஸ் (Master of Rolls) என்பவராலும், 11 மேல் முறையீட்டு நீதிபதிகளாலும் விசாரிக்கப்படுகின்றன. இந்த நீதி மன்றத்தைத் தவிர, பிரபுக்கள் சபையும் இந்த வழக்குகளை விசாரணைக்கு எடுத்துக் கொள்கின்றது. பிரபுக்கள் சபை தான், இங்கிலாந்து, வேல்ஸ், வட அயர்லாந்து ஆகிய பகுதிகளுக்கு இறுதியான மேல் முறையீட்டு நீதி மன்றமாகும்.

பிரபுக்கள் சபை மேல் முறையீட்டு நீதி மன்றமாகப் பணியாற்றும் பொழுது, சாதாரண பிரபுக்கள் இப் பணியில் பங்கெடுத்துக் கொள் வதில்லை. வழக்குகளை விசாரணை செய்வதற்கென்றே சட்டக்கலையில் வல்லுநர்களான சில பிரபுக்கள் 'சட்டப் பிரபுக்கள்' (Law Lords) என்ற பெயருடன் நியமனம் செய்யப்பட்டுள்ளனர். இந்த நீதி மன்றத் தின் தலைமை நீதிபதி சான்சலர் பிரபுவே ஆவார். தவிர 9 சட்ட பிரபுக்களும் வழக்குகளை விசாரணை செய்வர். இந்தச் சட்டப் பிரபுக்கள் பெரும்பாலும் பழைய சான்சலர் பிரபுக்களும், மற்றும் நீதி மன்றங்களில் உயர்ந்த பதவிகளை வகித்து வந்த பிரபுக்களுமாக இருப்பர். இந்த நீதி மன்றத்தின் கோரத்திற்கு, மூன்று நீதிபதிகள் வீற்றிருந்தால் போதுமானதாகும்.

## கிரிமினல் வழக்குகள் (குற்றத்துறை வழக்குகள்) (Criminal Cases)

கவுண்டிகளிலும், பரோக்களிலும், மற்றும் நகர்புறங்களிலும் குற்றத்துறை வழக்குகளை விசாரிக்க, நான்கு கீழ் நீதி மன்றங்கள் அமைக்கப்பட்டுள்ளன. அவை அனைத்தும் மேஜிஸ்ட்ரேட் நீதி மன்றங் கள் என்று அழைக்கப்படுகின்றன. (Magistrates Court) ஒவ்வொரு கவுண்டியிலும் நியமிக்கப்பட்டிருக்கும் நீதி மன்றத்தில் சிறிய குற்ற வழக்குகளை விசாரணை செய்ய கௌரவ மாஜிஸ்ட்ரேட்கள், அல்லது நீதிபதிகள் நியமனம் செய்யப்பட்டுள்ளனர். சில கவுண்டிகளில் பெரிய பரோக்கள் அமைந்திருப்பதால், கீழ் நீதி மன்றத்தில் எல்லா குற்ற வழக்குகளையும் விசாரணை செய்ய முடியவில்லை. அவ்வளவு வேலை நீதிபதிகளுக்கு உள்ளது, அதனால் இந்த வழக்குகளை விசாரணை செய்ய முழு நேர மேஜிஸ்ட்ரேட் (Magistrate) அப் பகுதிகளில் நியமனம் செய்யப்பட்டுள்ளார். சான்சலர் பிரபுவின் சிபாரிசின் பேரில், அரசியார் இந்த நீதிபதியை நியமனம் செய்வார். அவருக்கு நீதிபதிக்குத் தரப்படும் சம்பளம் கொடுக்கப்படும். முழு நேர மாஜிஸ்ட்ரேட்டிற்கு உதவி செய்ய, கவுரவ மாஜிஸ்ட்ரேட்டுகளும் நீதி மன்றத்தில் பணியாற்றுவர். லண்டன் நகரத்திலும், நன்கு சீரமைக்கப் பெற்ற மேஜிஸ்ட்ரேட் நீதி மன்றம் அமைக்கப்பட்டுள்ளது. இந்த நீதி மன்றத்தில் சம்பளம் பெறுகின்ற முழு நேர நீதிபதிகள் ஏறக் குறைய 36 பேர் அரசியாரால் நியமனம் செய்யப்பட்டுள்ளனர். இளம் குற்றவாளிகளின் வழக்குகளை விசாரணை செய்ய பிரத்தியேக மேஜிஸ்ட் ரேட்டுகள் நியமனம் செய்யப்பட்டுள்ளனர். சில விவாகரத்து வழக்கு களை விசாரணை செய்யவும் பிரத்தியேக நீதி மன்ற பிரிவு அமைக்கப் பட்டுள்ளது. இந்த வழக்குகளை விசாரணை செய்து விவாக ரத்து அளிக்க முடியாது என்ற போதிலும், மணமக்கள் பிரிந்து வாழ

தீர்ப்பு அளித்தலும் மற்றும் ஜீவனும்சம் அளிக்கும் அதிகாரமும் இந்த நீதிபதிகளுக்கு உண்டு. விவாகரத்து வழக்குகளை விசாரணை செய்ய தனிப்பட்ட நீதி மன்றம் அமைக்கப்பட்டிருக்கிறது என்பதை ஏற்கனவே பார்த்தோம். பல கவுண்டிகளிலும், நகரங்களிலும் குற்ற வழக்குகள் விசாரணை செய்ய காலாண்டுப் பருவ மன்றங்கள் (Quarter Sessions) அமைக்கப்பட்டுள்ளன. இந்த நீதி மன்றங்கள் வருடத்திற்கு ஒரு குறிப்பிட்ட காலத்தில் தான் கூடும். அப்பொழுது வருகின்ற வழக்குகளை விசாரிக்கும். இவை தனி நீதி மன்றங்களாகவே இயங்குகின்றன. தவிர, இந்த நீதி மன்றங்களில் முக்கியமான குற்ற வழக்குகளையும் விசாரிக்க எடுத்துக் கொள்கின்றனர். 9 நீதிபதிகளுக்கு மேற் செல்லாமல், குறைந்தது இரண்டு நீதிபதிகள் வீற்றிருந்து வழக்குகளை விசாரிப்பார். இந்த நீதி மன்றங்களில் ஜூரி முறை (Jury) பின்பற்றப்படுகின்றது. குற்ற நிர்வாகச் சட்டம் (The Criminal Justice Act) 1962-ல் இயற்றப்பெற்றதற்குப் பின்னர், இந்த நீதி மன்றங்கள் நன்ருகச் சீரமைக்கப்பட்டுள்ளன. இங்கு பணியாற்றும் நீதிபதிகள் அனுபவம் பெற்ற வழக்கறிஞர்களாவர். ஆனுல் அவர்கள் முழு நேர நீதிபதிகளாகப் பணியாற்ற வேண்டியதில்லை. லண்டனில் உள்ள 5 நீதி மன்றங்களில் மட்டும் முழு நேர தலைமை நீதிபதியும், துணைத் தலைமை நீதிபதியும் ஒவ்வொரு நீதி மன்றத்திலும் நியமனம் செய்யப்பட்டுள்ளனர். வழக்கு நீதி மன்றங்கள் (Assize Courts) எல்லா முக்கியமான நகரங்களிலும் வருடத்திற்கு மூன்று முறை கூடுகின்றன. இங்கிலாந்திலும், வேல்ஸ்சிலும் (Wales) (லண்டன் நகரம் இல்லாமல்) 7 வழக்கு நீதி மன்றங்கள் அமைக்கப்பட்டுள்ளன. ஒவ்வொரு வழக்கு நீதி மன்றத்திற்கும் இரண்டு சுற்றுலா நீதிபதிகள் விஜயம் செய்து வழக்குகளை விசாரணை செய்வர். இந்த நீதி மன்றத்தில் அரசியாரின் நீதிமன்றத்தைச் சார்ந்த (Queen's Bench Division) இரண்டு அல்லது மூன்று நீதிபதிகள் பணியாற்றுவர். நிறைய வழக்குகள் இருந்தாலும் அல்லது நீதிபதிகளுக்கு உடல் நலம் குறைந்தாலும், பிரத்தியேக நீதிபதி நியமனம் செய்யப்படுவார் 1956-ல் அரசு நீதி மன்றங்கள் லிவர்பூல் (Liverpool) மான்செஸ்டர் (Manchester) ஆகிய நகரங்களில் நிறுவப்பெற்றன. காலாண்டுப் பருவ மன்றங்களைப் போன்றே வருடத்திற்கு ஒரு சில மாதங்கள் மட்டும் இந்த நீதி மன்றங்கள் இயங்கி வந்தன. வழக்கு நீதி மன்றங்களில் (Assize Courts) எடுத்துக் கொள்ளப்படும் பெரும்பான்மையான குற்றப் பிரிவு வழக்குகள் ஜூரி முறையோடு விசாரணை செய்யப்படும். ஒரு சில சிவில் வழக்குகளை மட்டுமே வழக்கு நீதி மன்றங்கள் விசாரணைக்கு எடுத்துக் கொள்கின்றன. ஏனெனில் சிவில் வழக்குகளை சான்சரி நீதி மன்றம் விசாரிப்பதே பொறுத்தமானது.

அரசியாரின் உயர்நீதி மன்ற பிரிவு (The Queen Bench Division of the High Court) முக்கியமான குற்றப் பிரிவு வழக்குகளை விசாரிக்க சுயேச்சையான வரம்பு பெற்றுள்ளது. மூன்று நீதிபதிகள், ஜூரிகள் ஆகியோரின் முன்னிலையில் விசாரிக்கப்படும் சில முக்கியமான குற்ற வழக்குகளை இந்த நீதி மன்றம் விசாரிக்க தகுதி பெற்றது. தவிர, சில தேசத் துரோகக் குற்றங்களையும் விசாரிக்க இந்த நீதி மன்றம் அதிகாரம் பெற்றுள்ளது. முதல் உலகப் போர் சமயத்தில், சர் ரோஜர் கேஸ்மெண்ட் (Sir Roger Casement) என்பவர் தேசத் துரோகக் குற்றத்திற்காக இந்த நீதி மன்றத்தில் தண்டிக்கப்பட்டார். 1910-ல் மைலியஸ் (Mylius) என்பவர், ஐந்தாம் ஜார்ஜ் அரசர் இரண்டு திருமணங்களைச் செய்து கொண்டார் என்று அரச நிந்தனையாகப் பேசியதால், அவர் மீது வழக்கு இந்த நீதி மன்றத்தில் கொண்டுவரப் பட்டது. மைலியஸ் குற்றவாளி என்று கூறப்பட்டு, இந்த நீதி மன்றத்தில் தண்டனை கொடுக்கப் பட்டது. பிரபுக்கள் சபையும், மக்கள் சபையில் பகிரங்கமாக விசாரணை செய்யப்பட்ட சிலர் மீது விசாரணை செய்து, தண்டனை அளிக்க உரிமைப் பெற்றுள்ளது. பல முக்கியமான குற்றங்களுக்காக அல்லது அரசியல் குற்றங்களுக்காக, பிரபுக்கள் சபை இவ்வித வழக்குகளை விசாரணைக்கு எடுத்துக் கொள் வதுண்டு. கடைசியாக, 1806-ல் மெல்வில் பிரபுவின் (Lord Melville) வழக்கை பிரபுக்கள் சபை விசாரித்தது.

மேஜிஸ்ட்ரேட் நீதி மன்றங்களிலிருந்து செல்லும் மேல் முறையீட்டு வழக்குகள் அரசியாரின் நீதி மன்றப் பிரிவுக்கோ (Divi onal Court of the Queen's Bench Divison) அல்லது உள்ளூர் காலாண்டுப் பருவ மன்றங்களுக்கோ (Local Quarter sessions) அனுப்பப்படும். சட்டத்தைப் பற்றி நிர்ணயம் செய்யும் பொழுது மேல் முறையீட்டு வழக்குகள் பெரும்பாலும் அரசியாரின் நீதி மன்றப் பிரிவுக்கே அனுப்பப்படுகின்றன. அபராதத் தொகை விதிப்பதைக் காட்டிலும், வழக்குகாகச் செலவிடும் தொகை மிகவும் அதிகமாக உள்ளதால், மேல் முறையீட்டு வழக்குகளின் எண்ணிக்கை குறைந்து வருகின்றது. ஆனால் சில சமயங்களில் வழக்கு தொடர்கின்ற உள்ளூர் அதிகாரிகள் உயர் நீதி மன்றத்தின் திட்டவட்டமான தீர்ப்பைப் பெற, குற்றப் பிரிவு வழக்குகளை அனுப்புவது உண்டு. அவர்களுடைய மேல் முறையீடு வெற்றி பெற்றால், வழக்குகளை மேஜிஸ்ட்ரேட்டுகளுக்கே அனுப்பி, குற்றவாளிக்கு என்ன தண்டனை கொடுப்பது என்பதையும் அறிவிப்பார். மேல் முறையீடுகள் காலாண்டு பருவ வழக்கு மன்றங்களுக்குச் (Quarter Sessions Court) செல்லும் பொழுது சட்டத்தின் அடிப்படையிலாவது அல்லது மெய்யான நிகழ்ச்சிகளின் அடிப்படையிலாவது அல்லது சட்டமும் மெய்

நிகழ்ச்சியும் கலந்த அடிப்படையிலாவது அனுப்பப்படும். கவுண்டி களில் இந்த மேல் முறையிடுகளை விசாரிக்கின்ற பொழுது, ஜூரியை அழைப்பது வழக்கமில்லை. இந்த மேல் முறையீட்டு மன்றத்தில் 3 முதல் 12 வரையிலும் நீதிபதிகள் வீற்றிருந்தது இவ் வழக்குகளை விசாரணை செய்வர். பரோக்களில் குற்ற விசாரணை நடுவர் (Recorder) தனியாக இருந்து இந்த வழக்குகளில் விசாரணை செய்து தீர்ப்பு அளிப்பர். வழக்கு நீதி மன்றங்கள் அல்லது காலாண்டுப் பருவ மன்றங்கள் ஆகிய நீதி மன்றங்களிலிருந்து எழும் மேல் முறையீட்டு வழக்குகள் மேல் முறையீட்டு உயர் நீதி மன்றத்தின் குற்றப் பிரிவு மன்றத்திற்கு (Criminal Divison of the Court of Appeal) அனுப்பப்படும். இந்த நீதி மன்றத்திற்கு பிரதம நீதிபதியோ அல்லது மேல் முறையீட்டு நீதிபதியோ தலைமை வகிப்பார். அரசியார் நீதி மன்ற நீதிபதிகளும் கூட மேல் முறையீட்டு நீதிபதிகளுடன் சேர்ந்து வழக்குகளை விசாரணை செய்வர். மூன்று நீதிபதிகளாவது கோரத் திற்கு (Quorum) இருக்க வேண்டும். ஒரு குற்றவாளிக்கு விடுதலை அளித்துக் கூறிய தீர்ப்பிற்கு விரோதமாக அதிகாரிகள் மேல் முறையீடு செய்ய முடியாது. ஆனால் ஒரு குற்றவாளி அவனுக்கு அளிக்கப் பட்டுள்ள தண்டனையை எதிர்த்து சட்டத்தின் அடிப்படையிலோ அல்லது மெய் நிகழ்ச்சியின் அடிப்படையிலோ, அல்லது இரண்டு அடிப்படைகளிலுமே அவன் மேல் முறையீட்டு நீதி மன்றத்தில் வழக்குத் தொடரலாம். 1964-ல் இயற்றப்பெற்ற குற்ற வழக்கு மேல் முறையீட்டுச் சட்டப்படி (Criminal Appeal Act 1964) தண்டனை அளிக்கப் பெற்ற ஒரு குற்றவாளி புதிய சாட்சியங்களைக் கொண்டு வந்தால், மீண்டும் வழக்கை மறு விசாரணை செய்ய உத்தரவிடலாம். ஏதாவது ஒரு குற்ற வழக்கில் 'சட்டப் பிரச்சினை' உள்ளது, அது தீர்க்கப்பட வேண்டிய முக்கியமான பொருளாகும் என்று மேல் முறையீட்டு நீதி மன்றம் அறிவித்ததென்றால், பிரபுக்கள் சபையும் அதில் சட்டப் பிரச்சினை உள்ளது என்று கருதினால், இந்த மேல் முறையீட்டு வழக்கை பிரபுக்கள் சபையின் இறுதியான தீர்ப்பைப் பெற அனுப்பலாம். ஆனால் சாதாரணமாக இவ்விதம் நிகழ்வதில்லை.

இங்கிலாந்திலும், வேல்ஸிசிலும் (Wales) குற்றப் பிரிவு வழக்குகளை, நடுநிலைமை தவறாமலும், உறுதியாகவும், விரைவாகவும், சிக்கனமாகவும் நீதிபதிகள் விசாரணை செய்து தீர்ப்பு அளிக்கின்றனர். குற்றம் சாட்டப்பட்டு கைதாகிய ஒருவன் 24 மணி நேரத்திற்குள் நீதி மன்றத்திற்கு கொண்டு வரப்படுகிறான். உடனடியாகத் தீர்ப்பு அளிக்க வேண்டிய வழக்குகளை அப்பொழுதே தீர்ப்பளித்து முடிவு செய்வதும் உண்டு; அல்லது பூர்வாங்க விசாரணை செய்து, காலாண்டுப் பருவ மன்றங்களுக்கோ அல்லது வழக்கு நீதி மன்றங்களுக்கோ அவ் வழக்கு

களை அனுப்பிவைப்பர். குற்றவாளி தண்டனையை எதிர்த்து மேல் முறையீடு செய்தால், அந்த வழக்கையும் விரைவாக விசாரணை செய்து தீர்ப்பளிப்பர். இரு தரப்பினர்களுக்கும் அவர்களுடைய விவாதங்களை நிரூபிக்க தக்க வாய்ப்புகள் அளிக்கப்படுகின்றன. இங்கிலாந்திலும் வேல்ஸிலும், வழக்கு தொடரும் கட்சியினரே குற்றவாளியின் குற்றத்தை நிரூபிக்க வேண்டிய அவசியம் ஏற்படுகிறது. ஒருவன் தன் மீது தொடரப்பட்ட வழக்கை எதிர்த்து வாதாட முடியவில்லை என்றால், நல்ல நீதி அவனுக்குக் கிடைக்க வேண்டுமென்ற காரணத்தால், அவன் வழக்கை நடத்துவதற்கான வசதிகளை அரசாங்கம் செய்து கொடுக்கின்றது. ஒரு மனிதன் அவனுடைய அடிப்படை உரிமையான 'சுதந்திரத்தை பாதுகாக்க அரசாங்கம் அவனுக்கு எல்லா வாய்ப்புகளையும் அளிக்கிறது. பெரும்பான்மையான வழக்குகளை ஒரு நீதிபதிக்கு மேலாக விசாரணை செய்கின்றனர். ஜுரிகளின் தீர்ப்பும் மேற்கொள்ள படுகிறது.

ஒருவனுடைய குற்றத்தை சந்தேகத்திற்கு இடமில்லாது நிரூபிக்க வேண்டியிருப்பதால் சிறிய சந்தேகம் எழுந்தாலும், அந்த சந்தேகத்தின் பயனைக் குற்றம் சுமத்தப் பெற்றவரின் சார்பாக அளிப்பர். ஒரு நீதிபதி விதிமுறைகளின் படியும், நடுநிலைமை தவறாமலும் வழக்குகளை விசாரணை செய்வார். மக்களின் உரிமைகளைப் பாதுகாப்பதுடன், சமுதாயத்தின் பாதுகாப்பையும் மனதில் கொண்டே நீதிபதிகள் பணியாற்றுகின்றனர். நீதியில் ஏதாவது தவறு ஏற்பட்டால், அது பெரும்பாலும் குற்றவாளியின் சார்பாகவே இருக்கும்.

ஆங்கிலேய மக்களின் நீதி, பெரும்பாலும் இரண்டு அடிப்படைக் கொள்கைகளிலிருந்து வளர்ச்சியுற்றுள்ளது. புதிய கண்டுபிடிப்புகளையும், திடீர் மாற்றங்களையும் ஆங்கிலேய மக்கள் பெரிதும் விரும்புவதில்லை. ஏற்கனவே அமைக்கப்பெற்றுள்ள நிறுவனங்கள் மக்கள் தேவைகளை அறிந்து அதற்கேற்ப வளர்ச்சியுற்றிருப்பதைப் போன்று ஆங்கிலேய நீதி மன்றங்களும் படிப்படியாக மாறுதல்களை ஏற்றுக் கொண்டுள்ளன. அது அந்த நிறுவனங்களின் வளர்சசியைக் காட்டுகின்றது. அதே சமயத்தில் பழைய மரபுகளையும் பின் பற்றி வருகின்றன. பழைய மரபுகளே ஆங்கிலேய நீதி மன்றங்களில் பின் பற்றப்பட்டு வருவதால், ஆங்கிலேய மக்கள் அந்த நீதிமன்றங்களை மரியாதையுடனும், பயபக்தியுடனும் இன்னும் காண்கின்றனர், நீதி மன்றங்களின் படிப்படியான வளர்ச்சியைத் தவிர, நீதி நிர்வாகம் நன்கு செயலாற்றப் பட, ஆங்கிலேய வழக்கறிஞர்களும் தங்கள் சேவையை அளித்துள்ளனர். இரண்டாவது அடிப்படைக் கொள்கை என்னவெனில், ஆங்கிலேய மக்களின் அடிப்படை உரிமைகள் பாதுக்காக்கப்

பட வேண்டுமெனில், அவர்களுக்குக் கிடைக்கும் நீதி முடிவானதாக இருக்க வேண்டும். அரசியல் தலையீட்டினால் பாதிக்கப்படாமல் அவர்கள் சுதந்தரமாகப் பணியாற்ற வேண்டிய அவசியம் ஏற்படுகிறது. ஆங்கிலேய நீதி மன்றங்களில் சில குறைபாடுகள் இருத்தலையும் காண்கிறோம். நிறுவனங்களில் ஒரு தொடர்ச்சியான வளர்ச்சி இருக்க வேண்டுமென்பதற்காக, மிகப் பழைய, காலங் கடந்த சில நிறுவனங்களையும் அவர்கள் அப்படியே வைத்துக் கொண்டிருக்கின்றனர், நீதிபதிகள் சுதந்தரமாகப் பணியாற்ற வேண்டும் என்பதற்காக அவர்கள் மக்கள் தொடர்பேயின்றி ஒதுங்கி வாழ்கின்ற பழக்கத்தை மேற்கொள்கின்றனர். அதனால் அவர்கள் மற்றவர்களின் விமர்சனங்களையோ, அல்லது மக்கள் தேவைகளுக்கேற்ப விரும்பும் சில சீர்திருத்தங்களையும் அவர்கள் விரும்புவதில்லை. பிரிட்டனில் உள்ள சில நீதி நிறுவனங்களிலும் குறைபாடுகள் காணப்படுகின்றன, மேஜிஸ்ட்ரட்டுகளின் நீதி மன்றங்கள் பலத்த கண்டனங்களுக்குள்ளாகின்றன. கீழ் நீதி மன்றங்களில் பணியாற்றும் அமைதிகாக்கும் நீதிபதிகள் (Justices of the Peace) சம்பளம் பெறாது கௌவரமாக பணியாற்றுகிறவர்களாவர். தவிர, அவர்கள் பெரும்பாலும் கிராமப்புறங்களிலுள்ள அரசியல் ஆதரவு பெற்றவர்களாவர். பெரும்பான்மையான அமைதி காக்கும் நீதிபதிகள் மிகவும் வயதானவர்களாகவும், சரியாகப் பணியாற்ற முடியாதவர்களாகவும் உள்ளனர். அவர்கள் காவலர்களின் சாட்சியங்களையும், எழுத்தர்களின் ஆலோசனைகளையும் அப்படியே ஏற்றுக் கொள்கின்றனர் என்றும் அதனால் வழக்குகளைச் சரியாகக் கவனிப்பதில்லையென்றும் குறை கூறுகின்றனர். மற்றும் இங்கிலாந்திலுள்ள கிராமப்புற பகுதிகளெல்லாம் விரைவாக நகர்புறங்களாக மாறி வரும் காரணத்தால், பழையகாலத்து "அமைதி காக்கும் நீதிபதிகள் தேவையா என்ற கேள்வி எழுகின்றது. இந்த கவுரவ நீதிபதிகளுக்குப் பதிலாக, சம்பளம் வாங்கும் முழு நேர நீதிபதிகளை நியமனம் செய்வதால், நீதி வழங்குதலும் ஒரே மாதிரியாக இருக்கும் என்று கருதுகின்றனர். மற்றும் அவர்கள் மத்திய அரசாங்கத்தின் கட்டுப்பாட்டில் இருப்பர் என்றும் கருதுகின்றனர். ஆனால் இந்த நீதி மன்றங்கள் 14-வது நூற்றாண்டு முதல் இன்னும் நீடித்து வருவதால் மட்டும் முழுவதும் காலம் கடந்த நீதி மன்றங்களாகக் கருதுவதற்கில்லை. ஏனெனில், இந்த கவுரவ நீதிபதிகளுக்கு உள்ளூர் சூழ்நிலை நன்றாகத் தெரிந்திருக்கும் காரணத்தால், அவர்கள் உள்ளூரிலுள்ள பொது மக்களிடம் நல்ல தொடர்பை வைத்துக் கொள்ளவும், அந்த சூழ்நிலைக்கு ஏற்ப, அவர்கள் தீர்ப்பு வழங்கவும் வசதியாயுள்ளது. அதனால் இந்த நீதி மன்றங்களை முற்றிலும் புறக்கணிப்பதற்கில்லை. வேண்டுமென்றால் சில சீர்திருத்தங்களைக் கொண்டுவரலாம் என்று சிலர் கருதுகின்றனர். இந்த கவுரவ நீதிபதிகள் வழங்கும் தீர்ப்புகளில் மனிதாபிமானத்

தன்மையும், நல்ல பொது அறிவும் நிரம்பியுள்ளன என்பதையும் பார்க்கின்ற பொழுது, இந்த நீதிபதிகள் தொடர்ந்து பணியாற்று வதில் எதுவும் நஷ்டம் ஏற்படுவதில்லை என்று கருதுகின்றனர். ஜூரி (Jury) முறை என்பது நீண்டகாலமாகவே இங்கிலாந்து நாட்டில் நீதி மன்றங்களோடு இணைந்து போன ஒரு பழக்கமாக இருக்கின்றது. ஜூரி முறை இப்பொழுதுள்ள நவீன சூழ்நிலையில் அவசியம் தானா என்று கேட்கின்றனர். 21 வயதுள்ள ஆண், பெண் 60 வயதிற்குள் ளாக இருந்தால், அவர்களுக்கு சில சொத்துரிமைகள் இருந்தால், அவர்கள் ஜூரர்களாக (Jurer) பணியாற்றத் தகுதி பெறுகின்றனர். வாக்காளர் பட்டியலில் அவர்களுடைய பெயர்களுக்கு முன்னர் 'ஜூராக' இருக்கத் தகுதி பெற்றவர்கள் என்பதைக் குறிப்பிட 'ஜே' (J) என்ற எழுத்து குறிப்பிடப்பட்டுள்ளது. ஆனால் பிரபுக்கள், பாராளுமன்ற உறுப்பினர், நீதிபதிகள், அமைதி கான நீதிபதிகள் வழக்கறிஞர்கள், டாக்டர்கள், இராணுவ அதிகாரிகள், மத குருமார்கள் ஆகியோருக்கு ஜூரராகப் பணியாற்றுவதிலிருந்து விதிவிலக்கு அளிக்கப்பட்டிருக்கிறது. 1949-முதல் ஜூரர்களாகப் பணியாற்றுகிற வர்கள் போக்குவரத்துச் செலவுகளையும், மற்றும் அவர்களுடைய சம்பாத்தியம் இழக்கப்படுவதால் அவர்களுக்கு நஷ்ட ஈடும் கொடுக்கப் படுகின்றன.

சிவில் வழக்குகளில் ஜூரி முறை பயன்படுத்தப்படுவது தேவை யில்லை என்று அபிப்பிராயப்படுகின்றனர். ஏனெனில் பல சிவில் வழக்குகளில் எழும் சட்ட பிரச்சினைகளை ஜூரர்களால் புரிந்து கொள்ள முடியாது என்று கருதுகின்றனர். சாதாரண மக்களுககு சில வழக்குகளில் எழும் சிக்கலானப் பிரச்சினைகளைப்புரிந்துகொள்வது கடினமாகத்தான் இருக்கும். குறிப்பாக நஷ்ட ஈட்டுத் தொகைகளை ஒரு வழக்கில் மதிப்பிடும் பொழுது ஜூரர்களின் முடிவுகள் குறை பாடுகளுடையவயாக இருக்கும். ஏனெனில் ஜூரர்களின் மதிப்பீடு, பெரும்பாலும் அவர்களுடைய வாழ்க்கைத் தரத்தை அளவுகோலாக வைத்துத் தான் அளவிடப் படுகின்றது என்று கருதப்படுகிறது ஜூரர்களுக்குள்ள தகுதிகளும் பெரும்பாலும் தீர்ப்புகளைப் பாதிக்கும் அளவில் இருக்க முடியும். ஏனெனில் பெரும்பான்மையான ஜூரர்கள் கீழ் நடுத்தர வகுப்பிலிருந்து தேர்ந்தெடுக்கப்படுகிறார்கள் அவர்கள் பெரும்பாலும் கன்சர்வேடிவ் கட்சி சார்புடையவர்களாகவே உள்ளனர். மற்றும் பெண்களைக் காட்டிலும் ஆண்களே ஜூரர் பதவிக்கு நியமனம் செய்யப்படுகின்றனர். சொத்துடமை அவர்களுக்கு இருக்கின்ற ஒரே காரணத்தால், அவர்களுக்கு அறிவும் அனுபவமும் உள்ளன என்று கருதுவதற்கில்லை. இவ்விதம் பல குறைகளை இந்த ஜூரி முறையில் உள்ளன என்று எடுத்துக் காட்டுகின்றனர். இவ்வளவு குறைகளை

எடுத்துக் கூறிய போதிலும் இந்த ஜூரி முறையில் மக்கள் மிக நம்பிக்கை வைத்துள்ளனர். முன்னர் அரசாங்கத்தின் கொடுமைக்கு ஜூரி முறை ஒரு பாதுகாப்பாக அமைந்திருந்தது. குறிப்பாக, அவதூறு, மானநஷ்டம், அல்லது தேசத் துரோகம் ஆகிய வழக்குகளில் ஜூரர்கள் முடிவுகள் அவசியம் தேவைப்படுகின்றன. ஏனெனில் சாதாரண மக்கள் கருத்துகளின் அடிப்படையில் தான் அவர்களுடைய முடிவுகளும் இருக்க முடியும். ஜூரர்கள் அவர்களுடைய தீர்ப்புகளில் தவறுகளை இழைத்தால், பெரும்பாலும் குற்றவாளிகள் பக்கமாகத் தான் அத் தவறுகள் சாருகின்றன. ஜூரர்களாகப் பணியாற்ற நியமனம் செய்யப்படுபவர்கள், மிகவும் சாதாரண மக்களே யாவர். அவர்களுக்கும் அரசாங்கப் பணிகளில் பங்கெடுத்துக் கொள்ளும் வாய்ப்புகள் பல நூற்றாண்டுகளாகவே பிரிட்டனில் அளிக்கப்பட்டுள்ளன. அதனால் ஜூரி முறையை முற்றிலும் கலைத்து விடுவதைக் காட்டிலும், ஜூரர்களாகப் பணியாற்றுகிறவர்கள் கல்வி அறிவுடையவர்களாக இருத்தல் நலம் என்று கருதப்படுகிறது,

நீதிபதிகள், பிரதம அமைச்சரின் ஆலோசனையின் பேரிலோ, அல்லது சான்சலர் பிரிவின் ஆலோசனையின் பேரிலோ, அரசியாரால் நியமனம் செய்யப்படுகின்றனர். மேல் முறையீட்டு நீதிபதிகள் அரசியாருக்கும், பிரதம நீதிபதியும், மற்ற உயர் நீதி மன்றங்களின் தலைமை நீதிபதிகளும் பிரதம அமைச்சருக்கும், மற்ற உயர் நீதி மன்ற நீதிபதிகள் சான்சலர் பிரபுவிற்கும் பொறுப்புள்ளவர்களாகப் பணியாற்றுவர். சமீப காலம் வரையிலும், நீதிபதிகள் நியமனம் செய்யப்படும் பொழுது அரசியல் கட்சிகளின் தலையீடு இருந்தது. ஆனால் நீதிபதிகள் சுதந்திரமாகப் பணியாற்ற வேண்டுமென்றால் அவர்களுக்கும் அரசியல் கட்சிகளால் தலையீடு இருக்கக் கூடாது; நீதிபதிகளும் அரசியலிருந்து ஒதுங்கியிருத்தலே நல்லதாகும். வழக்கறிஞர்கள் அரசியல் கட்சிகளில் பங்கெடுத்துக் கொண்டவர்களாக இருந்தபோதிலும், அவர்கள் நீதிபதிகளாக நியமனம் செய்யப்பட்டதற்குப் பின்னர், அரசியலிலிருந்து விலகிக் கொள்கின்றனர். ஏனெனில் வழக்கறிஞர்கள் நீதிபதிகளாக நியமனம் செய்யப்படுவதை, அவர்கள் தொழிலில் உச்சநிலை அடைந்து விட்டதாகவே கருதுவர்.

நீதிபதிகள் மீது பொதுவாக மக்கள் கூறும் குறைபாடு என்னவெனில், அவர்கள் பழமையை விரும்புகிறவர்கள் என்பதேயாகும். அவர்கள் தங்களை ஒரு தனி இனமாகக் கருதிக் கொள்கின்றனர். எந்த சீர்திருத்தத்தையும் அறிவிக்கும் அதிகாரம் பெற்றவர்கள் அவர்களேயாவர், ஆனால் உண்மையென்னவெனில், எந்தச் சீர்திருத்தத்தைக் கொண்டுவந்த போதிலும், அதற்கு அவர்கள் சிறிதும்

காரணமாக இருந்ததில்லை. சமுதாயத்தில் மிகவும் உயர்ந்த நிலையில் உள்ளவர்களாக அவர்கள் கருதிக் கொள்கின்றனர். அதனால் மக்களிடையே எவ்வித மாற்றங்கள் ஏற்பட்டு வருகின்றன, என்பதை அவர்கள் உணராது உள்ளனர். நீதிபதிகளின் மகன்களே பெரும்பாலும் நீதிபதிகளாக நியமனம் செய்யப்படுகின்றனர். அவர்களுடைய பயிற்சியும் கூட, இங்கிலாந்தில் முன்னர் பின்பற்றப்பட்டு வந்த 'தலையிடாக் கொள்கை'யின் அடிப்படையில் தான் அவர்களுக்கு அளிக்கப்பட்டிருப்பதால், அவர்கள் பொதுச் சட்டத்தின் ஆதிக்கத்தில் தான் இன்னும் உள்ளனர் என்று குறை கூறுகின்றனர். ஆனால் நீதிபதிகள் மக்களிடத்தில் அதிகத் தொடர்பை வைத்துக் கொள்ளாதிருந்தாலும், ஒரு விதத்தில் நல்லது தான். ஏனெனில் அப்பொழுது தான் அவர்களுடைய சுதந்திரத்தையும் பாதுகாத்துக் கொண்டு, எவ்வித தலையீட்டிற்கும் இடமளிக்காது பணியாற்ற முடியும் என்ற கருத்தும் கூறப்படுகிறது.

## பிண ஆய்வாளர் நீதி மன்றங்கள் (Coroner's Courts)

12-வது நூற்றாண்டில் முதல் முதலாக ஆய்வாளர்கள், அரசரின் வருவாயைக் கணக்கிட நியமனம் செய்யப்பட்டனர். பின்னர் எதிர்பாராத மரணங்கள் ஏற்படும் பொழுது, மரணத்தை விளைவித்தவர்களின் சொத்துடைமைகள் பறிமுதல் செய்யப்பட்டு வந்தன. அதைப் போன்றே குதிரைகள், ஆடு மாடுகள், ஆகியவை இறந்த பொழுதும் இந்த ஆய்வாளர்கள் விசாரணை செய்து வந்தனர். பின்னர், இந்த ஆய்வாளர்களின் முக்கியமான பணி, எதிர்பாராத மரணங்கள் ஏற்பட்டால், அவற்றை விசாரணை செய்ய வேண்டியதாகிவிட்டது. இந்த விசாரணைகளைச் செய்யும் ஆய்வாளர்கள் வழக்கறிஞர்களாகவோ அல்லது மருத்துவர்களாகவோ இருக்க வேண்டும். அவர்கள் கவுண்டி கவுன்சில் (County Council) அல்லது பரோ கவுன்சில் (Borough Council) ஆகிய உள்ளாட்சி அரசாங்கத்தால் நியமனம் செய்யப்படுவர். அவர்கள் பிணப் பரிசோதனை செய்கின்ற பொழுது மரணத்திற்கான காரணத்தைச் சரியாகத் தெரிந்து கொள்ள முடியவில்லையெனில், பிணப் பின்னாய்வு செய்ய உடலை அனுப்பி வைப்பர், அவர் பிணப் பரிசோதனையைச் செய்யும் பொழுது ஏழு முதல் பதினோறு நபர்கள் வரையிலும் உள்ள ஜூரிகள் அங்கு இருப்பர். பிண ஆய்வாளரின் நீதி மன்றமும், ஒரு சாதாரண நீதி மன்றத்தைப் போன்றதென்றாலும், அந்த நீதி மன்றம் ஒரு குறிப்பிட்ட முடிவுக்கு வருவதில்லை. இருந்தபோதிலும் மரணத்திற்குக் காரணமாக இருந்தவனை கைது செய்ய ஆணையிடலாம். இவ்விதம் செய்வதால், குற்றம் சுமத்தப்பெற்றவனுக்கு பாதகமான விளைவுகள் ஏற்படுகின்றன. ஏனெனில் குற்றம் சுமத்தப்பெற்றவன்

அவனுடைய சாட்சியங்களை வழக்கறிஞர் மூலமாகப் பிரதிபலிக்க முடியாத நிலை அவனுக்கு அப்பொழுது ஏற்படுகிறது. அதனால் கொலைக் குற்றத்திற்காக காவலர் ஒருவன் மீது சந்தேகப்பட்டு, குற்றஞ் சுமத்தினால், அந்த வழக்குத் தீரும் வரையிலும் ஆய்வாளர்களின் விசாரணை தள்ளி வைக்கப்படும். ஆனால் காவலர் குற்றவாளியின் மீது குற்றம் சுமத்துகின்ற பொழுதோவெனின் ஆய்வாளர்களின் விசாரணையும் தொடர்ந்து நடைபெறுகிறது என்பதையும் சுட்டிக் காட்டுகின்றனர்.

## சட்டத்தின் இறைமை அல்லது சட்டத்தின் ஆட்சி (Rule of Law)

மக்களை ஆட்சி செய்வதற்கு அரசாங்கத்திற்கு சில அதிகாரங்கள் கொடுக்கப்பட்டுள்ளன. ஆனால் அதே சமயத்தில் மக்களின் உரிமைகளைப் பாதுகாத்துக் கொள்ள சட்டங்களும் இயற்றப்பட்டுள்ளன. அரசாங்கத்தின் கொடுமையிலிருந்து பாதுகாத்துக் கொள்வதற்காகவே மக்களுக்கு சில சட்டங்கள் இயற்றப்பட்டுள்ளன. அதனால் மக்களின் அடிப்படை உரிமைகள் பாதுகாக்கப்பட வேண்டுமென்றால், அரசாங்கம் இச் சட்டங்களை மதித்து நடக்க வேண்டும். அதனால்தான், அரசாங்கமும், மக்களும் சட்டத்தை மதித்து நடக்க வேண்டிய அவசியம் ஏற்படுகிறது. இன்றிருந்து நாளை மாறிப் போகின்ற அரசாங்கத்தைக் காட்டிலும் சட்டங்களே நிரந்தரமான தனித்தலைமை பெற்றவை என்ற கொள்கையையே சட்டத்தின் ஆட்சி அல்லது சட்டத்தின் இறைமை என்று கூறுவார்கள்.

இங்கிலாந்தில், பேருரிமைப் பட்டயம் (1215), உரிமைகள் விண்ணப்பம் (1628), ஆகியவையெல்லாம் கொண்டுவரப் படுவதற்குக் காரணம், அரசர்கள் நாட்டின் பொதுவான சட்டத்தைப் புறக்கணித்து, அவர்கள் விருப்பம் போன்று ஆட்சி செய்ய முற்பட்டதனாலேயேயாகும். அப்பொழுது பாராளுமன்றம் நாட்டின் சட்டத்தை மதிக்க வேண்டும் என்று ஸ்டுவர்ட் அரசர்களுக்கு உணர்த்தியது. நாளடைவில் பாராளுமன்றம் அரசர்களின் அதிகாரங்களையெல்லாம் வரையறுத்து, மக்களின் உரிமைகளைப் பாதுகாக்க வேண்டிய பொறுப்பை ஏற்றுக் கொண்டது. பிரிட்டனில் இப்பொழுது வளர்ச்சியடைந்துள்ள அரசியல் அமைப்பு, சட்டத்தின் இறைமையை ஏற்றுக் கொண்டுள்ளது. இந்த சட்ட ஆட்சியினால் மக்கள் தங்களை அரசாங்கத்தின் கொடுமைகளிலிருந்து பாதுகாத்துக் கொள்வது மட்டுமின்றி, மற்றவர்களின் தொல்லைகள், கொடுமைகள், ஆகியவற்றிலிருந்தும் பாதுகாத்துக் கொள்ள வழி ஏற்படுகிறது.

ஏ. வி. டைசி (A. V. Dicey) என்பவர், 19-வது நூற்றாண்டின் இறுதியில் 'சட்ட ஆட்சி'யைப் பற்றிக் கூறுகின்ற பொழுது, 'ஆங்கிலேய அரசியல் அமைப்பின் அடிப்படைக் கருத்தே சட்டத்தின் இறைமையாகும்'. என்று கூறுகிறார். மேலும் அவர் சட்ட ஆட்சியை 3 வகைகளாகப் பிரிக்கிறார்.

1. 'நாட்டின் ஆதாரபூர்வமான சட்டத்தை ஒருவன் மீறுகின்ற பொழுது, அவனை சட்டபூர்வமாக அமைக்கப் பெற்ற நீதிமன்றங்கள் தான் விசாரணை செய்து தண்டிக்க வேண்டுமேயின்றி, வேறு எவராலும் எவ்வாற்றேனும் அவன் தண்டிக்கப்படவோ, அல்லது கொடுமைப் படுத்தபடவோ, அல்லது பொருள்களை இழக்கவோ கூடாது'.

சட்டத்தின் முக்கியதுவத்தை டைசி கூறுகிறார். ஒருவன் தண்டிக்கப்படுவதற்கு மூன்று நிபந்தனைகள் நிறைவேற்றப்பட வேண்டும். அதாவது (1) அவன் சட்டத்தை மீறியிருக்க வேண்டும். (2) அந்தக் குற்றச் சாட்டு சட்டப்படி நிரூபிக்கப்பட வேண்டும். (3) நாட்டிலுள்ள சாதாரண நீதி மன்றங்களில் அவன் குற்றச் சாட்டுகள் நிரூபிக்கப்பட்டு உறுதிபடுத்தப்பட வேண்டும். இந்த மூன்று நிபந்தனைகளும் ஒரே காலத்தில் நிறைவேற வேண்டும் டைசி கூறுகின்ற இந்த நிபந்தனைகளெல்லாம் இப்பொழுது மிகச் சாதாரணமானவையாகும். ஆனால் சிறிது காலத்திற்கு முன்னர், வரலாற்றைத் திருப்பிப் பார்த்தால் ஒருவனைத் தண்டிக்குமுன்னர் இது போன்று செய்யப் படுவதில்லையென்று தெரியும். சர் வால்டர் ரேலே (Sir Walter Raleigh) என்பவர் மீது எவ்வித குற்றச்சாட்டும் சுமத்தப்படாமலேயே அவர் சிறை தண்டனை பெற்று வந்தார். 1627-ல் அரசரின் தனிப்பட்ட ஆணை இருந்தாலே போதும், ஒருவனை சிறைக்கு அனுப்பலாம் என்று நீதிபதிகளே ஒப்புக் கொண்டனர். அதனால் தான் 1628-ல் உரிமைகள் விண்ணப்பத்தைப் பாராளுமன்ற உறுப்பினர்கள் தயாரித்தனர். அந்த உரிமைகள் விண்ணப்பத்தில், 'யாரையும் காரணமின்றி சிறை வைக்கக்கூடாது' என்று அவர்கள் வற்புறுத்திக் கூறினர். மற்றும் நாட்டிலுள்ள சாதாரண நீதி மன்றங்களைத் தவிர, அரசரின் சில பிரத்தியோக நீதிமன்றங்களான, ஸ்டார் சேம்பர் நீதிமன்றம், (Star Chamber Court) அரசரின் ஹை கமிஷன் நீதிமன்றம் (The King's High Commisson Court) ஆகியவை செயலாற்றும் முறையை பாராளுமன்ற உறுப்பினர்கள் 1641-ல் வன்மையாகக் கண்டித்தனர். 1679-ல் ஹேபியஸ் கார்ப்பஸ் சட்டம் அல்லது ஆளுரிமை காப்புச் சட்டம் இயற்றப் பெற்ற பின்னர், இன்னும் அதிக பாதுகாப்பு மக்களுக்கு அளிக்கப்பட்டது. 1701-ல் இயற்றப் பெற்ற வாரிசுரிமை நிர்ணயச் சட்டம் நீதிபதிகள் நிர்வாகிகளின் ஆதிக்கத்திலிருந்து பாதுகாப்புப் பெற வழி செய்தது.

2. 'சட்டத்தைக் காட்டிலும் யாரும் பெரியவரல்ல. அவர் எந்த பதவியிலிருந்தாலும் சரி, அல்லது எந்த நிலையிலிருந்தாலும் சரி நாட்டின் சாதாரணச் சட்டத்திற்கு அவர் கட்டுப்பட்டவரேயாவர். சாதாரண நீதி மன்றங்களின் வரம்பிற்கு அவர் உட்பட்டவரேயாவர்'. டைசியின் இந்தக் கூற்றிலிருந்து, மக்கள் எவ்வித நிலையில் இருந்தாலும், எவ்வித பதவிகளை வகித்தாலும், வேறுபாடின்றி சட்டத்தின் பிடிக்குள் உட்பட்டவர்களேயாவர் என்பது நன்கு பெறப்படுகின்றது.

3. நீதி மன்றங்களில் மக்கள் உரிமைகளை நிர்ணயம் செய்தும், விளக்கம் கூறியும், அவற்றைப் பாதுகாக்கும் சட்டத்தைத்தான் அரசியல் அமைப்புச் சட்டத்தின் மூலமாகக் கருத வேண்டுமே தவிர மற்ற நாடுகளிலுள்ளது போல் ஏற்கனவே எழுதப் பெற்ற சட்டத்தை அரசியல் அமைப்பின் மூலம் என்று கருதக் கூடாது என்று டைசி கூறுகிறார். சான்றாக, அமெரிக்க ஐக்கிய நாட்டின் அரசியல் அமைப்பில் எழுதப் பெற்றுள்ள 'மக்கள் உரிமைகள் அறிவிப்பை' (Declaration of Rights) அடிப்படையாக வைத்துக் கொண்டு, ஆங்கிலேய மக்கள் அமெரிக்கர்கள் தங்களது உரிமைகளைப் பாதுகாத்துக் கொள்வதுபோல் தங்களது உரிமைகளைப் பாதுகாத்துக் கொள்ள முடியாது என்ற பொருள்பட அவர் கூறுகிறார்.

டைசியின் மேற்கூறிய மூன்று அடிப்படைக் கொள்கைகள் தான் ஆங்கிலேய அரசியல் அமைப்பு ஏற்படுவதற்குக் காரணமாக இருந்தன என்பதை பலர் ஒப்புக் கொள்வதில்லை. சட்டத்தின் ஆட்சி மட்டும் ஆங்கிலேய அரசியல் அமைப்பு ஏற்படுவதற்குக் காரணமில்லை என்று கூறி சர் ஐவர் ஜென்னிங்ஸ் (Sir Ivor Jennings) என்பவர் டைசியின் கருத்துகளிலிருந்து மாறுபடுகிறார். டைசியின் கருத்துகள் பெரும்பாலும் அவர் வாழ்ந்த காலத்தில் இருந்த சூழ்நிலையைப் பொறுத்தும், அவருடைய வழக்கறிஞர் அனுபவங்களையும் பொறுத்தே உருவாக்கப் பட்டிருக்க வேண்டும். தவிர அப்பொழுது அரசாங்கம் பின்பற்றி வந்த தலையிடாக் கொள்கையும் அவருடைய கருத்துகளை உருவாக்கி யிருக்கக் கூடும். அதனால்தான் டைசி (Dicey) தனிப்பட்ட மக்களின் உரிமைகளுக்கு அதிக முக்கியத்துவம் அளிக்கிறார். தனிப்பட்டவர் களின் உரிமைகளில் அரசாங்கம் தலையிடக் கூடாது என்பதுதான் அவருடைய முக்கியமான கருத்தாகும். டைசி வாழ்ந்த காலத்திற்குப் பின்னர் புதிய அரசியல், பொருளாதாரக் கோட்பாடுகள் வளர்ந்து விட்டன. சோஷியலிசக் கோட்பாடுகள் மக்களை மிகவும் கவர்ந்துள்ளன. தவிர அரசாங்கமும் சமுதாயத்திற்கு அதிக உரிமைகளை ஏற்படுத்து வதற்காக, பல முக்கியமானதும், மக்களுக்கு அவசியமானதுமான சில தொழில்களை அரசுடைமையாக்கியுள்ளது. தனி மக்களின் உரிமைகளை

அரசாங்கம் பாதுகாக்க வேண்டுமென்றிருந்தாலும், சமுதாயத்தின் நலன்களையும் அரசாங்கம் பாதுகாக்க வேண்டியுள்ளது. திட்டமிட்ட பொருளாதார அமைப்பும், பொது நல அரசாங்கமும், அரசாங்கத்தின் கொள்கைகளாக இருக்கின்ற பொழுது, சில அதிகாரிகளுக்கு அரசாங்கம் தன் விருப்புரிமைகளைப் பயன்படுத்தும் அதிகாரங்களை அளித்துள்ளது. அவ்வித அதிகாரங்களை அதிகாரிகள் பயன்படுத்துகின்ற பொழுது ஒரு சிலர் பாதிக்கப்படுவர். அவர்கள் அதிகாரிகள் மீது வழக்குகளைத் தொடருவர். இங்ஙனம் அதிகாரிகள் மீது தொடருகின்ற வழக்குகள் அதிகரித்து வருகின்றன. அதனால் அதிகாரிகளுக்குப் பாதுகாப்பு அளிக்கும் வகையில் பல ஆட்சித்துறை நீதி மன்றங்கள் நிறுவப்பட, பாரர்ளுமன்றம் அனுமதித்துள்ளது. டைசி ஆட்சித்துறைச் சட்டத்தை பற்றி சிறிதும் சிந்தித்துப் பார்த்ததாகவே தெரியவில்லை என்றும், இந்த ஆட்சித் துறைச் சட்டம், ஃபிரான்சில் உள்ளதைப் போன்று மிக முக்கியமானதாகக் கருதப்படவில்லையென்ற போதிலும் இங்கிலாந்திலும், பல நூற்றாண்டுகளாகவே ஆட்சித் துறைச் சட்டம் பின்பற்றப் பட்டு வருகிறது என்று சர் ஐவர் ஜென்னிங்ஸ் அபிப்பிராயப்படுகிறார்.

நாட்டின் அரசியல் அமைப்பு சட்ட ஆட்சியை நம்பியே உருவாக்க பட்டுள்ளது என்ற டைசியின் கூற்றை சர் ஐவர் ஜென்னிங்ஸ் ஏற்றுக் கொள்ள மறுக்கிறார். ஏனெனில் ஏற்கனவேயுள்ள சட்டங்களின்படி நீதி மன்றங்கள் தீர்ப்பு அளிக்கின்றன. ஆனால் சட்டங்கள் மாறிக் கொண்டே உள்ளன. புதிய மாற்றங்களுக்கு ஏற்ப புதிய சட்டங்கள் உருவாக்கப்படுகின்றன. அதனால் எந்தச் சட்டத்தையும் இயற்றவும், எந்தச் சட்டத்தை மாற்றவும், ரத்து செய்யவும் பாராளுமன்றத்திற்கு முழு அதிகாரம் உள்ளது. பாராளுமன்றம் இயற்றும் சட்டங்கள் நல்ல சட்டங்களாகவும் இருக்கலாம்; சில கெட்ட சட்டங்களாகவும் இருக்கலாம். அவற்றைத்தான் நீதி மன்றங்கள் பின்பற்றி தீர்ப்புகளை அளித்து வருகின்றன. அதனால் சட்ட ஆட்சியின் அடிப்படையில் அரசியல் அமைப்பு உருவாக்கப் பெற்றது என்று கூறுவதற்குப் பதிலாக பாராளுமன்றத்தின் ஆதிக்கமே அரசியல் அமைப்பின் அடிப்படைக் கருத்தாக இருக்க வேண்டுமென்று ஐவர் ஜென்னிங்ஸ் **(Sir Ivor Jennings)** கருதுகிறார்.

சட்ட ஆட்சிக்கு ஒரு திட்டவட்டமான விளக்கத்தைத் தரமுடியாது திட்டவட்டமான விளக்கத்தைக் கொடுக்க முடியாது என்ற காரணத்தால் மட்டும், சட்ட ஆட்சி இல்லை என்றும் கூறிவிட முடியாது. சர் ஐவர் ஜென்னிங்ஸ் கருத்துகளை அப்படியே ஏற்றுக் கொண்டால் ஆங்கிலேய நிறுவனங்களின் வளர்ச்சிக்கு சட்ட ஆட்சியின் செல்வாக்கு இல்லை என்று கூறுவதாகும். ஆனால் சட்ட ஆட்சியும், ஆங்கிலேய

நாட்டின் அரசியல் அமைப்பு வளர்ச்சியுறுவதற்கு ஒரு அடிப்படைக் காரணமாக அமைந்துள்ளது. மக்களின் உரிமைகள் பாதுகாக்கப்பட வேண்டும் என்றால் சட்ட ஆட்சி கண்டிப்பாக ஒருவகையில் பின்பற்றப்பட்டுத்தான் ஆக வேண்டும். ஏனெனில் நீதி என்பது எல்லாருக்கும் ஒரே மாதிரியாக வழங்கப்பட வேண்டும். அதில் மக்களின் ஏற்றத் தாழ்வுகளைப் பொறுத்து வேறுபாடுகள் இருத்தலாகாது. நீதிபதிகள் பகிரங்கமாக விசாரணை செய்ய வேண்டும். இரு தரப்பினருக்கும் சமமான வாய்ப்புகளை அவர்களுடைய வழக்குகளை வாதாட அளிக்க வேண்டும். தீர்ப்புகள் அங்கீகரிக்கப் பெற்ற சட்டங்களின் அடிப்படையில் சாதாரண பொது நீதி மன்றங்களில் அளிக்கப்பட வேண்டுமென்பதும் சட்டத்தின் முன்னிலையில் அரசனும் ஆண்டியும் ஒன்று என்பதும் இப்பொழுது மறுக்கப்படுவதில்லை. அதனால் சட்டத்தின் ஆட்சி இன்னும் இங்கிலாந்தில் பின்பற்றப் பட்டுத்தான் வருகிறது. குற்றச் சட்டங்களும், பொருள்துறைச் சட்டங்களும் டைசி காலத்தில் பின்பற்றப்பட்டதைப் போன்றுதான் இன்னும் பின்பற்றப்பட்டு வருகின்றனர். ஆனால் திட்டமிட்ட பொருளாதார அமைப்பு, பொது நல அரசாங்கம் ஆகிய புதிய கொள்கைகளைப் பின்பற்றியதற்குப் பின்னர், தனிப்பட்டவர்களின் உரிமைகள் சிறிது பாதிக்கப்படத்தான் செய்கிறது. அண்மையில் ஒப்படைக்கப்பெற்ற சட்டமியற்றும் உரிமைகள் ஆட்சித் துறைகளுக்கு அதிகமாக வழங்கப்பட்டிருப்பதால் புதிய சட்டங்கள் மாறிவரும் சமுதாய சூழ்நிலைக்கேற்ப இயற்றப்படுகின்றன. அதனால் மட்டும் சட்ட ஆட்சியின் அடிப்படைத் தன்மை முற்றிலும் அழிந்து விடவில்லை.

தனிப்பட்ட மனிதனின் சுதந்திரம், சட்ட ஆதிக்கத்தின் மூலமாகத்தான் கட்டுப்படுத்தப்பட வேண்டும். சட்டத்தைப் புறக்கணித்துவிட்டு அரசாங்கம் தன் விருப்பப்படி யார் மீதும் பழிவாங்குவதில்லை. அரசாங்கம் சில சட்டங்களை மாற்றி அமைக்க விரும்பலாம். ஆனால் அது அடிப்படைக் கருத்துகளை மாற்ற விரும்பாது. யாருடைய உரிமைகளையாவது அரசாங்கம் பாதிக்குமென்றால், அதற்குத் தக்க காரணங்களும் இருக்கும். தக்க காரணங்கள் இருக்கின்ற பொழுது, எந்த அளவிற்கு தனிப்பட்ட மனிதனின் உரிமை பாதிக்கப்பட்டிருக்கிறதோ அந்த அளவிற்கு நஷ்டஈடும் அரசாங்கம் சட்டத்தின் மூலம் அளிக்கலாம். சான்றாக, மிகவும் நெருக்கடியான காலத்திலோ அல்லது போர்க் காலத்திலோ, அரசாங்கம் சில சமயங்களின் தனிப்பட்டவர்களின் உரிமைகளில் தலையிட வேண்டிய அவசியம் எழுகிறது. ஏனெனில் போர் ஏற்படும் பொழுது சில முக்கியமான இடங்கள், போர் பயிற்சிக்கோ அல்லது இராணுவ தளங்கள் அமைக்கவோ வேண்டியிருக்கும் என்றால், அரசாங்கம் பொதுப்படையான சமுதாய

பாதுகாப்பிற்காக அவற்றை கைப்பற்ற நேரிடலாம். அதனுல் பாதிக்கப்பட்டவர்களுக்கு நஷ்டஈடும் அளிக்கலாம். சமுதாயத்திற்குப் புறம்பாக, தனிப்பட்டவர்களின் உரிமைகளும், நலன்களும் அவ்வளவு முக்கியத்துவம் வாய்ந்ததல்ல.

நீதியும் ஒரு முடிவானதாக இருக்க வேண்டும். அந்த நீதி சட்டத்தின் அடிப்படையில் தான் வழங்க வேண்டும். நீதி அரசாங்கத்தின் கொள்கைகளுக்காக மட்டும் மாற்றப்பட்டு வழங்குவது சரியானதாகாது. அதனுல்தான் நீதிபதிகள் அரசியல்வாதிகளின் தலையீட்டிற்கு முக்கியத்துவம் அளிக்காமல், சுதந்தரமாக நீதி வழங்க அவர்களுக்கு பாதுகாப்பு அளிக்கப்பட்டிருக்கிறது. அவர்கள் நடு நிலையில் இருந்து சட்டத்தின் அடிப்படையிலும், இயற்கை நீதியின் அடிப்படையிலும் நீதி வழங்குகிருர்கள்.

எந்தச் சட்டமும் மக்களின் தேவைகளுக்காகவும், அவர்களின் பாதுகாப்பிற்காகவும் இயற்றப்படுகின்றது. மக்களது விருப்பத்திற்கு மாருன சட்டங்கள், பயனற்றவையாகி விடுகின்றன. மக்களின் விருப்பம் மிகவும் முக்கியமானது. ஓர் அமெரிக்க வழக்கறிஞர் கூறுவதைப் போன்று, 'சுதந்திரம் மக்களின் இதயங்களில் உள்ளது; அச் சுதந்தரம் அங்கு இறந்து விட்டதென்ருல், எந்த அரசியல் அமைப்பும், எந்தச் சட்டமும், எந்த நீதி மன்றமும் அதைக் காப்பாற்ற முடியாது,' மக்களாட்சிக் கோட்பாடு அரசாங்கத்தின் கொள்கையாக இருந்தால், தனிப்பட்ட மக்களின் உரிமைகள் சட்டத்தின் மூலமாக பாதுகாக்கப்படும். சோஷியலிச கோட்பாடு அரசாங்கத்தின் கொள்கையாக இருந்தால், சமுதாயத்தின் நலன்கள் சட்டத்தின் மூலமாகப் பாதுகாக்கப்படும். எந்த அரசாங்கம் எந்தக் கொள்கையைப் பின்பற்றும் அல்லது மக்கள் முன்னேற்றம் எப்படி இருக்கும் என்பதை அடிப்படையாகக் கொண்டு தான் 'சட்டத்தின் ஆட்சி' எவ்வித முக்கியத்துவம் பெறுகிறது என்பதை நிர்ணயம் செய்ய முடியும்.

# 13. உள்ளாட்சித் துறை

## (LOCAL ADMINISTRATION)




பிரிட்டன் ஒரு சிறிய நாடு. அத்துடன் ஒருமுக அரசாங்கத்தைப் பின்பற்றுகிறது. மற்றைய நாடுகளைப் போன்று அந்த நாட்டில் பெரும் மொழி வேறுபாடுகளோ, அல்லது சமய வேறுபாடுகளோ, அல்லது இன வேறுபாடுகளோ இல்லை. மத்திய அரசாங்கம் எல்லாத் துறைகளிலும் நல்ல அளவில் கட்டுப்பாட்டை ஏற்படுத்தியுள்ளது. அண்மையில் மத்திய அரசாங்கத்தின் கட்டுப்பாட்டிற்குள், உடல் நலம் இரவலர் நிவாரணம், மற்றும் நகராட்சிப் பணிகள் வந்த உடன், ஏன் இன்னும் உள்ளாட்சித் துறையை நீடித்திருக்க வேண்டும் என்ற கேள்வி எழுகிறது. உள்ளாட்சித் துறையை சீர்குலைத்து விட்டால்

அதனால் என்ன நஷ்டம் ஏற்படப் போகிறது என்று சிலர் கேட்கிறார்கள்.

உள்ளாட்சித் துறையை நீடித்திருப்பதால் சில நன்மைகள் இருக்க தான் செய்கின்றன. உள்ளாட்சி, அரசாங்கங்கள் இருப்பதால் அந்த உள்ளூர்களில் உள்ள பழக்க வழக்கங்களுக்கு ஏற்பவும், தன்மைகளுக்கு ஏற்பவும் ஆட்சி நிகழ்கின்றது. கிராமப்புறப் பகுதிகளில் அங்கு வாழும் பல்வேறு மக்களுக்கேற்ப பள்ளிகள் நிறுவப்பெற்றுள்ளன. நகரங்களுக்கும், கவுண்டிகளுக்கும் திட்டங்கள் ஒரே மாதிரியாக அமைவதில்லை. ஒரு கிராமப் புறப் பகுதிக்கும் மற்றொரு கிராமப் புறப் பகுதிக்கும் உள்ள காவலர் தேவைகள் மாறுபட்டுள்ளன. அதனால் இந்தத் தேவைகளையெல்லாம் உள்ளாட்சி அரசாங்கம் நிர்ணயம் செய்து கொள்கிறது. ஒவ்வொரு கிராமப் புறப் பகுதியிலும், அவர்களுக்கே உரிய சில குறைபாடுகள் உள்ளன. சில கிராமப் புறங்களில் பள்ளிகளுக்குச் சரியான கட்டடங்கள் இருக்காது; அல்லது நல்ல ஆசிரியர்கள் கிடைக்க மாட்டார்கள். சில கிராமப் புற நகரங்களில் மக்கள் தொகை அதிகமாக இருக்கும். அதனால் இட நெருக்கடி ஏற்படுகின்றது. நல்ல வீதிகள் இல்லாததால் பல விபத்துகள் ஏற்படுகின்றன. இளைஞர்களான குற்றவாளிகள் அதிகமாக உள்ளனர். அதனால் உள்ளாட்சி அரசாங்கம், அந்தந்த கிராமங்களுக்குரிய விவகாரங்களுக்கேற்ப திட்டங்களையும் நடவடிக்கைகளையும் மேற்கொள்ள வேண்டியுள்ளது. மத்திய அரசாங்கத்தின் ஆட்சி ஒரே மாதிரியாக இருக்கும். மற்ற கிராமப் புறங்களின், நகரங்களின், சில தனிப்பட்ட தன்மைகளுக்கேற்ப மத்திய அரசாங்கத்தின் ஆட்சி அமைய முடியாது. உள்ளூர்ப் பிரமுகர்களும், பிரதிநிதிகளும், மற்றும் உள்ளூர் அரசியல்வாதிகளும் அங்குள்ள மக்களிடம் நேரிடையான தொடர்பை ஏற்படுத்திக் கொள்ள முடியும். மற்ற அவர்களுடைய குறைகளைத் தீர்க்க முடியும். மற்ற மத்திய அரசாங்கத்தின் சட்டங்கள் ஒரே மாதிரியாகவும், நெகிழாத்தன்மையுடையவையாகவும் இருப்பதால், பல கிராமப் புற மக்களுக்குத் தேவைப்படும் ஆட்சியை அவர்களால் கொடுக்க முடிவதில்லை. கிராமப் புறங்களில் மத்திய அரசாங்கத்தின் ஆதிக்கம் ஒரு புறமும் இருந்தால் அதனால் பகைமை இந்த இரண்டு அரசாங்கங்களிடையே ஏற்படத் தேவையில்லை என்று கூறப்படுகிறது. பகைமை இல்லாமல் இரண்டு அரசாங்கங்களும் ஒன்றிணைந்து ஆட்சி செய்வது நன்மை அளிக்கின்றது.

கிராமப் புறங்களில் மத்திய அரசாங்கத்தின் நேரிடையான ஆட்சியிருந்தால், கிராமங்களில் உள்ள முக்கியமான பிரமுகர்கள் செல்வாக்கை இழந்து விடுவர். அவர்களுடைய தலைமையும், அந்தக்

கிராமத்து மக்களுக்குக் கிடைக்காது. அந்தந்த கிராமங்களிலுள்ள மக்களின் தனிப்பட்ட பெருமைக்கும் முக்கியத்துவத்திற்கும், வழி ஏற்படாது. அந்தந்த கிராம மக்களே உள்ளாட்சியில் அதிக பங்கெடுத்துக் கொண்டார்கள் என்றால் தான், மக்களுக்கும் திருப்தி ஏற்படும். கிராமங்களில் உள்ள அரசியல் கட்சித் தலைவர்கள், அரசியல் கோட்பாடுகளைப் பற்றி அதிகமாகக் கவலைப்படுவதில்லை. அரசியல் போட்டி யெல்லாம், பாராளுமன்றத் தேர்தலில் தான் அதிகமாகக் காணப்படுகிறது. கிராமங்களில் உள்ள பிரமுகர்கள் முக்கியமாக ஆட்சிமுறைகளைப் பற்றித் தான் அதிகக் கவலைப்படுகிறார்கள். கிராமப் புறங்களில் உள்ள ஆட்சிக் குழுக்கள் மிகவும் ஆர்வத்துடன் மக்களின் பிரச்சினைகளைக் கவனிக்கின்றன. அவர்களுக்கு அரசாங்கத்தில் பணியாற்ற நல்ல வாய்ப்புகள் கிடைக்கின்றன. கிராமப் புறங்களில் உள்ள பிரமுகர்கள் எல்லாம் அரசாங்கத்தின் ஆட்சித் துறையில் பங்கெடுத்துக் கொள்வதால், மத்திய அரசாங்கத்தில் பதவியிலுள்ள ஒரு சில கட்சித் தலைவர்கள் மட்டுமே முழு செய்வாக்கும், முழு ஆதிக்கம் பெறுவது தவிர்க்கப்படுகிறது. மக்களாட்சியில் ஒரு சிலர் மட்டும் ஆட்சியைச் செலுத்துவது விரும்பத் தக்கது அல்ல. பரவலாக ஆட்சித் துறையில் கிராமங்களில் உள்ள மக்கள் பங்கெடுத்துக் கொள்வது நல்லதாகும். உள்ளாட்சித் துறையில் நல்ல அனுபவம் பெறுவதால், அவர்கள் பாராளுமன்ற உறுப்பினர்களானால், அவர்களுக்கு அரசாங்க வேலைகளில் நல்ல திறமை ஏற்பட்டு விடுகிறது. தொழிற் சங்கங்களில் அனுபவம் பெறுகின்றவர்களின் அனுபவங்கள் வேறு விதமாக உள்ளன. அவர்களுடைய வேலைகளும் ஒரு குறிப்பிட்ட துறையைப் பொறுத்ததாகவே உள்ளது. உள்ளாட்சித் துறையில் பங்கெடுத்துக் கொள்கிறவர்கள் கிராமங்களில் நிகழும் தேர்தல்களில் பங்கெடுத்துக் கொள்கிறார்கள். அவர்கள் வெற்றி பெற்ற பின்னர், அங்குள்ள மக்களுடனும், குறிப்பாக வரி செலுத்துவோர்களுடன் தொடர்பு கொள்ள வேண்டியுள்ளது. அவர்களுடைய பல பிரச்சினைகளையும் கவனிக்க வேண்டிய பொறுப்பும் அவர்களுக்கு இருக்கிறது. அதனால் அரசியலில் மட்டுமல்லாது, ஆட்சித் துறையிலும் அவர்கள் அனுபவம் பெற நல்ல வாய்ப்புகள் கிடைக்கின்றன. உள்ளாட்சித் துறைகளில் பணியாற்றுகிறவர்களும் உள்ளூர் ஆட்களே ஆவர். அதனால் அவர்களுக்கு உள்ளூர் மக்களின் தேவைகளைப் பற்றி நன்கு தெரியும். அவர்களுக்கும் மத்திய அரசாங்கத் துறைகளுக்கும் தொடர்பு இல்லை. உள்ளூர் அதிகாரிகள் உள்ளூர் மக்களுக்குத் தான் அதிக ஆர்வத்துடன் பணியாற்றுகிறார்கள். மக்களும் உள்ளாட்சிக்குத் தான் அதிகமாகக் கட்டுப்பட்டு நடக்கின்றனர். அந்த அதிகாரிகளுடன் நெருக்கமான தொடர்பை வைத்துக் கொள்கின்றனர். ஓர் ஆங்கிலேயக் குடியேற்ற நாட்டில் எப்படி ஆட்சி நிகழ்கின்றது என்பதைப் பற்றி

கிராமத்து மக்கள் கவலைப்படுவதில்லை. அவர்களுடைய கிராமங்களில் உள்ள பள்ளிகள் எப்படி நடைபெறுகின்றன, எவ்விதம் அவர்களுடைய வீதிகள் பழுது பார்க்கப்படுகின்றன, என்பதைத் தான் அவர்கள் ஆர்வத்துடன் கவனிக்கின்றனர். கிராமங்களில் உள்ள குறைபாடுகளை உள்ளூர் பத்திரிகைகள் எழுதினால், காலதாமதமின்றி, உள்ளாட்சிக் குழுவின் தலைவர் அவற்றை நிவர்த்திக்க நடவடிக்கைகளை மேற்கொள்வார். கால தாமதம் தவிர்க்கப்படுகிறது என்பது உள்ளாட்சியில் காணப்படும் பெரும் நன்மையாகும். மத்திய அரசாங்கத்திற்கும் உள்ளாட்சித் துறைக்கும் ஒரு வகையில் அதிகாரங்கள் பகிர்ந்தளிக்கப் பெறுவது வரவேற்கத் தக்கதாகும். இரண்டு ஆட்சித் துறைகளுக்கும் சில சமயங்களில் அதிகாரங்களைப் பயன்படுத்தும் பொழுது மோதல் ஏற்பட்டாலும் கூட, மத்திய அரசாங்கம் எப்பொழுதும் ஆதிக்கம் செய்து கொண்டிருக்க முடியாது. கிராமப்புற மக்களின் தேவைகளையும் கவனித்து, உள்ளாட்சிக்கு ஆதரவு அளிக்க வேண்டியது மத்திய அரசாங்கத்தின் கடமையாகும். கிராமப்புற மக்களின் உணர்ச்சிகளையும் மத்திய அரசாங்கம் மனதில் கொள்ள வேண்டும்.

இருந்த போதிலும் உள்ளாட்சியில் உள்ள சில குறைபாடுகளையும் கவனிக்க வேண்டும். கிராமப் புற மக்கள் அரசியலில் அவ்வளவு அக்கறை எடுத்துக் கொள்வதில்லை. அதுவும் உள்ளூர் தேர்தல்களில் அவர்கள் அவ்வளவு உற்சாகம் உடையவர்களாகத் தெரியவில்லை. பாராளுமன்றத் தேர்தல்களில் காட்டுகிற உற்சாகத்தையும், ஆர்வத்தையும், உள்ளூர் தேர்தல்களில் கிராமப்புற மக்கள் காட்டுவதில்லை. உள்ளூர் தேர்தல்கள் நிகழும் பொழுது வாக்காளர்களில் பாதி அளவினர் கூட வாக்களிக்க முன்வருவதில்லை. உள்ளாட்சித் துறையிலும் அதிகார ஆதிக்கம் வளர்ந்து வருகிறது. உள்ளாட்சி மன்ற உறுப்பினர்களை அணுகி அவர்களுடைய குறைகளைத் தெரிவித்து அவற்றைத் தீர்த்துக் கொள்வதைக் காட்டிலும் அத் தொகுதியிலுள்ள பாராளுமன்ற உறுப்பினரிடம் அதே குறைகளைக் கூறி விரைவாகத் தீர்த்துக் கொள்ள முடியும் என்று கிராமப் புற மக்கள் இப்பொழுது நம்புகின்றனர். ஏனெனில் உள்ளாட்சி மன்றங்களுக்கு அளிக்கப்பட்டிருக்கும் அதிகாரங்கள் மிகவும் குறைவானதே என்று அவர்களுக்குத் தெரியும். கிராமங்களிலுள்ள சிறுபான்மையினத்தவரின் கோரிக்கைகளைத் தேசிய கட்சிகள், உள்ளூரிலுள்ள அதிகாரிகளைக் காட்டிலும் பெருந்தன்மையாகவும், தாராளமாகவும் பரிசீலனை செய்து முடிவு காண்கின்றனர். உள்ளூரிலுள்ள அதிகாரிகளும், உள்ளாட்சி மன்றக் குழுவினரும் சிறுபான்மையினரிடம் சிறிது கடுமையாகவே நடந்து கொள்கின்றனர் என்ற குறைபாடும் உள்ளது. சில சமயங்களில், உள்ளாட்சி மன்றங்களில் உள்ள குழுவினரும், மற்ற அதிகாரிகளும் திறமையில்லாதவர்

களாகவும், அனுபவமில்லாதவர்களாகவும் உள்ளனர் என்று கூறப்படு கிறது. ஆனால் அக் கூற்று முற்றிலும் உண்மையல்ல. உள்ளாட்சி மன்றங்களின் முக்கியத்துவத்தையும், அவர்களின் சேவைகளையும் குறைத்துக் கூறுவதற்கில்லை. உள்ளாட்சித் துறை மத்திய அரசாங்கத் தின் ஒத்துழைப்பைப் பெற்று நல்ல விதமாக ஆட்சியை நடத்த முடியும்.

**உள்ளாட்சியின் தோற்றம்.**

சாக்ஸன் (Saxon) பரம்பரையினர் ஆட்சி செய்த பொழுது கொண்டுவரப் பெற்ற கிராம ஆட்சி முறையே இன்னும் நீடித்து வருகிறது. கிராம ஆட்சி முறை ஒரே மாதிரியான அடிப்படையில் இங்கிலாந்தில் நிறுவப்படவில்லை. ஒவ்வொரு பகுதியிலும், ஒவ்வொருவிதமான ஆட்சி முறை இருந்து வருவதைக் காண்கிறோம், அந்நிலங்கள் இங்கிலாந்தின் ஆட்சி முறை பல விதங்களிலும் இருப்ப தையும்' ஆங்கிலேய அரசியல் அமைப்பு கிராமங்களின் ஆட்சியில் அதிக கவனம் செலுத்தாதையும் காணமுடியும். அவர்களுக்கு கிராம ஆட்சி முறைகளும், கிராமங்களின் அமைப்பையும் புரிந்து கொள்வது கடினமாக இருக்கும். ஒரு திட்டமிட்ட வகையில் கிராமங்களும், நகரங்களும் அமைக்கப்படவில்லை. கிராமப்பற்று, கிராமங்களில் உள்ள அந்தந்த மக்களிடையே அதிகமாக வளர்ச்சியுற்றதற்குக் காரணம், மக்களிடையே நெருக்கமான தொடர்புகள் ஏற்படுத்து வதற்கு அவர்களுக்கு முன்னர் நல்ல போக்குவரத்து வசதிகளும், நல்ல சாலைகளும் அமைக்கப்படாததேயாகும், கிராமப்பற்றுதலும், கிராமப் உணர்ச்சிகளும் அதிகமாக கிராம மக்களிடையே வேரூன்றியிருப்பதால், கிராம எல்லைகளையும் சரியாக நிர்ணயம் செய்வதில் பாராளுமன்றத்திற்கு இடையூறுகள் ஏற்பட்டன. ஒரு கிராமப் புற பகுதி நன்றாக வளர்ச்சியுற்றிருக்கும் பொழுது அண்மையிலுள்ள வளர்ச்சியுறாத ஒரு கிராமத்துடன் அவர்கள் இணைந்து கொள்ள விரும்பவில்லை. மற்றும் பல காரணங்களையும், அந்நிய நிலையிடுகளையும் கவனிக்கும் பொழுது கிராமப்புற மக்கள், அந்தக் கிராமத்தில், அவர்களுடைய ஆட்சியின் கீழ் தான் இருக்க விரும்பினர். பல கிராமங்களில் பள்ளிகள் வைத்து நடத்தப்படுகின்றன, அவர்களின் நடைமுறைகளில் பல வேறுபாடு களும் ஏற்பட்டுவிட்டன. பல பள்ளிகளுக்கு அரசாங்க மானிய உதவியும் அளிக்கப்படுகிறது அதனால் இப்பேர்பட்ட சில சலுகைகளை, கிராமத்து மக்கள் இழந்துவிட தயாராக இல்லை அதனால் அரசாங்கம் இது வரையிலும் சரியான மாற்றங்களை ஒரே விதமாக கொண்டுவர வேண்டுமென்று விரும்பவில்லை. இவ்விதம் பல சீர்திருத்தங்களை அரசாங்கம் கொண்டுவருவதால் எவ்வித நன்மை

யும் இல்லை, அல்லது அதற்குரிய பாராட்டுதலும் கிடைக்காது என்ற காரணத்தால், இந்த மாற்றங்களைக் கொண்டுவருவதில் தயக்கத்தைக் காட்டியது.

நார்மானிய அரசர்கள் இங்கிலாந்தின் மீது படையெடுத்த பொழுது, இங்கிலாந்தில் பல கிராமப் பிரிவுகள் அமைக்கப்பட்டிருந்தன. ஷயர்க்ள் (Shires) என்பன அவற்றுள் பெரியதோர் பகுதியாகும் ஒவ்வொரு ஷயரும் எல்டர்மேன் (Ealdorman) என்பவருடைய நிர்வாகத்தின் கீழ் இயங்கி வந்தது. ஒவ்வொரு ஷயரையும் பல ஹன்ட்ரட்களாகப் (Hundred) பிரித்திருந்தனர். ஒவ்வொரு ஹன்ட்ரட் பிரிவும் ஷயர் ரீவ் (Shire Reeve) என்பவருடைய நிர்வாகத்தின் கீழ் இயங்கியது. ஹன்ட்ரட் பிரிவையும், டன்கள் பேரிஷ்கள் (Parishes) என்று பிரித்திருந்தனர். ஒவ்வொரு (Tuns) அல்லது பேரிஷ் பகுதியும் ரீவ் (Reeve) என்பவருடைய நிர்வாகத்தில் இயங்கி வந்தது. பேரிஷ் பகுதி மேனர் பகுதியுடன் நெருங்கிய தொடர்பு பெற்றிருந்தது. பேரிஷ் பகுதியிலுள்ள கிராமத்து மக்கள் கோயில்களில் சந்தித்து அவர்களுடைய விவகாரங்களைப் பற்றிப் பேசிக்கொள்வர். அவர்களுடைய விவகாரங்கள் பெரும்பாலும் விவசாயத்தைக் குறித்தாகத்தானிருக்கும். நார்மன் அரசர்கள் கிராம அதிகாரிகளின் (எல்டர் மேன், அல்லது ஷெரிப்ஃ) (Sheriff) அதிகாரங்களைக் குறைத்து வந்தனர். அதனால் இந்த அதிகாரிகளின் செல்வாக்கும் மிகவும் குறைந்து விட்டது. தவிர ,கிராமப்புறங்களிலும் அரசரின் நீதிபதிகள் சுற்றுப் பிரயாணம் செய்து நீதி வழங்கி வந்த காரணத்தால், கிராம அதிகாரிகளின் செல்வாக்கு மிகவும் குறைந்து விட்டது. 1327-ல் அமைதி காண் நீதிபதிகள் (Justices of the Peace) நியமனம் செய்யப்பெற்றனர். அவர்கள் நீதி வழங்குதல், ஆட்சி செய்தல் ஆகிய அதிகாரங்களை பெற்றனர். 1349-ல் ஏற்பட்ட கொள்ளை நோய்க்குப் பின்னர் அவர்களுடைய பணிகள் இன்னும் அதிகரித்தன. அவர்கள் பாலங்களை கவனித்துக் கொள்ளவும், மற்ற வீதிகளைப் பழுது பார்க்கவும், சரியாக வைத்துக் கொள்ளவும், குற்றம் புரியாமல் பாதுகாத்துக் கொள்ளவும் ஆகிய பல கிராம நிர்வாகப் பொறுப்புகளை ஏற்றுக்கொண்டு நடத்தி வந்தனர். டியூடர்கள் (Tudors) ஆட்சிக் காலத்தில் அவர்களுக்கு இன்னும் முக்கியத்துவம் அளிக்கப்பட்டது. 1555-ல் இயற்றப்பெற்ற சட்டத்தின்படி, அவர்கள் பேரிஷ்களின் ஆட்சிப் பொறுப்பைக் கவனிக்க வேண்டிய அவசியம் ஏற்பட்டது. 1601-ல் இயற்றப்பெற்ற இரவலர் சட்டம் (Poor-Low 1601) இரவலர்களுக்கு நிவாரணம் அளித்தது. இந்த நிவாரணம் அளிப்பதற்கு பேரிஷ் பிரிவு அடிப்படை அலகாக அமைக்கப்பட்டது. அதனால் பேரிஷ் அதன் பிரிவில் உள்ள மக்களிடம் இரவலர் நிவாரணத்திற்காக வரி வசூல் செய்ய வேண்டிய

அவசியமும் ஏற்பட்டது. இந்த நிவாரணத்தை அளிப்பதற்கு அதிகாரிகளும் நியமனம் செய்யப்பெற்றனர். இந்தப் பேரிஷ் பொறுப்புகளை அமைதி காண் நீதிபதிகள் நிறைவேற்றி வந்தனர்.

பரோக்கள் இதற்குள் நல்ல உள்ளாட்சி அரசாங்கத்தை அமைத்து கொள்வதில் முன்னேற்றம் அடைந்தன. பிரபுக்களின் நிலமான்ய ஆதிக்கத்திலிருந்து விடுதலை பெறுவதற்காக, பரோக்களில் உள்ள மக்கள் பிரபுவிடம் மொத்தமாக பணம் அளித்து சில சலுகைகளைப் பெற்றுக் கொண்டனர். அச் சலுகைகள் ஒரு சாசனத்தின் மூலமாக பரோக்களுக்குத் தரப் பெற்றன. பரோக்களிலிருந்து பாராளுமன்றத்திற்கு இரண்டு உறுப்பினர்களை அனுப்பவும், பரோக்களுக்கு வேண்டிய அரசாங்கத்தை அமைத்துக் கொள்ளவும், நீதி மன்றங்களை அமைத்துக் கொள்ளவும் சில சலுகைகள் தரப்பெற்றன. பரோக்கள் ஆட்சி மன்றங்களை அமைத்துக் கொண்டன. இந்த மன்றங்களில் வியாபாரிகள் சங்கத்திலிருந்து (Merchant Guild) உறுப்பினர்கள் தேர்ந்தெடுக்கப்பட்டு, ஆட்சித் துறையில் பங்கெடுத்துக் கொண்டனர். பேரிஷ்களும், பரோக்களும், பிரிவி கவுன்சில் விண் மீன் மண்டப நீதி மன்றம் (Star Chamber Court) ஆகிய நீதி மன்றங்களின் நெருங்கிய கண்காணிப்பில் இருந்து வந்தன. உள்நாட்டுப் போர் ஏற்பட்ட பொழுது, கிராமங்களின் ஆட்சி தனித்துப்போய் விட்டது. மத்திய அரசாங்கத்தின் கட்டுப்பாடு கிராமங்களில் இல்லாமலே போய்விட்டது முன்னிலை மீட்சி ஏற்பட்டதற்குப் பின்னர், மீண்டும் கிராமங்களின் ஆட்சி மத்திய அரசாங்கத்தின் ஆதிக்கத்திற்குள் கொண்டுவரப் பெற்றது.

18-ஆவது நூற்றாண்டிற்குப் பின்னரும் கூட உள்ளாட்சிப் பிரிவுகளும், ஆட்சி முறைகளும் முன்னர் இருந்தவற்றைப் போன்றேதான் இருந்தன. இந்த ஆட்சியில் பணியாற்றுகிறவர்கள் சேவை செய்ய வேண்டும். ஆனால் அதற்கென்று சம்பளம் வாங்கக் கூடாது என்ற அடிப்படையில்தான் செயலாற்றி வந்தனர். ஆனால் இந்தக் கொள்கைக்கு முற்றிலும் முரண்பட்ட விதமாக உள்ளாட்சித் தலைவர்களும், மற்ற அதிகாரிகளும் பல ஊழல்களுக்குக் காரணமாக இருந்தனர். பல பிரமுகர்கள் விடாமல் பதவிகளிலிருக்கவும், ஆட்சியை அவர்களுடைய நலன்களுக்குப் பயன்படுத்தவும் தவறவில்லை. ஆனால் இந்த ஆட்சிமுறை தொழிற் புரட்சி நாட்டில் ஏற்பட்ட பொழுது சீர்குலைந்து விட்டது. ஆட்சியில் ஊழல்கள் இருந்தது மட்டுமன்றி விவசாய சமுதாயத்தை மாற்றி அமைக்க அவர்கள் விரும்பவில்லை மிகப் பெரிய தொழில் நகரங்களாக வளர்ச்சியுற்ற மேன் செஸ்டர், லீட்ஸ் (Leeds) பர்மிங்காம், (பிராட்ஃபோர்ட் Bradford) ஹேலிஃபாக்ஸ்.

(Halifax) ஆகிய நகரங்களில் இன்னும் பழைய நிலமானிய முறையில் அமைக்கப்பெற்ற அரசாங்கமே, நீடித்து வந்தது. பேரிஷ் ஆட்சிப் பிரிவுகளும் இருந்தன; அமைதி காவ நீதிபதிகளும் மாறாமல் அப்படியே இருந்தனர் தொழிற் புரட்சியின் காரணமாக எண்ணற்ற தொழிலாளர்கள் இந்தத் தொழிற் நகரங்களில் வந்து குடியேறினர். அவர்களுடைய குடியிருப்புப் பிரச்சினைகளையும், மற்ற சுகாதாரப் பிரச்சினைகளையும், அந்த நகர கவுன்சில்களால் சரியாகத் தீர்க்க முடிய வில்லை. பேரிஷ் நிர்வாகம் அதிக தொல்லைகளைத் தருவதாக அமைந் திருந்தது. ஊழல்கள் அந் நிர்வாகத்தில் மிகவும் அதிகமாகி விட்டன. 18-ஆவது நூற்றுண்டில் காணப்பெற்ற இந்த உள்ளாட்சிக் குறைபாடு களை மத்திய அரசாங்கம் கவனிக்கத் தவறி விட்டது. இப் பிரச்சினை களில் ஒரு தீர்வு காண அவர்கள் காலம் கடத்தினர். இருந்த போதிலும் பாராளுமன்றச் சட்டங்கள் இயற்றி இப் பிரச்சினைகளைக் கவனிக்க சில முயற்சிகள் மேற்கொள்ளப் பெற்றன. சில தற்காலிக குழுக்கள் அமைக்கப்பெற்று, அந்தக் கிராமங்களின் சுகாதார வசதிகளைக் கவனிக்க வழி செய்தது. 'அபிவிருத்தி ஆணையாளர்கள்' எங்கும் நியமனம் செய்யப் பெற்றனர். டர்ன்பைக் நிறுவனங்கள் (Turnpike Trusts) நிறுவப் பெற்று சாலைகளை அமைக்க வழி செய்தனர். அவை அரசாங்கத்தால் நியமனம் செய்யப் பெற்ற குழுக்கள் அல்ல; இருந்த போதிலும் இந்தக் குழுக்கள் அந்தப் பகுதிகளிலுள்ள மக்களிடம் வரி வசூல் செய்யும் அதிகாரங்களைப் பெற்றிருந்தன.

பொருளாதார காரணங்களால் உள்ளாட்சித் துறையில் சீர்குலைவு ஏற்பட்ட போதிலும், உள்ளாட்சியில் காணப்பெற்ற பல குறைபாடு களைத் தீர்க்கும் பொறுப்பும் ஆர்வமும் மத்திய அரசாங்கத்திற்கு 1830-க்குப் பின்னர்தான் ஏற்பட்டது என்று கூற வேண்டும். அந்த ஆர்வம் கூட, பாராளுமன்றம், இரவலர் திருத்தச் சட்டம் (1834); நகராட்சிச் சட்டம் (1835) ஆகிய இரண்டு சட்டங்களை நிறைவேற்றிய பிறகு, மிகவும் குறைந்து விட்டது. இரவலர் திருத்தச் சட்டம் (Poor Law Amendment Act) சில முக்கியமான மாறுதல்களை உள்ளாட்சியில் ஏற்படுத்தியது. (1) தற்காலிகக் குழுக்களை அமைத்து, ஒவ்வொரு குழுவிற்கும் ஒரு தனிப் பொறுப்பை அரசாங்கம் அளித்தது. முக்கியமான பொறுப்பான இரவலர் நிவாரணம் அளிப்பதே, இக் குழுக்களை அமைப்பதின் அடிப்படை நோக்கமாக அமைந்திருந்தது. (2) ஒரு பதவியிலிருந்த பல பேரிஷ்களை ஒன்றிணைத்து பேரிஷ் ஒன்றியத்தை ஏற்படுத்தி, அதற்கென்று சில பொறுப்புக்களை இச் சட்டம் ஒப்படைத்தது. (3) மத்திய அரசாங் கத்தின் கட்டுப்பாட்டை மூன்று இரவலர் சட்ட ஆணையாளர்கள் மூலமாகக் கொண்டு வந்தது. இத்தகைய சில முக்கியமான மாற்றங்களை

இச் சட்டம் செய்தது. இரவலர் சட்ட ஆணையாளர்கள் மூலமாக மத்திய அரசாங்கத்திற்கும் உள்ளூர் கிராமங்களிலுள்ள அதிகார நிறுவனங்களுக்கும் அதிக இணைப்பை ஏற்படுத்த முயற்சி எடுத்துக் கொண்டது. பின்னர் பயனளித்தது. இந்தச் சட்டம் இயற்றப்பட்டதற்குப் பின்னர், பல தகுதியற்றவர்களும் சோம்பேறிகளும் இரவலர்களாகத் திரிந்து கொண்டிருந்ததையும், அவர்கள் நிவாரணம் பெற்று வந்ததையும் அடியோடு நிறுத்தினர். இருந்த போதிலும், இத் திட்டம் சரிவர செயலாற்றப்படவில்லை என்று கருதி, இத் திட்டத்தை 1847-ல் கைவிட்டுவிட்டனர். இத் திட்டத்திற்காகப் பரிந்து பேச இரவலர் ஆணையாளர்கள் பாராளுமன்றத்தில் செல்வாக்குப் பெற்றிருக்கவில்லை. இத் திட்டத்திற்குப் பதிலாக இரவலர் வாரியம் ஒன்று நிறுவப் பெற்றது. இந்த வாரியத்தின் தலைவர் ஒரு பாராளுமன்ற உறுப்பினராக இருந்தார்.

1835-ல் இயற்றப் பெற்ற நகராட்சி சட்டம் (The Municipal Corporations Act) நகரங்களில் அமைக்கப்பட்டிருந்த அரசாங்கங்களை திருத்தி அமைத்து. நகர கவுன்சில் உறுப்பினர்கள் தேர்ந்தெடுக்கப்பட வேண்டுமென்று நிர்ணயம் செய்தது. நகர கவுன்சிலில் உறுப்பினர்களாக வருபவர்கள் அதிக சொத்துடையவர்களாக இருக்க வேண்டுமென்ற நிபந்தனை சிறிது அதிகமானதாக இருந்த போதிலும், வாக்களிப்பவர்கள் மூன்று ஆண்டுகள் அந்த நகரத்தில் குடியிருப்பவர்களாவும், வரி செலுத்துபவர்களாகவும் இருக்க வேண்டும் என்று இச் சட்டம் நிர்ணயம் செய்தது. அங் நகரிலுள்ள ஆல்டர்மேன் (Aldermen) என்ற அதிகாரியை கவுன்சிலில் சேர்த்துக் கொள்ள வேண்டுமென்ற சலுகை தரப்பெற்றது. மேயர் நியமனம், மற்றும் இதர அதிகாரிகளின் நியமனங்களும் அப்பொழுது செய்யப் பெற்றன. நகராட்சி பொறுப்புகளிலிருந்து மேஜிஸ்ட்ரேட்டுகள் விலக்கப்பட்டனர். அவர்களுடைய நியமனம் அப்பொழுதுலிருந்து அரசர்களால் செய்யப்பெற்றது. நகரங்கள் நகராட்சி அந்தஸ்தைப் பெற வழி வகுக்கப் பெற்றது. இவ்விதம் மத்திய அரசாங்கத்தின் தலையீட்டின் காரணமாக 19-வது நூற்றாண்டில் உள்ளாட்சியில் காணப்பெற்ற ஊழல்கள் ஒழிக்கப் பெற்றன. ஆனால் இச் சட்டம் பல வகைகளிலும் ஒழுங்காக செயலாற்றப் பட பல இடையூறுகள் தோன்றியவாறு இருந்தன. இரவலர் சட்டத்தைக் கொண்டு வந்த பொழுது சில அடிப்படையான கொள்கைகளை அது கொண்டிருந்தது. ஆனால் நகராட்சி சட்டத்திற்கு அந்த அடிப்படையான கொள்கைகளை காணப் பெறவில்லை. ஏனெனில் பரோக்கள், நகரங்கள் சரியாக நிர்ணயம் செய்யப்படவில்லை. மிகப்பெரிய பரோக்களும், அதே சமயத்தில் சிறிய பரோக்களும் இருந்தன. மான்ட்கோமரி (Montgomery) என்ற

பரோவில் 1961ஆம் ஆண்டு மக்கள் தொகைக் கணக்குப் படி 970 பேர் தான் இருந்தனர். இன்றும் அது பரோவாகத்தான் விளங்கு கிறது. இவ்வித வேறுபாடுகள் பரோ நிர்வாகத்தில் காணப்பெற்ற தால், பொதுப்படையான பொறுப்புகளையும் பணிகளையும் நிர்ணயம் செய்வது மிகவும் கடினமாக இருந்து. மத்திய அரசாங்கத்தின் கட்டுப்பாடும் மிகவும் குறைந்த அளவில் தான் இருந்தது.

சில நகரங்கள் மிகவும் விரிவடைந்து வந்தன. மக்கள் தொகையும் அந் நகரங்களில் அதிகரித்து வந்தது. அதனால் அம் மக்களுக்கு வேண்டிய குடி தண்ணீர் வசதிகளும், சுகாதார வசதிகளும் அதிகமான அளவில் தரப்பட வேண்டியிருந்தன. ஆனால் அவ் வசதிகளை இந் நகரங்களால் சரி வர அளிக்க முடியவில்லை, இவ் வசதிகளைச் சரியான முறையில் தர முடியாததால், மக்களின் உடல் நலம் பெரிதும் பாதிக்கப்பெற்றது. இரவலர் சட்டக் கமிஷனரின் செயலராக இருந்த சாட்விக் என்பவர் இதைப்பற்றிக் குறிப்பிடும் பொழுது, உடல் நலக் குறைவு, வறுமைக்கு மிக முக்கிய காரணமாக இருந்தது என்று கூறுகிறார். சாட்விக் (Chadwick) டாக்டர் சவுத்வுட் (Dr. Southwood) வில்லியம் ஃபார் (Wil iam Farr) ஆகியோர் சீர்திருத்தங்கள் வேண்டு மென்று கிளர்ச்சி செய்தனர். ஆனால் அரசாங்கம் அவர்களின் கிளர்ச்சியைப் பற்றி கவனம் செலுத்தவில்லை. 1847-ல் காலரா தொத்து நோய் ஏற்பட்டதால் 55,000 மக்கள் வரையிலும் இறந்து விட்டனர். அதற்குப் பின்னர் தான், அரசாங்கம் சீர்திருத்தங்களைச் செய்ய வேண்டுமென்று முன்னுக்கு வந்தது. 1848-ல் பொது நலச் சட்டம் (The Public Health Act) நிறைவேற்றப் பெற்று, அதன்படி, நகரங்களிலும் பொது நல வாரியங்கள் நிறுவப்பெற்றன. 1000 பேருக்கு 23 பேர் வீதம் சாவு எண்ணிக்கையுள்ள இடங்களில் எல்லாம் கட்டாயமாக பொது நல வாரியங்கள் நிறுவப்பெற்றன. பரோவி லுள்ள நகராட்சி இந்தச் சட்டத்தை ஏற்றுக் கொண்டதற்குப் பின்னர், அந்த நகர கவுன்சிலே உள்ளூர் சுகாதார நிறுவனமாகப் பணியாற்றியது ஆனால் பரோக்களுக்கு வெளியே புதிய சுகாதார நிறுவனங்கள் நிறுவப் பட வேண்டிய அவசியம் ஏற்பட்டது. பரோக்களுக்கு வெளியே இரண்டு ஆண்டுகளுக்கு முன்னர், சுகாதாரப் பாதுகாவலர்களின் வாரியங்கள் என்பன அங்குள்ள சுகாதாரப் பணிகளைச் செய்து கொண்டிருக்கின்றது. அப் பணிகளைப் போன்றே இப்பொழுது நிறை வேற்றப் பெற்ற சுகாதார வாரியங்கள் செய்து வந்தன. மற்ற கிராம வட்டாரங்களிலும் இவ்வித சுகாதாரப் பணிகள் தொடங்கப் பெற்றன. இவ்விதம் பல பிரிவுகள் ஏற்பட்டன. நகர்ப் புற வட்டாரிகள் (Urban Districts) கிராமப் புற வட்டங்கள் (Rural Districts) ஆகியவை அமைக்கப்பெற்றன. அத்துடன் சுகாதார வட்டங்களும்

அமைக்கப்பெற்றன. சுகாதார வட்டம் அமைக்கப்படுவதற்கு குறைந்தது 3000 பேர்களாவது அப் பகுதியில் குடியிருக்க வேண்டும். இவ்விதம் அமைக்கப் பெற்ற வட்டங்களை ஒரே மாதிரியான அளவில் அமைக்கப்படவில்லை. கிராமப் புற வட்டங்கள் மிகவும் அதிகமான அளவில் விரிவடைந்தன. அவ்விதம் இயற்றப் பெற்ற பகுதிகளில் 670 சுகாதார வாரியங்கள் நிறுவப்பெற்றன. அவையெல்லாம் மத்திய அரசாங்கத்திலுள்ள, புதிதாக உருவாக்கப் பெற்ற 'பொது நல வாரியம்' என்ற நிறுவனத்தின் கீழ் இயங்கின. ஆனால் இச் சட்டம் எதிர் பார்த்த பயன் அளிக்கவில்லை. இப் புதிதாக நிறுவப் பெற்ற சுகாதார வாரியங்களுக்கு நோய்கள் ஏற்படும் காரணங்களைக் கண்டுபிடித்து அவற்றைத் தடுக்கக் கூடிய அளவிற்கு அனுபவம் போதவில்லை. மத்திய பொது நல வாரியம், அதன் கீழுள்ள வாரியங்களின் மீது சரியான ஆதிக்கத்தைச் செலுத்த முடியவில்லை. ஏனெனில், இந்த வாரியங்களுக்கு மத்திய பொது நல வாரியம் எந்த நிதி வசதிகளையும் செய்து கொடுக்கவில்லை. அதனால் இந்தச் சட்டம் 1858-ல் ரத்து செய்யப்பட்டது.

1867-ல் நிறைவேற்றப்பெற்ற பாராளுமன்றச் சீர்திருத்தச் சட்டத்திற்குப் பின்னர், 'ராயல் சுகாதார கமிஷன்'(Royal Sanitary Commission) ஒன்று நியமிக்கப் பெற்று, நகரங்களிலும், கிராமப் புறங்களிலும் நிறுவியுள்ள சுகாதாரப் பணிகளைப் பற்றி ஆய்வு செய்தனர். இந்த ஆய்வாளர்கள் அளித்த அறிக்கையில், நகரங்களிலும், கிராமங்களிலும் உள்ள சுகாதார நிறுவனங்கள் பலவிதமாக அமைக்கப்பட்டிருப்பதாகவும், ஒன்றும் சரியாகப் பணியாற்றவில்லை என்றும் அறிவித்தது. பல சுகாதார நிறுவனங்களையும் அகற்றிவிட்டு, மத்திய அரசாங்கத்தின் கீழ் பணியாற்றும் சுகாதார அதிகாரிகளை நியமனம் செய்யவும், ஒரே மாதிரியான விதி முறைகளைப் பின்பற்ற வேண்டுமென்றும் அறிக்கை வெளியிட்டது. இந்தக் கமிஷனின் ஆலோசனைகள் மூன்று கட்டங்களில் நிறைவேற்றப் பெற்றன. 1871-ல் டிஸ்ரேலி ஒரு உள்ளாட்சி வாரியத்தை அமைத்தார். ஏற்கனவேவுள்ள இரவலர் சட்ட வாரியத்திற்கும் மத்திய பொது நல வாரியத்திற்கும் எஞ்சியுள்ள அதிகாரங்களை புதிய உள்ளாட்சி வாரியத்திற்கு (Local Government Board) அளித்தனர். ஆனால் நடைமுறையில் இந்த இரண்டு வாரியங்களும் ஒன்றாக இணைந்து பணியாற்றவில்லை. இரவலர் வாரியத்தின் உறுப்பினர்கள் தான் அதிக ஆதிக்கத்தைச் செலுத்தி வந்தனர். அதற்கு அடுத்த ஆண்டில் ஒரு புதிய பொது நலச் சட்டம் ஒன்று இயற்றப் பெற்றது. அச் சட்டத்தின் படி, அப்பொழுதுள்ள பொது நல நிறுவனங்களின் பெயர்களை மாற்றி அமைத்தனர். உள்ளாட்சி பரோ கவுன்சில்களும், பொது நலம், அபிவிருத்தி ஆணையாளர்கள்

மேற்கொண்ட உள்ளாட்சி வாரியங்கள் நகர்புற சுகாரதார அதிகார நிறுவனங்களாக (Urban Sanitary Authorities) மாற்றி அமைக்கப் பெற்றன. கிராமப் புறங்களிலிருந்த சுகாதாரப் பாதுகாப்பாளர் வாரியங்கள் (Boards of Guardians) கிராமப் புற சுகாதார அதிகாரம் பெற்ற நிறுவனங்களாக (Rural Sanitary Authorities) மாற்றி அமைக்கப் பெற்றன. பொது நலச் சட்டத்தின் விதிமுறைகளை எல்லோரும் கட்டாமயாகப் பின்பற்ற வேண்டுமென்று வற்புறுத்தினர். ஒவ்வொரு சுகாதார நிறுவனத்திற்கும் ஒரு மருத்துவ அதிகாரி நியமிக்கப்பட்டார். தவிர பொதுச் சுகாதாரத்தைப் பாதுகாக்கும் ஓர் அதிகாரியும் நியமிக்கப்பெற்றார். 1875-ல் நிறைவேற்றப் பெற்ற பொது நலச் சட்டம் (The Public Health Act 1875) பொது நல விதிமுறைகளைத் தொகுத்து அளித்தது. எல்லா பொது நல நிறுவனங்களும் இவ்விதி முறைகளைப் பின்பற்ற வேண்டிய கட்டாயம் ஏற்பட்டது.

**உள்ளாட்சி அரசாங்கத்தின் சீரமைப்பு**

1834-க்குப் பின்னர் உள்ளாட்சி நிறுவனங்களுக்குப் புதிய அதிகாரங்கள் தரப் பெற்றன. அப் புதிய அதிகாரங்களும், பொறுப்புகளும் அமைதி காண் நீதிபதிகளுக்கு அல்லது புதிதாக நியமிக்கப் பெற்ற தற்காலிக அதிகாரக் குழுவினருக்குத் தரப்பெற்றன. 1856-ல் காலாண்டுப் பருவ நீதி மன்றங்களில் அமைதி காண் நீதிபதிகள், காவலர் பொறுப்புகளையும் ஏற்றனர். மற்றும் அவர்கள், உணவு, தண்ணீர் வசதிகளைப் பாதுகாத்தல்; பொது விடுதிகளுக்கு அனுமதி அளித்தல் ஆகிய புதிய பொறுப்புகளையும் ஏற்றனர். 1870-ல் இயற்றப் பெற்ற கல்விச் சட்டம், தேர்ந்தெடுக்கப் பெற்ற புதிய தற்காலிகக் குழுவிற்குப் பள்ளிகளைப் பார்த்துக் கொள்ளும் அதிகாரங்களை அளித்தது. பள்ளிகள் நிறுவப் பெற்றுள்ள கல்வி வட்டங்களில் துவக்கப் பள்ளி வசதிகளை தனியார் செய்ய முன் வரவில்லை யென்றால், பள்ளி வாரியங்களை நிறுவி, பள்ளிகளை அமைக்க அதிகாரம் அளிக்கப் பெற்றது. இதற்கென்று அவர்களுக்குத் தனியார் வரி வசூல் செய்யும் அதிகாரங்களும் வழங்கப் பெற்றன. நகராட்சி மன்றங்கள் உள்ள பகுதிகளாவது, அல்லது பேரிஷ் ஒன்றியங்களாவது பள்ளி வட்டங்களாக (School Districts) அமைக்கப்பெற்றன.

1880-ல் உள்ளாட்சியில் ஒரு குழப்பமான நிலை காணப்பட்டது. பல துறைகளுக்கும் பல வாரியங்கள் அமைக்கப் பட்டிருந்ததால், ஒவ்வொரு குறிப்பிட்ட வாரியமும் தனித்தனியாக வரி வசூல்களைச் செய்தது. இரவலர் வாரியம், பொது நல வாரியம், கல்வி வாரியம் ஆகியவை தனித்தனியாக, மக்களிடமிருந்து வரி வசூல் செய்ய முற்

பட்டன. நகரங்களில்லாத பகுதிகளை, அமைதி காண் நீதிபதிகள் கண்காணித்து வந்தனர். மீண்டும் பல தற்காலிக அதிகாரக் குழுக்களை நகரங்களிலும், கிராமங்களிலும் அமைக்க வேண்டுமென்று பாராளுமன்றம் அப்பொழுது விரும்பியது. அதனால் ஒரே மாதிரியான ஆட்சியை நகரங்களுக்கும், கிராமங்களுக்கும் கொண்டு வர வேண்டுமென்று பாராளுமன்றம் முடிவு செய்தது.

1888-ல் உள்ளாட்சி அரசாங்கச் சட்டம் (**Local Government Act**) நிறைவேற்றப் பட்டது. அதன் படி 61 தேர்ந்தெடுக்கப் பெற்ற கவுண்டி கவுன்சில்கள் நியமிக்கப்பெற்றன. அமைதி காண் நீதிபதிகள் இதுகாறும் வகித்து வந்த பொறுப்புகள் தேர்ந்தெடுக்கப் பெற்ற கவுன்சில்களுக்கு மாற்றப்பெற்றன. புதிதாக அமைக்கப் பெற்ற இந்த உள்ளாட்சிப் பிரிவுகளிலும் பல குறைபாடுகள் காணப்பெற்றன. பழைய ஷையர் (**Shire**) அடிப்படையில் தான் இந்தக் கவுண்டி கவுன்சில்களும் அமைக்கப் பெற்றதால் அதே குறைபாடுகள் தொடர்ந்து காணப் பெற்றன. சில சிறியவையாக இருந்தன. சில மிகப் பெரிய அளவில் இருந்தன. அவைகளுக்குக் கிடைக்கக் கூடிய வருமானங்களுக்கும், பொறுப்புக்களுக்கும், கவுண்டி கவுன்சில்களின் அளவிற்கும் எவ்வித பொருத்தமும், தொடர்பும் இல்லாமல் போய் விட்டன.

பெரிய பரோக்கள் புதிய கவுண்டிகளுடன் இணைவதை எதிர்த்தன. பல பரோக்கள் முன்னேற்றமான திட்டங்களைக் கொண்டு வருவதில் அக்கரை காட்டின. அதனால் அவை கவுண்டி-களுடன் இணைந்து விட்டால், கிராமப் புற பிரமுகர்களின் செல்வாக்கும், ஆதிக்கமும் எங்கு அதிகமாகி விடுமோ என்று பயந்தனர். அதனால் 50,000க்கும் மேற்பட்ட மக்கள் தொகையுடைய 57 நகராட்சி பரோக்களை நிறுவினர். இப் பிரிவில், கேன்டர்பரி, செஸ்டர், வர்செஸ்டர் ஆகிய நகரங்கள் சிறியவையாக இருந்ததால் அவைகளுக்கு 'கவுண்டி பரோக்கள்' அந்தஸ்து கொடுக்கப்பட்டது. இந்தக் கவுண்டி பரோக்களுக்கு, கவுண்டி, பரோ ஆகிய இரண்டு பிரிவுகளின் பொறுப்புகளும் தரப் பெற்றன. லண்டன் நகரில் புதிய நிர்வாகக் குழு அமைக்கப்பட்டது. இக் குழுவினர் தேர்ந்தெடுக்கப்பட்டவர்களாவர். மாநகர் பரோ கவுன்சில்கள் 1899-க்குப் பின்னர் தான் நிறுவப் பெற்றன. 1894-ல் இயற்றப் பெற்ற உள்ளாட்சி அரசாங்கச் சட்டம் மேற்கொண்டு உள்ளாட்சியில் பல சீர்திருத்தங்களைக் கொண்டு வந்தது. பழைய நகர்ப் புற சுகாதார அதிகாரிகளுக்குப் பதிலாக, தேர்ந்தெடுக்கப் பெற்ற நகர்ப் புற வட்டாரக் கவுன்சில்கள் (**Elected Urban District Councils**) நிறுவப் பெற்றன. அதைப் போன்று,

கிராமப் புற சுகாதார அதிகாரிகளுக்குப் பதிலாக (Rural Sanitary Authorities) கிராமப் புற வட்டாரக் கவுன்சில்கள் (Rural District Councils) நிறுவப்பெற்றன. கிராமப் புற வட்டாரக் கவுன்சில்கள் சுகாதாரப் பணிகளைச் செய்வது மட்டுமின்றி, இரவலர் நிவாரணப் பணிகளையும் செய்ய வேண்டும் என்று அறிவிக்கப்பட்டது. அந்த வட்டாரக் கவுன்சிலில், ஒவ்வொரு பேரிஷிலிருந்தும் ஒரு பிரதிநிதி அனுப்பப்பட்டார். ஏற்கனவே பேரிஷில் உள்ள பாதுகாப்பாளர் வாரியத்தில் உள்ள (Board of Guardians) ஒரு பிரதிநிதியை அனுப்புவதால், அதற்கென்று தனித் 'தேர்தல் நடத்தப் பட வேண்டிய அவசியம் இல்லை. கிராம வட்டாரங்கள் சிறிய பேரிஷ் பகுதிகளாக பிரிக்கப்பட்டிருந்தன. ஒரு பேரிஷில் 300க்கும் மேல் குடியிருப்பவர் கள் இருந்தால், அங்கும் ஒரு கவுன்சில் அமைக்கப் பட வேண்டும். 300க்கும் குறைவானவர்கள் ஒரு பேரிஷில் இருந்தால், 'பேரிஷ் கூட்டம்' (Parish Meeting) அமைக்கப்பட்டால் போதுமானது என்று அச் சட்டம் கூறியது. பேரிஷ் கவுன்சிலுக்குள்ள அதிகாரங்கள் மிகவும் குறைவாக இருந்தாலும், பெரிய அளவில் உள்ள கிராம வட்டார ஆட்சிக்கு அது மிகவும் உதவியாக இருந்தது.

பழைய மரபுகளின் அடிப்படையிலேயே, படிப்படியாக உள்ளாட்சி அரசாங்கம் வளர்ச்சியடைந்துள்ளது. குறிப்பிட்ட திட்டங்களை அமைத்து, உள்ளாட்சி அரசாங்கம் வளர்ச்சியுறவில்லை. எல்லைகளை முறையாக நிர்ணயம் செய்தோ, அல்லது, அவைகளின் பொறுப்புக்களில் சீரமைப்பைச் செய்தோ, அது முன்னேற்றம் அடையவில்லை. எவ்வளவோ, மாறுதல்கள் மருத்துவ முறையிலும், போக்குவரத்துகளிலும், தொழில் துறையிலும் ஏற்பட்டும் கூட, உள்ளாட்சி அரசாங்கத்தின் வளர்ச்சி மிகவும் மெதுவாகச் சென்றது. கவுண்டி கவுன்சில்களுக்குப் புதிய பொறுப்புகள் அளிக்கப்பட்டன. கல்வித் துறையில் கவுண்டி கவுன்சில்கள் துவக்கப்பள்ளிப் படிப்பு உயர்நிலைப் பள்ளிப்படிப்பு ஆகியவற்றைப்பார்த்துக்கொள்ளும் பொறுப்பு கவுண்டி கவுன்சில்களுக்குத் தரப்பட்டது. அதற்குரிய கல்விச் சட்டம் 1902-ல் நிறைவேற்றப் பட்டது. அதனால் கல்வி வாரியங்கள் அகற்றப் பட்டன. 10,000 பேர்களுக்கு மேல் உள்ள முனிசிபல் பரோக்களுக்கும். 20,000 பேர்களுக்கு மேல் உள்ள நகர்புற வட்டாரங்களுக்கு மட்டும் விதிவிலக்களிக்கப்பட்டது. அவை தனியாகவே துவக்கப் பள்ளிகளை நடத்திக் கொள்ளும் உரிமை அளிக்கப்பெற்றது. 1929-க்குப் பின்னர், பாதுகாவலர் வாரியங்கள் செய்து வந்த பணிகளை கவுண்டி கவுன்சில்கள் மேற்கொண்டன. அந்த வாரியங்கள் கலைக்கப் பெற்றன. ஆனால் பிரிட்டன் பொதுநல நாடாக மாறியதற்கு பின்னர், மத்திய அரசாங்கமும், உடல் நலம், இரவலர் நிவாரணம், ஆகிய

பொறுப்புகளை ஏற்றுக்கொள்ள வேண்டிய அவசியம் ஏற்பட்டது. உள்ளாட்சி அரசாங்கம் மேற்கொள்ளும் பணிகளையும், நிதியைப் பயன்படுத்தும் விதத்தையும், மத்திய அரசாங்கத்தின் நேரடியான கட்டுப்பாட்டுக்குள் கொண்டுவந்தனர். பழைய உள்ளாட்சி அரசாங்க வாரியம் 1919-ல் கலைக்கப் பெற்றது. அதற்குப் பதிலாக பொதுநல அமைச்சவை உருவாக்கப்பட்டது. 1951-ல் இந்த அமைச்சவை மேற்கொண்டிருந்த பணிகளை, புதிதாக அமைக்கப்பெற்ற குடியிருப்பு, உள்ளாட்சி அரசாங்க அமைச்சவை மேற்கொண்டிருக்கிறது. இந்த அமைச்சவைக்கு, நகர்ப்புறத் திட்டங்கள், கிராமப்புறத் திட்டங்கள், எல்லைகளை நிர்ணயம் செய்தல் ஆகிய புதிய பொறுப்புகளும் தரப் பட்டுள்ளன. 1955-முதல் வேல்ஸ் பகுதியில் உள்ள உள்ளாட்சி அரசாங்கப் பொறுப்புகளை வேல்ஸ் அரசாங்கச் செயலர் ஏற்றுக் கொண்டுள்ளார்.

## உள்ளாட்சி அரசாங்கத்தில் மேலும் ஏற்பட்ட மாற்றங்கள்

லண்டன் மாநகருக்கு புதிய சீர்திருத்தங்களைக் கொண்டுவர லண்டன் அரசாங்கச் சட்டம் 1963-ல் நிறைவேற்றப்பட்டது. 1888-ல் இருந்த நிலையில்தான் புதிய சட்டம் இயற்றப் பெற்றதற்குப் பின்னரும் லண்டன் மாநகராட்சி இருந்தது. ஒரு சில முனிசிபல் பரோக்களுக்கு கவுண்டி பரோ அந்தஸ்து அளிக்கப்பெற்றது. அவ்விதம் மாற்றங் களைக் கொண்டு வருவதை, முனிசிபல் பரோக்கள் விரும்பவில்லை. அதனால் அவர்கள் வரி வசூலிக்கும் சில உரிமைகளை இழந்து விடுகிறார்கள். கவுண்டி பரோக்களின் நிர்வாகம், ஓர் அடுக்கு நிர்வாகமாக அமைக்கப்பட்டுள்ளது. எல்லா பொறுப்புகளையும் கவுண்டி பரோக்களே மேற்கொள்கின்றன. மற்ற உள்ளாட்சி அரசாங் கங்களைக் காட்டிலும் கவுண்டி பரோக்களின் பிரச்சினைகள் மிகவும் குறைவாகவே உள்ளன. கவுண்டி பரோக்களின் பரப்பளவு மிகவும் குறைவாக இருந்த போதிலும், மக்கள் தொகை கணிசமாக இருப்பதால் சில சுகாதார வசதிகளை மேற்கொள்ள முடிகிறது. மற்றும் சமுதாய வாழ்க்கை முன்னேற்றமடைய பல பத்திரிகைகள் கூட அங்கு வெளியிடப்படுகின்றன. அங்கு பணியாற்றும் கவுன்சில் உறுப்பினர் மேற்கொண்டு வளர்ச்சியை ஏற்படுத்த முயற்சி எடுத்துக் கொள்கின்ற னர். அங்குள்ள மக்கள் அவர்களுடைய பணிகளைப் போற்றத் தவறவில்லை. கவுண்டி பரோக்களின் நிதி நிலையும் வளர்ந்துள்ளது. அவைகளின் செலவினங்களும் மிகவும் சிக்கனமாக அமைந்துள்ளன. ஒரு பெரிய நகர்புறப் பகுதியில்தான், கவுன்டி பரோவை அமைத்துக் கொள்ள முடியும். ஒரு கவுண்டி பரோவில் 100,000 பேர்களுக்கும் குறைவாக இருந்தால், ஒரு பெரிய பகுதியைப் பிரிப்பதும் சாத்திய

மில்லாதிருந்தால், அங்குள்ள உள்ளாட்சி அரசாங்கம், கவுண்டிகளுக்கும், கவுண்டி வட்டங்களுக்குமாக, இரண்டு அடுக்கு நிர்வாகத்தை மேற்கொள்கிறது. கிராமப்புறங்களில், பேரிஷ் பகுதிகளையும் சேர்த்துக் கொண்டால், மூன்று அடுக்கு நிர்வாகம் மேற்கொள்ளப்படுகிறது. சில நகர்புறப் பகுதிகளில் உள்ள நகரங்களுக்கு முனிசிபல் பரோ அந்தஸ்து அளிக்கப்பட்டுள்ளது. அவ்வித முனிசிபல் பரோக்களில் மேயரும், ஒரு மாநகராட்சி கவுன்சிலும் நிர்வாகத்தை மேற்கொள்கின்றன. அவர்கள் நகர்களுக்கு வேண்டிய புதிய விதிகளை அமைக்கவும் அதிகாரம் பெற்றுள்ளனர். ஆனால் நகர்புறப் வட்டாரங்களுக்கு இவ்வித அதிகாரங்கள் கொடுக்கப்படவில்லை. சட்டத்தில் எவ்விதம் நிர்ணயம் செய்யப்பட்டுள்ளதோ அப்படித்தான் அவர்கள் நிர்வாகம் செய்யவேண்டும்.

லண்டன் மாநகரத்திற்கு தனிப்பட்ட உள்ளாட்சி அரசாங்கம் அமைக்கப்பட்டுள்ளது. லண்டனில் ஏறக்குறைய 80 லட்சம் மக்கள் உள்ளனர். அவர்களின் பல தேவைகளைக் கவனிக்க ஒரே நிர்வாக நிறுவனம் அமைக்கப்பட்டது. அங்கு இரண்டு அடுக்கு அரசாங்கம் அமைக்கப்பட்டுள்ளது. ஒன்று, லண்டன் மாநகர கவுன்சில் (Greater London Council) இக் கவுன்சில் சில பணிகளை லண்டன் மாநகரம் முழுவதற்கும் செய்கிறது. மற்றொன்று லண்டனில் பிரிக்கப்பட்டுள்ள 32 லண்டன் பரோக்கள், (ஒவ்வொரு பரோவிற்கும் 250,000 சராசரி மக்கள் தொகை உள்ளது.) மற்றும் லண்டன் நகரம் ஆகிய பிரிவுகளில் அமைக்கப்பட்டுள்ள கவுன்சில்கள் மற்ற பணிகளை மேற்கொள்கின்றன. லண்டன் நகரில் ஏற்கனவே உள்ள 12 லண்டன் பரோக்கள் இப்பொழுது 'இன்னர் பரோக்கள்' அல்லது உட்புற பரோக்கள் (Inner Boroughs) என்று அழைக்கப்படுகின்றன. மற்ற பரோக்கள் 'அவுட்டர் பரோக்கள்' அல்லது வெளிப்புற பரோக்கள் (Outer Boroughs) என்று அழைக்கப்படுகின்றன. இந்தப் பரோக்களில் உள்ள பள்ளிகளை அவைகளே நடத்துகின்றன.

வடக்கு அயர்லாந்திலும் ஏறக்குறைய இதைப் போன்ற சீரமைப்பே ஏற்பட்டுள்ளது. அங்கு ஆறு கவுண்டி கவுன்சில்களும், இரண்டு கவுண்டி பரோ கவுன்சில்களும் உள்ளன. ஆனால் ஸ்காட்லாந்தில் உள்ள உள்ளாட்சி அரசாங்கம் வேறு விதமாக அமைந்துள்ளது. அங்கு 33 கவுண்டி கவுன்சில்களும், அவைகளில் இரண்டு கவுண்டிகளை தவிர மற்றவை கவுண்டி வட்டங்களாகப் பிரிக்கப்பட்டுள்ளன. அவ்விதம் 196 கவுண்டி வட்டங்கள் உள்ளன. அங்குள்ள கவுன்சில்கள் ஏறக்குறைய இங்கிலாந்தில் உள்ள பேரிஷ் கவுன்சில்களைப் போன்று பணியாற்றுகின்றன. இவைகளைத் தவிர, 200 நகர் கவுன்சில்களும்

அமைக்கப்பட்டுள்ளன. அவை, நான்கு நகரங்களுக்கும், இருபது பெரிய பர்குகளுக்கும் (Burghs) 175 சிறிய பர்குகளுக்கும் அதிகாரம் செலுத்த அனுமதிக்கப்பட்டுள்ளன. நான்கு நகரங்களுக்கு கவுண்டி அதிகாரங்கள் வழங்கப்பட்டுள்ளன. அதனால் அங்கு ஓர் அடுக்கு நிர்வாகம் அமைந்துள்ளது. கவுண்டிகளிலும், பர்குகளிலும் இரண்டு அடுக்கு நிர்வாகம் அமைந்துள்ளது. பெரிய பர்குகளைக் காட்டிலும் சிறிய பர்குகளில் கவுண்டி அதிகப் பொறுப்புகளைப் பெற்றுள்ளன.

உள்ளாட்சி அரசாங்கங்களின் அதிகாரங்களை பாராளுமன்றச் சட்டங்கள் நிர்ணயம் செய்துள்ளன. நகரங்களுக்கு பரோ அந்தஸ்து அளிக்கப்பட்ட அரச சாசனங்களும், அவைகளின் அதிகாரங்களை நிர்ணயம் செய்துள்ளன. பல துறைகளில், உள்ளாட்சி அரசாங்கங்களின் விருப்பத்திற்கேற்ப பொறுப்புகளை ஏற்றுக்கொள்ள பாராளுமன்றச் சட்டங்கள் அனுமதித்துள்ளன. சான்றாக கல்வி, பொதுநலம், சுகாதாரம், நகர கிராமத் திட்டங்கள், கடைச் சட்டங்களை அமுலாக்குதல், போன்றவையாகும். இவ்விதப் பொறுப்புகளைத்தான் மேற்கொள்ள வேண்டும் என்ற கட்டாயம் இல்லை. அவற்றை நிறைவேற்றும் பொறுப்பு, உள்ளாட்சி அரசாங்கத்தின் பல வசதிகளையும், சூழ்நிலையையும் பொறுத்தே உள்ளன. மற்றும் நூலகங்களை வைத்துக்கொள்ளுதல், கேளிக்கைகளை நடத்துதல், ஆகிய பலவற்றையும் மேற்கொள்ள உள்ளாட்சி அரசாங்கங்களுக்கு அனுமதி அளித்துள்ளன. இவையெல்லாம் உள்ளாட்சி அரசாங்கங்களின் விருப்பத்திற்கு விடப்பட்டதற்கு மாறாக, கட்டாயமாக இப் பணிகளை மேற்கொள்ள வேண்டுமென்றால் நன்றாக இருக்கும் என்ற பொதுப்படையான அபிப்பிராயம் நிலவுகிறது உள்ளாட்சி அரசாங்கள் மேற்கொள்ளும் சில பணிகளைப் பார்ப்போம்.

## I கவுண்டி கவுன்சில்கள்

### அ. பாதுகாப்பு

1. காவலர் கவுண்டியில் உள்ள காவலர் குழு (Police Committee) மேற்பார்வையிடுகின்றது. பாதுகாப்பு குழு (Watch Committee) ஒன்று கவுண்டி பரோவில் அமைக்கப்பட்டுள்ளது. அதில் மூன்றில் இரண்டு உறுப்பினர்களும், மூன்றில் ஒன்று அமைதி காண் நீதிபதிகளும் உள்ளனர்.

2. இளங் குற்றவாளிகள் இல்லங்கள் அவர்களுடைய பாதுகாப்பு.

3. தீயணைக்கும் பணிகள்,

4. உள்நாட்டுப் பாதுகாப்பு.

5. எடைகளும், அளவுகளும்.

6. பல கேளிக்கைகளை நடத்த அனுமதித்தல், சினிமா, குதிரைப் பந்தயம் போன்றவை.

7. மோட்டார் வாகனங்களுக்கு அனுமதி வழங்குதல்.

ஆ. சுற்றுப்புறம்

1. வீடுகளைத் திட்டமிட்டு அமைத்தல், நகர்களுக்கும், கிராமங்களுக்கும் திட்டங்களை உருவாக்குதல். அமைச்சரின் அனுமதியின் பேரில் இப் பொறுப்புகளை கவுண்டி வட்டங்களுக்கு அளித்தல்.

2. பூங்காக்களை அமைத்தல், நடைபாதைகளை அமைத்தல்.

3. சாலைகள், பாலங்கள், அமைத்தல்.

இ. தனிப்பட்டோரின் நலன்கள் (Pesonal)

1. கல்வி, உணவு, போக்குவரத்து வசதிகளை ஏற்படுத்துதல். வேலைத் தேடித் தரும் அதிகாரிகளின் பணியை வழங்கல்.

2. உடல்நலம் பேணல்—குழந்தைகள், பெண்கள், மற்றும் எல்லோருக்கும்.

3. உடல் நலம் குறைந்தோருக்கும், வயது வந்தோருக்கும் உதவிகள் அளித்தல்.

4. குருடு, செவிடு, ஊமைப், போன்ற உடல் கூறுகளை இழந்தோருக்கு உதவிகள் அளித்தல்.

5. சிறுவர்களுக்கும், குழந்தைகளுக்கும் பாதுகாப்பு அளித்தல்,

6. விவசாயம் செய்ய ஆதரவு அளித்தல், சிறு பண்ணைகளை அமைத்தல்.

7. நூலகங்கள் ஏற்படுத்தல்.

8. வீட்டு அடமான கடன் வசதிகள்.

9. ஏழைகளுக்கு வழக்காட உதவிகள்.

**II கவுண்டி பரோக்கள் அல்லாதவை மற்றும் நகர்புற வட்ட கவுன்சில்கள் ஆற்றும் பணிகள்.**

1. சட்டங்களைப் பாதுகாத்தல், கட்டுப்படுத்தல்.

2. தங்கும் விடுதிகளை நிர்வகித்தல்.

3. சூதாட்ட இல்லங்களைக் கட்டுப்படுத்தல், அனுமதி வழங்குதல், பெட்ரோல், கடன் கொடுப்பவர்கள், வாடகை வாகனங்கள் ஆகியவற்றைக் கட்டுப்படுத்தல்.

4. உணவு, மருந்து, பால் ஆகிய உணவுப் பொருள்களைப் மேற்பார்வையிடுதல்.

5. கடைச் சட்டங்களைச் செயலாற்றுதல்.

6. சந்தைகளைக் கட்டுப்படுத்தல்.

7. நல்ல காற்று வசதிகளைச் செய்தல்.

8. சுகாதார நலன்களைப் பாதுகாத்தல்.

9. குடியிருப்பு வழங்கல், குடிசை ஒழிப்பு, வீடுகளின் பேரில் கடன் அளித்தல்.

10, குளிக்கும் அறைகள், நீந்தும் குளங்கள், கல்லறைகள் கட்டித்தரல்.

11. நிதிவசதி அளித்தல்.

12, சாலைகள், வீதிகள் ஆகியவற்றைப் பழுது பார்த்தல்,

13. பூங்காக்கள், நடைபாதைகள் அமைத்தல்.

14. வீதி விளக்குகள் அமைத்தல்.

15. தண்ணீர் வசதிகள்.

16. வரிகளை விதித்தல், வரிகளை வசூலித்தல்.

17. வாக்காளர் பட்டியலில் வாக்காளர்களைப் பதிவு செய்தல்.

**III கிராம வட்டக் கவுன்சில்கள். (Rural District Councils)**

கவுண்டி பரோக்கள் அல்லாதவை; நகர்ப்புற வட்டக் கவுன்சில் ஆகிய உள்ளாட்சி அரசாங்கங்கள் மேற்கொள்ளும் பணிகளையே இந்த

கவுன்சில்களும் செய்கின்றன. நூலகங்களை வைத்துக் கொள்ளுதல், சாலைகளைப் பாதுகாத்தல் ஆகிய பொறுப்புகளை இக் கவுன்சில்கள் மேற்கொள்ள வேண்டியதில்லை.

## IV பேரிஷ் கவுன்சில்கள் (Parish Councils)

இக் கவுன்சில் 8 பென்னி வரையிலும் வரி விதிக்கும் அதிகாரம் பெற்றுள்ளது. சமயச் சார்பில்லாத மற்ற தரும நிறுவனங்களின் நிர்வாகத்தையும் மேற்கொள்கிறது. பேரிஷ் பகுதியில் உள்ள, சிறிய பொறுப்புகளை இக் கவுன்சில் மேற்கொள்கிறது. நூலகங்கள், கல்லறைகள், பூங்காக்கள், வீதி விளக்குகள், நடைபாதைகள், சுகாதார வசதிகள் ஆகியவற்றைப் பொறுத்த பணிகளை இக் கவுன்சில் நிறைவேற்றுகிறது.

## V லண்டன்

லண்டன்மாநகர முழுவதற்கும் ஒரே விதமானநிர்வாகத்தை அளிக்க வேண்டிய பொறுப்பு, மாபெரும் லண்டன் கவுன்சிலுக்கு (The Greater London Council) உரியதாகும். அக் கவுன்சிலின் பணிகளாவன:- லண்டன் நகர நெடுஞ்சாலைகளை மேற்பார்வையிடுதல், போக்கு வரத்து கட்டுப்பாடு ஏற்படுத்தல் நகர அபிவிருத்தித் திட்டங்களை வகுத்தல், கழிவு நீர் அகற்றுதல், சாக்கடைகளை அமைத்தல், தீயணைப்பு பணிகளை மேற்கொள்ளல், குடியிருப்பு, பள்ளிகள் ஏற்படுவதற்கு அனுமதி அளித்தல் ஏழைகளுக்கு வழக்கு உதவி அளித்தல், மோட்டார், மற்றும் இதர வாகனங்களுக்கு அனுமதி வழங்குதல். பூங்காக்கள், ஆகியவற்றைப் பற்றிய பொறுப்புகளை நிறைவேற்றுதல் முதலியனவாகும். ஒரே மாதிரியான நிர்வாகமும், பெரிய அளவில் நிர்வாகம் தேவையற்றும் உள்ள சில துறைகளில் லண்டன் பரோ கவுன்சில்கள் சில பொறுப்புகளை ஏற்றுக் கொள்கின்றன.

இங்கிலாந்தில் சீரமைப்பு செய்யப் பெற்ற உள்ளாட்சி அரசாங்க அமைப்பு சமீப காலத்தில் பல பாராளுமன்றச் சட்டங்களால் மாற்றி அமைக்கப் பட்ட போதிலும், பெரும்பாலும் பழைய உள்ளாட்சி அடிப்படையில் தான் இன்னும் தோற்றமளிக்கிறது. இந்த அரசாங்கங்கள் எவ்விதம் ஆட்சி நடத்துகின்றன என்பது பெரும்பாலும், அதன் அமைப்பைப் பொறுத்தும் அதன் பணிகளை பொறுத்தமே உள்ளன. சீரமைப்புச் செய்யப்பெற்ற உள்ளாட்சி அரசாங்கங்களுக்கு நிறைய பொறுப்புகள் அளிக்கப்பட்டுள்ளன. ஒவ்வொரு உள்ளாட்சிப் பகுதியும் ஒரே அளவில் அமைக்கப்படவில்லை என்பது ஒரு குறைபாடாகும். ஒரே மாதிரியான அளவு இல்லாததால், மக்கள் தொகையி

லும் நிறைய வேறுபாடுகள் காணப்படுகின்றன். சான்ருக, லங்காஷயர் என்ற கவுண்டியில் ஏறக்குறைய 25 லட்சம் மக்கள் உள்ளனர். அதே சமயத்தில் ரட்லாண்ட் (Rutland) என்ற கவுண்டியில் 27,000 பேர்கள் தான் உள்ளனர். ஆனுல் இரண்டு கவுண்டிகளும் ஒரே மாதிரியான பணிகளைதான் ஆற்றுகின்றன. அதனுல் எந்தக் கவுண்டிக்கு வசதிகள் அதிகமாக உள்ளன என்பதைக் கூறத் தேவையில்லை. 19-வது நூற்ருண்டிற்குப் பின்னர், உள்ளாட்சி அரசாங்கங்களில் பல மாறுதல்கள் ஏற்பட்டதற்குப் பின்னரும் கூட, தற்காலத்திற்குப் பொருந்தாதவையாகத் தான் இந்த உள்ளாட்சி அரசாங்கங்கள் தோன்றுகின்றன. நவீன வசதிகளை பெரும் நகரங்கள் மட்டுமே பயன்படுத்திக் கொள்ள முடிகின்றது. சிறிய பகுதிகளுக்கு இவ் வசதிகளைச் செய்யப் போதிய நிதி இருப்பதில்லை. நவீன வசதிகளைப் பயன்படுத்திக் கொள்ளும் பெரிய பகுதிகள் ஓரளவிற்கு ஒரே மாதிரியான நிர்வாகத்தை ஏற்படுத்தி கொள்ள முடிகிறது.

மக்கள் தொகையின் காரணமாக இந்த உள்ளாட்சி பகுதிகளில் இன்னும் மாற்றங்களைக் கொண்டு வர வேண்டியுள்ளது. நகர்ப் புறங்களில் மிகுந்த அளவில் மக்கள் தொகை அதிகரித்து உள்ளது. லண்டன், மேற்கு மிட்லேண்ட்ஸ் (West Midlands) மேற்கு யார்க்ஷியர், (West Yorkshire) டினிசைட் (Tyneside) மெர்சிசைட் (Merseyside) லங்காஷயர், கிளாஸ்கோ (Glasgow) ஆகிய நகரங்களில் பெரும் அளவில் மக்கள் தொகை அதிகரித்து உள்ளது. அந் நகர்களில் மக்கள் குடியிருக்க போதிய வசதிகள் இல்லாத வகையில், மக்கள் தொகை பெருகியுள்ளது. டினிசைட் (Tyneside) என்ற நகரம் 1930-ல் மிகவும் பாதிக்கப்பட்டது. பொருளாதார அடிப்படையில் டினிசைட் ஒரே அலவாக இருந்தாலும் உள்ளாட்சி காரணங்களுக்கு, அது இரண்டு கவுண்டிகளையும் நான்கு கவுண்டி பரோக்களையும், எட்டு நகர்ப் புற வட்டக் கவுன்சில்களையும், கொண்டுள்ளதால் நிவாரண நடவடிக்கைகளை மேற்கொள்வது மிகவும் கடினமாக உள்ளது லண்டன் மாநகரில் மட்டுமே, மாற்றங்களுக்கு ஏற்ப சீரமைப்பு ஏற்பட்டுள்ளது,

உள்ளாட்சி அரசாங்கங்கள் நவீன தேவைகளுக்கேற்ப சீரமைக்கப்பட வேண்டுமென்ருல் முக்கியமாக இரண்டு பிரச்சினைகளை அவர்கள் தீர்க்க வேண்டும். உள்ளாட்சி அரசாங்க அமைப்புகளைச் சீரமைப்பதற்கு முன்னர், அவைகளின் சில குறைகளையும் கவனிக்க வேண்டும். முதலில் மத்திய அரசாங்கம் அவர்களுடைய பிரச்சினைகளில் தலையிடுவதை அவர்கள் விரும்புவதில்லை. ஏனெனில் அரசாங்கம் இந்தத் துறையில் எவ்வித மாற்றங்களைக் கொண்டு வந்தாலும் உள்ளாட்சிப்

பகுதிகளில் உள்ள மக்கள் அவற்றைப் போற்றுவதில்லை. அதனால் அரசாங்கம், இத் துறையில் செய்யும் பணி, ஒரு நன்றியில்லாதப் பணியாகக் காணப்படுகிறது. பாராளுமன்றத்தில், உள்ளாட்சி அரசாங்கங்களைப் பற்றி சட்டங்களைக் கொண்டுவரும் பொழுது, அவர்களுடைய நேரம் மட்டும் வீணாவதில்லை; அத்துடன் எதிர் கட்சியின் கண்டனங்களுக்கும் யாருடைய நன்மைகளுக்காகச் சட்டங்களைக் கொண்டுவருகிறார்களோ, அவர்களிடத்திலிருந்து எதிர்ப்பும் கண்டனங்களும் வழக்கமாகத் தோன்றுவதைக் காண்கிறோம். தவிர கிராமத்து மக்கள் எவ்வித மாற்றங்களைக் கொண்டு வந்தாலும், அவற்றை அவர்கள் ஏற்றுக் கொள்வதில்லை. அவர்களுடைய உணர்ச்சிகள் புண்படுத்தப்படுவதாகவே அவர்கள் கருதுகிறார்கள். சரியாக இருந்தாலும் சரி, தவறாக இருந்தாலும் சரி, பாராளுமன்றச் சட்டங்கள் அவர்களுடைய எளிய வாழ்க்கையில் குறுக்கிடுவதாகவே அவர்கள் இன்னும் கருதுகின்றனர். கிராமங்களிலும், நகர்ப்புறங்களிலும், ஆட்சி செய்து வரும் கவுன்சில் உறுப்பினர்கள் சுதந்தரமாக, மத்திய அரசாங்கத்தின் தலையீடின்றி ஆட்சி செய்ய விரும்புகின்றனர். அப்படிச் செய்வதில் அவர்களுக்கு ஒரு பெருமை இருக்கிறதென்று நினைக்கின்றனர். தவிர, மத்திய அரசாங்கத்தின் தலையீடு அதிகமாக ஏற்பட்டால், மத்திய அரசாங்கத்தின் ஆதிக்கம் இப் பகுதிகளில் ஏற்படுவதோடு நிற்காது. அவர்கள் அதிக வரிகளைக் கொடுக்க நேரிடும் என்று அஞ்சுகின்றனர். ரட்லண்ட் கவுண்டி இந்த மாற்றங்களை எதிர்ப்பதைப் பார்க்கும் பொழுது, அவர்கள் அந்தக் கவுண்டி நிர்வாகத்திலேயே அதிக திருப்தியடைகிறார்கள் என்று கருதத் தோன்றுகிறது. தவிர ஓர் உள்ளாட்சி பகுதியின் பரப்பளவு இந்த அடிப்படையில் நிர்ணயிக்க வேண்டுமென்பதைத் தீர்மானிக்கவில்லை. உள்ளாட்சிப் பிரிவுகள் சரியான அமைப்பில் நிர்ணயம் செய்யப்படாதது தால் அதாவது சில பகுதிகள் பெரியதாகவும், சில பகுதிகள் மிகச் சிறியதாதவும் நிர்ணயம் செய்யப்பட்டிருப்பதால், ஒரே மாதிரி பணிகளையும், பொறுப்புகளையும் நிறைவேற்றுவது கடினமாக உள்ளது என்று உள்ளாட்சி அதிகாரிகள் கருதுகின்றனர். நூலகங்களை அமைப்பதற்கும், தீயணைப்பு சேவை செய்வதற்கும், மற்ற இதைப் போன்ற பொறுப்புகளை நிறைவேற்றவும் பெரிய பகுதிகள் வேண்டுமென்று அவசியமில்லையென்ற போதிலும், திறமையாகவும், நல்ல விதமாகவும் பணியாற்றுவதற்குப் பெரிய பகுதிகள் இருந்தால் வசதியாக இருக்கும். பெரிய பகுதிகள் இருந்தால் நிதி வசதிகளும் நன்றாக இருக்கும். நவீன விஞ்ஞான வசதிகளையும் பயன்படுத்திக் கொள்ளலாம். உள்ளூர் பகுதிகள் திட்டமில்லாது வளர்ச்சியுற்றிருப்பது மிகப் பெரிய குறைபாடாகும்.

உள்ளாட்சி அரசாங்கங்களின் நோக்கத்தைப் பொறுத்தே, அத் துறையில் ஏற்படும் சீர்திருத்தங்களை மதிப்பிட வேண்டும். அதிகாரக் குவிப்பைத் தவிர்ப்பதற்காக, ஆட்சி முறையில் மாற்றம் ஏற்படுமெனில், அந்த மாற்றத்திற்கு நிர்வாகத் திறமை தான் குறிக்கோளாக இருக்க வேண்டும். அப்பொழுது உள்ளாட்சிப் பகுதிகள் எப்படியிருப்பினும், எந்த அளவில் இருப்பினும் திறமையான ஆட்சியை ஏற்படுத்துவதையே ஒரு சீர்திருத்தமாகக் கருத வேண்டும். ஆனால் உள்ளாட்சிப் பகுதிகள் பிரதிநிதித்துவ அலகுகளாக மட்டும் மதிப்பிடப்பட்டால், சிறிய அலகுகளையே மையமாக வைத்துக் கொண்டு அங்குள்ள மக்களின் நலன்களைக் கவனிக்க வேண்டும். வெறும் சாதாரணப் பொறுப்புகள் மட்டுமன்றி மிகவும் முக்கியமான பொறுப்புகளை நிறைவேற்றவும் அவர்களுக்கு வாய்ப்புகள் அளிக்கப்பட வேண்டும். முக்கியமான பொறுப்புகளை நிறைவேற்றுவதற்காக அப் பகுதிகளிலுள்ள மக்கள் வாக்களித்து அவர்களின் பிரதிநிதிகளைத் தேர்ந்தெடுக்கின்றனர் என்று கருதும் பொழுது, அப் பகுதிகளில் மக்கள் சீர்திருத்தங்களைச் செய்வதற்கு ஆர்வமுடையவர்களாக இருப்பார்கள். அவர்களுடைய ஆர்வத்தைத் திருப்தி செய்யும் அளவில் பிரதிநிதிகள் பணியாற்ற வேண்டும். அப்பொழுது தான் அவர்களும் பொறுப்புள்ளவர்களாகின்றனர்; அவர்களைத் தேர்ந்தெடுக்கும் மக்களும் பொறுப்புள்ளவர்களாகின்றனர். உள்ளாட்சி அரசாங்கத்தைச் சீர்திருத்தம் செய்ய வேண்டுமென்று இப்பொழுது அரசாங்கம் மிகவும் ஆர்வமுடையதாக இருக்கிறது. எவ்வித சீர்திருத்தங்களைச் செய்வது என்பதை பரிசிலனை செய்ய மே 1966-ல் சர் ஜான் மாட் (Sir John Maud) என்பவருடைய தலைமையில் ஒரு ராயல் கமிஷன் (Royal Commission) நிறுவப் பெற்றது. உள்ளூர் ஜனநாயக மரபுகளைப் பாதுகாக்கும் வகையில், உள்ளாட்சிப் பகுதிகளின் கட்டுக்கோப்பையும், நிர்வாகப் முறையையும், அவைகளின் அளவையும், பணிகளையும் பரிசிலனை செய்து, சிபாரிசுகளைச் செய்ய அரசாங்கம் இக் கமிஷனை நியமித்தது.

மூன்று முக்கியமான சீர்திருத்தங்களை இக் கமிஷன் பரிசிலனை செய்ய வேண்டியுள்ளது. இரண்டு அடுக்கு நிர்வாகத்தை முதலில் உள்ளாட்சியிலிருந்து அகற்ற வேண்டும். உள்ளாட்சிப் பகுதிகள் கவுண்டி பரோக்களின் ஆதிக்கத்திலுள் வருவதைக் காட்டிலும், நேரடியாகவே பாராளுமன்றத்தின் ஆதிக்கத்திற்குள் வருவது நல்லதாகும். இத் திட்டத்தால் மூன்று நன்மைகள் ஏற்படுகின்றன. ஒன்று, கவுண்டி பரோக்களும், முனிசிபல் பரோக்களும் அவைகளின் முக்கியத்துவத்தை இழக்க வேண்டிய அவசியம் இல்லை; இரண்டாவது நிர்வாகத்திலும் திறமை ஏற்படும். இப்பொழுதுள்ள பிளவுகள்

மறையும். காரியங்கள் நிறைவேற்றப்படுவதில் காலதாமதம் தவிர்க்கப்படும். மூன்றாவது ஒரே உள்ளாட்சி அரசாங்கம் தனிப்பட்ட முறையில் ஆட்சி செய்யும் பொழுது அதிக ஆர்வம் தோன்றும். ஆனால் ஓர் அரசாங்கம், மற்ற பகுதிகளிலுள்ள அரசாங்கங்களுடன் பொறுப்புகளைப் பகிர்ந்து கொள்ளும் பொழுது ஆர்வம் மிகவும் குறையும். முன்பு உள்ளாட்சி நிறுவனங்கள் வேறு நிறுவனங்களுடன் இணைவதற்கு எதிர்ப்பு தெரிவிக்கும். அதனால் மற்ற நிறுவனங்களின் உதவிகளைப் பெறாமலேயே, பொறுப்புகளை நிறைவேற்றி வந்தன. ஆனால் இத் திட்டத்தைப் பொறுத்தளவில் மாறுபட்ட கருத்துகள் ஏற்பட்டுள்ளன. இரண்டு அடுக்கு நிர்வாகம் இருப்பதால், மிகப் பெரிய திட்டங்களையும் நல்ல முறையில் செயலாற்ற முடியும் என்று கருதப்படுகிறது. தவிர, கிராமப்புற பகுதிகளில் முழு அதிகாரம் நிறுவப் பெற்றதென்றால், அக் கிராம வட்டத்திலுள்ள மற்ற சிறிய பகுதிகளின் மீது அக்கரையில்லாது போய்விடும்; அதனால் கிராமப்புறங்களிலுள்ள மக்களின் உணர்ச்சிகள் புண்படும் என்ற ஒரு கருத்தும் உள்ளது.

இரண்டாவது திட்டத்தின் படி, இப்பொழுதுள்ள உள்ளாட்சி அரசாங்கங்களை அப்படியே வைத்துக் கொள்ளலாம். ஆனால் அவைகளின் பல அலகுகளைக் குறைத்தும், அவைகளின் எல்லைகளை ஒழுங்காக நிர்ணயம் செய்தும் சீர்திருத்தங்கள் செய்யலாம். அதனால் பல சிறிய கவுண்டிகள் பெரிய கவுண்டிகளுடன் இணைய நேரிடும். மற்ற சிறிய பகுதிகளும் மக்கள் தொகை அடிப்படையில் பெரிய தொகுதிகளுடன் இணைய நேரிடும். இவ்வித மாற்றங்கள் ஏற்படுவதால், பல தூரப்பட்ட அலகுகளுடன் பொறுப்புகளைப் பகிர்ந்து ஆற்ற முடியும். புதிய மாற்றமும் நிர்வாகத்தில் ஏற்படும். இவ்வித மாற்றத்தைத் தான் அரசாங்கம் 1956-ல் கொண்டு வர வேண்டும் என்று விரும்பியது. நிறைய மக்கள் தொகையுள்ள நகர்ப் புறத் தொகுதிகளை கிராமங்களிலிருந்து பிரித்து விட வேண்டுமென்று விரும்பினர். 100,000 பேர்களுக்கு மேலுள்ள ஒரு கவுண்டி பரோ அளவிற்குத் திறமையாக ஆட்சி செய்ய முடியும். இந்த அளவிற்கு ஒரு கவுண்டி பரோவை அமைத்துக் கொண்டால், அதனால் ஏறக்குறைய 16 கவுண்டி பரோ அல்லாத பகுதிகள் பாதிக்கப்படும் என்று மதிப்பிடப்பட்டது. அதிக கவுண்டி பரோக்களை நிறுவுவதால் பல கவுண்டிகள் கலைக்கப்பட நேரிடும். கலைக்கப்பட்ட பரோக்களின் எல்லைகள் நிர்ணயம் செய்யப் பெற்று, கவுண்டி பரோக்களுடன் இணைந்து கொள்வது என்ற ஒரு திட்டம் கொண்டு வரப்பட்டது.

மக்கள் தொகை அதிகமாக உள்ள நகர்ப் புறப் பகுதிகளைத் தனித் தனியாகப் பரிசீலனை செய்ய வேண்டும். ஒரு சில நகர்ப் புறப் பகுதி

கள் இப்பொழுதுள்ள உள்ளாட்சி அரசாங்க நிர்வாகத்தில் இருக்காமல் மற்ற பகுதிகளை சீரமைத்து கவுண்டி வட்டங்களுடன் அல்லது கவுண்டி பரோக்கள் ஆகிய பகுதிகளுடன் இணைத்து அதற்குப் பின்னர் அவை களின் எல்லைகளை மாற்றி அமைக்கலாம். இந்தத் திட்டத்தை நிறை வேற்றுவதில் இடையூறுகள் அதிகமாக இருக்காது. ஆனால் மிகப் பெரும் பகுதி இந்த உள்ளாட்சி அரசாங்கத்தின் கீழ் வரும், அதனால் பலதரப்பட்ட பணிகளைச் செய்ய வேண்டிய அவசியம் ஏற்படும். ஆனால் கவுண்டி பரோக்கள் இப் பணிகளை மற்ற நிறுவனங்களுடன் ஆற்றும் பொழுது முழு உதவியை அளிக்கும் என்பது சந்தேகமே. அதற்கு மாற்றாக இரண்டு அடுக்கு நிர்வாகத்தை ஏற்படுத்தினால், எந்த அரசாங்கம் எந்த பொறுப்புக்களையாற்றுவது என்ற குழப்பமில்லை ஏற்பட்டுவிடும். லண்டன், டினிசைட் (Tyneside) ஆகிய நகரங் களுக்கு இரண்டு அடுக்கு நிர்வாகத்தை ராயல் கமிஷன் சிபாரிசு செய்துள்ளது.

மூன்றாவது திட்டம், உள்ளாட்சிப் பகுதிகளை தொகுதி வாரியாக ஏற்படுத்தலாமென்பதாகும். ஒவ்வொரு தொகுதிக்கும் உள்ளாட்சி அரசாங்கம் அமைக்கப்படுதல் வேண்டும். இவ்விதம் உள்ளாட்சிப் பகுதிகள் சீரமைக்கப்பட்டால், ஏறக்குறைய லண்டன் மாநகர ஆட்சி யில் உள்ளதைப் போன்று எல்லா இடங்களிலும் தோன்றும். ஒரு சில மாற்றங்களுடன், இவ்விதத் திட்டத்தை நகராட்சிகள் சங்கம் (Association of Municipal Corporations) சிபாரிசு செய்தது. இத் திட்டத்திற்கு இப்பொழுது ஆதரவு அதிகரித்து வருகிறது. உள்ளாட்சித் துறையில் தீவிரமான மாறுதல்களைக் கொண்டு வர நல்ல சூழ்நிலை இப்பொழுதுள்ளது என்று கருதுகின்றனர். இப்பொழு துள்ள உள்ளாட்சிப் பகுதிகள் எவ்வித மாற்றங்களுக்கும் இடமளிக்காத தால், விரைவில் அவைகளின் அமைப்பை மாற்றி அமைக்க வேண்டும் என்று கருதுகின்றனர். இத் திட்டத்தின்படி, இங்கிலாந்தைப் பத்து தொகுதிகளாகப் பிரிக்கலாம். தோராவிற்கு இத் தொகுதிகளைப் பிரிக் கின்ற பொழுது, பழைய கவுண்டி எல்லைகளைப் பயன்படுத்திக்கொள்ள வேண்டும். ஒவ்வொரு தொகுதியிலும் 30 லட்சம் மக்கள் தொகையிலி ருந்து 80 லட்சம் மக்கள் தொகுதிவரை இருக்கும். ஒவ்வொரு தொகுதி யிலும் ஒவ்வொரு தொகுதி கவுன்சில் (Regional Council) அமைக்கப் பெற்று அதற்குக் குறிப்பிட்ட பொறுப்புகளை அளிக்க வேண்டும். பொருளாதாரத் திட்டங்களையும், இத் தொகுதி கவுன்சில்கள் மேற் கொள்ள வேண்டுமென்று விரும்புகின்றனர். ஒவ்வொரு தொகுதி யும் அல்லது மாகாணமும், பல நகரங்களாகவும், கிராமங்களாகவும் பிரிக்கப்பட்டு அவைகள் தொகுதி அரசாங்கத்தின் கட்டுப்பாட்டுக்குள் இயங்க வேண்டும். தொகுதி நிர்வாகம் மேற்கொள்ளாத சில

பொறுப்புகளை இச் சிறிய பகுதிகள் மேற்கொள்ள வேண்டும் என்று விரும்புகின்றனர். இதைப் போன்ற திட்டத்தைக் கொண்டுவருவதால் சில முக்கியமான பொறுப்புகளையும், பணிகளையும் மேற்கொள்ள முடியும்; இப்பொழுதுள்ள கவுண்டிகளைக் காட்டிலும் மிகப் பெரிய தாக அவை இருப்பதால், சில நிதி வசதிகளும் அதிகமாக ஏற்படும். பெரிய தொகுதி நிர்வாகத்திற்கும் சிறிய பகுதி நிர்வாகத்திற்கும் ஓர் இணைவு ஏற்படும். இத் திட்டத்தில் ஒரே வித ஆட்சி செய்யும் நிறுவனம், ஒரே தொகுதி, ஒரே வரவு செலவு திட்டம் ஆகியவை இருக்கும். மக்களும் இப் பெரிய தொகுதி நிர்வாகத்தில் ஆர்வம் உடையவர்களாக இருப்பர். ஆனால் இத் திட்டத்தில் சில குறைபாடு களும் உள்ளன. இவ்வளவு பெரிய தொகுதி இருப்பதால் வரி செலுத்துபவர்களுக்குத் தொல்லையாக இருக்கும். அதைத் தவிர எல்லைகளை நிர்ணயம் செய்யும் பொழுது பல தொல்லைகளும் இடையூறு களும் ஏற்படும். அரசியல் எதிர்ப்பும் இத் தொகுதிகளில் அதிகமாக வளர்ச்சியுற காரணமுள்ளது. ஆனால் இப்பொழுது அரசாங்கம் எல்லாத் திட்டங்களையும் தொகுதி வாரியாகத் தான் அமைத்துப் பின்னர் நிறைவேற்றி வருகிறது. மருத்துவ தொகுதி வாரியங்கள் (Regional Hospital Boards) பொது நலம், சுகாதாரம், தண்ணீர் விநியோகம் ஆகிய எல்லாவற்றிற்கும் தொகுதி நிறுவனங்கள் அமைக்க பட்டுள்ளன. அதனால் உள்ளாட்சி அரசாங்கமும் தொகுதி வாரியாகப் பிரிக்கப்பட்டு ஒரு சீரமைப்பை ஏற்படுத்துவதே பொருந்தும் என்று கருதுகின்றனர்.

மக்கள் தொகை அதிகரித்து வருகின்ற காரணத்தால், பல உள்ளாட்சி நிறுவனங்களின் தகுதி உயர்த்தப்பட வேண்டும். இல்லாவிடில் என்ன மாற்றங்களைக் கொண்டுவந்தாலும் அவற்றால் பயனில்லாமல் போய்விடும். புதிய எல்லைகள் அமைக்கப்பெற்று பழைய பகுதிகள் விரிவடைந்தால்தான் மக்கள் தொகை அதிகரிப்பிற்கு ஏற்ப நிலையைச் சமாளிக்க முடியும். புதிய குடியிருப்பு வசதிகளைச் செய்து கொடுக்க முடியும். உள்ளாட்சிப் பகுதிகளின் தகுதிகளை உயர்த்தும் பொழுது பல இடையூறுகள் ஏற்படும். குறிப்பாக பரோக்களை கவுண்டி பரோக்களாக்கும் பொழுது, எதிர்ப்புகள் பல ஏற்படும். தவிர 1920-க்குப் பின்னர் டான்காஸ்டர் (Doncaster) லட்டன் (Luton) சோலிஹல் (Solihull) ஆகிய மூன்று பகுதிகள்தான் உயர்த்தப் பெற்றுள்ளன. கவுண்டி பரோவாக உயர்த்தப்படுவதை ஒரு கவுண்டி விரும்புவதில்லை. அதனால் அவர்கள் நிலை மோசமாகி விடுகிறதென்றும் நகர்புறத்திற்கும் கிராமத்திற்கும் உள்ள சமநிலை கெட்டுவிடுகிறதென்றும், அதனால் அவர்களுடைய திட்டங்கள் வெற்றியுறுவதில்லையென்றும் கூறுகின்றனர். பரோக்களுக்கு மற்ற

பெரிய பகுதிகளுடன் இணைந்து கொள்ளும் விருப்பம் இல்லை. அங்குள்ளவர்களின் தேவைகளை இந்த பரோ அரசாங்கமே கவனித்துக் கொள்ள முடியும் என்று அவர்கள் கருதுகின்றனர். எல்லைகளை நிர்ணயம் செய்ய ஒரு கமிஷன் 1945-ல் நிறுவப்பட்டது. நிறைய எதிர்ப்பு இருந்ததால், கமிஷன் அதனுடைய பொறுப்புகளை சரியாக ஆற்ற முடியவில்லை. அதனால் இந்தக் கமிஷன் 1949-ல் கலைக்கப் பெற்றது. 1956-ல் அரசாங்கம் இரண்டு உள்ளாட்சி அரசாங்கக் கமிஷன்களை நியமித்தது. இங்கிலாந்திலும், வேல்சிலும் கவுண்டிகள் அந்தஸ்து கவுண்டி பரோவாக உயர்த்தப்படும். சில கோரிக்கைகளை பரிசீலனை செய்ய இக் கமிஷன்கள் நியமிக்கப் பெற்றன. தனியார் மசோதாக்கள் மூலம் இக் கமிஷன்களின் சிபாரிசுகளை செயலாற்று வதற்குபதிலாக இந்த சிபாரிசுகள் அமைச்சர்களின் ஆணைகள் மூல மாகவே செயலாற்றப் பெற்றன. அதனால் காலதாமதம் மிகவும் தவிர்க் கப்பட்டது. இந்த ஆணைகளைப் பாராளுமன்றம் உறுதி செய்தது. அதற்குப் பின்னர் சில ஆண்டுகளாகவே மேலும் கொண்டுவர வேண்டிய மாற்றங்களைப் பற்றி வேறு முயற்சிகள் மேற்கொள்ளப்படவில்லை. கவுண்டிகள் அபிவிருத்தியும் வளர்ச்சியும் அவைகளின் விருப்பத்திற்கே பெரும்பாலும் விடப்பட்டது. வேண்டுமென்றால் அவை மற்ற கவுண்டி பரோக்களிடம் இணைந்து கொள்ள வாய்ப்புகள் அளிக்கப் பட்டுள்ளன.

உள்ளாட்சி அரசாங்கத்தில் பல குறைபாடுகள் உள்ளன. ஆனால் ஓரளவிற்கு அவைகள் மிகைப்படுத்தப்படுகின்றன. பல நூற்றாண்டு களாக இருந்துவரும் உள்ளாட்சி நிறுவனங்கள் படிப்படியாக மாற்றங்களை ஏற்று வருகின்றன. அவை முன்னேற்றமே இல்லாது அப்படியே ஒரே நிலையில் உள்ளன என்று கூறுவதற்கில்லை. அப் பகுதிகளில் பணியாற்றும் அதிகாரிகள் மக்களுக்கு நல்ல சேவைகளைச் செய்து வருகிறார்கள். பெரிய பகுதிகளில் நல்ல ஆட்சி அமைவதற்கான வாய்ப்புகளும், நிதி வசதிகளும் உள்ளன. ஆனால் சிறிய உள்ளாட்சிப் பகுதிகள் அப் பெரிய நிறுவனங்களுடன் இணைந்து மேலும் நல்ல வசதிகளைப் பெறலாம் என்ற ஆலோசனைக்கு எதிர்ப்பு ஏற்பட்டு வருகிறது. சிறிய உள்ளாட்சி பகுதிகளில் உள்ள மக்கள் அவர்களுடைய உள்ளூர் பற்றுதல்களையும், உணர்ச்சிகளையும், உரிமைகளையும் விட்டுவிடத் தயாராக இல்லை. மத்திய அரசாங்கமும் சில முக்கியமான விவகாரங்களில் உள்ளாட்சி அரசாங்கங்களில் தலையிட்டு வருகின்றது. சில பொறுப்புகளை, சான்றாக, காவலர்களை நியமனம் செய்வதில், மத்திய அரசாங்கத்தின் கட்டாயம் இருக்கத்தான் செய்கிறது. பல பொறுப்புகளை உள்ளாட்சி அரசாங்கங்கள் இப்பொழுது ஏற்றிருக்கின்றன. முன்னர் இருந்த தயக்கமும் நிலைமைக்

கேற்றவாறு மாறுத நன்மையும் இப்பொழுது உள்ளாட்சி அரசாங்கங் களில் அதிகமாகக் காணப்படுவதில்லை. இல்லையென்று இந்த அரசாங்கங்கள் புதிய மாற்றங்களைப் பிடிவாதமாக ஏற்றுக்கொள்ள மறுத்தனவென்றால், மத்திய அரசாங்கத்தின் ஆதிக்கம் வெகுவிரைவில் உள்ளாட்சிப் பகுதிகளில் ஏற்பட்டுவிடும். உள்ளாட்சி அரசாங்கங் களில் நிறைய சீர்திருத்தங்கள் தேவைப்படுகின்றன. அங்குள்ள மக்கள் அச் சீர்திருத்தங்களை ஏற்றுக் கொண்டால் தான் அவை மேலும் செம்மையுற வழி ஏற்படும்.

# 14. ஆங்கில நாட்டில் மக்களாட்சி

பல நாடுகளில் மக்களாட்சி பறை சாற்றப்படுகிறது. அதற்கு ஆதாரமாக அவர்களுடைய அரசியல் அமைப்பும் உருவாக்கப்பட்டுள்ளது. ஆனால் செயலளவில் மக்களாட்சி சரியாகப் பின்பற்றப் படுவதில்லை. அதற்கான காரணங்களை வரலாற்று அடிப்படையில் தான் காணமுடியும். ஆனால் பிரிட்டனிலுள்ள மக்களாட்சி பல நூற்றாண்டுகளாகவே வேரூன்றிப் போனதாகும். எழுதப்பட்ட அரசியல் அமைப்பு இல்லாமலேயே மக்களின் அடிப்படை உரிமைகள் அங்கு பாதுகாக்கப்படுகின்றன. மக்கள் ஆர்வத்துடன், அவர்களின் பிரதிநிதிகளைத் தேர்ந்தெடுக்கின்றனர். பெரும்பாலும் அப் பிரதிநிதிகள் இரண்டு பெரும் அரசியல் கட்சிகளான தொழிற் கட்சி, அல்லது கன்சர்வேடிவ் கட்சியைச் சார்ந்தவர்களாகவே இருப்பர். இரு கட்சி முறை அங்கு அமைந்திருப்பதால், அரசாங்கத்திற்கு நிரந்தரத் தன்மையும், அரசாங்கத்தின் கொள்கைகளைக் கண்டிக்கும் வலிமையான எதிர் கட்சியும் அமைந்துள்ளது.

மக்களாட்சியில் அரசாங்கம் மக்களின் ஒப்புதலின் பேரில் அமைக்கப்பட்டதாகும். மக்களின் ஒப்புதல் அல்லது சம்மதம் அந்த அரசாங்கத்திற்கு கிடைக்க வேண்டுமெனில், பொது மக்கள் அபிப்பிராயம் அந்த அரசாங்கத்திற்குச் சாதகமாக இருக்க வேண்டும். பொது மக்களின் அபிப்பிராயத்தின் அடிப்படையில் அரசாங்கத்தின் கொள்கைகளும் பின்பற்றப்படுகின்றன. முதலில் பொது மக்கள் அபிப்பிராயம் என்பது என்ன என்பதைப் புரிந்து கொள்ள வேண்டும்.

பெரும்பான்மையான மக்கள் விருப்பத்திற்கு ஏற்ப அமைக்கப் படுவதே ஜனநாயக அரசாங்கமாகும். பிரிட்டனில் 36 மில்லியன் வாக்காளர்கள் உள்ளனர். அவர்களுடைய விருப்பத்தையும், ஒப்புதலையும் அரசாங்கம் பெறவேண்டும். அமெரிக்க ஐக்கியநாடு, சோவியத் யூனியன் ஆகிய நாடுகளிலுள்ள வாக்காளர்களைப் பார்க்கும் பொழுது,

அவர்கள் பலதரப்பட்டவர்களாக இருப்பதைக் காணலாம். மொழி, இனம், சமயம், பண்பாடு, பொருளாதார, சமுதாய ஏற்ற தாழ்வு, ஆகிய பல்வேறு வேறுபாடுகளை அங்கு காணலாம். ஆனால் ஆங்கிலேய சமுதாயத்தில் ஏறக்குறைய ஒரே மொழி, ஒரே இனம், ஒரே சமயம், ஒரே தேசிய உணர்ச்சி, ஒரே மாதிரியான மரபுகள் ஆகிய பல சிறப்புத் தன்மைகளைக் காண்கிறோம். இருந்த போதிலும் ஆங்கிலேய வாக்காளர்களும் பலதரப்பட்டவர்களாகத்தான் உள்ளனர். ஓய்வு பெற்ற இராணுவ அதிகாரிகள், லண்டனில் சுற்றிக்கொண்டிருக்கும் பையன்கள், வியாபாரிகள், பெண்கள் ஆகிய பல ரகங்களில் வாக்காளர் உள்ளனர். பொதுவாக பொது மக்கள் அபிப்பிராயம் என்று கூறுவது, பிரச்சினையை மிகவும் எளிதாக்குவதாகவும். உண்மையில் ஜனநாயக முறையில், நான்கு வகையான அபிப்பிராயங்களைத் திருப்தி செய்ய வேண்டியுள்ளது. பெரும்பான்மை அபிப்பிராயம் (Majority Opinion) சிறுபான்மையினரின் அபிப்பிராயம் (Minority Opinion) விவரம் அறிந்தவர்கள் அபிப்பிராயம் (Informed Opinion) கும்பலின் அபிப்பிராயம் (Group Opinion) ஆகிய நான்கு வகையான அபிப்பிராயங்கள் உள்ளன.

### பெரும்பான்மை சிறுபான்மையினரின் அபிப்பிராயம்

ஜனநாயக ஆட்சியில் போராட்டங்களுக்கும், வன்முறைகளுக்கும் இடமில்லை. போராட்டங்களை எதிரிகள் செய்கின்றனர் என்ற காரணத்திற்காக ஆளும் கட்சி வன்முறைகளைப் பின்பற்றும் சூழ்நிலை நேரிடுமெனில், அவ்விதம் ஆளும் கட்சியாக வரும் வாய்ப்பு எதிர் கட்சிக்கும் ஏற்படலாம். அப்பொழுது அக் கட்சி பழி வாங்க வேண்டுமென்று நினைத்தால், அதற்கு ஒரு முடிவே இல்லாமல் போய்விடும். அதனால் ஜனநாயக ஆட்சியில் மற்றவர்களுடைய அபிப்பிராயங்களுக்கும் மதிப்பளிக்க வேண்டிய அவசியம் ஏற்படுகிறது. கருத்து வேறுபாடுகள் இருப்பின் அவற்றைப் பேசித் தீர்த்துக் கொள்ள வேண்டுமே தவிர, சண்டையிட்டுக் தீர்த்துக் கொள்வதல்ல ஜனநாயகம், மற்றவர்களின் கருத்துகளை அறிந்து, பரிசீலனை செய்து, விவாதித்து பின்னர் தான் கொள்கைகளை நிர்ணயம் செய்ய முடிகின்றது. சிறுபான்மையினர் வேறு விதமான கருத்துகளைக் கொண்டிருப்பதால் அவர்களை அடித்து விரட்டுவது ஜனநாயகமாகாது. அவர்களுடைய கருத்துகளையும் பரிசீலனை செய்ய வேண்டிய அவசியம் ஏற்படுகிறது. பெரும்பான்மையினருக்கும் சிறுபான்மையினருக்கும் உள்ள உறவே மக்களாட்சியின் உரை கல்லாகும். ஏனெனில் இவ்விரு பிரிவினரும் ஜனநாயக அரசாங்கத்தில் முக்கிய பங்கை ஏற்கின்றனர். பெரும்பான்மை கட்சி தான் ஆட்சி செய்கின்றது என்ற போதிலும், சிறுபான்மையினரை

துன்புறுத்தும் வரையில் அவர்களுக்கு இடையூறுகளை அளிக்கக் கூடாது. உண்மையில், மக்களின் அடிப்படை உரிமைகள் பரிக்கப்படும்பொழுது அவர்கள் பெரும்பான்மை ஆதரவுள்ள அரசாங்கத்திற்கும் கட்டுப்பட மறுக்கிறார்கள். பெரும்பான்மை யினரின் ஆட்சியில் உள்ள சில கருத்துகளிலும், கொள்கைகளிலும் காணப்படும் குறைகளை விளக்க வேண்டியது சிறுபான்மையினரின் நோக்கமாக இருக்க வேண்டும். எதிர்கட்சியானது வேறுபட்ட கருத்து களைக் கூறுவதும் கூட அவசியமற்றது என்று பெரும்பான்மைக் கட்சி கருதினால் அக் கட்சி அரசியலில் தவறே செய்யாத ஒரு கட்சியாக இருக் கின்றது என்ற பொருள்படும், ஆனால் உண்மை அதுவல்ல. நல்ல ஜன நாயக ஆட்சியின் பண்பு எதிர்கட்சியினரின் கருத்துகளைப் பொறுத்து கொள்வதில் தான் உள்ளது. எதிர்கட்சியினரின் விவாதங்களும் கண்ட னங்களும் இல்லையென்றால் ஆளும் கட்சியின் கருத்துகள் மிகவும் சாதா ரணமாகி விடும். எதிர்ப்பு இருக்கும் பொழுது தான் உண்மையும் பளிச்சிடும். எதிர்கட்சிகள் ஆளும் கட்சியினரின் முடிவுகளை ஏற்றுக் கொள்கின்றனர். அவர்கள் ஏற்றுக் கொள்ளாவிட்டாலும் ஆளும் கட்சிக்குப் பெரும்பான்மை ஆதரவு இருப்பதால் தீர்மானங்கள், மசோ தாக்கள் ஆகியவை அவர்கள் சார்பாகத் தான் நிறைவேற்றப்படும். அதற்காக மட்டுமல்ல, எதிர்கட்சியும் எதிர்காலத்தில் ஆளும் கட்சியாக வரக்கூடும். அப்பொழுது அவர்கள் மற்ற எதிர்கட்சிகளின் விவாதங்களை பொறுமையுடன் கேட்டுக் கொண்டிருக்க வேண்டும். அதனால் ஒரு நல்ல எதிர்கட்சி நல்ல முன்மாதிரியைக் காட்டும்.

### விபரம் அறிந்தவர்களின் அபிப்பிராயம்

ஒரு கட்சிக்குப் பெரும்பான்மை ஆதரவு உள்ளது என்பதை தலைகளை எண்ணிக் கணக்கிட்டால் மட்டும் போதாது. பொதுமக்கள் அபிப்பிராயத்தைத் திரட்ட காரணமாக இருப்பவர்களே விபரம் அறிந்த அறிவு வளர்ச்சியுடைய மக்களேயாவர். அவர்களுடைய எண்ணிக்கை மிகவும் குறைந்திருந்தாலும், அவர்களுடைய செல்வாக்கு மிகவும் அதிகமாக இருக்கும். படிப்பில்லாதவர்களும், விபரம் தெரியா தவர்களும் மிகப் பெரும்பான்மையாக இருந்த போதிலும், விபரம் தெரிந்தவர்கள் பொதுமக்கள் அபிப்பிராயத்தை அதிக அளவில் உரு வாக்குகின்றனர். பலர் பலவித விபரங்களைத் தெரிந்து வைத்திருப்பர். இருந்த போதிலும் பொதுப்படையாக விவரம் தெரிந்தவர்கள் மொத் தத்தில் அதிகமாக இருந்தால், நாட்டில் ஜனநாயகம் நன்றாக வளர்ச்சி யுறுகிறது என்பது பொருளாகும்.

### கும்பலின் அபிப்பிராயம்

தொழிற்புரட்சிக்குப் பின்னர், பிரிட்டனில் தொழிற்சங்கங்களும் இயக்கங்களும் தோன்றின. அத் தொழிற் சங்கங்கள் தொழிலாளர்

களின் நலன்களைப் பாதுகாக்கின்றன. தொழிலாளர் கோரிக்கைகளை அரசாங்கத்திடம் கூறி, அதற்கு பரிகாரம் தேடுகின்றனர். இச் சங்கங்களைப் போன்று மற்றும் பல சங்கங்களும், கழகங்களும் பொது மக்களின் பிரத்தியேக நலன்களைப் பாதுகாக்க முயற்சி எடுத்துக் கொள்கின்றன. அவைகளின் அபிப்பிராயங்கள் மிகவும் முக்கியத்துவம் உடையனவாக இருக்கின்றன. பொதுமக்கள் அபிப்பிராயம் இவ்வித சங்கங்களால் உருவாக்கப்படுகிறது. வேறு ஓர் அத்தியாயத்தில் நலன் நாடும் கழகங்களைப் பற்றி விரிவாகக் கூறியுள்ளோம்.

### பொதுமக்கள் அபிப்பிராயம் உருவாக்கப்படுதல்

வாக்காளர்களின் அபிப்பிராயங்கள் குறிப்பாக, இரண்டு விதங்களில் உருவாக்கப்படுகிறது; ஒன்று இயல்பாகவே ஏற்படும் அபிப்பிராயம்; இரண்டு திட்டமிட்டு மக்கள் மனதை மாற்றச் செய்யும் முயற்சிகள். நல்ல சூழ்நிலையில் இருப்பவர்களும், படிப்பு, குடும்பம், ஆகிய பல காரணங்களைப் பொறுத்து சில மக்களிடம், இயல்பான அபிப்பிராயங்கள் உருவாகின்றன. அவர்கள் வாக்களிக்கும் விதத்திலிருந்து அவர்களுடைய அபிப்பிராயங்களையும் தெரிந்து கொள்ள முடியும். பல தொழில்களில் ஈடுபட்டுள்ளவர்களும் வியாபாரிகளும் தொழிலதிபர்களும் கன்சர்வேடிவ் கட்சிக்கு இயல்பாக வாக்களிக்கின்றனர். அதைப் போன்றே தொழிலாளர்கள் தொழிற்கட்சிக்கு வாக்களிக்கின்றனர். ஆனால் தொழிலாளர்கள் அனைவரும் தொழிற் கட்சிக்கு வாக்களிப்பதில்லை என்பதை தேர்தல் முடிவுகளைப் பார்க்கும் பொழுதே தெரியும். அதனால் அவர்களுடைய அபிப்பிராயம் மாற்றப் படக்கூடும். 1951-ல் நிகழ்ந்த பொதுத் தேர்தல்களில் தொழிற்கட்சிக்கு வாக்களிக்க இருந்த பலவிதத் தொழிலாளர்கள் ஏறக்குறைய 28 சதவிகிதம் கன்சர்வேடிவ் கட்சியினருக்கு வாக்களித்தனர். பல காரணங்களால் மக்கள் அவர்களுடைய அபிப்பிராயங்களை மாற்றிக் கொள்கின்றனர். முக்கியமாக அவர்களுடைய அறிவு வளர்ச்சியும் அவர்கள் புரியும் தொழில்களே, இந்த அபிப்பிராயத்தை உருவாக்கிக் கொள்ள உதவுகின்றன. சில சமயங்களில் ஒரு குடும்பத்திலுள்ளவர்கள் அனைவரும் ஒரே விதமான அபிப்பிராயத்தைக் கொண்டிருப்பர். இயல்பாகவே இந்த அபிப்பிராயம் அவர்களிடம் ஏற்படுகிறது. ஒரு சிலர் மட்டுமே அபிப்பிராயங்களைப் பற்றிச் சிந்தித்து வாக்களிக்கின்றனர். அவ்விதம் சிந்தனை செய்கிறவர்களின் எண்ணிக்கை மிகவும் குறைவாக உள்ளது. மக்கள் தங்களது அபிப்பிராயத்தை உருவாக்கிக் கொள்ளும் உரிமையுடையவர்களாக இருந்த போதிலும் மற்ற கட்சிகள் அவர்களுடைய கருத்துகளையும், அபிப்பிராயங்களையும் மாற்ற பல வழிகளைப் பின்பற்றுகின்றன. அரசியல் கட்சிகள் மக்கள் இயல்பாகவே தங்களுக்

குத்தான் வாக்களிப்பார்கள் என்று நம்பிக் கொண்டிருக்கமுடியாது. அதனால் அவர்களுடைய அபிப்பிராயங்களை மாற்றவும் அக் கட்சியின் கொள்கைகளை அவர்கள் ஏற்றுக்கொள்ளவும், பிரச்சாரங்கள், மேடைப் பேச்சுகள், மாநாடுகள், வெளியீடுகள், பத்திரிகைகள், வானொலி, டெலிவிஷன் ஆகிய பிரச்சாரக் கருவிகளைப் பயன்படுத்தி, கட்சிகளின் செல்வாக்கை வேரூன்றச் செய்கின்றனர். அதனால் பொதுமக்களுடைய அபிப்பிராயம் உருவாக்கப்படுகிறது.

ஆங்கிலேய அரசியல் அமைப்பின்படி, பொது மக்களிடம் தான் அரசியல் இறைமை உள்ளது என்பது பல அரசாங்கங்கள் மாற்றப்படுவதிலேயே நன்கு புரிகின்றது. ஆளும் கட்சி, அவர்கள் தேர்தல் சமயங்களில் கூறிய உறுதிமொழிகளை நிறைவேற்றக் கடமைப்பட்டுள்ளது. அவ்வுறுதி மொழிகளை நிறைவேற்றுவதற்காகவே, அவ்வரசாங்கத்திற்கு மக்கள் ஆதரவு அளிக்கின்றனர். 19-வது நூற்றூண்டிலிருந்தே இவ் வளர்ச்சி ஏற்பட்டிருப்பதைக் காண்கிறோம். பாராளுமன்றச் சீர்திருத்தங்கள் வேண்டும் என்ற அடிப்படையில் 1831-ல் பொதுத் தேர்தல்கள் நிகழ்ந்தன. 1910-ல் நிகழ்ந்த தேர்தல்கள் பிரபுக்கள் சபையின் அதிகாரங்களைக் குறைக்க வேண்டுமென்பதற்காக நிகழ்ந்த தேர்தலாகும். 1951-ல் கன்சர்வேடிவ் கட்சி பதவிக்கு வர முக்கிய காரணமாக இருந்தது, மேலும் 'அரசுடமையாக்க வேண்டும்' என்ற கொள்கையை ஆங்கிலேய மக்கள் ஏற்றுக் கொள்ளாததேயாகும். இரண்டு அரசியல் கட்சிகள் இருக்கும் பொழுது மக்களின் அபிப்பிராயம் நன்ருக உருவாகின்றது. ஆனால் அதிலும் சில சமயங்களில் மாறுபட்ட அபிப்பிராயங்கள் ஏற்படுவதற்கு இடமுண்டு. ஒரு கட்சி வாக்காளர்கள் முன்னிலையில், முக்கியமான பிரச்சினை இல்லாத சமயத்தில் பல கொள்கைகளைப் பிரச்சாரம் செய்கின்றது. எந்தக் கொள்கைக்காக, மக்கள் அக் கட்சிக்கு வாக்களித்தார்கள், அல்லது அக் கட்சிக்கு வாக்களிக்கவில்லை என்பதை நிர்ணயம் செய்வது கடினமாகும். மிகவும் முக்கியமானப் பிரச்சினைகள் இருந்தால், அப் பிரச்சினைக்கு மட்டும் மக்கள் ஆதரவு அளிப்பார்கள். சில எதிர்பாராத நிகழ்ச்சிகளிலும், அல்லது நெருக்கடி நேரங்களிலும், அல்லது நுணுக்கமான பிரச்சினைகளிலும் பொது மக்களின் அபிப்பிராயம் சரியாக அமையாது. அச் சமயங்களில் அரசாங்கம் அவர்களின் அபிப்பிராயங்களைப் புறக்கணிக்க நேரிடும்.

ஆங்கிலேய அரசியல் அமைப்பின்படி மக்கள் அடிப்படை உரிமைகளைப் பெற்றுள்ளனர். அவ்வுரிமைகளும் பெரும்பாலும் பாதுகாக்கப்படுகின்றன. ஆனால் சில சமயங்களில் இவ்வுரிமைகள் பாதிக்கப்படும் பொழுது, அவற்றைப் பாதுகாக்க ஓரே மாதிரியான

